# சங்க இலக்கியத்தில் நீர்வளம்

முனைவர் பட்டத்திற்காகப் பெரியார் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**இரா.அமுதலட்சுமி,**
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம் - 636007.

நெறியாளர்

**முனைவர் அரங்க.சீனிவாசன்,**
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம் - 636007.




**தமிழ்த்துறை,**
**அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),**
**சேலம் - 636007.**

**பிப்ரவரி - 2024**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் அரங்க.சீனிவாசன்,**
**உதவிப்பேராசிரியர்,**
**தமிழ்த்துறை,**
**அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),**
**சேலம் - 636007**

**"சங்க இலக்கியத்தில் நீர்வளம்"** என்னும் தலைப்பில் **செல்வி.இரா.அமுதலட்சுமி** அவர்களால் மேற்கொள்ளப் பெற்ற இவ்வாய்வு அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில், பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக எனது நெறியாள்கையின்கீழ் இவருடைய சொந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது என்றும், இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் இதுவரை அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: சேலம்-7 **நெறியாளர்**

நாள்: **(முனைவர் அரங்க.சீனிவாசன்)**

**தமிழ்த்துறைத் தலைவர்** **முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**இரா.அமுதலட்சுமி,**
**முனைவர் பட்ட ஆய்வாளர்(பகுதி நேரம்),**
**தமிழ்த்துறை,**
**அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),**
**சேலம் - 636007.**

**“சங்க இலக்கியத்தில் நீர்வளம்”** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக நிகழ்த்தப்பட்ட இவ்வாய்வு என்னுடைய சொந்த முயற்சியில் உருவாக்கப்பட்டது என்றும் இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

இடம்: சேலம்-7 **ஆய்வாளர்**

நாள்: **(இரா.அமுதலட்சுமி)**




# PERIYAR UNIVERSITY, SALEM–636011
## Tamil Nadu, India

(NAAC 'A++' Grade - State University - NIRF Rank 59 – NIRF Innovation Band of 11-50)

| CERTIFICATE OF PLAGIARISM | | |
|---|---|---|
| 1. | Name of the Research Scholar | **R. AMUTHALAKSHMI** |
| 2. | Course of Study | Ph.D. |
| 3. | Subject | TAMIL |
| 4. | Name of the Supervisor | **Dr. R. SRINIVASAN** |
| 5. | Department/Institution/ Research Centre | DEPARTMENT OF TAMIL, GOVERNMENT ARTS COLLEGE (AUTOMOMOUS) SALEM-7. |
| 6. | Title of the Thesis/ Dissertation | **சங்க இலக்கியத்தில் நீர்வளம்** |
| 7. | Acceptable limit | 20 % |
| 8. | % Of similarity of content identified | **0 %** |
| 9. | Software used | DrillBit |
| 10. | Date of verification | 19.02.2024 |

**Report of the plagiarism check, items with a percentage of similarity is attached**

**Signature of the Scholar** **Signature of the Supervisor**

**University Librarian**



The Report is Generated by DrillBit Plagiarism Detection Software

| | |
|---|---|
| ***Selected Language*** | Tamil |

***Submission Information***

| | |
|---|---|
| Author Name | R_Amuthalakshmi_Tamil_Phd. |
| Title | சங்க இலக்கியத்தில் நீர்வளம் |
| Paper/Submission ID | 1446855 |
| Submitted by | librarian@periyaruniversity.ac.in |
| Submission Date | 2024-02-19 15:14:51 |
| Document type | Thesis |

***Result Information***

| | |
|---|---|
| Similarity | **0%** |

A Unique QR Code use to View/Download/Share Pdf File



# CERITIFICATE  OF GENUINENESS OF THE PUBLICATION

This is to that Ph.D. Candidate **R.AMUTHALAKSHMI** working under my supervision has published a research article in the **UGC** Refereed list of journals named **Modern Thamizh** **Research** ISSN No 2321-984X with **VOL 8 No -1** Page No **507-511** and year of Publication **January –March – 2020** Published by **சங்க இலக்கியத்தில் நீர் வறட்சி**. The contents of publication incorporate part of the results presented in his/her Thesis.

This is to that Ph.D. Candidate **R.AMUTHALAKSHMI** working under my supervision has published a research article in the **UGC** Refereed list of journals named **Modern Thamizh** **Research** ISSN No 2321-984X with **VOL 8 No -2** Page No **535-539** and year of Publication **April –June – 2020** Published by **சங்க இலக்கியப் பாக்களில் ஆறுகள்**. The contents of publication incorporate part of the results presented in his/her thesis.

**Research Supervisor**

**Countersigned**

**Head of the Department**

# நன்றியுரை

எல்லாம் வல்ல இறைவனுக்கு எனது முதல் நன்றியை காணிக்கையாக்குகிறேன். 'ஈன்று புறந்தருதல் என் தலைக் கடனே சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே' என்பதற்கேற்ப கல்வி வாய்ப்பளித்து தொடக்கம் முதல் இறுதி வரை ஆய்வில் என்னை முழுமையாக ஈடுபட வைத்த எனது பெற்றோர் **திரு.தா.இராமலிங்கம், திருமதி.ருக்குமணி** அவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

சேலம் 7 அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறையில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பளித்த பெரியார் பல்கலைக்கழகத்திற்கும், சேலம் 7 அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி) முதல்வர் **முனைவர் ந. செண்பகலட்சுமி** அவர்களுக்கும் என் பணிவான நன்றியை உரித்தாக்குகிறேன். இவ்வேட்டை நிறைவு செய்வதற்கு உதவிய தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் ஜெ.பிரேமலதா** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகள்.

தோழமை உணர்வுடன் அணுகி, எனது ஆய்வு தொடர்பான சிக்கல்களுக்குத் தீர்வு நல்கி தகுந்த விளக்கம் அளித்தும், ஆய்வுத் தொடர்பான நூல்கள் பலவற்றை பற்றிக் கூறியும் ஆய்வினைச் சிறப்புறச் செய்த நெறியாளர் **முனைவர் அரங்க.சீனிவாசன்** அவர்களுக்கும் எனது அன்பிற்குரிய மேனாள் நெறியாளர் **முனைவர் இரா.சாந்தி** அவர்களுக்கும் எனது நன்றிகள்.

ஆய்விற்குத் தேவையான ஆலோசனைகள் தந்து என்னை ஊக்கப்படுத்திய கலை.செழியன் அவர்களுக்கும் திரு.தனசேகர் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வை திறம்பட நிறைவு செய்ய சிறந்த ஆலோசனைகள் வழங்கிய தமிழ்ததுறை பேராசிரியகள் அனைவருக்கும் என்ந நன்றி.

எனக்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்து, ஆய்வுக்கு பல்வகையிலும் உறுதுணையாய் விளங்கிய எனது மாமா திரு.மா.கோவிந்தசாமி, சகோதரர் திரு.இரா.பிரகாஷ் அவர்களுக்கும் பட்ட ஆய்வின் வெற்றிக்கு அடிகோலிய

எனதினிய நண்பர்கள் மற்றுமுள்ள அனைத்து நண்பர்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்கள் கொடுத்து உதவிய பெரியார் பல்கலைக்கழக நூலகம் மாவட்ட மைய நூலகத்திற்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகள்.இந்த ஆய்வேட்டை சிறப்பாக தட்டச்சு செய்து கொடுத்த ஜிவி பிரிண்ட் பார்க் கௌதம் அவர்களுக்கும் என் நன்றி

**(இரா.அமுதலட்சுமி)**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறிஞ். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபஞ். | - | சிறுபஞ்சமூலம் |
| சிறு | - | சிறுபாணாற்றுப்படை |
| திரு | - | திருமுருகாற்றுப்படை |
| திரி. | - | திரிகடுகம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நாலடி. | - | நாலடியார் |
| நான்மணி. | - | நான்மணிக்கடிகை |
| நூ.எ. | - | நூற்பா எண் |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப.எ. | - | பக்க எண் |
| ப.பா | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மேலது | - | மேலே கூறிய நூல் |

# பொருளடக்கம்



.




# தமிழ் இணையக் கல்விக்கழகம்
சென்னை - 600 025.

# Tamil Virtual Academy
Chennai - 600 025.

[ www.tamilvu.org ● www.tamildigitallibrary.in ]




## சான்றிதழ் / Certificate

திரு. / திருமதி. / செல்வி. இரா.அமுதலட்சுமி பதிவு எண் PU/R/RD3/25887/2015 அவர்களின் முனைவர் பட்ட ஆய்வுத் தலைப்புக்கான "சங்க இலக்கியத்தில் நீர்வளம்" ஆய்வுச் சுருக்கம், ஆய்வுத் தொகுப்பு மற்றும் கலைச்சொற்களின் பட்டியல் ஆகியவற்றின் மின் நகல்கள் பெரியார் பல்கலைக்கழகம் மூலமாக தமிழ் இணையக் கல்விக்கழகத்தில் 08.01.2024 அன்று பெறப்பட்டுள்ளது எனச் சான்றளிக்கப்படுகிறது.

This is to certify that the digital copies of research abstract, synopsis and list of glossaries of the Thesis entitled "Sanga illakiyathil Neervalam" done by Thiru. / Thirumathi./ Selvi. R.AMUTHALAKSHMI Reg. No PU/R/RD3/25887/2015 student of Ph.D. programme in PERIYAR UNIVERSITY, have been received by the Tamil Virtual Academy on 08.01.2024.

திரு. ரெ. கோமகன்
இணை இயக்குநர்

TVA/2024/0007

# ஆய்வுச் சுருக்கம்

இலக்கியச் சிறப்பும், இலக்கணத் தொன்மையும் பெற்று என்றென்றும் இளமைத் தன்மையுடன் வளர்ந்து வரும் தமிழ் மொழியில் தோன்றிய சங்க இலக்கியங்கள் அன்றாட மக்களின் இயற்கையோடு இயைந்த வாழ்வியலை எடுத்துரைக்கின்றன. அக்காலக் கட்டத்தில் நீர்வளம், வறட்சி பற்றிய விழிப்புணர்வு நீராதாரங்கள், நீர்ப்பராமரிப்புத் தொழில்நுட்பங்கள், நீரின் பயன்பாடுகள் என அனைத்து நிலைகளிலும் ஆராயும் வகையில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் காணப்படும் செய்திகளின் அடிப்படையில் "சங்க இலக்கியத்தில் நீர்வளம்"என்ற தலைப்பில் இவ்வாய்வேடு அமைகிறது.

சங்ககால மக்களின் நிலப்பாகுபாடு, நீர்ச்சுழற்சி, நிலத்தின் தன்மைகேற்ப நீரின் இயல்புகள், மழைவளம் காற்று மற்றும் மேகத்தின் போக்கைக் கொண்டு மாறுபடும் மழை நிலைகள், பண்டைய காலத்தில் பாய்ந்த ஆறுகளினால் பெற்ற நீர்வளம் கடல்வளம் கடலில் கிடைக்கக் கூடிய பொருட்களைப் பயன்படுத்தி மக்கள் தங்கள் வாழ்க்கையை வாழ்ந்து வந்த செய்திகள் குறித்தும் விளக்கப்பட்டுள்ளன.

சங்க இலக்கியங்களில் இடம்பெறும் நீர் கிடைக்கும் வழிமுறையான மழை குறித்த சிந்தனை, குளம், குட்டை, கேணி, அருவி போன்ற இயற்கை மற்றும் செயற்கை நீராதரங்கள் இன்ன பிறவும் ஆராயப்பட்டுள்ளன.

அன்றாட வாழ்க்கையில் வேளாண்மை, சடங்குகள், பழக்க வழக்கங்கள் நம்பிக்கைகள், விழாக்கள், வழிபாடு, களவு மற்றும் கற்பு உணர்வுகள் என்று அனைத்திலும் நீரை முன்வைத்தே நிகழ்த்தியுள்ளனர். அது மட்டுமல்லால் நீருக்கு நெகிழ்வுத்தன்மை அதிகம். துறவிகள் கமண்டலத்தில் நீரை நிரப்பி உடன் வைத்திருந்தனா. அந்நீரை சாபமிடல், வரமிடல் இரு நிகழ்வுகளிலும் பயன்படுத்தியுள்ளதைப் புராண இதிகாசக் கதைகள் வாயிலாக ஆராயப்பட்டுள்ளன.

இயற்கை மற்றும் செயற்கையான சூழ்நிலைகளில் தோன்றும் வறட்சி நிலைகள் பற்றியும், அக்காலத்தில் மக்கள் வறட்சியிலிருந்து தங்களை மீட்டெடுக்க கையாண்ட வளம் மற்றும் வாழ்வியல் மேலாண்மை வழிமுறைகள் பண்டமாற்று முறை தாவரங்கள்

பகிர்ந்துண்ணும் மரபு போன்றவற்றின் வாயிலாக  நீர்த்தேவையை பூர்த்தி செய்த விதம் குறித்து விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

உயிரினங்களி;ன் வாழ்வின் இயக்கத்திற்கும் உணவு உற்பத்திக்கும் நீரின் உதவி தேவை என்பதை உணர்ந்த முன்னோர்கள் அதனை பாதுகாக்க பல்வேறு அறிவியல் தொழில் நுட்பங்களை பயன்படுத்தி அணைகள் ஏரிகள் மற்றும் குளங்களை வடிவமைத்து நீர்த்தேக்க கட்டுமான அமைப்புகளை உருவாக்கிய விதமும், கால்வாய்கள் வழியாக நீரினை பங்கீடு செய்த முறைகளினால் சங்ககால மக்கள் சிறப்புற்று விளங்கினர் என்பது பற்றி விளக்கப்பட்டுள்ளன.

மனிதனின் ஒவ்வொரு வளர்ச்சிக்கும் உறுதுணையாயிருக்கும் அறிவியல் நுட்பத்துடன் சங்ககால மக்கள் சிறந்து விளங்கினர். நீர்சேமிப்பு முறைகளிலும் அதனை பயன்படுத்தும் வழிமுறைகளிலும் பல்வேறு வகையான உத்திகளை பயன்படுத்தியுள்ளதை விளக்கப்பட்டுள்ளன.

சங்ககால மக்களின் மாண்பினை எடுத்துக்கூறும் வகையில்  நீர்ப் பற்றிய புரிதல்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. சங்கால மக்களின் நீர்மேலாண்மை முறைகள், நீராதாரப்பெயர்கள் காரண அடிப்படையில் தோன்றியது குறித்தும் ஆராயப்பட்டுள்ளது.

ஆய்வு அறிமுகம் ஆய்வு முடிவுகள் நீங்கலாக நான்கு இயல்கள் மக்களின் நீர் வாழ்வியலை ஆராயும் விதத்தில் அமைந்துள்ளன.

# இயல்-1

# ஆய்வு அறிமுகம்

## சங்க இலக்கியத்தில் நீர்வளம்

சங்க இலக்கியங்கள் பண்டையத் தமிழரின் வாழ்வியலையும் அவர்தம் பண்பாட்டினையும் பதிவுச் செய்துள்ள கருவூலங்கள் எனலாம். சங்கத்தமிழரின் தொழில் நுட்பத்தையும் அறிவுத்திறத்தையும் இவ்விலக்கியங்களே இனங்காட்டி உள்ளன. சங்கப்பாடல்கள் நிலத்தை அடிப்படையாகக் கொண்டு பருவநிலை மாற்றங்கள் தோன்றுவதையும் நிலம், பருவநிலைகள் தான் மனிதனின் தேவையை நிறைவு செய்ததைப் பற்றியும் விரிவாகப் பதிவு செய்துள்ளன. இதன் பயனாக நீர்வளம், நிலவளம், இயற்கை வளம் போன்ற இன்ன பிறவும் தோன்றின.மனிதன் தான் வாழ்ந்த நிலத்திற்கு ஏற்ற தொழிலைச் செய்து வந்தான். இவற்றின் மூலமாக நிலம், பொழுது, நீர், மரம், பூ, பறவை, விலங்கு, உணவு முதலான வாழ்வியல் கூறுகளை உருவாக்கினான். மனிதனின் அனைத்து வாழ்வியல் கூறுகளுக்கும் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் இன்றியமையாத ஆதாரமாக நீரே பங்கு வகிகின்றது. சங்க இலக்கியங்களில் நீர்வளம் சிறப்பாக இருந்தது. ஆனால் இன்றைய காலக்கட்டத்தில் தழிழர்களின் போதிய அக்கறையின்மையே நீர்ப்பற்றாக்குறைக்குக் காரணமாகும். சங்கப்பாடல்கள் நீர்வளம், நீர் மேலாண்மை, நீராதாரங்கள் ஆகியவற்றில் முன்னோர்களின் மதிநுட்பத்தையும் அறியும் விதமாகவும், அவர்களின் சமுதாய பொறுப்பினை, இன்றையத் தலைமுறையினருக்கு எடுத்துச் செல்லும் வகையில் ஆராய்வதாக **சங்க இலக்கியத்தில் நீர்வளம்** இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுத்தலைப்பு**

சங்க இலக்கியங்களின் வழி நின்று **சங்க இலக்கியத்தில் நீர்வளம்** குறித்து ஆராயும் விதமாக இவ்வாய்வுத்தலைப்பு அமைந்துள்ளது.

**ஆய்வு நோக்கம்**

தமிழ் இலக்கியங்களில் குறிப்பாக சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள நீர்வளத்தையும், நீர் வாழ்வியலோடு பிணைந்த முறையினையும் சான்று கொண்டு நிறுவுவதே இவ்வாய்வின் நோக்கம்.

**ஆய்வு கருதுகோள்**

சங்க இலக்கியப் பாடல்களில் காணலாகும் ஒவ்வொரு சூழ்நிலைகளிலும் நீர்ப்பதிவு செய்யப்பட்ட முறையின் வழி சங்ககால தமிழரின் பண்பாடு, அறிவியல், மற்றும் வாழ்வியலை அடையாளம் காண இயலும் என்பதே இவ்வாய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது.

**ஆய்வு எல்லை**

நீர்வளம் காலந்தோறும் தமிழ் இலக்கியங்கள் பலவற்றில் பதிவு செய்யப்பட்டிருந்தாலும் ஆய்வின் காலம், கருத்துச்செறிவு இவற்றைக் கருத்தில் கொண்டு சங்கஇலக்கியப் பாடல்கள் மட்டும் ஆய்வு எல்லையாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு மூலங்கள்**

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய பதினெட்டு நூல்களும் முதன்மை ஆய்வு ஆதாரங்களாக அமைகின்றன. ஆய்வு முன்னோர்களின் நூல்களும், ஆய்வுக்கட்டுரைகளும், இணையத்தளச் செய்திகளும் துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

சங்க இலக்கியங்களில் காணலாகும் நீர் ஆதாரங்கள், நீர்ப்பாதுகாப்பு உத்திகள் குறித்த செய்திகளைச் சொல் நிலையிலும், பொருள் நிலையிலும், வாழ்வியல் முறையிலும் விளக்குமிடத்து விளக்கவியல் அணுகுமுறையும், வறட்சி, நீரின் பயன்பாடுகள் குறித்தச் செய்திகளை அதன் வகைப்பாடு பயன்பாட்டின் அடிப்படையில் பகுப்பாய்வு அணுகுமுறையும்,

நீரின் முக்கியத்துவம், நீர் சேமிக்கும் வழிமுறைகளில் சமூகவியல் அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

2013 ஆம் ஆண்டு மதுரைக் காமராஜர் பல்கலைக்கழகம், தியாகராசர் கல்லூரி (தன்னாட்சி), தமிழ்த்துறையில் சே.அஜிபா என்பவர் சங்க இலக்கியங்களில் நீரும் நீர் மேலாண்மையும் என்ற பொருண்மையில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொண்டு உள்ளார்.

**சங்க இலக்கியங்களில் நீரும் நீர் மேலாண்மையும்** என்னும் தலைப்பில் நிகழ்த்தப்பட்ட முன்னாய்வில் நீரின் தோற்றம், வேளாண்மையில் நீர் மேலாண்மை முறைகள், நீர்நிலைகள், களவு கற்பு நிலைகளில் நீர் என்ற கண்ணோட்டத்தில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளன.

மேற்கூறிய ஆய்வுப் பொருளினை முன்னாய்வாகக் கொண்டு **சங்க இலக்கியத்தில் நீர்வளம்** என்னும் தலைப்பில் சங்க இலக்கியத்தில் நீரின் வளம்இ வறட்சி, நீர்ஆதாரங்கள், மக்களின் அன்றாட வாழ்வியல் மற்றும் உணர்வுகளில் ஒவ்வொரு அங்கங்களிலும் நீர் இடம் பெற்ற விதம், பண்டைய காலத்தில் நீரினைச் சேகரிக்கும் வழிமுறைகள் என்ற வகையில் முன்னாய்வில் கண்டறியப்படாத துறைகளை ஆய்வுக்களமாக எடுத்து இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வுப்பகுப்பு**

இவ்வாய்வேடு கீழ்க்காணும் ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

1. ஆய்வு அறிமுகம்
2. நீர் ஆதாரங்கள்
3. நீர வறட்சியும், வறட்சி மேலாண்மையும்
4. நீரின் பயன்பாடுகள்
5. நீர்த்தேக்கமும், பங்கீட்டு முறைகளும்
6. ஆய்வு முடிவுகள்

**இயல் 1**

**ஆய்வு அறிமுகம்**

முதலாவது இயலில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு கருதுகோள், ஆய்வுமூலங்கள், ஆய்வு அணுகுமுறைகள் பற்றி விளக்கம் தரப்பட்டுள்ளன.

**இயல் 2**

**நீர் ஆதாரங்கள்**

இரண்டாவது இயலில் நீர் விளக்கம், நீரின் தோற்றம், நீரின் இன்றியமையாமை, நீரின் தன்மைகள், நீரின் நிறங்கள், நீரின் சிறப்புகள், மழைவளம், சங்க இலக்கியப்பாக்களில் இடம் பெற்றுள்ள ஆறுகளின் வளமும், நெய்தல் நிலக்கடல் வளமும் விளக்கப்பட்டுள்ளன. குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் எனத் தொல்காப்பியரால் வகுக்கப்பட்டுள்ள திணைகளின் நீர்வளங்களும் ஆராயப்பட்டுள்ளன. மேலும் சங்கப்பாடல்களில் காணப்படும் சுனைகள், அருவிகள், காட்டாறுகள், குளங்கள், கிணறு, இலஞ்சி, அகழி, அசம்பு, கூவல் போன்றவையும் அவற்றின் பங்கும் ஆராயப்பட்டுள்ளன.

**இயல் 3**

**நீர் வறட்சியும், வறட்சி மேலாண்மையும்**

மூன்றாவது இயலில் வறட்சி குறித்த சொல்லாடல்கள், வறட்சியின் வகைகள், பாலைநிலப்பெருவழி உருவான விதம், பாலைத்தன்மைகள், மழை பொய்த்தல், மண் நீர்ப்பிடிப்புத் தன்மையின்மை நிலத்தடி நீரின்மை போன்றனவும் இயற்கை வறட்சியில், பருவக்கால வறட்சி நிலைகள், செயற்கை வறட்சியில், போர்க்கால வறட்சியில் நீர்வளங்களை அழித்தல், நீர்நிலைகள் மாசடைதல் போன்ற நிலைகளும் வறட்சியினால் ஏற்படும் பாதிப்புகளும், தமிழர்களின் வறட்சி மேலாண்மையும் வகைப்படுத்தப்பட்டு ஆராயப்பட்டுள்ளன.

**இயல் 4**

**நீரின் பயன்பாடுகள்**

நான்காவது இயலில் தண்டனை, சூளுரைத்தல், மானம், அன்பு, ஐந்திணைகளில் நீர் குறியீடுகள், சடங்குகள், விழாக்கள், பொழுதுபோக்குகள், மன்னனின் கடமைகள், கான்யாறு, கடல், அருவி, குளம், சுனை போன்ற நீர்நிலைகளில் நீராடல் என அனைத்துக் கூறுகளிலும் தமிழர்களின் அன்றாட வாழ்வியலில் நீர் இடம்பெற்றுள்ள விதத்தையும், தமிழர்களின் புழக்கத்தில் இருந்த நீர்பானங்கள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் 5**

**நீர்த்தேக்கமும், பங்கீட்டு முறைகளும்**

ஐந்தாவது இயலில் ஏரிகள், அணைகள் போன்றவற்றில் நீரினைத் தேக்கி வைக்க தமிழர்கள் கையாண்ட நுட்பங்களும், மதகு, மடை, சுருங்கை தூம்பு, குமிழி, கால்வாய் போன்ற அமைப்பு முறைகளில் நீரினைப் பங்கிட்டுக் கொண்ட விதமும் மற்றும் நீரினைப் பாதுகாத்துப் பராமரித்த முறைகள் பற்றியும் சங்கப்பாடல்கள் வழி விளக்கப்பட்டுள்ளன.

**இயல் 6**

**ஆய்வு முடிவுகள்**

ஒவ்வொரு இயலிலும் கண்டறிப்பட்டுள்ள முடிவுகளைத் தொகுத்து ஆய்விற்கான முடிவுகளாகத் தரப்பட்டுள்ளன. ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்களாகப் பிரித்து அகர வரிசைப்படி தரப்பட்டுள்ளன. மேலும் பின்னிணைப்பாக நீர்நிலைகள் பற்றிய விளக்கப்படங்கள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

# இயல் - 2

## நீர் ஆதாரங்கள்

உலக உயிரினங்களின் தோற்றத்திற்கு நீர் அடிப்படைக் காரணியாகும். கோள்களின் நிலைப்பாட்டில் புவியில் மட்டுமே நீரானது காணப்படுகிறது. செவ்வாய் போன்ற மற்ற கோள்களில் நீர்க் காணப்பட்டாலும் அங்கு உயரினங்கள் வாழ்வதற்கு ஏற்ற சூழல் இல்லாத நிலையே நிலவுகிறது. நீர்வளம் குன்றும் போது உயிரினங்களின் வளர்ச்சியும் குன்றும் என்பதில் ஐயமில்லை. எனவே தான் முன்னோர்கள் நீரை வளப்படுத்துவதில் அக்கறைக் காட்டியுள்ளனர். சங்கப்பாடல்களில் நீர் வளம் குறித்தச் செய்திகள் பல நிறைந்து காணப்படுகின்றன. அவை மழை வளமாகவும், கடலாகவும், ஆறுகளாகவும் காட்சியளிக்கின்றன. சங்க இலக்கியங்களின் வழி அறியலாகும் நீர் ஆதாரங்கள் குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

### 2.1 சங்க இலக்கியங்களில் நிலமும் நீரும்

சங்க இலக்கியத்தில் புவியானது பல்வேறு பாறை அடுக்குகளை உள்ளடக்கியது. இவ்வடுக்குகளின் மீது நிலமானது அமைந்திருப்பதை பழந்தமிழ் இலக்கியங்கள்

**நிலம் அமர் வையம்**[1]

என்றும்

நிலத்தின் அகன்ற பரப்பைக் கொண்டது என்பதை

**“இருநிலம”**[2]

**“உருகெழு மாநிலம”**[3]

**“நனந்தலைப் பைஞ்ஞலம”**[4]

**“பெருநிலம”**[5]

என்றும் குறிப்பிடுகின்றன.

நிலமானது புவியின் மேற்பரப்பில் மட்டுமல்லாது கடலுக்கு அடிப்பகுதியிலும் காணப்படுவதை

**“செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு**

**தண் பெயல் தலைஇய ஊழியும”[6]**

என்று ஊழிக்காலத்தின் முடிவில் மண்ணுலகம் அழிந்து பாழ்பட்டுப் போன பின்பு கரு உருக்கொண்டு நீரிலிருந்து, நிலம் தோற்றம் பெற்றது எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

இந்தப் பூமியின் அமைப்பை

**“மண்டிணிந்த நிலனும்**

**நிலனேந்திய விசும்பும்**

**விசும்பு தைவரு வளியும்**

**வளித்தலை இய தீயும்**

**தீமுரணிய நீரும்**

**என்றாங்கு ஐம்பெரும்பூதத்தியற்கை”[7]**

என்று புறநானூறு பாடல் பல்வேறு அணு மூலக்கூறுகள் ஒன்றாகச் சேர்ந்து நிலமும் , நிலத்தொடு காற்றும், காற்றிலிருந்து தீயும், தீ குளிர்ந்து, நீரும் தோன்றியதைக் குறிப்பிடுகின்றது.

இங்ஙனம் நிலத்தில் நீரும், நீரில் நிலமுமாய், நீர்த்தழுவும் நிலமே நாம் வாழ்கின்ற இந்த உலகம். நீரின்றி மண்ணில் தோற்றம் இல்லை, மண்ணின்றி நீரால் பயனில்லை, நிலமும் நீரும் இணைவதால் முகிழ்வதே இவ்வுலக இயக்கமாகும்.

### 2.2 சங்க இலக்கியங்களின் வழி நீரின் தன்மைகள்

பூமியின் அனைத்து உயிரினங்கள் உயிர் வாழ்வதற்கும் அவற்றின் ஒட்டு மொத்தப் பயன்பாட்டிற்கும் நீர் இன்றியமையாததாக உள்ளது. அதனை வள்ளுவர்

**“நீரின்றி அமையாது உலகெனின் யார்யார்க்கும்**

**வானின்று அமையாது ஒழுக்கு”[8]**

ஒரு மனிதன் பல நாட்கள் உண்ணாமல் கூட உயிர் வாழ்ந்துவிட முடியும். நீர் அருந்தாமல் சில நாட்களை தாண்டுவதே கடினம். தங்களுக்குத் தேவையான குடிநீரை தேங்கியிருக்கும் நீர் நிலைகளிலும், ஓடும் நீர் நிலைகளிலேயும் எடுத்துப் பயன்படுத்தி வந்தனர்.

**"நீர் இன்று அமையா உலகம் போலத்**

**தம் இன்று அமையா நம் நயந்தருளி"**[9]

என்ற வரிகளில் தண்ணீர் இல்லாமல் இவ்வுலகம் அமையாது. நீரின் சிறப்பை உலக மக்களுக்கு உணர்த்தியுள்ளார். நீரினால் மட்டுமே மக்களின் வாழ்வாதாரத்திற்குத் தேவையான பல்வேறு வகையான வளங்களை உருவாக்க முடியும்.

என்று நற்றிணை குறிப்பிடுகின்றது.

இங்ஙனம் உலக வளர்ச்சிக்கும், வளத்திற்கும் நீரே அடிப்படை என்ற காரணத்தினால் தான் நீரினைக் கடவுளாக போற்றும் மரபு சங்ககாலந்தொட்டு மக்களிடம் இருந்து வந்துள்ளது.

**"மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்**

**நாமநீர் வேலி உலகிற்கு அவன் அளிபோல்**

**மேல்நின்று தான்சுரத்த லான"**[10]

என்று சிலம்பு மழையை போற்றுகின்றது.

### 2.2.1 நீரின் பேராற்றல்

நீரானது பேராற்றல் உடையது. மலைகள், பாறைகள் போன்ற நில அமைப்புகளை மாற்றியமைக்கும் பண்பினைக் கொண்டது.

**"பாய்ப்புனல் பரந்தந்து**

**இறு வரை புரைமாறு இருகரை ஏமத்து**

**வரை புரை உருவின் நுரை பல சுமந்து"**[11]

என்ற வரிகள் மலைகளையெல்லாம் குப்பிட்டு பாய்ந்த புனலானது ஆற்றின் இருகரைகளுக்கிடையே தங்காமல் பொங்கி வெள்ளி மலையின் நிறமுடைய நுரைகளை அள்ளி வீசியது என்று பரிபாடல் நீரின் உருமாற்றத்தைப் புலப்படுத்துகின்றன. அடித்து வருகின்ற நீர் கட்டுக்கடங்காத வேகத்தையும் விசையையும் கொண்டது. அங்ஙனம் வரும் வெள்ளத்தை அணைக்கட்டி தடுத்து நிறுத்த இயலாது அதுபோல பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியுடன் எதிர்த்து நின்று போர்ப்புரிவது என்பது இயலாது என்று புலவர் குறிப்பிடுவதில் இருந்து நீரின் ஆற்றலை உணர முடிகின்றது.

### 2.2.2 நீரின் வண்ணம்

பொய்கையும், ஆறும், சுனையும், மடுவும், கடலும், முகிலும், கொண்டலும், வானும் எந்த நிறமாகக் காட்சியளித்தாலும் அதனை நீரானது ஏற்கும். நீருக்கு இயற்கையில் குணமும் மணமும் இல்லை என்பது அறிவியல் உண்மை. ஆனால் தான் தோன்றுகின்ற நிலத்தின் தன்மைக்கேற்ப தன்னைத் தானே மாற்றிக்கொள்ளும் பண்புடையது.

மலையிலிருந்து விழுகின்ற அருவி வெண்ணிறம் கொண்டதை வெள்ளருவி

**“பெருவரை இழிதரும் நெடுவெள்ளருவி**

**வயங்கு வெள்ளருவி”**[12]

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன.

**“அவிர்துகில் புரையும் அவ்வெள்ளருவி”**[13]

என்ற அடியில் உயர்ந்த மலையிலிருந்து அருவியானது வெண்மையான துகிலைப் போன்று வீழும் வெள்ளிய அருவி என்று குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகின்றது.

**“நீலப் பைஞ்சுனை”**[14]

என்ற அடியில் பைஞ்சுனை என்று சுனையைக் குறிப்பிடுவதில் பசிய நீர் நிறமுடைய சுனை என்பது புலப்படுகின்றது.மேலும்

**“பளிங்கு சொரிவு அன்ன பாய்சுனை குடைவழி”**[15]

என்ற அடியில் சுனையிலுள்ள நீரானது பளிங்கின் தெள்ளிய நிறத்துடன் காணப்பட்டதை அறியலாம்.

முல்லை நிலத்தில் பாயும் காட்டாறுகள் கருமை நிறமுடையதை

**“இரவின் அன்ன அருள் தூங்கு வரைப்பின்”**[16]

என்ற அடியில் பல்வேறு மரங்களும் காடுகளிடையே காணப்படுவதால் அங்கு பாயும் காட்டாறு இரவு போன்று கரு நிறமுடையதாக காட்சியளிப்பதைப் புலவர் குறிப்பிடுகின்றார்.

**“நீர்நிறம் கரப்ப ஊழுறுபு உதிர்ந்து**
**பூமலர் கஞலிய கடுவாள் கான்யாற்று கராஅம் துஞ்சும்**
**கல்உயர் மறிசுழ”**[17]

என்ற வரிகளில் பல்வேறு வகையான மலர்களை ஆற்றுநீர் சுமந்து வருவதால் அம்மலர்களின் நிறத்தை நீர் பெற்றதாகக் கபிலர் குறிப்பிடுகின்றார்.

**“சேயுற்ற கால்நீர் வரவு”**[18]

என்ற அடியில் வையை ஆற்றின் நீரானது செம்மை நிறத்துடன் வருவதாகப் புலவர் குறிப்பிடுகின்றார்.

**கொண்டல் இரவின் இருங்கடல்**[19]

என்ற அடியில் பரந்த பரப்பினையுடைய கடல் நீர் கருமை நிறத்துடன் இருந்துள்ளதை புலவர் குறிப்பிட்டுள்ளார்.

**“மணிதுணிந்தன்ன மாயிரும் பரப்பின்”**[20]

என்ற அடியில் மணி என்பது நீலமணியைக் குறிக்கும்.கடலானது நீலநிறத்தில் இருப்பதை அறிய முடிகின்றது.

**“மணிநிற இருங்கழி நீர்நிறம் பெயர்ந்து**

**மனாலக்கலவை போல**

**புண்ணுமிழ் குருதி”[21]**

என்ற வரிகளில் கழியிலுள்ள நீரில் குருதி வெள்ளமானது சென்று கலப்பதால் அதிலுள்ள நீரானது தன் நிறத்தை மாற்றிச் சிவந்த குங்குமக் குழம்பு போன்று காட்சியளிக்கிறது என்றும் பதிற்றுப்பத்துக் கூறுவதன் வாயிலாக நீரின் நெகிழ்வுத்தன்மையை அறியலாம்.

நீரின் நிறம் அது செல்லும் பாதை, சுமக்கும் பொருட்கள், பிரதிபலிக்கும் ஒளி, நிலத்தின் தன்மை போன்றவற்றால் கருமை, நீலம் பச்சை, செம்மை எனப் பல வண்ணங்களில் மாறுவதை உணர முடிகின்றது என்றாலும் கருநிறம் நீருக்குப் பொதுவாக கூறப்படும் வண்ணமாகும். நீல், நீள் என்னும் சொற்கள் கருமை நிறத்தாலே உண்டாயின.

### 2.2.3 நீரின் ஒலிகடத்தும் தன்மை

நீரில் ஒலியானது பாய்ந்து பரவும் தன்மையுடைது. கடலிலுள்ள நீரில் ஒலியின் வேகமானது சுமார் 4800 அடிகளாகும்.

**“நுரைத்தலைக் குரைப்புனல் வரைப்பு அகம்புகுதொறும்**

**புனல்ஆடு மகளிர் கதுமெனக் குடைய”[22]**

குரைப்புனல் என்பது ஆற்றின் ஓசையைக் குறித்தது. காவிரி புதுப்புனலாகப் பாய்ந்து வரும் பொழுது பேரிரைச்சலுடன் நுரையுடன் பொங்கி வெள்ளமென வந்ததாகப் புலவர் காட்சிப்படுத்துகின்றார்.

**“ஓங்குதிரை வியன் பரப்பின்**

**ஒலி முந்நீர் வரம்புஆக”[23]**

மிகப்பெரிய பரப்பினையுடைய கடலானது பேரோசைக் கொண்டது என்று கூறுவதன் வாயிலாக இதன் மூலம் ஒலியைக் கடத்தும் தன்மை நீருக்கு உண்டு என்பது புலனாகின்றது.

### 2.2.4 நீரின் செறிவுத்தன்மை

ஒரு பொருளின் கனஅளவு அலகின் எடையே அடர்த்தியாகும். நீரின் 1 கி க.செ.மீ ஆகும். நீர் அடர்த்தி மிக்கது.

**“நளிகடல் முகந்து செறிதக அருவி**
**கனைபெயல் பொழிந்து”[24]**

இவ்வரிகளில் செறிவு என்பது அடர்த்தியைக் குறிக்கும். கடல்நீர் ஆவியாகும் போது மேகமாக மாறுகின்றது. மேகத்தில் நீராவி தான் குளிர்ச்சியடையும் போது நீராக மாறி மழையாகப் பெய்யும். மேகமானது கடல்நீரை முகந்து செறிவு கொண்டு இருண்டு மிகுந்த மழைப்பெய்தது என்று குறிப்பிடுவதில் செறிவான நீராவி அடர்த்தி உடையது என்பதும் அந்நீரின் அடர்த்தியே மழையைப் பொழிதலுக்கு காரணம் என்பதையும் அறியலாம்.

### 2.2.5 நீரின் வெப்ப ஏற்புத் தன்மை

நீர் ஒரு சிறந்த வெப்பம் ஏற்பி ஆகும்..நீரின் கொதி நிலை கடல் மட்டத்தில் இருந்து 5000 அடி உயரத்தில் தண்ணீரின் கொதிநிலை 94.9 செல்சியஸ் ஆகும். காற்றின் அழுத்தத்தைப் பொறுத்து கொதிநிலை சிறிதளவு மாறும்.

**“வல்வாய்ச் சாடியின் வழைச்சுஅற விளைந்த**
**வெந்நீர”[25]**

என்ற அடியில் நீர் வெப்பத்தை ஏற்றதால் வெந்நீர் என அழைக்கப்பட்டது.

## 2.3. சங்க இலக்கியங்களில் நீர் ஆதாரங்கள்

### 2.3.1. மழை

மாரி அல்லாது காரியம் இல்லை மழை இல்லாவிட்டால் புல் பூண்டுகளும் தலைகாட்டாது. மண்ணில் விளைப்பொருட்களும் விளையாது. குளிக்க குடிக்க நீருமின்றி உயிரிகள் பரிதவிக்கும். பூமியே வறண்டு மக்கள் வசிக்க இயலாத பாலைவனமாக மாறிவிடும். ஆகவே பூமி குளிரவும், மக்கள் வாழவும், பயிர்கள் செழிக்கவும் மழை அவசியமாகும்.

மழையானது பருவ நிலைகளின் மாற்றத்திற்கு ஏற்ப மழையின் அளவு அதிகமாகவும், குறைவாகவும் பெய்கிறது. அத்தகை மழைவளம் குறித்தச் செய்திகள் சங்கப்பாடல்களில் புலவர் நாவில் பரவிக்கிடக்கின்றன.

மேகங்கள் கீழ்க்கடல் நீரை அள்ளி மொண்டு உண்டு மழைப் பெய்து ஐந்திணைகளையும் வளப்படுத்தியதை சங்கப்புலவர்கள் காட்சிப்படுத்தியுள்ளனர்.

**1. குறிஞ்சியும் மழையும்**

**“பேயல்கண் மறைத்தலின் விசும்பு காணலையே**

**நீர்பரந்து ஒழுகலின் நிரம் காணலையே”[26]**

என்ற பாடலில் மழை காண இயலாமல் மக்கள் நடக்கின்ற வழிப்பாதையைக் கண்டுப்பிடிக்க முடியவில்லை எனக் குறிப்பிடுகிறது.

**“எல்லை சேறலின் இருள்பெரிது பட்டன்று**

**பல்போர் துஞ்சும் பானாள் கங்குல்**

**யாங்கு வந்தனையோ ஓங்கல் வெற்ப**

**வேங்கை கமழும் எம்சிறுகுடி**

**யாங்கு அற்நதனையோ நோகோ யானே”[27]**

என்ற வரிகள் வானுயர்ந்த மலையில் விடாமல் பெய்யும் மழையால் வானத்தை மறைத்துக் கொண்டது. அதனால் வானத்திலே மின்னும் விண்மீன்களையும் காணவில்லை. மழை நீர் எங்கும் வெள்ளமாகிப் பெருகிப்பரந்தோடுவதால் நிலத்தையும், வளத்தால் வேங்கைமரங்களில் பூக்கள் மலர்ந்து காணப்படுகின்றது.

**2 முல்லையும் வளமும்**

திசைகள் எல்லாம் மறையும்படி முகில்கள் பரவி மழைக்கால் இறக்கி இடியுடன் கூடிய பெரிய மழையைப் பொழிந்தன. அதனால் மகிழ்ந்து வரிகளையுடைய தேரைகள் பள்ளங்கள் தோறும் கழைக்கூத்தர் கூத்தாடுகின்ற களத்தில் ஒலிக்கின்ற பறைபோல ஒலித்தன. நீண்ட

பூங்கொத்துகளையுடைய கொன்றை மரங்களோடு காடுகள் அழகுபெறும்படி ஒருங்கே அழகிய பொன்னால் இயற்றிய ஒளிவிடுகின்ற அணிகலன்களைத் தொங்கவிட்டது போலக் காட்சியளித்தன. மலர்ந்து அழகைக் கொள்ளா நிற்ப எவ்விடத்தும் முல்லைக்கொடிகளும் தோற்றாமரங்களும் ஒருங்கே மலர்ந்து விளங்கின. கல்நிறத்தில் பிளந்த வாயையுடைய பசிய சுனைகள் தம்பால் விலங்குகள் கரையில் நின்றே நீர்ப்பருகும் அளவிற்கு நீரால் நிரம்பி நின்றன.

மரங்கள் அடர்ந்த காடுவளம் மிகுதற்குக் காரணமான மழைபெய்யப் பெற்ற களர்நிலத்தின் வீசுகின்ற குளிர்காற்றுப் படுந்தோறும் நிலவொளி போன்று செறிந்த மொட்டுகள் மலர்ந்த மூடப்பட்ட கால்களையுடைய பிடவஞ்செடிகளோடு அழகிய விறலியர் கையால் மாட்சியமை பட ஆடுகின்ற தோளி என்றும் ஒப்ப மெல்ல மயில் கூட்டங்கள் கூத்தாடுகின்றன.

முல்லைநிலத்தே ஆழமான நீரையுடைய பள்ளங்களில் உள்ள பிளந்த வாயினையுடைய தேரைகள் நீண்ட வழியெல்லாம் சிறிய பலவாகிய வாத்தியங்களைப் போல ஒலித்தன. சிறிய புதராகிய பிடாவின் நீண்ட காம்பினையுடைய மலர்கள் செம்மண்ணாகிய நிலத்திடத்து நுண்ணிய மணலில் உதிர்ந்து அழகு செய்தன .கொடிய சினமுடைய பாம்பின் படம் மேலே உயர்ந்தது போன்ற தண்ணென மணக்கின்ற காந்தள் பூவினது தாது கட்டவிழ்ந்து விரிந்தன. இவ்வாறு நறிய முல்லைப்பூவுடன் செங்காந்தள் பூவும் வேறு பல பூக்களும் ஒருங்கே மலர முல்லைக்காடு முழுமையும் மலர்களின் நறுமணம் பரவிப் பொருந்தியது. அங்ஙனம் மரம் செடி கொடிகள் மழைவளம் பெற்றுத் தளிர்ந்து அரும்பு மலர்ந்து புத்தழகுடன் மணம் வீசிப் பொலிவதால் கான், தரு, புதுவளம் பெற்ற புறவாக முல்லை நிலம் காட்சியளித்தது.

#### 2.3.1.1 மழையைக் குறிக்கும் சொல்லாட்சிகள்

மழ என்பது உரிச்சொல்லாகும். மழ களிறு என்பதற்கு இளமையான களிறு என்று பொருளாகும். இளமையான காலத்தில் தோன்றும் அலட்டல் போன்று காற்றில் அலைந்து அலைந்து புது நீரினை பெய்வதால் மழை

எனப் பெயர் பெற்றது. மாரி, தூறல், சாரல், ஆலி, துவலை, பெயல், மழை போன்ற சொற்கள் வானிலிருந்து மழை வீழ்தல் என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் வழங்கப்படுகின்றது.

மழைபொழிதலைத்

**“துவலை பெயலை துளியே உறைபெயல் ஆலி**

**ஊதகம் சிதறி தூவல் சீகரம் தூறல் வருடம”**[28]

எனத் திவாகரம் குறிப்பிடுகின்றது.

**1. மாரி**

மாரி என்பது மார் + இ = மாரி

அன்னையின் மார்பிலிருந்து ஒழுகும் பால் போன்று சீராகப் பெய்வதால் மாரி என அழைக்கப்படுகிறது. மழை அல்லாது பிழைப்பு இல்லை. மாரி அல்லாது காரியம் இல்லை.

**“காலொடு பட்ட மாரி”**[29]

**“மால்வரை மிளிக்கும் உருமனும் கொடிதேமி**

**மார்இரீஇ மான்றன்றால் மழையே”**[30]

என்ற வரிகளில் புயல் வெள்ளம் போன்று காற்றினால் எவ்விதப் பாதிப்புமின்றி வெள்ளச்சேதங்கள் இன்றி மக்கள் இன்னலடையாமல் காற்றுடன் கலந்து நிலப்பரப்பின் மேல் அனைத்து இடங்களிலும் ஒரே அளவு நீரைப் பெறுமாறு பெய்கின்ற மழையை மாரி என்றழைத்தனர்.

**2. தூவல்**

காற்று இல்லாமல் தூவலாகப் பெய்யும் மழை புல்பூண்டு, இலைகள் ஈரமான பின்பு காய்ந்து விடுவதைத் தூவல் என்றனர்.

**“குளிர்ப்பொதும்பர் நளித்தூவல்”**[31]

என்கிற அடியில் குளிர்ச்சிப் பொருந்திய இளமையான மரங்களை உடைய சோலையின் செறிந்த தூவல்கள் ஓசையை உண்டாக்குகிறது.

**“தீயின் அன்ன ஒண்செங்காந்தள்**

**தூவல் கலித்த புதுமுகை**[32]

என்ற அடியில் மழைத்தூவலால் காந்தள் மலர்கள் செழித்துக் காணப்பட்டதை அறியலாம்.

**தூவல் கலித்த இவர்நாண வளர்கொடி**[33]

**தூவல் அம் சேர்ப்பன்”**[34]

**“வான் கடற் பரப்பில் தூவற்கு எதிரிய”**[35]

என்ற பாடலடிகள் தூவல் மழையை எடுத்துரைக்கின்றன.

3. **துளி**

**“நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய”**[36]

**“துளிமழை பொழியும் வளிநஞ்சு நெருங்கோடு**

**துளி மழை”**[37]

**“குளிர்கொள் சினைய குரூஉ துளி தூங்க**

**தூத்துளி”**[38]

என்ற பாடலடிகள் ஆங்காங்கே விழும் மழைத்துளிகளால் நிலமானது குளிர்வதை எடுத்துரைக்கின்றன.

**2.3.1.2. சங்க இலக்கியங்களில் மழையின் தோற்றம்**

மழைச்சுழற்சித்தன்மைக் கொண்டது. கடல் நீரானது கதிரவனின் வெப்பத்தால் ஆவியாகி மழையாக பொழிகிறது. பெய்யும் மழைநீர் ஆறுகளில் ஓடியும், பூமிக்குள் ஊடுருவியும் மீண்டும் பல வழிகளில் கடலையே சென்று சேர்கிறது. மீண்டும் கடல்நீர் ஆவியாகி மழை பொழிவதை சங்கப்புலவர்கள் மழை நீர்ச்சுழற்சி என்று குறிப்பிடுவதை

**“வான்முகந்த நீர் மலைப்பொழியவும்**

**மலைப்பொழிந்த நீர் கடல்பரப்பவும்**

**மாரிபெய்யும் பருவம் போல**

**நீரினின்று நிலத்து ஏற்றவும்**

**நிலத்தின்று நீா் பரப்பவும்**

**அளந்தறியாப் பலபண்டம்”[39]**

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

புவியில் உள்ள கடல், ஆறு, ஏரி, குளங்கள் போன்ற நீர் ஆதாரங்களிலுள்ள நீர் கதிரவனின் கதிர்களால் ஈர்க்கப்பட்டு வளியை அடைகிறது. வளிமண்டலத்தில் காணப்படும் நீர் குளிர்ச்சி அடைந்து மீண்டும் மழையாகப் பொழிகிறது.

கடலிலுள்ள நீரானது வெப்பத்தால் நீராவியாகி வளிமண்டலத்தில் கலந்து மேகங்களாக உருவெடுக்கிறது. இம்மேகங்கள் காற்றுடன் குளிர்ந்து ஈரப்பதத்தைத் தோற்றுவித்து மழைப்பொழிவதை

**“பனித்துறைப் பெருங்கடல் இறந்து நீா் பருகி**

**குவவுத்திரை அருந்து கொள்ளைய குடக்கு ஏர்பு**

**வயவுப்பிடி இனத்தின் வயின் வயின் தோன்றி**

**இருங்கிளைக் கொண்மூ ஒருங்குடன் துவன்றி**

**காலை வந்தன்றால் காரே”[40]**

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

கதிரவனின் வெப்பத்தால் நீரானது நீராவியாக மாறி மேலேச் சென்று மேகமாக மாறுகிறது. இந்தச் செயல் மீண்டும் மீண்டும் நடைபெறும் போது மேகத்தின் அடர்த்தி அதிகரிக்கிறது. அந்நிலையில் மேகங்கள் காற்றின் போக்கிற்கேற்ப செல்கிறது. இவ்வாறு செல்கிறச் மேகங்களை மலைகள் தடுக்கின்றன. மலைகளில் காணப்படும் தாவரச்சூழல் காரணமாக அப்பகுதி குளிர்ச்சியாகக் காணப்படுகிறது. இதனால் மேகங்களாகக் காணப்படும் நீராவியானது குளிர்ச்சியடைந்து மழையாகப் பெய்கின்றது. அதேபோல ஒரு இடத்தில் வெப்பம் அதிகரிக்கும் போது அங்குள்ள வெப்பமானக்காற்று மேல்நோக்கிச் செல்கிறது. இவ்வெற்றிடத்தை நிரப்புவதற்கு குளிர்ந்தகாற்று வந்து சேர்கின்றது. இவ்வாறு குளிர்காற்று வருவதும் மேகங்கள் மழைப் பெய்வதற்குக் காரணமாகின்றது. காடுகள் அதிகமாக இருப்பதாலும் சுற்றுச்சூழல் குளிர்விக்கப்பட்டு மழைப் பெய்கிறது. இவையாவும் மழைப் பொழிவிற்கான காரணங்களாகும்.

மேகங்கள் குளிர்ச்சியடைந்து நீர்த்துறைகளையும் பேரொலியுடன் எழுந்து வரும் அலைகளையும் உடைய பெரிய கடற்பரப்பில் நீரினை முகந்து மேற்குத்திசையில் வான் உயர கருவுற்ற பெண் யானைக் கூட்டம் போல இடியுடன் மழையைப் பெய்தது என்று அகநானூறு மழையின் அளவு மேகத்தின் அடர்த்தி பொறுத்து அமைவதை இப்பாடல் சுட்டுகின்றது.

மழைப்பொழிவிற்கு காடுகளும் மலைகளும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. இதனை சங்கப்பாடல்கள் பல சுட்டுகின்றது. காற்றின் வழியாக வேகமாக வருகின்ற மேகக்கூட்டங்கள் வானளாவிய மலைகளில் தங்குகின்றன. மலையில் தங்கும் மேகங்கள் மேலே எழுகின்றன. காற்றினால் குளிர்ச்சி அடைந்து மழைப்பொழிவதை

**"ஒளிறுமழை தவிர்க்குங் தண்குன்றம"**[41]

உயர்ந்த மலைகளில் மேகங்கள் தடுப்பதைக் குறிப்பிடுகிறது.

**"காலைமாரி பெய்து டிதாழி லாற்றி**
**விண்டு முன்னிய புயல்நெடுங் காலைக்**
**கல்சேர்பு மாமழை தலைஇப்**
**பல்குரற் புள்ளி னொலியெழுந் தாங்கே"**[42]

என்ற வரிகள் நெடுங்காலமாக மழைப்பொழியாத மேகங்கள் மலைகளில் தங்கிப் பெருமழை பெய்ததைக் குறிப்பிடுகின்றன.

**"கானமுங் கம்மென றன்றே வானமும்**
**வரைகிழிப்பு அன்ன மையிருள் பரப்பி**
**பல்குரல் எழிலி பாடோவாதே**
**மஞ்சுதவழி இறும்பில்"**[43]

**"கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை**
**வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்**
**தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து"**[44]

என்ற வரிகளில் காற்றுடன் சேர்ந்து வருகின்ற மேகங்கள் காடுகளினால் குளிர்விக்கப்பட்டு மழைப்பொழிந்ததைக் குறிப்பிடுகின்றன.

### 2.3.1.3 மழையின் பல்வேறு நிலைகள்

மழையானது மேகங்களின் இயக்கத்திற்கு ஏற்ப பல்வேறு நிலைகளில் பெய்வதை சங்கஇலக்கியம் பகர்கின்றது. தண்மழை, பயமழை, படுமழை, மாமழை, வெண்மழை, நாள்மழை, சிறுமழை, மயங்குமழை, வான்மழை, உரவுமழை, இனமழை, இளமழை, தளிமழை, வளமழை, பெருமழை, செல்மழை, ஓடுமழை, பழமழை, அலங்குமழை, தூய்மழை எனப் புலவர்கள் மழைப்பொழிதலை பாகுபடுத்தி அடைமொழியிட்டுள்ளனர். ஒவ்வொரு மழையும் அதன் காலம், அளவு இயக்கம், தன்மையில் வேறுபடுவதையும் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். இத்தகைய மழைவளத்தால் தான் மாதம் மும்மாரியும் மழைப்பெய்து சங்ககால மக்கள் வளமையுடன் வாழ்ந்துள்ளனர் என்பது வெளிப்படையான உண்மை.

**1. மாமழை**

வானத்திலே அங்கும் இங்குமாகத் திரிகின்ற வெண்மையான மேகக்கூட்டங்கள் சிறிது சிறிதாகக் கருமையான வண்ணத்தைப் பெற்று வெவ்வேறு இடங்களில் உதிர்ந்து கிடக்கின்ற மேகங்கள் ஒன்றாக இணைகின்றன. இதனையே வானம் இருட்டிக் கொண்டு வருகிறது என்று கூறுகின்றோம். இதைப் புலவர் கமஞ்சூல் மாமழை என்கிறார். இங்கே மா என்பதற்குக் கரிய இருண்ட என்று பொருள்படும். கமஞ்சூல் என்பது நிறைமாத கர்ப்பமாகும். சூல் கொண்ட பசு கன்றை ஈனுவது போன்று சூல் கொண்ட மேகம் மழைநீரைப் பொழிகின்றது. அடிவானத்தில் தெள்ளத்தெளிவான மேகங்களும் கடல்நீரை முகந்து வானத்துக்கும் பூமிக்கும் மின்னலைப் பரப்புகின்றது. அவ்வப்போது இடிக்கின்ற ஒலியானது வானத்தின் உச்சிக்கு மேலே வெடிக்கின்றது.

**“கடல்முகந்து கொண்ட கமஞ்சூல் மாமழை”**[45]

**“கானம் கமஞ்சூல் மாமழை கார்பயந்து இறுத்தென”**[46]

என்ற வரிகளில் கடலிலுள்ள நீரை மேகங்கள் முகந்து வலப்பக்கமாக எழுந்து நிறைந்த சூல் கொண்டு இடி மின்னலுடன் மழைப்பெய்ததை அறியலாம்.

**“கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்**
**திரைப்பிதிர் கடுப்ப முகடுஉ கந்து ஏறி**
**நிரைத்துநிறை கொண்ட கமஞ்சூல் மாமழை”**[47]

என்ற வரிகளில் கிழக்குப்பக்கத்தில் இருந்து காற்று வீசுகின்ற பொழுது மேகங்கள் மலையில் ஏறுவதையும் அதனால் மாமழை பொழிவதையும் அறியமுடிகின்றது.

**2.அலங்குமழை**

**“அலங்கு என்பதற்கு அசைதல் என்று பொருள். குதிரை நின்று கொண்டிருக்கும் போது காற்றினாலோ குதிரை தன் முகத்தைப் பக்கவாட்டில் ஆட்டுவதாலோ அதன் உளை இடவலப்பக்கமாக ஆடுவதை அலங்குஉளை என்பர்.”(groups.google.com)**

இங்ஙனம் காற்று இடது வலது பக்கமாக வீசும் போது மேகங்கள் மழைப்பொழிவதையே அலங்கு என்கிறார்.

**“அலங்குமழை பொழிந்த அகன்கண்அருவி**
**ஆடுகழை அடுக்கத்து இழிதரும் நாடன்”**[48]

என்ற வரிகளில் அலங்குமழை என்பது அசையும் மேகங்கள் பொழிந்த மழை என்று பொருள்படும். மிகவும் உயரத்திலுள்ள மேகங்கள் காற்றின் வேகத்தால் அவ்வப்போது இடது வலப்பக்கமாக சுழன்று அசைந்து மழைப்பொழிதலையே அலங்குமழை என்று குறிப்பிடுகிறார் புலவர்.

**3. இளமழை**

சிறுபொழுது பெய்கின்ற மழை, பயன்படும் மழை, பயன்படுவதாகிய மேகம் என்று தமிழ் அகராதி பொருள் தருகின்றது.

**“களிமலி கள்ளின் நல்தேர் அவியன்**

**ஆடுஇயல் இளமழை சூடித்தோன்றும”**[49]

என்ற வரிகளில் பாலை நிலத்தில் எங்கும் தண்ணீர் இருக்காது அதனால் தாவரங்கள் வாடிக்கிடக்கும். அத்தகைய பெருவழியில் அவியன் ஆட்சிப்புரியும் கள்ளில் என்னும் ஊரில் பக்கத்துள்ள மலையின் பிளவிடத்தில் சிறிய முகில்கள் சேர்ந்து சிறிது நேரம் மழையைப் பெய்விக்கும். அம்மழையானது அங்கு தளர்ந்து இருக்கின்ற உயிரினங்களுக்கு நீரினை அளிக்கின்றது என்பது புலப்படுகின்றது.

**“ஆடிய இளமழை பின்றை**

**வாடையும் கண்டிரோ”**[50]

என்ற வரிகளில் இளமழை பெய்த பின்பு கூதிர்கால வாடைக்காற்றானது வீசுவதை அறியலாம்.

**“குன்றக் குறவன் புல்வேய் குரம்பை**

**மன்றுஆடு இளமழை மறைக்கும் நாடன”**[51]

என்ற வரிகளில் குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவனின் புல்லால் வேயப் பெற்ற சிறுகுடிலை சிறிய மழை தோன்றி மறைத்தது என்று புலவர் குறிப்பிடுகின்றார்.

**4 இனமழை**

இனம் என்றால் கூட்டம் என்று பொருள். மேகங்கள் கூட்டமாக நிறைந்து மழைப்பொழிதலை இனமழை என்பர்.

**“நுணங்குநண் பனுவல் புலவன் பாடிய**

**இனமழை தவழும் ஏழில் குன்றத்து”**[52]

**“வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்**

**இனமழைதவழும் ஏற்றுஅரு நெடுங்கோட்டு”**[53]

என்ற வரிகளில் தொண்டைமானின் நாட்டினிலே மேகங்கள் கூட்டாக மலை உச்சியில் தோன்றி மழை பெய்தது என்று தாயங்கண்ணனார் குறிப்பிடுகின்றார்.

**5 தளிமழை**

தளி என்பது குளிர் நீர்த்துளி தலைப்பெயல்மழை எனப்பல பொருள்படும். கூதிர்க்காலப் பருவத்தில் பெய்கின்ற முதல் மழையை தளிமழை என்பர்.

**"பகலினும் அகலா தாகி யாமம்**
**தவல்இல் நீத்தமொடு ஐயெனக் கழியத்**
**தளிமழை பொழிந்த தண்வரல் வாடையோடு**
**பனிமீக் கூரும் பைதல் யானாள்"**[54]

என்ற வரிகளில் கடல் நீரை முகந்த மேகங்கள் கூதிர்ப்பருவத்தில் வாடைக்காற்றுடன் சேர்ந்து முதன்முதலில் பகல் இரவு என்று பாராமல் மழைப்பெய்ததால் மிகு குளிர்ச்சியுடன் நடுக்கத்தையும் தளிமழை உண்டாக்கியதாகக் குறிப்பிடுகின்றார்.

**"தளிமழை பொழியுந் தண்பரங் குன்றிற்**
**கவிகொள் சும்மையொலிகொயா ரயற"**[55]

திருப்பரங்குன்றத்திலே தளிமழை பெய்ததால் மக்கள் மகிழ்ச்சியில் பகன்றை மாலையைச் சூடி மக்கள் துணங்கை குரவைக் கூத்து ஆடி ஆரவாரம் செய்ததாகப் புலவர் குறிப்பிடுகின்றார்.

தளிபெறுதண்புலம் என்று அழைக்கப்படும் முதல் மழைபெறும் காட்டில் செழிப்பான நிழல்தரும் ஆண்மரத்தின் அடியில் கடம்ப மாலையணிந்து நிற்கும் ஓர் ஆண்மகன் முருகன் தோன்றியதாகத் திருமுருகாற்றுப்படைக் குறிப்பிடுகின்றது.

**6. ஆடுமழை**

ஆடுமழை என்பது காற்றால் அலையப்படும் மேகங்களால் பெய்யும் மழை என்பர்.

**“நுணங்குநுண் பனுவல் போல கணம்கொள**

**ஆடுமழை தவழும் கோடுயர் நெடுவரை”**[56]

என்ற வரிகளில் கணவனை இழந்த கைம்மைப்பெண்டிர் நூற்கும் பஞ்சு போல நெருங்கிய மேகங்கள் காற்றினால் அலைக்கழிக்கப்பட்டு மலையின் கொடுமுடிகளில் மழைப்பொழிகிறது.

ஆடுமழை எனப்படுவது ஆண்டின் முதல் மழையாகும். அதாவது தை மாதத்தின் முதல் நாளுக்கும் 12 ஆம் நாளுக்கும் இடையில் மலைமுகட்டில் இறங்கி பெய்யும் மழை இது தைந்நீராடுவதற்காகப் பெய்யும் மழையாகும்.

**7 வளமழை**

வளமழை என்பது மழை இல்லாத கோடைக்காலத்திலும் வறுமையை நீக்கி மிகுதியான செழிப்பை நல்கும் மழையாகும்.

**“வளமழை பொழிந்த வால்நிறக் களரி”**[57]

வெண்மையான நிறத்தையுடைய சேற்றுநிலத்திலே வளமான மழை பொழிந்ததால் பிடாமரத்தின் வளைந்த அடிப்புறத்தினையுடைய தொகுதிப்பட்டு விளங்கிய அரும்புகள் வீசும் குளிர்ந்தக்காற்று தம்பால் மோதுந்தோறும் இதழ் விரிந்து நிலவொளி எண்ணுமாறு ஒளியுடன் காட்சியளித்தது. வெண்மையான பற்களையும் உளிபொருந்திய நெற்றியையும் உடைய மகளிர் தோளி ஆடலைப் போல மயிலினங்கள் தோள்பெயர்ந்து ஆடின. மரங்களால் சூழப்பட்ட காட்டின் இயல்பும் இத்தன்மையானது என்று மள்ளனார் குறிப்பிடுவதிலிருந்து வளமழை பார்க்கும் இடமெல்லாம் செழிப்பைத் தருகின்றது.

**“நீண்டொலி அழுவம் குடைபட**

**முகந்து கொண்டு ஈண்டு செலல் கொணமூ வேண்டுவயின் குழீஇப்**

**பெருமலை யன்ன தோன்றல் சூல்முதிர்பு**

**உரும்உரறு கருவியொடு பெயல்கடன் இறுத்த**

**வளமழை மாறிய என்றூழ்க் காலை”[58]**

நீளமாக ஒலிக்கும் கடலிலுள்ள நீர்க்குறையும் வகையில் அந்நீரை முகந்து கொண்டு வேகமாகச் செல்லும் மேகங்கள் வேண்டிய இடத்துத் திரண்டு மாமலை போல் தோன்றிக் கருவுற்று இடி மின்னல் ஆகியவற்றுடன் கூடி மழையில்லா வேனில்காலத்திலும் முறையாகப் பெய்து வளத்தைத் தருவதாகப் பெருஞ்சித்திரனார் குறிப்பிடுகின்றார்.

**8 படுமழை**

படு என்றால் மிகுந்த என்று பொருள். படுமழை என்பது மலை முற்றிலும் நனையும்படி பெய்யும் மழையாகும்.

**“படுமழை பொழிந்த பாறை மருங்கில்**

**சிரல்வாய் உற்ற தளவின”[59]**

என்ற வரிகளில் மிகுதியான மழையானது பாறையின் அருகில் பெய்ததைப் புலவர் காட்சிப்படுத்துகிறார்.

**“நெடுவான் மின்னி குறுந்துளி தலைஇ**

**படுமழை பொழிந்த பகுவாய் குன்றத்து”[60]**

என்ற வரிகளில் வானத்தில் சிறிய நீர்த்துளிகளோடு தொடங்கிய மழை மலையின் மிகுந்து பெய்தது.

**“மள்ளர் கொட்டின் மஞ்ஞை ஆலும்**

**உயர்நெடும் குன்றம் படுமழை தலைஇச்**

**சுரம்நனி இனிய ஆகுக தில்ல”[61]**

என்ற வரிகளில் பாலைநிலத்தில் வாழும் மறவர்களின் பறையொலியைக் கேட்டும் மயில்கள் ஆடும் மலைப்பகுதியில் ஆரவாரமிகுந்த மேகங்களால் மழை பொழிந்ததால் வெம்மையானது நீங்கியது என்று புலவர் குறிப்பிடுவதில் கோடைக்காலத்தில் பொழியும் மழை என்று புலப்படுகிறது.

**9 பழமழை**

பழமழை என்பது மழைப்பருவத்தில் உரிய நேரத்தில் பொழியாமல் காலம் தாழ்த்தித் தோன்றுகின்ற மழைப்பெருக்காகும்.

**"பழமழை கலித்த புதுப்புனல் வரகின்**
**இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை**
**இருவிசேர் மருங்கில் பூத்த முல்லை"**[62]

முன்பொருநாள் பெய்த மழையால் தழைத்து வளர்ந்த வரகு என்று குறிப்பிடுவதில் அறியலாம்.

**"பழமழை பொழிந்தெனப் பதன் அழிந்து உருகிய**
**சிதட்டுக்காய் எண்ணின் சில்பெயற் கடைநாள்"**[63]

கார்காலத்தின் கடைசி நாள்களில் மழைப்பெய்ததால் எள்ளானது காய் இல்லாமல் உள்ளீடு அற்றதாக வெறுங்காய்களாகக் காணப்படுகின்றது என்பதில் தொடக்கத்தில் பெய்ய வேண்டிய மழை பின்பு பெய்ததை உணர முடிகின்றது.

**10 வருமழை**

வருமழை என்பது மேகம் நின்ற இடத்திலே நின்று போவதும் வருவதுமாக இருப்பதாகும்.

**"வருமழை கரந்த வால்நிற விசும்பின்**
**நுண்துளி மாறிய உலவை அம்காட்டு**
**ஆலநிழல் அசைவு நீக்கி**
**அஞ்சுவழி அஞ்சாது அசைவழி அசைஇ"**[64]

பெய்கின்ற மழைப்பெய்யாமல் காற்றானது சுழன்று வீசுவதால் வானத்திலிருந்து நுண்ணிய மழைத்துளிகளும் விழாமல் இருக்கும் காட்டுவழியாகும்.

**11 ஓடுமழை**

ஓடுகின்ற மேகங்களை ஓடுமழை என்பர்.

**"ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்**

**ஓடுமழை கிழிக்கும் சென்னி**

**கோடுஉயர் பிறங்கல் மலைகிழ வோனே"[65]**

மழையால் நீண்டு வானளாவிய உயர்ந்த மூங்கில்கள் ஆகாயத்தில் ஓடுகின்ற மேகங்களைக் குத்திக் கிழிப்பதாகக் குறிப்பிடுகின்றார்.

**12 நாள்மழை**

**"நாள்மழை தலைஇய நலநெடுங் குன்றத்து**

**மால்கடல் திரையின் இழிதரும் அருவி"[66]**

இப்பாடலில் நாள் என்பது விடியற்காலத்தைக் குறிக்கின்றது. விடியற்காலத்தில் பெய்த மழையால் அருவிகளில் நீரானது கடல் போல பெருக்கெடுத்து வீழ்கின்றது. எனவே நாள்மழை விடியற்கால மழையாகும்.

**13 நுண்மழை**

மிகச்சிறிய என்பதற்கு நுண் என்று பொருள். நுண்ணிய அளவில் பெய்யும் தூறலை நுண் மழை எனலாம்.

**"நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த்**

**தண்ணிய ஆயினும் வெய்ய மன்றோ"[67]**

தூறலால் மலர்ந்த நறுமண மலர்கள் என்று

**14 செல்மழை**

கிடுகு என்பது விரைவில் அழியும் பொருளாகும்.

**"எயில்ஊர் பல்தோல் போலச்**

**செல்மழை தவழும் சென்னி**

**விண்உயர் பிறங்கல் விலங்குமலை நாட்டே"[68]**

**15 ஆலி**

திடீரென்று தோன்றும் வெப்பச்சலனத்தால் காற்று குளிர்ந்து மேகத்திலுள்ள நீர்ப்பனிக்கட்டிகளாக உறைந்து மழையுடனோ அல்லது தனியாக வீழ்வதை ஆலங்கட்டி மழை என்பர். இதை சங்க இலக்கியம் ஆலி என்று குறிப்பிடுகின்றது. குளிர்ச்சி மிகுதியால் நீரானது கட்டியாக மாறுவதையே ஆலி என்றழைத்தனர்.

**"ஆலங்கட்டியை சங்கஇலக்கியம் இருப்பைப்பூ, மராஅம்பூ, ஈங்கைப்பூ முத்து, கழங்கு ஆகியவற்றுடன் உவமைபடுத்தியுள்ளனர்"**[69]

**"துளியும் நீர்கொள் ஆலங்கட்டியும்**
**மழையும் ஆலி என வகுத்தனரே"**[70]

எனப் பிங்கல நிகண்டும் கூறுகிறது

**"ஆலியின் தன்மையினை**
**தண்மழை ஆலி சூர்பனிப்பன்ன தண்வரல் ஆலி**
**ஆலியின் நிரந்தண்ணென்று கானங்குழைப்ப"**[71]

என்று குறிக்கப் பெற்றுள்ளது.

**"ஆலித்தண்மழை தலைஇய"**[72]

குளிர்ச்சிப் பொருந்திய மழை ஆலங்கட்டிகளுடன் பெய்தது அது வெண்மையான முல்லைப்போலக் காட்சியளித்தது எனப் புலவர் குறிப்பிடுகிறார்.

**"கால்மயங்கு கதழ்உறை ஆலியொடு சிதறி"**[73]

மழைத்துளிகள் ஆலங்கட்டியொடு சிதறின.

**2.3.2 கடல்**

பூமியின் மேற்பரப்பில் உருவான நீர்ப்பள்ளமான பகுதிகளில் நிரம்பித் தோன்றுவதையே கடல் என்பர். இவ்வுலகமானது பரப்பால் பெரியது. அதிலும் நிலப்பரப்பை விட நீர்ப்பரப்பே மும்மடங்கு விரிந்தது. நிலப்பரப்பு நீர்ப்பரப்பு எனப் பொதுவான கருத்துகள் இருந்தாலும் பரப்பு

என்பது கடலினைச் சுட்டுகின்றது. அதனை குறிக்கும் விதமாக கடலினை பரவை என்றழைத்தனர்.

கண்பார்வையை கடந்து விரியும் நீர்ப்பரப்பு கடல் எனப்பட்டது. சங்க இலக்கியங்கள் கடலினை

**“இலங்கு நீர்ப்பரப்பு, துணிநீர்பௌவம், நெடுநீர் மலிகடல், முந்நீர் விரிநீர், பனிநீர், மாநீர், முதுநீர், பனிப்பௌவம், தெண்கடல், பெருங்கடல், பௌவநீர் எனப் பல பெயர்களில் சுட்டுகின்றது”**[74]

நெய்தல் நிலம் என்பது கடலும் கடல் சார்ந்த பகுதியென்று தொல்காப்பியம், நம்பியகப்பொருள் போன்ற நூல்கள் எடுத்துரைத்துள்ளன. எனவே நெய்தல் நிலத்தின் மிகப்பெரிய இயற்கை நீர்நிலை கடலாகும். மலை முதல் வயல் பகுதி வரைதல் பொழிகின்ற மழைநீரானது ஆறுகளாக ஓடி சென்று கடலில் கலக்கின்றன. கடல் என்பதற்கு சங்க இலக்கியங்கள் முந்நீர், பௌவம், ஆழி, அழுவம் என்ற பல பெயர்களில் புலவர்களால் பயன்படுத்தப்பட்டுள்ளதை விளக்குகின்றன. பிங்கல நிகண்டு கடல் குறித்த பல பெயர்களைச் சுட்டிக்காட்டியுள்ளதை,

‘அம்பரம், ஆர்கலி, அளக்கர், தோயம், அம்புராசி, மகராலயம், பரவை, சலதி, பௌவம், மகோநதி, சலநதி, வீரை, வேலாலயம், வாரி, வாருணம், புணரி, முந்னீர், தொன்னீர், சமுத்திரம், நதிபதி, சுழி, வாரணம், பெருநீர், அழுவம், கார்கோள், தென்டிரை போன்றவற்றின் வழி அறியமுடிகின்றது. எனவே கடலைக் குறிக்கும் பல சொற்கள் வழக்கிலிருந்துள்ளதை சங்கப்பாடல்களின் வாயிலாகவும் நிகண்டுகளின் வாயிலாகவும் எடுத்துரைக்கப்பட்டது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

கடல்நீர் ஆவியாகி மேகமாகி மழையாக பொழிந்தாலும் கடல்நீரின் அளவு குறைவதில்லை என்றும், அப்படிப்பட்ட கடலானது வெண்மையான அலைகளைக் கொண்டு காணப்படும். இதனை,

**“அளப்பு அருமையின், இரு விசும்பு அணைய**
**கொளக் குறைபபாமையின் முந்நீர் அனைய**

**வெண் திரை முந்நீர் வளைஇய உலகத்து"[75]**

என்ற பதிற்றுப்பத்து பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன. கடலுக்கு அழுவம் என்ற பெயர் வழங்குவதினை,

**"அழுவம் நின்றஅலர் வேர்க்கண்டல்**
**கழிபெயர் மருங்கின் ஒல்சி ஓதம்**
**பெயர்தரப் பெயர்தந்தாங்கு"[76]**

என்ற குறுந்தொகைப் பாடல்வரிகள் மொழிகின்றன. கடலைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் அடைகள் கடலின் தன்மையை அறிந்து கொள்ள ஏதுவாகின்றது.

மேலும் இவ்வுலகம் முழுவதும் கடலால் சூழப்பட்டது என்ற செய்தியை,

**"பொங்கு நீர் உடுத்த இம்மலர்தலை உலகத்து"[77]**

என்ற புறநானூற்று வரி மொழிகின்றது. கடல் மிக்க வலிமையுடையது என்பதை,

**"முழங்கு திரை கொழிஇய மூரிஎக்கர்**
**நுணங்கு துகில் நுடக்கம் போல கணம்கொள**
**ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப"[78]**

இப்பாடலில் உரவுநீர் என்ற சொல்லாடல் பயின்று வருவதை அறியலாம். உரவு என்ற சொல் வலிமை என்ற பொருளில் கடல் வலிமையுடையது என அறியமுடிகின்றது. கடல்நீரானது பெருநீர், வளைநீர், நீடுநீர் என்ற பெயர்களாலும் அடையாக அழைக்கப்பட்டுள்ளதை,

**"….. முதுநீர்ப்**
**புணரி திளைக்கும்"[79]**

என்ற குறுந்தொகைப் பாடல் வரிகளும் உணர்த்துகின்றன. இவற்றோடு தெளிந்த நீர்பரப்பை 'தெண்நீர் என்றும் விரிந்த நீர்பரப்பைக் கடல்

உடையதாதலால் விரிநீா் என்றும் நற்றிணையில் குறிப்புக் காணப்படுகின்றது. ஆனால் முந்நீா் என்ற சொல்லாடல் தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்கள் பலவிடங்களில் காணப்படுகினறன. இதன்மூலம் கடல் பல்வேறு பெயா்களால் அழைக்கப்பட்டு வருவதை அறியமுடிகின்றது.

**2.3.2.1 கடலும் மழையும்**

கடல் இல்லையென்றால் நிலப்பரப்பு இல்லை என்பதை

**“படுதிரை வையகம்”**[80]

**“விரிநீா் வையகம்”**[81]

**“நிலவுக்கடல் வரைப்பின் வையகம”**[82]

**“புலவுக் கடலுடுத்த மலா்தலை யுலகம”**[83]

போன்ற பாடல்களில் கடலையும் நிலத்தையும் சங்கப்புலவா்கள் ஒன்றாக இணைத்துக் குறிப்பிட்டுள்ளனா்.

கடல் இன்றேல் மழை இல்லை மழை இன்றேல் இவ்வுலக உயிா்கள் இல்லை. அத்தகைய மழைக்குத் தோற்றுவாயாக இருப்பது கடலாகும்.

**“காா்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை**
**வான்போழ் விசும்பின் வள்ளுறை”**[84]

கடல்நீரை முகந்த மேகம் வானத்தில் துளிகளைச் சிதறுகிறது.

**“முழங்குகடல் முகந்த கமஞ்சூல் மாமழை**
**மாதிர நனந்தலை புதையப் பாஅய”**[85]

முழங்குகின்ற கடலைகள் கொண்ட நீரில் மூழ்கி நீரினை நிரம்பக் குடித்துக் கருமையான மேகங்கள் நான்கு திசைகளும் இருளும்படி பரவி மழைநீரைப் பொழிகின்றது. கடல்நீரே மழையாக மாறுவதை புலவா்கள் குறிப்பிட்டுள்ளனா்.

இத்தகைய நீர் மரங்கள், செடிகள், கொடிகள் செழித்து வளரவும் உதவுகின்றது. புவியில் வாழும் உயிரினங்கள் இன்பமடைவதற்கும் காரணமாகின்றது.

நெடுங்கடலும் மழையின்றெனின் நீர்மை குன்றிவிடும் என்கிறார் வள்ளுவர்.

**“நெடுங்கடலும் தண்ணீர்மை குன்றும் தடிந்தெழிலி**

**தான் நல்கா தாகி விடின்”**[86]

மழையின்றேல் கடல்வளம் குறைந்து விடும். அதாவது கடல் விளைப்படுபொருள்களான முத்து, பவளம் போன்றவை தோன்றாது. முத்தும் பவளமும் மழைநீரினால் வளர்கின்றன.

புராண இலக்கியங்கள் முத்துச் சிப்பிகள் கடல்நீர் மட்டத்திற்கு மேல் வந்து வானத்தை நோக்கி வாய் திறந்து நிற்கும் என்றும் அப்போது மழைத்துளி சிப்பியில் விழுந்து முத்து ஆகிறது என்றும் வைகாசி மாதத்தில் சுவாதி நட்சத்திரத்தில் பெய்யும் மழைத்துளி சிப்பியின் வாய்க்குள் விழுமானால் அங்கே தங்கி முத்தாகுமாம்.

**“வைகாசி மாதத்தில் ஞாயிற்றுச் சோதியின் மழையிலே முத்துக்கரு ஐப்பசிப் பூசத்து மழையிலே பவளக்கரு என்பர். தன் இயல்பு குறைதலாவது நீர்வாழ் உயிர்கள் பிறவாமையும் மணி முதலாயின படாமையும் என்கிறார் பரிமேலழகர்”**[87]

மழையை உருவாக்குகின்ற கடலுக்கும் மழைநீர் குறையாமல் இருக்க வேண்டும் என்பது புலப்படுகின்றது.

கடலானது ஆக்கல், அழித்தல், காத்தல் என முத்தொழில்களையும் கொண்டதால் இதனை முந்நீர் என்றழைத்தனர்.

**“முழங்கு முந்நீர் முழுவதும் வளைஅப்**

**பரந்துப்பட்ட வியன் ஞாலம்”**[88]

**“முந்நீர் மண்டிலம்”**[89]

ஆறுகளிலிருந்து வருகின்ற நீர் ஊற்று, நீர் மழைநீர் என்ற மூன்று நீரும் கடலுள் கலப்பதால் முந்நீர் என்றும் அழைக்கப்படுகிறது.

**"உருகெழு மாநிலம் இயற்றுவான்**

**விரிதிரை நீக்குவான"**[90]

ஊழிக்காலத்திற்கு பின்பு பிரம்மனால் நிலவுலகம் படைக்கப்பட்ட போது நீர்ப்பரப்பாகிய கடலை நிலத்தை விட்டுப் பிரித்ததாக கடலின் தோற்றத்தைக் கலித்தொகை சுட்டுகின்றது.

ஆழமும் அகலமும் கொண்ட கடலானது தொடக்கமும் முடிவுமின்றி உலகம் முழுவதும் சூழ்ந்துள்ளதை

**"கரைகாணாப் பௌவத்து கலம்சிதைந்து ஆழ்பவன"**[91]

என்று கலித்தொகை சுட்டுகிறது.

**"தெண்கடல் வளைஇய மலர்தலை யுலகத்து"**[92]

**"இருங்கடலுடத்தவிவ் வையகம"**[93]

**"பொங்குநீர் அகமெல்லாம்"**[94]

போன்ற பாடல்கள் குறிப்பிடுகின்றது.

கோடைக்காலத்தில் கதிரவனின் வெம்மையால் கடல்நீர் ஆவியாக மாறினாலும் கடல்நீர் வற்றுவது இல்லை.அதிகப்படியான மழைப்பொழிவு ஏற்படும் போது நீர் கடலைச் சென்றடைகிறது. இதனால் கடல்அளவு கூடுவதுமில்லை என்பதை மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது

**"விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்**

**முழங்குதிலைப் பனிக்கடல"**[95]

என பதிற்றுப்பத்துச் சுட்டுகிறது. இதனையே

**"மழைகொளக் குறையாது புனல்புக மிகாது**

**கரைபொருது திரங்கு முந்நீர்"**[96]

என்று மதுரைக்காஞ்சியும் குறிப்பிடுகிறது.

கடலில் பகற்பொழுதில் கடல்நீரானது குறைந்தும் இரவுப்பொழுதில் அதிகரித்தும் இருக்கும். அந்நீர் அதிகரிக்கும் போது கடலின் கழிமுகப்பகுதியில் நீர் தோன்றுவதை

**"கனைக்கான் மாமலர் கரப்ப மல்குகழித்**

**துணைச்சுறா வழங்கலும் வழங்கும் ஆயிடை**

**எல்லிமிழ் பனிக்கடல்"**[97]

என்று நற்றிணைக் குறிப்பிடுகிறது.

**2.3.2.2 கடல்வளம்**

கடலானது அலைகளின் கொந்தளிப்பால் பாறைகளில் மோதி எழும்புகின்றது. உயரமான மலைகள் போன்று எழுந்து கரைப்பகுதிகளில் மோதுகின்ற போது உடைந்து சிதறுகின்றது. அவைகள் எழும் பொழுது வீசுகின்ற காற்றினால் சலனமுள்ள அலைகள் தோன்றுகின்றன. ஆழமான கடல் என்பதால் பெரிய அளவிலான அலைகள் எழும்புகின்றன. அத்தகைய செறிந்த நீர்ப்பரப்பினைக் கொண்டது கடல்.

**"வரைமருள் புணரி வான்பிசிர் உடைய**

**வளிபாய்ந்து அட்ட துளங்குஇருங் கமஞ்சூல்**

**நளியிரும் பரப்பின் மாக்கடல்"**[98]

**2.3.2.3 அலைகளும்**

கடலிலே அலைகள் தோன்றுவதற்கு மூலக்காரணம் காற்றாகும். காற்றின் ஆற்றல் நீரில் உருவாவதால் அலைகள் தோன்றுகின்றன. கடலில் தோன்றும் அலைகளை புலவர்கள் திரை என்றழைத்தனர். சங்கப்பாடல்களில் அலைகளுக்கும் காற்றுக்குமானத் தொடர்பைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**"பெருங்கால் திரைஎழு பௌவம் முன்னிய**

**கொரைவெஞ் சிறாஅர் பாற்பட் டனளே"**[99]

காற்றானது வீசுவதால் அலைகள் தோன்றியதாகச் சுட்டப்பட்டுள்ளது.

**“வில்லெறி பஞ்சி போல் மல்குதிலை**

**வளிபொரு வயங்குபிசிர் பொங்கும்”[100]**

கடலில் காற்று வீசும் போது கடலைகளானது வில்லால் அடிபட்ட பஞ்சு போன்று மேன்மேலும் பிசிர்களைப் பறக்கச் செய்வதாக நற்றிணை குறிப்பிடுகின்றது.

கடலலைகளின் தோற்றத்தைப் புலவர்கள் பல்வேறு பாடல்களில் ஒப்புமைப்படுத்தியுள்ளனர்.

**“பொங்குதிரை”[101]**

**“நுரைதிரைபிதிர்ப் படுதிரை”[102]**

**“ஊடைதிரை”[103]**

**“வெண்திரைப்பரப்பு”[104]**

போன்றவற்றில் கடலலைகள் பொங்குவதாகவும் உடைபட்டதாகவும் நுரைகளோடு வருவதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இத்தகைய கடலலைகள் பரதவர்கள் மீன் பிடிக்கவும் கரைகளைக் கண்டுணரவும் உறுதுணையாக இருந்துள்ளன.

**2.3.2.4 ஓதமும்**

கடலில் காலவரையறைக்குட்பட்டு ஏற்படும் கடல்மட்ட ஏற்றத் தாழ்வுகளுக்கு ஓதங்கள் என்று பெயர். இதைத் தற்காலத்தில் கடல் ஏற்றம் அல்லது கடல் இறக்கம் என்ற கூறுவர். தமிழில் ஓதம் என்பதற்குப் பல்வேறு பொருள்கள் உள்ளன.அவற்றில் ஒன்று நீர்ப்பெருக்கு என்பதாகும்.இதனை ஆங்கிலத்தில் Tides என்று கூறப்படுகிறது. ஓதத்திற்கு அலை என்ற பொருளும் வழங்கப்படுகிறது. சங்கப்பாடல்களில் ஓதம் நீர்ப்பெருக்கு என குறிப்பிடப்படுகின்றது.

குறுந்தொகைப் பாடலில்

**“கழிபெயர் மருங்கின் ஒல்கி ஓதம்**

**பெயர்தரப் பெயர்தந் தாங்கு”[105]**

கடற்கரைப்பரப்பிலே கழியினிடையே மலர்ந்துள்ள தாழை மலர்கள் அலைமிகுதியாகும் போது ஒரு பக்கம் சாய்ந்தும் அவ்வெள்ளம் கடலின் பக்கம் செல்லும்போது தாழ்ந்தும் செல்வதாக அம்மூவனார் பாடுகின்றார்.இதில் கடலலைகள் உயரும் பொழுது கடல் ஏற்றமும் கடலைகள் உள்வாங்கும் போது கடல் இறக்கமும் ஏற்படுவதை உணர முடிகின்றது.

**“பெருங்கடல் முழங்க கானல் மலர**

**இருங்கழி ஓதம் இல்இறந்து மலிர”**[106]

கதிரவனின் ஒளியானது மாலையில் மறையும் நேரத்தில் கடலானது பேரோசை செய்ய கானலில் மலர்கள் மலரக்கழியில் ஓதமானது கடலைக் கடக்கின்றது என்று கூறுவதிலிருந்து கடலில் மாலைப்பொழுதில் ஓதம் மிகுந்து காணப்படுவதை அறியலாம்.

**“ஓதமொடு பெயரும் துறைவதற்குப்**

**பைஞ்சாய்ப் பாவை ஈன்றனென் யானே”**[107]

ஓதமொடு பெயரும் துறை என்பதில் கடல் தரும் ஓதம் ஆழம் குறைவாகவுள்ள துறைமுகப் பட்டினங்களில் வணிகத்திற்காகச் செல்லும் கப்பல்கள் எளிதில் சென்று பெரிதும் உதவுவதை உணர்த்துகின்றன.

**2.3.2.5 கடலும் மீன்களும்**

**“நிலத்தைவிட பெரிய நிலப்பரப்பைத் தன்னுள் கொண்டது கடல். பெருவளம் தரும் உழா நன்செய்யாக”**[108] விளங்கி நானிலத்தையும் வாழ்விக்கின்றது. கடல் பகுதியில் வாழும் மக்களின் வாழ்வாதாரத்திற்கு பெரிதும் துணைபுரிகின்றது. பல மீன் வகைகள் தந்து மீன்பிடித்தொழிலுக்கு ஆதாரமாக இருக்கின்றன.பரதவர்கள் கடலிலே மீன்களை வாரிக் கொணர்ந்து கரைப்பகுதியில் எண்ணுகின்ற வகையில் கணக்கில் அடங்காத மீன்களை தன் பகுதியில் குவித்து வைத்துள்ளனர். அவற்றினை விற்று எஞ்சியுள்ளவற்றை உப்பிட்டு வெயிலில் உலர்த்தி உண்பர் என்று குறிப்பிடுவதிலிருந்து மீன் வளத்தை அறியலாம்.

**“பெருங்கடற் பரப்பில் சேயிறா நடுங்க**

**கொடுந்தொழில் முகந்த செங்கோல் அவ்வலை**

**நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு**

**உப்புநொடை நெல்லின் மூரல”**[109]

என்ற அகநானூற்றுப் பாடலில் கடலிலே இறால் மீன் பிடித்து வந்து உப்பை விற்று நெல்லை அரிசியாக்கி சமைத்த சோற்றில் அயிரை மீன் புளிக்கறியை இட்டு உண்டதாகக் கூறப்பட்டுள்ளது. அதன் வாயிலாக பண்டமாற்றுப் பொருளாக மீன் இருந்ததை அறியலாம்.

இங்ஙனம் பல்வேறு மீன்வகைகளைக் கடல் வழங்கியதை அவற்றைக் கலங்களில் சென்று பரதவர்கள் பிடித்து வந்துள்ளதை அறிய முடிகின்றது.

### 2.3.2.6 கடலும் முத்தும்

கடலிருந்து கிடைக்கக்கூடிய முத்துகள் மதிப்புமிக்க பொருளாகும். இது அரசனின் அரியணையையும் மாளிகைகளையும் மகளிர் மேனியையும் அலங்கரித்துள்ளன. எண்ணற்ற முத்துகளையும் சங்குகளையும் கடல் வழங்கியதை சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

கொற்கை துறைமுகப்பட்டினத்தில் கிடைக்கின்ற முத்துகள் தனிச்சிறப்பு பெற்றது.

**“ஈண்டுநீர்**

**முத்துப்படு பரப்பின் கொற்கை முன்துறை”**[110]

கொற்கை துறைமுகப்பட்டினத்திலுள்ள கடலில் முத்துகள் விளைவதை கணக்காயனார் குறிப்பிடுகின்றார்.

**“புகழ் மலி சிறப்பின் கொற்கை முன்**

**அவிர் கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து”**[111]

ஒளிவீசும் பொன்னால் ஆகிய நெற்றிப்பட்டத்தைப் பூண்ட வெற்றிப் பொருந்திய யானைப்படையை கொண்ட பாண்டியனின் கொற்கையில் சங்குகளும் முத்துகளும் சிதறி இருப்பதை மாமூலனார் குறிப்பிடுகின்றார்.

**இலங்கு முத்து உறைக்கும் எயிறுகெழு துவர்வாய்**[112]

**"............முழங்குகடல்**

**திரைதரு முத்தம் வெண்மணல் இமைக்கும்**

**தண்ணம் துறைவன்வந்தெனப் பொன்னினும் சிவந்ததென்று"**[113]

ஒலிக்கும் கடலலைகளால் திரைகளடித்துக் கொண்டு வீசப்படும் முத்துகள் வெண்மையான மணலில் ஒளிறுகின்றன என்ற பாடல்களில் கடல் வழங்கும் முத்துகளின் வளத்தை அறியலாம்.

**2.3.2.7 கரை வளம்**

கடற்கரை நிலத்தில் புன்னை மரங்கள் பொன்னிறமுடைய மலர்களைப் பூத்திருக்கின்ற ஒளி நிறைந்த கடல் துறையைக் கொண்டது. இதனை,

**" - - - - - - - - - - - புன்னை**

**பொன்னிற விரியும் பூக்கெழு துறைவரின்"**[114]

என்று ஐங்குறுநூறு பாடலில் காணலாம்.

மணல் மேட்டிலே சுரபுன்னை மலர்கள் வீழ்ந்து கிடப்பதைப் புதரிலே தனியாக நாரை உட்கார்ந்து உறங்கும் நீர்த்துறை என்று குறிப்பிடுகிறது.

**"எக்கர் ஞாழல் இணர்படு பொதும்பர்த்**

**தனிக்குரு குறங்குந் துறைவற்"**[115]

எனவும் பெரிய கடற்கரையிலே வாழ்வதாகிய சிறிய வெண்காக்கை நீண்ட உப்பங் கழியின் பக்கத்திலே உட்கார்ந்து அயிரை மீனைப் பிடித்துத் தின்னும் குளிர்ந்த அழகிய கடல்துறை என்றும் நெய்தல் நில கடற்கரையின் இயற்கை வளத்தை ஐங்குறுநூறு பாடல் விளக்குகின்றது.

கடலானது மேகம் முகக்க, முகக்க குறைவுபடுவதும் இல்லை, ஆறுகள் பலவாகப் பாயப் பாய மிகுதலைச் செய்வதும் இல்லை இதனையே மதுரைக்காஞ்சியும் கூறுகிறது.

கடற்கரையை அடுத்த சோலைகளில் மணல் பரந்துப்பட்டுக் காணப்படும். அம்மணலின் தோற்றம் நிலவின் ஒளியையும் வென்று காட்சியளிக்கும் என்று கடற்கரையின் காட்சி அமைகிறது.

**“மழை கொளக் குறையாது புனல்புக மிகாது**
**கரைபொரு திரங்கு முந்நீா் போலக்”**[116]

வளம் மிக்க கடற்கரையில் பொங்கி எழுகின்ற கடலைகள் மோதுகின்றன. அங்கு வளா்ந்த நாவல் மரத்தின் கனிகள் தரமாகக் கீழே உதிர்கின்றன. அதன் கருமை நிறம் கண்ட வண்டுகள் தம் இனமோ என மயங்கி அங்குக் கூடுகின்றன. அவ்வழி வந்த நண்டு ஒன்று நாவல் பழத்தைக் கொண்டு செல்வதற்கு முயல்கின்றன. அதனைக் கண்ட வண்டுகள் சத்தம் போட தொடங்குகின்றன. அவ்வொலியானது யாழின் இனிய ஓசையைப் போல இருந்தது என்றும், அச்சமயம் இரைதேடச் சென்ற நாரை வர அதைக்கண்டு நடுங்கிய நண்டு நாவற்கனியைக் கீழே போட்டுவிட்டு ஒடுகின்றது. என்று அம்மூவனாா் தம் பாடலில் பாடியுள்ளாா்.

**“பொங்குதிரை பொருத வாா்மன லடைகரைப் புன்கால் நாவற**
**பொதிப்புற இருங்கனி**
**கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப பல்காலலவன்**
**கொண்டகோட் கூர்ந்து**
**கொள்ள நறம்பின் இமிரும் பூசல்**
**இணுதோ் நாரை யெய்தி விடுக்குந்**
**துறைகெழு மாந்தை யன்ன இவள் நலம”**[117]

நெய்தல் நில வருணனைத் துறையில் அம்மூவனாா் ஆற்றியுள்ள பணியானது மிகவும் பெரிது. கடற்கண், கடற்கரைச்சோலை, கழி என்பனவற்றோடு நின்று விடுகின்றது. அவருடைய வருணனைகள்,

கடல்நீரால் நண்டினால் தாக்கப்படும் மீன் பற்றிக் குறிப்பிடுகின்றார். கரிய காலொடு விளங்கும் அன்னமும் பெரிய கடற்கரையில் கரிய கிளைகளையுடைய புன்னையில் தங்கும் சிறு வெண்காக்கையும், கழிநீரில் உணவு தேடி உண்டு தங்கும் குருகும் இவரால் சுட்டப்படுகிறது. கானற்கோலையின் புன்னை, ஞாழல் ஆகிய மரங்களையும் அவற்றின் கிளைகளையும், கழிகளிலும் இரைதேடும் குருகு முதலிய பறவைகளையும், கடற்கரையிலே விரிந்து மணம் பரப்புகின்ற பலவகையான மலர்களையும் பாடுகின்ற அளவினை நோக்குமிடத்து அலைகளையும் மீன்களையும் குறித்துப் பாடும் திறத்தை அறியலாம்.

கீழ்க்காற்றால் எழுகின்ற அலைகள் கரைநோக்கி வந்து மணல் மேட்டைச் சிதைக்கும் செயலை மிக அழகாக அகநானூறு கூறுகிறது.

**“ - - - - - - - - - - - கொண்டலொடு**

**குரூ உத்திரைப் புணரி உடைதடும் எக்கம்”**[118]

பரதவர்கள் சங்கர் காலத்திலேயே கடற்கரையில் பேராதிக்கம் கொண்டு வாழ்ந்தார்கள் என்பதைச் சங்கப்பாடல்கள் விளக்குகின்றன. பரதவர்கள் செல்வமும், செல்வாக்கும் படைத்தவர்களாய்க் கடல் வாணிகத்தில் ஈடுபட்டு இருந்தனர். பல்வகைப் பண்டங்களை ஏற்றுமதி மற்றும் இறக்குமதி செய்தலாகிய வாணிகத் தொழிலில் ஈடுபட்ட பரதவர்களைச் சங்கப்பாடல்கள் விளக்குகின்றன.

**“முழங் கேடல் தந்த விளங்குகதிர் முத்தம்**

**அரம் போழ்ந் தறுத்த கண்ணோர் இலங்குவளை**

**பரதவர் தந்த பல்வேறு கலம்”**[119]

பரதவர்கள் கடலில் கலம் செலுத்தும் பணியாளர்களாய் இருந்தவர்கள் மட்டும் அல்லாமல் வணிக உரிமையாளர்களாகவும் இருந்துள்ளனர்.

மேற்றிசைக் காற்றால் உருவாகிய மணல்மேடு மிக உயரமாகி அங்கே இருந்த நெடிய பனையும் சிறியதாய் தோன்றும்படி செய்து

விட்டதாம் மணல் மேட்டின் மீது அடும்பங்கொடி பரவியிருந்ததையும் கூறுகிறார்.

பரதவ மக்கள் புலர்காலையில் எழுந்து திமில்களில் ஏறிக் காலத்துக்கும் கடலுக்கும் ஏற்ற வலைகளை நிரப்பிக் கொண்டு கருங்கடலில் வேட்டை மேற்செல்வர். அவர்கள் கதிர் என்னும் கருவி கொண்டு நூல் இழைகளை முறுக்கிக் கயிறு திரித்தும் புதியதாய்ச் சிறுசிறு வலைத் துண்டுகள் முடித்துப் பின் அவற்றை நன்கு இணைத்து ஒன்றாக்கி முழுவலையாகச் செப்பஞ்செய்வர். முறுக்கிய நூலைக் கொண்டு மீன்கள் கிழித்தமையால் பழுதடைந்த வலைகளையும் சீர்ப்படுத்துவர்.

பண்டைத் தமிழர்தம் வாணிபம் கடலோடு நெருங்கிய தொடர்புடையதாகும். எனவேதான் தொல்காப்பியரும் தலைவன் மேற்கொள்ளும் கடற்செலவு தலைவியுடன் நிகழ்வதில்லை. என்ற கோட்பாட்டினை,

**“முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை”**[120]

என வலியுறுத்தியுள்ளார். கடல் என்ற சொல்லுக்கும் மாற்றாக முந்நீர் என்ற சொல்லையே பயன்படுத்தி இருக்க அறிகின்றோம். சோழர் கரிகாற் பெருவளத்தானை வெண்ணிக்குயத்தியார் பாராட்டிப்பாடுடைத்து,

**“நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி**

**வளி தொழில் ஆண்ட உரவோன் மருக”**[121]

என்று சுட்டியுள்ளார்.

அம்மூவனார் தாம் பாடிய நெய்தல் நிலப்பாடல் பகுதிகளுள் தாய்க்கு உரைத்த பத்து, தோழிக்கு உரைத்த பத்து, சிறு வெண் காக்கைப்பத்து என்று வரும் மூன்று தலைப்பின் கீழும் கடலின் எழிலை மட்டும் கூறாமல் அலைகளின் முழக்கம், பரந்து பட்ட எல்லைகளின் தனிச்சிறப்பு இவற்றை அழகுற எடுத்துரைத்துள்ளார்.

**“நீல்நிறப் பெருங்கடல”**[122]

எனக் கடல் வானின் நிறம் பெற்றிருக்கும் அறிவியல் சிந்தனையையும், மணலின் வெண்மையைக் குறித்து

**“ஓங்குநீரை வெண்மணல் உடைக்கும”**[123]

எனவும் தெளித்த திரைகள் எனப் புலப்படுத்திட

**“தெண்திரைப் பௌவம்”**[124]

எனவும் குளிர்ச்சியை உணர்த்தும் பாங்கில் தண்கொன் பெருங்கடல் எனச்சுட்டி முழக்கத்தின் மிகுதியை முழங்கு கடல் என்று வர்ணித்துள்ளார்.

முத்துக்கள் கடற்கரை ஓரங்களில் ஒளிவரும் காட்சி காணற்கரியதும் பண்டைக் கால மக்களின் செல்வச்செழுமையைப் புலப்படுத்தும் சான்றாதாரங்கள் எனவும் தெளியலாம்.

**“வலம்புரி உழுத வார்மணல் அடைகரை**

**இலங்கு கதிர் முத்தம் இருள் கெட இமைக்கும் துறை”**[125]

என்று பாடல் அமைத்துள்ளார் புலவர்.

ஆர்க்கி, ஆழி, புணரி, பௌவம், பரவை, கடல் முதலிய பல சொற்களும் கடலைக் குறிப்பிடுபவை. சங்ககாலத்தில் இந்தச் சொற்கள் பயன்பாட்டில் இருப்பதன் மூலமாகவும் அவர்தம் கடல் வாணிபச்சிறப்பை நாம் உணரலாம்.

வலம்புரிச்சங்குகள் உழுத நீண்ட மணற்பரப்பினை உடைய கடற்கரையில் விளக்கமும் ஒளியும் கொண்ட முத்துக்கள் இரவின் இருள் அகன்றொழியும் வண்ணம் ஒளிரும் கடற்துறை பொருந்திய நெய்தல் நிலம் என நாம் காட்சி விளக்கமும் பெற முடிகின்றது.

கடல் எழிலினை மட்டும் பாட்டில் இடம்பெறும் வர்ணனைக்குப் பயன்படுத்தாமல் மணற்பகுதியைச் சார்ந்த நன்கு வளர்ந்து காணப்படுவதும் இரைதேடும் பறவைகளுக்கு அடைக்கலமாகும் ஞாழல் மரத்தின் தன்மையை மட்டுமல்லாது அருகருகே நெருங்கிக் காணப்படும் செருந்தி மரம் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். கடற்கரை ஓரங்களில் இவ்விருவகை

மரங்களின் வளர்ச்சி மட்டுமே அதிகமாகக் காணப்படும் என நாம் உணரலாம்.

**“எக்கர் ஞாழல் செருந்தியோடு கமழத்**

**துவலைத் தண்துளி வீசிப்”**[126]

எனச் சுட்டிக்காட்டியுள்ளார்.

ஞாழல், செருந்தி, மரங்களின் இயல்பினை மட்டுமல்லாது புன்னை மரம் பற்றியும் அழகுற வர்ணித்துள்ளார். புன்னை மரப்பூவின் தாதுக்கள் படிவதால் நெய்தல் நிலம் பொன்னின் நிறம் பெற்று விளங்குவதாக ஒப்புமைப்படுத்தியுள்ளார்.

### 2.3.3 ஆறுகள்

உயரமான மலைப்பகுதிகளில் பெய்கின்ற மழைநீர் பெருக்கெடுத்து ஆறுகளாக ஓடுகின்றன. முதன்முதலில் ஒரு சிறிய அளவிலானதாக உருவெடுத்து பின்பு பல அருவிகளாக விரிந்து இறுதியில் நதியாக மாறுகின்றது. ஆறுகள் மேடான பகுதிகளிலிருந்து பள்ளத்திற்கு ஓடி வரும்பொழுது அங்குக் காணப்படுகின்ற நிலப்பகுதிகளுக்கு ஏற்ப தன் நிலையை மாற்றிக் கொள்கின்றது.

மலைப்பகுதிகளில் வேகமாகவும் சமமான நிலப்பரப்பில் மெதுவாகவும் பாய்ந்து கடலோடுக் கலக்கின்றது. ஆறுகள் சமநிலப்பரப்புகளில் மண்ணைக் கொண்டு நிலத்தை வளப்படுத்துவதுடன் பாசனத்திற்கும் உதவுகின்றன.

நீரின் இயல்புக்கு ஏற்றவாறு பெயர்பெற்ற ஒரு நீர்நிலை ஆறு. இந்நீரானது நிலைத்த இடத்தில் இருக்கும் தன்மையற்றதனாலே ஆறு என பெயர் பெற்றுள்ளது. ஆறு என்பதன் பொருள் வழியாகும். சங்க இலக்கியத்தில் காவிரி, கங்கை, பொருநை, பெண்ணை, பஃறுளி, பேரியாறு, சேயாறு போன்ற ஆறுகள் குறித்த செய்திகள் காணப்படுகின்றன. வைகையாறு குறித்து பரிபாடல், மதுரைக்காஞ்சி போன்ற நூல்களில் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளன. குறிப்பாகப் பரிபாடலில் திருமால், முருகன் பற்றிய பாடல்களைப் போன்று வையைப் பற்றிய பாடல்களும் இடம்

பெற்றிருப்பது இந்த ஆறு பெற்றுள்ளச் சிறப்பினை நம்மால் உணர முடிகின்றது. வையையாறு பற்றிய எட்டுப்பாடல்களில் அந்த ஆற்றின் தோற்றம், அதனால் வளமையடையும் மதுரை நகரின் சிறப்பு, அதில் புனலாகும் மகளிரின் தன்மை குறித்தும் கூறப்பட்டுள்ளன. இதனடிப்படையில் ஓரளவுக்குத் தெளிவான கரைகளையுடைய பாதையின் வழியாகப் பாய்ந்து வரும் நீரோடை என்பது புலனாகின்றது. ஆற்றின் சிறப்பை வள்ளுவர் பெருந்தகையும்,

**“இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு”**[127]

என்ற குறட்பாவில் மொழிந்துள்ளார். பல்வேறு ஆறுகளைப் பற்றி,

**“காவிரி தென்பெண்ணை பாலாறு தமிழ்**
**கண்டதோர் வையை பொருநை நதி என**
**மேவிய யாறு பலவோ டத்திரு**
**மேனி செழித்த தமிழ்நாடு”**[128]

என்ற பாடலில் மகாகவி பாரதியாரும் குறிப்பிட்டுள்ளார். நம் செம்மொழி நிலத்தின் நீர்வளமையை உணர்ந்து கொள்வதற்கு ஏதுவாய் அமைகின்றது. இதன்மூலம் தமிழகத்திலுள்ள கழனிகளை எல்லாம் வளமான நாடாக்கும் காவிரி, மதுரையில் வளம் கொழிக்கும் வையை, பொருநை, தென்பெண்ணை, பேரியாறு, சேயாறு, கங்கை, ப∴றுளி ஆறு போன்றவை தமிழகத்தினை வளமாக்கி கொண்டிருந்தன என்றால் அது மிகையாகாது. இந்த ஆறுகள் யாவும் சங்கப்புலவர்களின் பாடல்களில் நீங்காத இடத்தைப் பெற்றதோடு பிற்கால இலக்கியங்களான பெரியபுராணம், பள்ளு போன்ற இலக்கியங்களிலும் பேசப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். எனவே மேற்கூறியவற்றின் மூலம் ஆறு என்ற நீர்நிலை அனைத்து மக்களின் வாழ்விலும் நீங்காத இடத்தைப் பெற்று அவர்களின் வாழ்க்கையை வளமாக்கி உள்ளது என்பதையும் இதன்வழி எடுத்துரைக்கப்படுகின்றது.

### 2.3.3.1ஆறுகளின் வளம்

பண்டைய கால மனிதன் குகைளில் தங்கினான். அங்கு கனி வகைகளை உண்டும் இலை தழைகளை ஆடையாக உடுத்தியும் வாழ்ந்தான். முதன் முதலில் பேச அறியாத மனிதன் கைகளை அசைத்தல் குறியீடுகள் போன்ற செயல்பாடுகள் மூலம் தகவல்களைப் பரிமாறிக்கொண்டான். குகைகளில் வாழ்ந்த மனிதனுக்கு சிந்திக்கும் ஆற்றல் வளர்ந்தது. ஆரம்ப காலக்கட்டத்தில் ஆடுமாடுகளை மேய்ப்பதே அவனது தொழிலாக இருந்தது. ஆடுமாடுகளை மேய்க்கும் பகுதிகள் வறண்டு காணப்பட்டதால் வளமான இடங்களை நோக்கி தேடிச் சென்றான். அப்பகுதிகளில் ஆற்றிலிருந்து ஓடி வரும் நீரினைக் கண்டு அருகில் உள்ள புற்கள் நிறைந்துள்ள பகுதிகளில் மேய்ச்சல் தொழிலை விரிவுபடுத்தினான். நாளடைவில் தன் இருப்பிடத்தை அங்கேயே அமைத்துக் கொண்டான். அன்று முதல் இன்று வரை ஆற்றங்கரைகள் மனிதனின் நிலையான வாழ்விடத்திற்கும் நாகரிக வளர்ச்சிக்கும் உறுதுணையாக அமைந்துள்ளன.

ஆற்றின் நீரைப் பயன்படுத்தி விதைகளை விதைத்துப் பயிர் வளர்வதைக் கண்டு உழவுத்தொழிலை கண்டறிந்தான். ஆற்றுப்பகுதிகளே உலக மக்களின் உணவுத்தேவையைப் பூர்த்திச் செய்தன. உண்டி கொடுத்தோரே உயிர் கொடுத்தோர் என்ற வரிகளுக்கேற்ப ஆற்றங்கரைகள் நாகரிகத்தின் பிறப்பிடமாகவும் மண்பாண்டம் செய்தல் ஆடை நெய்தல் நூல்நூற்றல் குடிசை வீடுகளை அமைத்தல் போன்ற பலவகையானத் தொழில்கள் தோற்றம் பெறுவதற்கும் காரணமாயின. இயற்கை அன்னையின் அருட்கொடையாகிய வான்மழையாலும், வன்மலை ஊற்றுகளாலும் கிடைக்கின்ற நீரினைத் தாங்கிக் கொண்டு பிற இடங்களுக்கு பகிர்ந்தளிக்கும் வேலையை ஆறுகள் செய்கின்றன. மழைவளம் இல்லா நேரங்களிலும் நீரினை ஆறுகளின் வாயிலாக ஏரிகள், குளங்கள், ஓடைகள், கால்வாய்கள் மூலமாகப் பகிர்ந்தளிக்கப்படுகிறது. இவற்றுள் ஆறுகள் பல்வேறு பகுதிகளுக்கு நீரைக் கொண்டு செல்லும் இணைப்புப் பணியை மேற்கொள்கின்றன.

**"ஆற்றின் சிறப்பை வள்ளுவர் பெருந்தகை**

**இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**

**வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு"**[129]

ஊற்று நீரும், மழைநீரும் இருவகை நீர்வளமும் மலையும் மலையிலிருந்து ஓடி வரும் நீர்வளமும் வலிமையான அரணும் நாட்டின் உறுப்புகள் என்று குறிப்பிடுகிறார். மேலும்

**"மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்**

**காடும் உடையது அரண்"**[130]

மணி நீர் போல் தெளிந்து ஓடும் ஆறும் பரந்த நிலமும் காடும் ஒரு நாட்டின் பாதுகாப்பு அரண்களாகும் என்று ஆறுகளின் முக்கியத்துவத்தை எடுத்துரைக்கிறார்.

வேட்டைச் சமூகமான பழங்கால மக்களின் புதிய நாகரிகத்திற்கு புத்துயிர் கொடுத்தப் ஆற்றுப்பகுதிகளே உணவு உற்பத்திக்கும் வழிவகுத்தது.

**"ஆறு என்பது இயற்கையாகச் செல்லும் நன்னீரைக் கொண்ட ஒரு பெரிய நீரோட்டம் ஆகும்"**[131] ஆறுகள் பொதுவாக மலைப்பகுதிகளில் தொடங்குகின்றன. இப்பரந்த நிலவுலகின் நலம்பேணும் செயல் நீருக்கு உண்டு, அந்நீா் நிறைந்த நல்லாறுகள் பல அன்று முதல் இன்றுவரை தமிழகத்தில் ஓடி நலம் பல சேர்க்கின்றன. இத்தகு பரவிப்பாயும் ஆறுகள் இல்லையெனில் தமிழகம் பாலை ஆகியிருக்கும்.

ஆறுகள் வளமாக ஓட மலைகள் பெரிதும் உதவுகின்றன. மலைகளில் ஆங்காங்கே தோன்றும் அருவிகள் நீரோடைகள், ஊற்றுக்கள் பல்வேறு இடங்களில் ஓடி, இறுதியில் சமமான நிலப்பரப்பிற்கு வந்து ஆறாகின்றன. மலைகள் கருக்கொண்ட மேகங்களைத் தடுத்து நிறுத்தி மழையாகப் பொழியச் செய்கின்றன.

பருவ மழை காரணமாக ஆறுகளில் பெருவெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் காட்சிகளை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. நாகரிக வளர்ச்சியாலும், நீர்வளத்தாலும் சிறப்புறும் ஆறுகள் வறட்சியானப் பகுதிகளையும் வளமுள்ளதாகச் செய்கின்றன. சங்க இலக்கியங்களில் பல்வேறு ஆறுகள் பற்றியக் குறிப்புகள் காணப்படுகின்றன. தமிழகத்தில் கழனிகளை எல்லாம் வளமான நாடாக்கும் காவிரி, மதுரையில் வளம் கொழிக்கும் வையை, பொருநை, பெண்ணையாறு, பேரியாறு, சேயாறு, அயிரியாறு, சிலம்பாறு, கங்கை, சோணை, பறுளி, பெண்ணை, பொறையாறு, வட்டாறு, வாளையாறு எனப் பல ஆறுகள் தமிழகத்தை வளப்படுத்தியச் செய்திகள் காணப்படுகின்றன.

**1. சின்அயிரி**

கர்நாடகத்தின் மைசூர் பகுதியில் பாயும் ஆறாகும்.காவிரி ஆற்றில் கலக்கும் சிற்றாறு.அதன் தற்போதைய பெயர் மன்னிகா ஆகும். சங்ககாலத்தில் வடுகர் இனத்தைச் சேர்ந்த மக்கள் வேங்கடமலையின் வடபகுதியில் வாழ்ந்தனர். அவர்கள் வாழ்ந்த பகுதியில் அயிரியாறு பாய்ந்து வளத்தை வழங்குகின்றது. தென்பகுதியில் வாழ்ந்தோர் பொருளீட்டச் சென்றவர்கள் அயிரியாற்றைக் கடந்து சென்றுள்ளதையும் அறிய முடிகின்றது.

**“நேரா வன்தோள் வடுகர் பெருமகன்**
**பேர் இசை எருமை நல்நாடு உள்ளதை**
**அயிரியாறு இறந்தனர் ஆயினும்”**[132]

பாகல்பழத்தை உண்ண விருப்பம் கொண்ட பெண் மயில் ஆற்றங்கரையினிலே யாழின் குரலோசை போன்று ஒலி எழுப்புவதாக

**“பைங் கொடிப் பாகற் செங்கனி நசைஇ**
**கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை**
**அயிரியாற்று அடைகரை வயிரின் நரலும”**[133]

அகநானூற்றில் புலவர் குறிப்பிடுகிறார்.

**2.ஆன்பொருநை**

சங்கத்தமிழ் பெயரால் ஆன்பொருநை என்றழைக்கப்பட்ட ஆற்றின் தற்போதைய பெயர் அமராவதி.இவ்வாறானது ஆனைமலைப் பகுதிகளில் உருவாகி வடக்கு கிழக்காகப் பாய்ந்து கரூர் நகரில் காவிரி ஆற்றில் சங்கமமாகிறது.

**“ஆண்டின் பெரும்பகுதி மழை பொதிய மலைப்பகுதிகளில் பொழிவதால் மலைப்பகுதி முழுவதும் நீர்பெருகி வழியும் அவ்வெள்ளம் பள்ளம் நோக்கிப் பாய்ந்து வரும் பொங்கி வரும் நீர்ப்பெருக்கு நிலத்தின் ஊடறுத்து ஓடிவரும் நீரலைகள் ஒன்றோடு ஒன்று மோதும் கற்களையும் பாறைகளையும் சாடும் கரைகளில் வந்து தாக்கும் அந்நீரோட்டம் நீண்ட போராட்டம் போன்று தோன்றும்.அலைகள் போரிடுவது போன்றே மோதி வரும். பொரு என்னும் தமிழ்ச்சொல்லுக்கு போரிடு என்ற பொருள். எனவே பொருநை என்பது அலைமோதி போரிடும் இயல்பானது என்னும் பொருளை உடையது”[134]**

**3. புலவர் நாவில் பொருநை**

பொருநை ஆற்றைப் புலவர்கள் தம் பாக்களில் போற்றிப் புகழ்ந்துள்ளனர். கம்பர்

**“பொன்திணிந்த புனல் பெருகும்**
**பொருநை எனும் திருந்தி”[135]**

என்கிறார். சிற்றிலக்கியமான முக்கூடற்பள்ளு நூலில்

**“பொருநையாறு பெருகிவரப் புதுமை**
**யாரும் பள்ளீரே”[136]**

என்று சிறப்பிக்கிறார்.

குமரகுருபரர் எழுதிய மீனாட்சிஅம்மை பிள்ளைத்தமிழில்

**“பொருநைத் துறைவன் பொற்பாவாய்**
**புதுநீர் ஆடி அருளகவே”[137]**

என்று புகழ்ந்துள்ளார்.

இங்ஙனம் பொருநை வளத்தினையும் பெருகிவரும் வெள்ளத்தையும் புலவர்கள் இலக்கியமாக வடித்துள்ளனர். சங்கஇலக்கியம் தண்பொருநை ஆன்பொருநை என்று குறிப்பிடுகின்றது.

விறல் வஞ்சி என்னும் நாட்டிற்கு அரசன் பெருங்கடுங்கோ பல போர்களைச் செய்து பகைவர்களை வென்றவன். அவனைப் பேய்இளவெயினி என்னும் புலவர் பாராட்டுகிறார்

**தண்பொருநைப் புனல்பாயும்**

**“விண்பொருபுகழ் விறல்வஞ்சிப்”**[138]

குளிர்ந்த நீர்ப்பாயும் ஆறு என்ற காரணத்தினால் புறநானூறு தண்பொருநை எனச் சுட்டுகிறது.

**“கடும்பகடு யானை நெடுந்தேர்க்கோதை**

**திருமா வியல்நகர்க் கருவூர் முன் துறை”**[139]

செல்வவளத்தால் சிறப்புற்ற மிகப்பெரிய தலைநகராமாகிய செல்வகடுங்கோ வாழியாதனின் வஞ்சிக்கு அருகே கருவூரில் ஓடுகின்ற ஆறு பொருநை என்பதை அறியலாம். சேரமன்னர்களின் இனம் தழைப்பதற்காக கரையை வழங்கிய ஆறாகும்.

**“புல்வரை வஞ்சிப்புற மதில் அலைக்கும்**

**கல்லென பொருநை மணலிலும் ஆங்கண்**

**பல் ஊர் சுற்றிய கழனி**

**எல்லாம் விளையும் நெல்”**[140]

பொருநை ஆறு கருவூர் பகுதியில் பல்கி பெருகி ஓடியதால் அருகே உள்ள பல ஊர்களுக்கு நெல்விளைச்சலுக்குத் தேவையான நீரினைத் தந்து பலவகையான வளங்களை வழங்கி செழிப்புறச் செய்துள்ளது.

பொருநை ஆற்றினால் கல் என்ற ஓசையுடன் எழுந்த ஒலியானது மதிலை அசைக்கும் பேரொலியாக இருந்தது.

**“தெண்ணீர் உயர்கரைக் கவைஇய**

**தண்ஆன் பொருநை மணலினும் பலவே”**[141]

பொருநை ஆறு உயர்ந்த கரைகளில் கொண்டு வந்து சேர்க்கும் மணலைக் காட்டிலும் தேர்ப்படைமிக்க சேர வேந்தன் வாழ்க எனப் புலவர் வாழ்த்துகிறார். ஆநிரைகளை மேய்ப்பதற்குரிய பகுதி என்பதால் ஆன்பொருநை என்று சங்ககால மக்கள் அழைத்துள்ளனர்.

**4. இன்னீர் காவிரி**

தமிழ்நாட்டின் மிகப் பெரிய ஆறு காவிரி . இதனைப் பொன்னி என்றும் அழைப்பர்.குடகு நாட்டிலே தோன்றி கன்னட நாட்டில் பாய்ந்து தமிழ்நாட்டின் பூம்புகார் நகரில் வளம் சேர்த்து வங்கக் கடலில் கலக்கிறது.

காவிரி பெயர்க்காரணம் பற்றிய செய்திகள் இலக்கியங்களில் பலவாறு காணப்படுகின்றது. அகத்திய முனிவரின் கமண்டலத்திலிருந்து நீரினைக் காகம் கவிழ்த்து விட்டதால் உருவான ஆறு ஆதலின் காகவிரி என்னும் பெயர் பின்பு காவிரி என மாற்றம் பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் சோலைகளை விரித்து வளம் பெறச் செய்யும் ஆறு என்பதால் காவிரி அழைக்கப்படுகிறது.

**“கஞ்ச வேட்கையின் காந்தமன் வேண்ட**

**அமர முனிவன் அகத்தியன் தனாஅது**

**கரகங் கவிழ்த்த காவிரிப்பாவை”**[142]

என்று காந்தன் என்ற அரசன் வேண்டியதால் அகத்தியரால் கமண்டலம் கவிழ்க்கப்பட்டதை மணிமேகலைக் குறிப்பிடுகின்றது.

தற்போது தமிழ்நாட்டில் மேற்கு தொடர்ச்சி மலையில் குடகு நாட்டில் சையம் என ஒரு மலை உள்ளது. இந்த மலையிலிருந்து தான் காவிரி ஆறு சுரந்து ஓடுகிறது. அதன் தொடக்கப்பகுதியில் 30 ச.அ அகலமும் 2 ச.அ ஆழமும் கொண்ட குளம் ஒன்று உள்ளது. இதிலிருந்து நீர் பலவாறு பாய்ந்து வெளியேறுகிறது. இந்த இடம் தலைக்காவிரி எனப்

பெயர் பெறுகிறது. இந்நீர் காடு மலைகளைக் கடந்து சென்று பாக மண்டலம் என்னும் இடத்தில் தான் ஆறு வடிவம் பெறுகிறது.

சோழநாட்டுப் பகுதியில் காவிரி தென்கிழக்காக ஓடியதை

**"சிறைபறைந் நுரைஅச் செங்குணக்கு ஒழுகும்**

**அந்தண் காவிரி போல"**[143]

குறிப்பிடுகின்றது.

**5. பொன்னி**

காவிரி தன் நீர்வளத்தால் பெருகிச் செல்லும் அனைத்துப் பகுதிகளையும் பொன் கொழிக்கச் செய்வதால் பொன்னி என்பதைப் பட்டினப்பாலை

**"புனல்பரந்து பொன் கொழிக்கும்**

**விளை வறா வியன் கழனி"**[144]

என்று காவிரியைச் சிறப்பிக்கிறது.

காவிரி ஆறானது மழை பெய்யும் பொழுது வண்டல் மண்ணோடு கலந்து செல்லுவதைப் பாரதிதாசன்

**"பொன் விளைந்தாற் போலும் நறும்பொடி**

**விரிந்த ...காவிரி"**[145]

என்று பொன் போன்ற துகள் மின்னுவதைப் போல் இருப்பதாக புகழ்கின்றார்.

பொன்னி என்ற பெயரைப் புலவர்கள் பலர் தாம் எழுதிய பாக்களில் பதிவு செய்துள்ளனர்.

**"வற்றாத பொன்னி"**[146]

**"சோழர் பொன்னித் திரு நாடு"**[147]

**"பொய்யாத பொன்னிப் புது மஞ்சனம் ஆடி"**[148]

காவிரி நாட்டிற்கு நீர்வளத்தால் பொன்வளத்தை அளிப்பதால் பொன்னி என்று வழங்கப்படுகின்றது.

**வற்றாத தண்தமிழ்ப்பாவை**

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை வெள்ளைக்குடி நாகனார் பாடிய புறநானூற்றுப் பாடலில்

**“அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்**
**இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும்**
**அம்தண் காவிரி வந்துகவர்பு ஊட்டத்”**[149]

கதிரவன் நான்கு திசைகளிலும் தோன்றி வெப்பத்தை உமிழ்ந்தாலும் வெள்ளிக் கோளானது தென்திசைக்குச் சென்றாலும் சோழநாட்டில் பாய்ந்து ஓடுகின்ற காவிரியாறு பல வாய்க்கால்களாகப் பிரிந்து வளம் உண்டாகும் என்று பாடுவதிலிருந்து காவிரி மழையில்லாக் காலத்திலும் என்றும் வற்றாத ஆறு என்பது புலப்படுகின்றது.

**“கோடை ஆயினும் கோடி**
**காவிரி புரக்கும் நல்நாட்டு பொருந”**[150]

வறண்ட கோடைகாலம் ஆயினும் தவறாது நீர்ப்பாயும் காவிரி என்று குறிப்பிடுகிறது.

**“வான் பொய்ப்பினும் தான் பொய்யா**
**மலைத் தலைய கடற் காவிரி”**[151]

வானமானது மழை பெய்யாமல் பொய்த்தாலும் காவிரி தன் நீர்வளத்தால் வயல்களையெல்லாம் பொன் கொழிக்கச் செய்யும் என்று புலவர் பாடுகின்றார்.

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள்

**“கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**
**விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்**

**கால்பொரு நிவப்பிற் கடுங்குரல் ஏற்றொடு**

**சூல் முதிர் கொண்மூப் பெயல் வளஞ் சுரப்ப**

**காவிரிப் புதுநீர்”**[152]

வெள்ளி தெற்கு நோக்கி நகர்ந்தாலும், இடியும் மின்னலும் தோன்றி மழைபெய்யும் பொழுது பெருகுகின்ற நீர்க்காவிரிநீர் என்று குறிப்பிடுகின்றார்.

**காவிரி நீத்தம்**

நீர்ப்பெருக்கின் ஆழத்தையும் , பரப்பினையும் எண்ண இயலாதளவில் காவிரி ஓடியதை அகநானூறு

**“மழைமருள் பாஹறோல் மாவண் சோழர்**

**கழைமாண் காவிரி”**[153]

**“நாடார் காவிரிக் கோடுதோய் மலிர்நிறைக்**

**கழையழி நீத்தம் சாஅய வழிநாள்”**[154]

**“பிண்ட நெல்லின் உறந்தை யாங்கண்**

**கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தம்”**[155]

கழை என்றால் ஓடக்கோல் என்று பொருள் நாடுகள் நிறைவுபெறுவதற்காக நீர் வளத்தை உண்டாக்கும் காவிரியாறு உறையூர் பகுதியில் மிகுதியான நெல்விளைவை உண்டாக்கி பரிசில் ஓட்டுபவன் கோலை ஆற்றில் ஊன்றும் பொழுது அதன் அடிமண்ணைத் தொட முடியாத படி காவிரியின் ஆழம் இருந்துள்ளதைக் குறிப்பிடுகின்றது.

**“கரைபொருது இரங்கு புனல் தெரிதரு**

**மிகு பெருங்காவிரி”**[156]

கடற்கரையின் கரைகளில் காவிரி நீர் மோதி இடிக்கின்றது என்று குறிப்பிடுவதில் காவிரியின் பரப்பையும் காவிரியே கடலாகப் பாய்ந்ததையும் அறிய முடிகின்றது.

தாயானவள் தன் குழந்தையைக் காப்பது போல் காவிரித்தாய் மக்களைக் காக்கிறது என்பதை

**“புனிறுதுா் புழவிக்கு இலிற்று முலைபோலச்**

**சுரந்த காவிரி மரங்கொள் மலிநீா்**

**மன்பதை புரக்கும் நன்னாட்டுப் பொருநன்”**[157]

பிறந்த குழந்தைக்காக தாயிடமிருந்து சுரக்கும் பாலைப் போல் உலக மக்களுக்காக நீரினை காவிரி வழங்குகிறது. காவிரியின் நீா் ஒரு வேலி நிலத்தில் ஆயிர்ககணக்கான நெல் கலத்தை விளையச் செய்து நாட்டினைக் காப்பதாக குறிப்பிடுகிறது.

இங்ஙனம் காவிரி தன் நீா்வளத்தால் பண்டை காலத்திலிருந்து தற்காலம் வரை பொய்க்காமல் வற்றாமல் தொடந்து நீரினை வழங்கி வருவதை அறியமுடிகின்றது.

**6. தெண்ணீா் வானி**

தமிழ்நாட்டில் புகழ்பெற்ற ஆறுகள் யாவும் மேற்கு மலைத்தொடரில் தோன்றுவனவாகும். மேற்கு பகுதியில் வடக்குப் பகுதியான வானமாமலையின் வட கோடியில் உருவாகின்ற ஆற்றுக்கு வானியாறு என்று பெயா். வானமாமலையிலிருந்து தோன்றி பாய்ந்து மேலைக்கடலில் கலக்கின்றது. வானியாறு சிராவதி என்றும் அழைக்கப்படுகிறது.

வானியாறு மிகவும் தெளிந்த நீரினைக் கொண்டது.ஆற்றில் நீரானது பெருகி வரும் பொழுது அந்நீரில் நீராடும் மகளிரின் பொன்னால் ஆன குழைகள் விழுந்தாலும் குழை இருக்குமிடத்தைக் தெளிவாகக் காட்டும் என்பதை

**“கழைநிலை பெறாஅக் குட்டத்தாயினும்**

**புனல்பாய் மகளிா் ஆட ஒழிந்த**

**பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்**

**சுரந்துவரு வானி நீரினும்**

**தீம்தண் சாயரன் மன்ற தானே”**[158]

வானியாறு ஓடக்கோல் அண்டாத ஆழமுடையதாகவும், நீரின் மேலிருந்து பார்க்கத் தெளிவாகத் தெளிந்த நீர் கொண்டதாகவும், வானியாற்றின் நீர் தோன்றுகிறது என்று பெருங்குன்றூர் கிழார் குடக்கோ இளஞ்சேரலாதனின் உலக மக்களைக் காக்கும் சிறப்பைப் பதிற்றுப்பத்தில் பாடியுள்ளார்.

**7.அறல் அரிசில்**

தமிழகத்தில் பாயும் ஆறுகளில் தலைமையிடம் பெற்ற காவிரியில் கலக்கும் ஆறுகளில் அரிசிலாறு சிறப்பிடம்  பெறுகின்றது. காவிரியாற்றின் கிளை ஆறு.

**“அரிசில் அம்தண்அறல் அன்ன அவள்**

**வரி ஒலி கூந்தல் விட்டுஅமைகலனே”**[159]

சோழமன்னன் கிள்ளி வளவன் ஆட்சிப்புரிந்த அம்பர் என்னும் ஊருக்கு செழிப்பைத் தந்த ஆறு அரிசிலாறு. மழைபெய்ததால் நீரானது ஆறுகளில் வெள்ளம் போல் பெருக்கெடுத்தது. அந்நீரோட்டமானது தெளிந்த கருமணல் போன்று இருந்தது. அதைப் பார்ப்பதற்குத் தலைவியின் கருநிற கூந்தல் போலக் காட்சியளித்தது என்று சல்லியங்குமரனார். குறிப்பிடுகின்றார்.

**8.பொன்மலி சோணை**

சோணையாற்றின் வேறுபெயர் நர்மதை.சோணை என்பது மகதநாட்டுப் பேரரசில் பாடலிபுத்திரத்துக்கு அருகில் ஓடிய ஆறு. பொன்வளத்தை அள்ளி தருவதால் வடமொழியில் சொர்ணமுகி என்ற பெயரே தமிழில் சோணை என்று வழங்கப்படுகிறது.

பாடலிபுத்திரம் மகதப்பேரரரசின் தலைநகரமாகும். இப்பேரரசை மௌரியர் நந்தர் என்ற இரு வம்சத்தினர் ஆண்டு வந்துள்ளனர். சோணை ஆறு பாடலிபுத்திரத்தில் ஓடிய ஆறாகும்.

**"வெண்கோட்டு யானை சோணை படியும்**
**பொன்மலி பாடலி பெறீஇயர்"**[160]

என்ற பாடலில் பொன்மலி பாடலி என்பது பொன்வளமிகுந்த பாடலிபுத்திரமாகும். சோணையாறு நீர்வளத்தைத் தருவதால் அந்நகரில் செல்வ வளம் மிகுந்துள்ளது. ஆழமும் நீர்ப்பரப்பும் கொண்டதால் அவ்வாற்றில் வெண்ணிறத்தைக் கொண்ட யானைகள் படிந்து நீராடுகின்றன

பெருங்கதையிலும்

**"பாடலிப்பிறந்த பசும்பொன் வினைஞரும்"**[161]

பாடலிப்புத்திரத்தில் பொன் செய்யும் வினைஞர்கள் பசுமையான பொன்னினால் ஆபரணங்களைச் செய்துள்ளதைக் குறிப்பிடுகின்றது.

**"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்**
**சீர்மிகு பாடலிக் குழிஇக் கங்கை**
**நீர்முதல் கரந்த நிதியம"**[162]

என்ற பாடலில் மாமூலனார் நந்தர்கள் தாங்கள் கொணர்ந்த நிதியை கங்கையாற்றங்கரையில் புதைத்ததாகக் குறிப்பிடுகின்றார்.

**9. நன்னீர்ப் பறுளி**

குமரி நாட்டின் தென்பகுதியில் பாய்ந்து ஓடிய ஆறு பறுளி ஆறாகும். குமரியை நீர்வளம் பெறச் செய்த பறுளி ஆற்றினை கடல் கொண்டதாக இலக்கியங்கள் இயம்புகின்றன.

புறநானூற்றில்

**"எங்கோ வாழிய குடுமி தங்கோச்**
**செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்க கீந்த**

**முந்நீர் விழவின நெடியோன்**

**நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"**[163]

பாண்டியர்களில் மூத்த மன்னன் நெடியோன் பாண்டிய நாட்டினை ஆட்சிச் செய்யும் காலத்தில் நன்னீரைத் தந்து செல்வம் கொழித்தப் பஃறுளி ஆற்றிக்கு முந்நீர் விழவு எடுத்தச் செய்தியினை அறிய முடிகின்றது.

**"மலிதிரை ஊர்ந்து மண்கடல் வௌவலின்**

**மெலிவன்ற மேற்சென்று வோர் நாடிடம் படப்**

**புலியோடு வில்நீக்கிப் புகழ் பொறித்த கிளர்கெண்டை**

**வலியினான் வணக்கிய வாடாசீர்த் தென்னறவன்"**[164]

சோழரையும் சேரரையும் தம் போர்த்திறத்தால் தோல்வியுறச் செய்து மீன் கொடியை நிலைநாட்டிய பாண்டியனின் நாடு கடல் அலைகளால் மூழ்கியதை என்று கலித்தொகை குறிப்பிடுகின்றது.

சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகளும்

**"வடிவேல் எறிந்த வான்பகை பெறாது**

**பஃறுளி யாற்றுடன் படுமலை யடுகத்துக்**

**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள**

**வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு**

**தென்திசை ஆண்ட தென்னவன் வாழி"**[165]

என்று குறிப்பிடுகிறார்.

### 10. சிலம்பாறு

மழைக்காலங்களில் மட்டுமே ஓடும் ஆறாகும். இருங்குன்றம் என்ற பகுதியில் ஆராவரித்து அழகுடன் திகழும் ஆறாக கடைச் சங்க காலத்தைச் சார்ந்த இளம்பெருவழுதி பாடலில் காண முடிகின்றது.

**"திருமாலிருஞ் சோலையை வளப்படுத்தும் ஆறுகளுள் சிலம்பாறு ஒன்றாகும் இருங்குன்று"**[166]

**"மால் இருங்குன்றம்"**[167] என்று பரிபாடல் குறிப்பிடுகின்றது.

அம்மலையிலிருந்து சிலம்பாறு பெருகி வருவதை

**"அலங்கும் அருவி ஆர்த்து அமிழ்பு அழிய**
**சிலம்பாறு அணிந்த சீர்கெழு திருவின்**
**சோலையோடு தொடர்மொழி மாலிங்குன்றம்"**[168]

என்று சிலம்பாறு பாய்வதால் மலையிலிருந்து அருவி ஆர்பரித்துக் கொட்டி மலைக்கு அழகு சேர்ப்பதாகப் புலவர் குறிப்பிடுகின்றார்.

**11. பொய்யாக் குலக்கொடி வையை**

தென்னிந்தியாவில் தமிழக ஆறுகளில் ஒன்று வைகை மேற்குத் தொடர்ச்சி மலைகளில் உள்ள பெரியார் பீடபூமியில் தோன்றி வடகிழக்காகப் பாயந்து வடக்கே பழனிக் குன்றுகளாலும் தெற்கே வருச நாட்டுக் குன்றுகளாலும் அரண் செய்யப்பட்டு கம்பம் பள்ளத்தாக்கை அடைகிறது. பின்னர் தென்கிழக்காகத் திரும்பி மதுரை வழியே வங்காள விரிகுடாவில் கலக்கிறது.

பாண்டிய நாட்டுக்கு வளத்தையும், பயனையும் தருவது வையை. பெரியகுளம் வட்டம் ஆண்டிப்பட்டி மலையில் தோன்றி மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் பாய்ந்து கடலில் கலக்கிறது. வையை வற்றாத நீர்வளம், நிறைந்தது.

வையை ஆறு பற்றி பரிபாடல் மிகவும் சிறப்புறக் குறிப்பிடுகிறது. பரிபாடலில் காணப்படும் 8 பாடல்களும் வையையின் தோற்றம் சிறப்பு வளமும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**"தீம்புனல் வையைத் திருமருத முன்துறையில்"**[169]

என்று பரிபாடல் குறிப்பிடுவதன் மூலம் வையை ஆற்றில் பெருக்கெடுத்து ஓடி வருகின்றன நீரே மாமதுரைக்கு நீர்வளமாக உள்ளதை அறியலாம்.

**“உலகு புரந்தூட்டும் உயர்பே ரொழுகத்துப்**
**புலவர் நாவில் பொருந்திய**
**பூங்கொடி வையை என்னும் பொய்யாக் குலக்கொடி”**[170]

வையை ஆறு மங்கை நல்லாள் உயிர்களைப் பாதுகாத்துப் பல பொருள்களை விளைத்துத் தருபவள்.அவள் தன்னைச் சார்ந்த மக்களுக்கு எல்லையற்ற இன்பத்தை நல்குவதால் திருமகளுக்கு ஒப்பானவள். புலவர் பெருமக்களால் தத்தெடுக்கப் பெற்ற மகளாவாள். பாண்டிய நாட்டினரின் குலக்கொடியாகத் திகழ்பவள் என்று சிலம்பு வையையின் பெருமையைப் பறைசாற்றுகின்றது.

**“வானவரும் காணவிரும்பும் வளம் மிகுந்த மதுரை”**[171]

**1.வையையின் தோற்றம்**

மேகங்கள் கடல் நீரை முகந்து வானத்தை நோக்கி எழுகின்றன.நீரை முகந்து மேகங்கள் கருநிறமாகச் செல்வது பாண்டியனின் யானைப்படையை ஒத்திருக்கின்றன. அங்ஙனம் படையெடுத்துச் செல்லும்போது ஒலிக்கும் முரசு போல வானிலே இடி மின்னல் தோன்றுகின்றன. பாண்டியனின் வில்லிருந்து புறப்படும் எண்ணிலடங்கா அம்புகள் போன்று மழைப்பொழிகின்றன.

அவ்வாறு பெய்த மழை நீர் மலைப்பகுதிகளில் விழுகின்றன. அவை பல அருவிகளாகத் தோன்றி ஒன்று சேர்ந்து பெருக்கெடுத்து ஓடுகின்றன. இத்தகைய ஆறே வைகையாகும்.

**“திரை இரும் பனிப்பௌவம் செவ்விதா அறமுகந்து**
**உரஉரும் உடன்று ஆர்ப்ப ஊர்பொறை கொள்ளாது**
**கரைஉடை குளமெனக் கழன்று வான்வயிறுஅழிபு**
**வரைவரை தொடுத்த வயங்கு அவ்வெள்ளருவி**
**இரவுருள் பகலாக இடம்அரிது செலவுஎன்னாது**
**வுலன் அரங்கு முரசின் தென்னவர் உள்ளிய”**[172]

வையை ஆற்றின் வெள்ளம் மேடு பள்ளங்களைத் தாண்டிக் இரவும் பகலும் பயணம் செய்வதை அறிய முடிகின்றது.

**2.வையையின் வேகம்**

**“நளிகடல் முன்னியது பேலும் தீம்நீர்**
**வளிவரல் வையை வரவு”**[173]

வையை மலைகளிலே வளர்ந்துள்ள நாகம் அகில், சுரபுன்னை ஞெமை, சந்தனம் போன்ற மரங்களின் மலர்களை அடித்துக்கொண்டு கடல்போல கிளர்ந்து காற்று போல விரைவாகவும் வருகின்றது.

**வையையின் நீர்ப்பெருக்கும் வளமும்**

மதுரை மாநகரிலே விடியற்காலைப் பொழுதில் வையைத் தண்புனல் மலைகளிலே அருவிகளின் இழும் என்ற ஓசையுடன் கீழே இறங்கியது. அந்த அருவியின் ஓசையானது காதலர்களுக்கு பாடும் தாலாட்டாக இருந்தது. அங்கு தங்குதடையின்றி வீசும் காற்றானது சில் என்ற ஒலியை உண்டாக்கியது .இது காதலர்களுக்கு இன்பத்தை ஏற்படுத்தியது. தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு தலைவன் காமக்கிழத்தியரோடு ஊடியதை அறிவிப்பது போல தரையினிலே படர்ந்து ஓடி வந்தது என்று வையை மதுரையில் நுழையும் அழகை புலவர் காட்சிப்படுத்தியுள்ளார்.

**“வரை அழிவால் அருவிக்கால் தாலாட்டக்கரை அழி**
**வான் ஆற்றும் மழைதலைஇ மரன் ஆற்றும் மலர்நாற்றம்**
**தேன்ஆற்றும் மலர்நாற்றம் செறுவெயில் உறுகால**
**கான்ஆற்றும் கார்நாற்றம் கொம்பு உதிர்த்த கனிநாற்றம்**
**தான்நாற்றம் கலந்துஉடன் தழீஇவந்து தரூஉம்வையை”**[174]

வையை ஆறு பாயும் இடங்கள்தோறும் வளர்ந்துள்ள மரங்களிலிருந்து விழுகின்ற பூக்களின் தேன் மணமும் கலந்து இரு கரைகளிலே பாய்ந்து வருவதைப் பரிபாடல் சுட்டுகின்றது.

வையை ஆறு உழவர்கள் மகிழ்ச்சியடையும் வண்ணம் விளைநிலங்களுக்கு நீர்வளத்தை வழங்கியதை

**“பெயலால் பொலிந்து பெரும்புனல் பலதந்து**
**நலநன்த நாடணி நந்நப் புலனந்த**
**வந்தன்று வையைப் புனல்”**[175]

என்ற பாடல்வரிகள் வையை ஆற்றினால் நாட்டுவளமும் வயல்களின் வளமும் பெருகியதை உணர்த்துகின்றன.

எல்லா நதிகளும் மழைப்பொழிவையே ஆதாரமாகக்கொண்டவை. வையை நதி வள நதியாகும். பெரும்பான்மை வறட்சியே உடையதான வையை நீர்ப்பெருக்கு உடைய ஆறாக

**“செலவரை காணாக் கடல்தலைக் கூடும் ......வையைப் புனலாக”**[176]
பெருகி வருகிறது.

மலையில் உள்ள மயில்கள் அகவவும் தூசுகள் நீங்கவும் விரைந்து ஒலிக்கிறது. அந்த அருவி பலவாறு இணைந்து உழவு முதலிய தொழில்களுக்கு உதவும்படி வெள்ளமெனப்பெருகித் தாவிச் செல்கிறது என்பதை

**“திரைஇரும் பனிப் பௌவம் செவ்விதா அற முகந்து**
**உர உரும் உடன்று ஆர்ப்பஏ ஊர் பொறை கொள்ளாது**
**பெயலான் பொலிந்து பெரும்புனல் பல நந்த**
**நலன் நந்த நாடு அணி நந்த புலன் நந்த**
**வந்தன்று வையைப்புனல்”**[177]
இப்பாடல் விளக்குகின்றது.

வையை ஆறு ஆடல்கலையில் வல்லமை பெறாத ஆடல்மகளாக மெதுவாகப் பாய்கிறது. தலைவன் மீது ஊடல் கொண்ட மனைவியின் செயல் போல எதிர்ப்பட்ட அணைகளைத் தாண்டிச் செல்கிறது. மணமிக்க மலர்கள் பாய்கின்ற வழிதோறும் ஆற்றில் விழுவதால் பலயான

மணங்களும் பெற்று வருகின்றது. வெள்ளம் வருவதைக் கண்டறியாத சிறுவர் சிறுமியர் கட்டிய மணல் வீடுகளை அழிக்கின்றது.

விதைத்து சில நாட்களே ஆன இளம் பயிர்களை சூழ்ந்த வெள்ளமானது கடல் சூழப்பட்ட ஊரைப் போன்று வையை சூழ்ந்தது. தென்னை , பாக்கு போன்ற மரங்களெல்லாம் மூழ்கும்படிச் செல்கின்றது. அவ்வெள்ளமானது சோலைகளிலே பாய்வதால் மரங்களில் பூக்கள் மலர அம்மலர்களின் தேனை வண்டுகள் அருந்தி ரீங்காரம் இடுகின்றன. இங்ஙனம் வையையின் நீர்வளத்தைப் பரிபாடல் வருணிக்கின்றது.

பாண்டிய நாட்டுக்கு வளத்தையும், பயனையும் தருவது வையை. பெரியகுளம் வட்டம் ஆண்டிப்பட்டி மலையில் தோன்றி மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் பாய்ந்து கடலில் கலக்கிறது. வையை வற்றாத நீர்வளமும், வளம் நிறைந்த அதன் கரைகளில் ஓங்கியுயர்ந்த மருத மரங்கள் சூழ்ந்த சோலைகளும் அழகுடன் விளங்குவன,

**வருபுனலில் வையை வார்மணல் அகன்றுறைத்**

**'திருமரு தோங்கிய விரிமலர்க் காவின்"** [178]

கலித்தொகையில் பல இடங்களில் வையை புகழப்படுகிறது.

**"அறல் வாடும் வையை"**[179]

**"பூமலி வையை"**[180]

**"வையைப் புதுப்புனல"**[181]

என்று வையை பாராட்டப் பெறுவதைக் காணமுடிகிறது.

வையையில் நீராடும் காட்சியை

**"மையெழில் உண்கண் மடந்தையொடு வையை**

**ஏர்தரு"**[182]

**"புதுப்புனல் உரிதினி னுகர்ந்து**

**பெருநீர் வையை அவனொடு கூடி"**[183]

என்று புலவர்கள் காட்சிப்படுத்துகின்றனர்.

வையையில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் பான்மையைப் பரிபாடல் எடுத்துரைக்கிறது. இரண்டு மலைகள் போல இரு கரைகளிலும் நுங்கும் நுரையுமாக வையைப் பொங்கி வருவதை

**“இறுவரை நிறைமதி புரையுமாறு இருகரை ஏமத்து**

**வரைபுரை உருவின் நுரை பல சுமந்து**

**பூவேய்ந்து பொழில் பரந்து”**[184]

எனப் பரிபாடல் சுட்டுகின்றது.

வையைப் பற்றிய செய்திகள் பரிபாடலில் மிகுதியாகப் பேசப்படுகின்றன.

**“நெரிதரூஉம் வையைப்புனல்**

**தாவு நீா் வையை**

**அந்தண் புனல் வையை**

**வளங்கெழு வையை**

**தீம்புனல் வையை”** [185]

என்றும் பேசுகின்றது.

வையையாறு மிக்க புகழுடன் கூடிய பல ஊர்களைச் சூழ்ந்திருந்தது. அவற்றை வளம் கொழிக்கவும் செய்தது. அவ்வூர்களை மாவன் போன்றவா்கள் தலைமை தாங்கி காத்துவந்தனா் என்ற செய்தியினை நல்லையூா் தந்தப் பூதப்பாண்டியன் புறநானூற்றில் தெரிவிக்கின்றான்.[186]

12. **குமரியாறு**

குமரி கடற்கோளால் மறைந்த ஆறுகளுள் ஒன்றாகும். மிகப் பழமையான இலக்கணங்களிலும் நூல்களிலும் குமரிமுனைக்குக் தெற்கே நெடுந்தொலைவு நிலமாக இருந்தது என்றும் அந்நிலப்பகுதி கடலுள் மூழ்கியதையும் ஆசிரியா்கள் குறிப்பிடுகின்றனா்.

அந்நிலத்தில் பாய்ந்த ஆறுகளுள் குமரி பறுளி முதன்மையானவையாகும். தமிழ்நாட்டில் உருவான முதல் கடற்கோளால் பறுளி ஆறும் குமரிக்கோடும் கடலில் கொள்ளப்பட்டன.

**“பனம்பாரனார் குறிப்பிட்ட தமிழ்நாட்டின் எல்லைகளில் குமரி ஒன்றாகும்.அது குமரியாறு பாயப்பெற்ற அன்றைய குமரிக்கும் தென்பாற்பட்ட நிலத்தைக் குறித்தது என்று உரையாசிரியர்கள் பொருள் கொண்டனர்.”**[187]

**வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்**
**தெனாஅ துருகெழு குமரியின் றெற்கும்**
**குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்**
**குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்**[188]

என்ற பாடல் அடிகளில் புலவர் எல்லைகளைக் குறிப்பிடும் போது வடபகுதியில் இமயமலையும் தென்பகுதியில் குமரியும் கிழக்கு மற்றும் மேற்கு பகுதியில் கடலும் இருப்பதாகச் சுட்டுவதில் குமரியாறு பழமையான ஆறு என்பது புலப்படுகின்றது.

**“பறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக்**
**குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள”**[189]

என வரும் சிலப்பதிகார அடிகளால் அன்றைய குமரி முனைக்குத் தெற்கே குமரியாறு பாயப்பெற்ற பெருநிலப் பகுதி இருந்துள்ளதை அறியலாம்.

**“குமரிஅம் பெருந்துறை அயிரை மாந்தி**
**வடமலைப் பெயர்குவை ஆயின்.”**[190]

குமரியாற்றிலே துள்ளிக் குதிக்கின்ற அயிரை மீன்களை பறவைகள் உண்பதை புறநானூறு குறிப்பிடுவதன் மூலம் குமரியாறு குமரிமலையில் ஓடி அந்நாட்டிற்கு வளம் சேர்த்ததை அறியலாம்.

**13. தென்பெண்ணை**

பெண்ணையாறு கர்நாடக மாநிலத்தில் மைசூர் பகுதியில் உருவாகி வடதமிழகப் பகுதிகளான சேலம் வடஆர்க்காடு, தென்னார்காடு மாவட்டங்களில் ஓடிக் கடலூரில் கடலோடு கலக்கின்றது.

**"பெண்ணை என்பது தென்பெண்ணை என்றும் வழங்கப்படுகிறது. தென்பெண்ணை பாயும் இடமாகக் குறிக்கப்பெறும் கொடுங்கால் என்னும் ஊர் மலையமானுக்குச் சொந்தமான தென்னார்க்காடு மாவட்டதிலுள்ள கொடுங்கோலூர் என்பதே. மேலும் வடபண்ணையாறு நிலவரைப் படத்தின் மூலம் நோக்குகிற போது வெங்கடமலைக்கு வடக்கே உள்ளது தெரியவரும். தமிழகத்தின் எல்லைக்குட்பட்ட வடஎல்லையை ஆண்டவன் மலையமான் என்பதால் தென்பெண்ணையே சங்கஇலக்கியங்கள் சுட்டும் பெண்ணையாறு எனக் கொள்ளல் வேண்டும்"**[191]

**"பெண்ணைஅம் பேரியாற்று நுண்அறல் கடுக்கும்**
**நெறிஇருங் கதுபின்என் பேதைக்கு**
**அறியாத் தேஎத்து ஆற்றிய துணையே"**[192]

திருக்கோவலூர் அரசனாகிய மலையமான் திருமுடிக்காரியின் ஊராகிய கொடுங்கல்லூர் ஆற்று மணலின் அறலைப் போன்ற கூந்தலையுடையவள் என்பதில் இருந்து மலையமான் நாட்டில் பாயும் ஆறு பெண்ணை என்பது புலப்படுகின்றது.

**14. நனந்தலைப் பேரி**

**"மேற்குத்தொடர்ச்சி மலையில் தோன்றி அரபிக்கடலில் கலக்கும் குறிப்பிடத்தக்க ஆறுகளுள் பேரியாறும் ஒன்றாகும். இப்பேரியாறு ஏரமலையைச் சார்ந்த சிவகிரியில் தோன்றி வடமேற்காக ஓடிப் பாரூர் என்ற இடத்தில் அரபிக்கடலில் கலக்கிறது"**[193]

சேரநாட்டிற்கு வளமை தருகின்ற ஆறுகளில் பேராறு முதன்மையானது. அந்நாட்டில் ஓடுகின்ற ஆறுகளில் பெரிய ஆறு என்பதால் பேராறு என்று பெயர் பெற்றது. அவ்வாற்றில் நீரானது குறையாமல் எப்பொழுதும் ஓடிக் கொண்டிருக்கும் சிறப்பைப் பெற்றது.

**"இளைஇனிது தந்து விளைவுமுட்டு உறாது**
**புலம்பா உறையுள் நீதொழில் ஆற்றலின்**
**விடுநிலக் கரம்பை விடர்அளை நிறைய**

**கோடைநீட குன்றம் புல்வென**

**அருவி அற்ற பெருவறல் காலையும்**

**நிவந்துகரை இழிதரும் நனந்தலைப் பேரியாற்றுச்**

**சீருடை வியன்புலம"**[194]

வேனிற்காலத்தில் கதிரவனின் வெம்மை அதிகமாகி மலைகளின் வளம் குன்றும். பச்சைநிறங் கொண்ட சோலைகளெல்லாம் தன் நிறத்தை இழந்து எழில் குறையும். துள்ளிக் குதித்துப் பாய்ந்த அருவிகள் வற்றி விடும்.அத்தகை வறட்சியான காலத்திலும் பேராறு வற்றாமல் நாட்டிற்கு வளத்தைத் தருகின்றது. மலையிலிருந்து பெருகி வரும் பேராற்றினை தடுத்து மக்கள் பயன்படுத்துகின்றனர். உரிய காலம் வந்தவுடன் விளையாட்டை விடுத்து இல்லறம் புகும் மகளிர் போல மலைகளில் வீழ்ந்து கரைகளில் அகப்பட்ட பேராறு சேர நாட்டிற்கு வளப்பம் தருகின்றது. நிலமகளின் மடியில் தவழ்ந்து முற்றிய வயல்வெளிகளிலே புகுவதால் அவ்வயல்கள் நீர்வர்த்தினால் நல்ல விளைச்சலைத் தருகின்றது. புன்செய் நிலங்களில் எல்லாம் வளம் பெருகியது. வெப்பத்தால் வெடிப்புற்ற பகுதிகளில் நீரானது நிரம்புகிறது. இங்ஙனம் பேராற்றின் புதுவளத்தைப் பாலை கௌதமனார் பாடுகின்றார்.

## 15. சேயாறு

சேய் ஆறு என்பது திரிந்து செய்யாறு ஆயிற்று. சேயாற்றயங்கரையைச் செங்கண்மாவைத் தலைநகராகக் கொண்ட மலை நாட்டை நன்னன் சேய் நன்னன் என்ற குறுநில மன்னன் ஆண்டு வந்தான். அவன் நாட்டில் பெருக்கெடுத்து ஓடும் ஆறு திரையன் நாட்டு பாலாற்றோடு கலந்து கடலில் விழும்பொழுது செய்யாறு என அழைக்கப்படும்.

**"காணுநர் வயா அம் கட்சின் சேயாறு"**[195]

**"கடுவரல் கலுழிக் கட்கின் சேயாறு"**[196]

கொண்ட பேரிரைச்சலுடனானக் காட்சி பார்ப்பவர்க்கு இனிமைத் தோன்றும்படி உள்ளதாக குறிப்பிடப்பட்டுள்ளது.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே காவிரி ஆற்றின் சிறப்பைக் குறித்துப் பாடாத புலவர்களே இல்லை. நாட்டினை வளப்படுத்தும் முக்கிய நதிகளில் ஒன்றாகக் காவிரி திகழ்கின்றது. தென்னக ஆறுகளில் காவிரியும், வையையும் முதன்மை பெறுகின்றன. பொன்னியாறு என்று பாண்டியனின் புகழையும், பொருநை, சிறுவாணி, பேரியாறு போன்றவை சேரனுடைய சிறப்பையும் கூறுகின்றன.

கடல்நீர் முகந்து ஆவியாதல், மேகமாகி மலை அடைதல் மின்னுதல், முழங்குதல், மழைபொழிதல், பொழிந்த நீர் அருவியாகிப் பின் ஆறாக ஓடுதல் என்று ஆற்றின் தோற்றம் விவரிக்கப்படுகிறது.

ஆறில்லாத நாடு நிலவில்லாத முற்றம் என்ற பழமொழிக்கு ஏற்பவும் **நீரின்றி அமையாது உலகம்** என்ற நற்றிணைப் பாடலும் ஆற்றின் சிறப்பை எடுத்துக்காட்டுகின்றது

**16. பொறையாறு**

**“கள்கமழ்பொறையாறு அன்னஎன்”**[197]

பெரியன் என்ற வள்ளலுடைய பொறையாறு என்று கூறுவதிலிருந்து கேட்போருக்குக் கேட்பதைத் தரும் ஆறாக ஒப்புமைப் படுத்தப்பட்டுள்ளது.

### 2.3.4 அருவி

மலையின மீதிருந்து விழும் வெள்ளிய நீர்த் தொடரே அருவியாகும். மழையின் தன்மையை பொறுத்தே அருவியின் நீர்வரத்து இருக்கும். அருவி என்பதற்கு **“மலையின் வீழாறு”** என்று கதிரைவேற்பிள்ளையின் தமிழ்ச்சொல் அகராதி உணர்த்துகிறது. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி அருவி என்பதற்கு மலையின் வீழாறு , வீழாறு சிற்றாறு நீரோட்டம், திணைத்தாள் உருவமில்லாதது’ என்ற பொருட்களைக் குறிப்பிடுகின்றது.

தமிழ்ச் சொல்லகராதி என்ற நூல் தினைத்தாள்; மலையின் வீழாறு என்று பல பொருட்களைச் செப்புகின்றது. அருவி என்ற சொல்லாடல் மட்டும் 180க்கும் மேற்பட்ட இடங்களில் சங்கப்பாடல்களில்

இடம்பெற்றுள்ளது. இப்பாடல்களின் வாயிலாக அருவியின் தோற்றம், அதன் தன்மை, மகளிர் அருவியில் நீராடல், அருவியில் காணலாகும் உயிரினங்கள் ஆகியவை குறித்து விளக்குகின்றன. மழையின் காரணமாகவே அருவி உண்டாவதை,

**“அதனால் குணகடல் கொண்டு குடகடல்முற்றி**
**இரவும் எல்லையும் விளிவு இடன் அறியாது**
**அவலும் மிசைவும் நீர்த் திரள்பு ஈண்டி**
**கவலைஅம் குழும்பின் அருவி ஒலிப்ப”**[198]

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன. இதன்மூலம் மேகங்கள் கீழ்த்திசை, கடலின் நீரை முகந்து மேற்திசை கடலருகேயுள்ள மலைப்பகுதிகளில் தங்கியதோடு இரவும் பகலும் எங்குச் செல்வது என்று அறியாமல் பள்ளமும் மேடுமாகிய பலப்பகுதிகளில் உள்ள நீருடன் திரண்டு எழுந்தன. அவற்றோடு கவலைக் கிழங்குத் தோண்டிய அழகிய குழிகளில் மழைநீர் வீழ்ந்து அருவிகளாக பாய்ந்தது என்ற அருவி உருவான நிலை இதன் வழி அறியமுடிகின்றது. மழை பெய்தால் தான் அருவியில் நீர் வரத்து இருக்கும். மழையில்லாவிடில் அருவிகள் தோன்றாது என்பதை,

**“கழைநரல் வியல்அகம் வெம்ப மழைமறந்து**
**அருவி ஆன்ற வெருவரு நனந்தலை”**[199]

என்ற அகநானூற்றுப் பாடல் மழைப்பொழியவில்லை என்றால் அருவியைப் பார்க்கவியலாது என்ற சிந்தனையை முன் வைக்கின்றன. அருவிநீர் மருத்துவ குணம் நிறைந்தது. இந்நீரினை நம்பியே மலைவாழ் உயிரினங்கள் உயிர்வாழ்கின்றன. எனவே இந்நீரை சரியான முறையில் பாதுகாத்து மக்கள் பயன்படுத்த வேண்டும் என்ற முற்போக்கு சிந்தனையை சங்கப்பாடல்களில் காணலாகும். அருவி பற்றிய செய்திகள் எடுத்துரைக்கின்றன. மழைக்காலத்தில் அருவிகளின் எண்ணிக்கையும் அதன் நீர்வரத்தும் அதிகமாக இருக்கும். கோடைக்காலங்களில் அருவினைக் காண்பது அரிது. எனவே தங்களின் தேவைக்கு ஏற்றவாறு அருவி நீரைப் பாதுகாக்க வேண்டும்.

சங்கப்புலவர்கள் அருவிகளைப் பற்றி தம் பாடல்களில் குறிப்பிடும்போது அதன் சிறப்பையே பாடுபொருளாகக் கூறி பதிவிட்டுள்ளனர். வெள்ளருவி என்ற அருவி பலதேவனை பொன்ற வெண்மையான அருவி, நீண்ட வெள்ளிய அருவி, ஒலிக்கின்ற வெள்ளருவி என்றெல்லாம் புகழந்துள்ளனர்.

**“வாலியோன் அன்ன வயங்கி வெள்ளருவி**

**பெருவரை மிசையது நெடுவெள் அருவி**

**ஒலிவெள் அருவி ஓங்குமலை நாடன்”[200]**

என்ற வரிகள் மேற்கூறப்பட்ட அருவியின் சிறப்பிற்கு சான்று பகர்கின்றன. அருவி நீரானது தூய்மைத்தன்மை உடையது என்பதை,

**“மணிநிறம் கொண்ட மாமலை வெற்பில்**

**துணிநீர் அருவி நம்மோடு ஆடல்”[201]**

என்ற பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன. கற்களை மோதி உடைத்து விரைந்து வருகின்ற அருவி ‘கதழ்வீழ்’ அருவி என்ற அடையால் சிறப்பிக்கப்படுகின்றது. அருவிகள் விழுகின்ற ஓசையானது மத்தளங்களின் இசை போன்றும் பறையோசை போன்றும் காணப்படும் என்பதை,

**“பாடுஇன் அருவிப் பனிநீர் இன்இசை**

**இழுமென இழிதரும் பறைக்குரல் அருவி**

**முழுமுதல் மிசைய கோடுதொறும் துவன்றும்”[202]**

என்ற பாடல்வரிகள் எடுத்துரைக்கின்றன. இதன்மூலம் அருவின் ஓசை சிறப்பை அறியமுடிகின்றது.

**2.3.5 குளம்**

இயற்கையாக பொழியும் மழைநீரை மக்கள் பயன்பாட்டிற்காக தேக்கி வைத்து பயன்படுத்தும் ஓர் அமைப்பே குளமாகும். இக்குளம் நன்னீர் வாழிடமாகவே இருந்துள்ளது. சங்கஇலக்கியத்தில் குளம் என்பதை குறிக்க கயம், குட்டம், இலஞ்சி, மடு போன்ற சொற்கள் இருந்துள்ளதை

இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இக்குளமானது ஆற்றுநீா், ஊற்றுநீா் மற்றும் மழைநீரினால் நீரேற்றம் பெறுவதாகும். ஒரு நாட்டின் வளங்களில் அந்நாட்டில் காணப்படும் நீா் வளமே தக்கச் சான்றாய் அமையும் கோடைக் காலத்தில் ஏற்படும் நீா் பற்றாக்குறையை நீக்குவதற்காக குளங்களை வெட்டி நன்னீரை மக்கள் பாதுகாத்துள்ளனா். அவ்வாறு பாதுகாத்தும் அதீத வெப்பத்தின் காரணமாக பெரிய கரையுடைய குளங்கள் கோடைக்காலத்தில் நீரின்றி வறண்டு காணப்படும் என்பதை,

**"சென்று சேக்கல்லாப் புள்ள உள்இல்**

**என்றூழ் வியன் குளம் நிறைய வீசி"**[203]

என்ற அகநானூற்று பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன. 'கயம்' என்ற சொல்லும் குளத்தைக் குறிப்பதாக அமைந்துள்ளதால் சங்கப்பாக்களில் 83 இடங்களில் இச்சொல்லைப் புலவா்கள் பயன்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். குளங்கள் மிகவும் ஆழமாகவும் ஆபத்து தரக்கூடியதாக தவறி விழுந்தோரைக் கொல்லக் கூடிய நிலையில் இருந்ததை,

**"விழுத்தோர் மாய்க்கும் குண்டுகயத்து அருகா"**[204]

என்ற மலைபடுகடாம் வரி உணா்த்துவதை அறிய முடிகின்றது. இதில் குளத்தைக் குறிக்கும் கயம் என்ற சொல்லாடல் பயின்று வந்துள்ளதன்மை சுட்டிக்காட்டப்படுகின்றது. 'கயம் கண்டன்ன அகன்பை' என்ற வரியிலும் குளத்தைக் குறிக்கும் கயம் இடம்பெற்றுள்ளது. எனவே குளத்தைக் குறிக்கக்கூடிய சொல்லாடலாகக் 'கயம்' என்பதை பயன்படுத்தியுள்ளனா் என்பது இதன்வழி எடுத்துரைக்கப்படுகின்றது.

மேலும் புதுவருவாயாக ஓடி வருகின்ற நீரைப் பெற்றுருக்கும் குளத்தினை,

**"காண் இனிவாழி தோழி – யாணா்க்**

**கடும்புனல் அடைகரை நெடுங்கயத்து இட்ட"**[205]

என்ற பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன. குளம் என்பது ஒரு நிலத்திற்கு உரியதன்று. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலத்திற்கும் உரிய நீர் பாதுகாப்பு இடமாகும். இருப்பினும் வயலும் வயல்சார்ந்த பகுதிகளில் குளத்தை வெட்டி அதனை வேளாண்மைக்கு முன்னோர்கள் பயன்படுத்தியதை நாமே பார்த்திருக்கிறோம் என்பது போற்றுதற்குரியது. ஆனால் இக்காலத்தில் குளத்தின் பயன்படும் அதன் பராமரிப்பும் குறைந்து விட்டதால் குளத்தினை பார்ப்பதே அரியதாகிவிட்டது. இதனை போன்று பல நீராதர அமைப்புகள் அழிந்து கொண்டு வருவது வருத்தத்திற்குரியதாகும்.

### 2.3.6 ஏரி

ஏரி என்பது குளத்தைப் போன்ற வடிவுடையதே. ஏரியைப் பெரிய குளமென்றே கூறலாம். எப்போதும் ஏரியில் நீர் தேங்கி காணப்படுவதால் இந்நீர் தூய்மைதன்மையற்று இருக்கும். ஏரி நீரினை நம் முன்னோர்கள் வேளாண்மை பாசனத்திற்கே பயன்படுத்தியுள்ளனர். கலங்கிய நிலையிலும் தூய்மைத்தன்மையற்றும் இருப்பதால் குடிநீராக மக்கள் பருந்தவில்லை என்பதை அறியலாம். ஏரியின் நீரளவு அதிகரிப்பதற்கு மலைகளில் அதிகளவு பொழியும் நீர் ஓடைகளின் வாயிலாக வந்து கொண்டிருப்பதால் பல்வேறு கழிவுப் பொருட்களும் ஓடைகளில் அடித்து செல்லப்பட்டும் வரும். ஓடைகளினால் ஏரியின் நீரளவு அதிகமாக இருந்தாலும் வெளிப்புறத் தேவைக்கு மட்டுமே இந்நீரைப் பயன்படுத்த முடியும். இதனை,

**“புறந்தூய்மை நீரால் அமையும்”**[206]

என்ற வள்ளுவரின் வாக்கு மெய்ப்பிடிக்கின்றது. ஏரி நீரினை மனதில் கொண்டே இச்சிந்தனையை மொழிந்துள்ளார் என்றெ கூறமுடிகின்றது. சில நேரங்களில் நீர் பற்றாக்குறை ஏற்பட்ட இக்காலத்தில் ஏரி நீரும் குடிநீராகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. அவ்வாறு பயன்படுத்தும் போது காய்ச்சி வடிகட்டி, அதன் துவர்ப்பு நீங்க நெல்லிக்கட்டை, தேற்றாங்கொட்டை முதலியனவற்றை கொண்டு சுத்தம் செய்து குடிநீராகப் பயன்படுத்தலாம்.

### 2.3.7 கேணி

கேணி என்பதற்கு கிணறு என தமிழ் லெக்சின் அகராதி விளக்கமளிக்கிறது. சங்க இலக்கியத்தில் கேணி என்பது முல்லை நில நீர்நிலையாக விளங்கியுள்ளதை பல்வேறு பாடல்கள் எடுத்துரைக்கின்றன. கிணற்றுக்கு அசும்பு, உறவி, குழி, கூபம், கேணி, பூவல், வாவி, துரவு என்ற பல பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளன. கேணியினை தோண்டி நீராதரங்களை மக்கள் பெருக்கினர் என்பதை,

**“தொட்டனைத் தூறும் மணற்கேணி”[207]**

என்ற வள்ளுவரின் வாக்கு மெய்ப்பிக்கின்றது. கிணறானது நிலத்தின் கீழ் நீர்ப்படுகைகளில் சேமிக்கப்பட்டிருக்கும் நிலத்தடி நீரைப் பயன்படுத்துவதற்கு வசதியாக நிலத்தில் தோண்டப்படும் ஒரு குழியாகும். அகழ்தல், தண்டு செலுத்துதல், துளையிடல் போன்ற பல முறைகளைப் பயன்படுத்தி கிணறுகள் வெட்டப்பட்டுள்ளன. கிணற்றின் ஆழமானது நிலத்தடி நீர்மட்டத்தைப் பொறுத்து அதன் ஆழம் வேறுபடும். பெரும்பாலான மக்கள் தங்களின் குடிநீராகக் கிணற்று நீரினையே பயன்படுத்தி உள்ளனர். குடிப்பதற்கு மிகவும் சுவையுடையதாக கிணற்று நீர் இருக்கும் என்பதை நம் முன்னோர்கள் கூற கேட்டிருக்கின்றோம். விவசாயம் செய்வதற்கும் கிணற்று நீர் மிகவும் பயன்பட்டுள்ளது. தற்காலத்தில் ஆழ்துளை கிணறுகள் பெருகியதால் பழங்கால கிணறுகளின் பயன்பாடு குறைந்து கொண்டு வருகிறது. இருப்பினும் சங்கப்பாடல்களில் அமைந்துள்ள இடம் அமைக்கப்பட்டதற்கான காரணங்கள், நீரை வீணாக்காமல் பாதுகாத்த முறை ஆகியவற்றினை முல்லைத்திணைப் பாடல் ஒன்று எடுத்தியம்புவதை,

**“வறன்பொறுந்து குன்றத்து உச்சிக் கவாஅன்**
**வேட்டர் சீறூர் அகன்கண் கேணிப்**
**பயநீரைக்கு எடுத்த மணிநீர்ப் பத்தர்**
**புன்தலை மடப்பிடி கன்றொடு ஆர**
**வில் கடிந்து ஊட்டின”[208]**

இப்பாடல் வழி அறியலாம். இதன்மூலம் குன்றத்து பகுதியில் வேட்டுவர்களின் சிற்றூர் அமைந்திருக்கும் என்பதையும் அவ்வூரில் அகன்ற வாயையுடைய கிணறு அமைக்கப்பட்டு இருப்பதையும் அறிய முடிகின்றது. இக்கேணியானது ஆடுமாடுகள் நீர் அருந்துவதற்கு உதவின என்ற பொருளையும் தருவதால் ஆடு, மாடுகள் கேணியிலிருந்து ஆநிரைகள் அருந்துவதற்கு ஏற்றவாறு கேணிக்கு அருகே சிறுகுழி அமைத்துள்ளனர். அவ்வாறு அமைக்கப்பட்ட சிறுகுழியே ‘நீர்ப்பத்தர்’ என்று சுட்டப்பெற்றுள்ளது. கிணற்றில் நீர் ஊறியவுடன் அந்நீரை இறைத்து அருகிலுள்ள நீர்ப்பத்தரில் ஊற்றியுள்ளனர் என்பதை இதன்வழி புலனாகின்றது.

மேலும் பாலை நிலத்தில் பயணம் செய்யக்கூடிய வழிப்போக்கர்கள் தாகத்தால் வருந்தி சேற்றை அதாவது மணலை கிளைத்து உள்ளனர். அப்போது தோண்டும்போது நீரானது கிடைக்கப்பெற்றுள்ளது. இதனை அருந்தி தன் தாகத்தைத் தீர்த்துக் கொண்டனர் என்பதை,

**“ஆறு செல் வம்பலர் சேறுகிளைத்து உண்ட**
**சிறுபல் கேணி.........”[209]**

என்ற பாடல் சிறிய அளவுடைய கேணிகள் பல இருந்ததை எடுத்துரைக்கின்றது.

மேலும் கேணியில் பாசி படிந்திருக்கும் அதனை அவ்வாறே அருந்தாமல் அதனை நீக்கிவிட்டு அருந்தியுள்ளனர் என்பதை,

**“ஊர்உண் கேணிப் பகட்டு இலைப்பாசி**
**ஊர்உண் கேணி உண்துறைத் தொக்க”[210]**

என்ற இலக்கிய வரிகள் மொழிவதனை உணர முடிகின்றது. இதில் ‘ஊர் உண் கேணி’ என்பது மக்களின் பயன்பாட்டிற்காக மட்டுமே தோண்டப்பட்டதாகும். ஊர் உண் கேணி என்பது மருவி தற்காலத்தில் ஊருணி என்றழைக்கப்படுகின்றது. நாலடியாரின் பாடலும் கிணறு குடிநீருக்காக பயன்பட்டதை குறிப்பிடுகின்றது.

**“எறிநீர்ப் பெருங்கடல் எய்தியிருந்தும்**

**அறுநீர்ச் சிறுகிணற்று ஊறல் பார்த்து உண்பர்”**[211]

என்ற பாடல்வரிகளில் பெரிய அளவிற்கு கடல்நீர் கிடைத்தாலும் அதனை உண்ணாமல் வற்றும் தன்மையுடைய கிணற்று நீரையே மக்கள் தேடி அருந்துவர் என்பதை இதன்வழி அறியமுடிகின்றது.

கிணறுகளை ஆழிக்கிணறு, உறைக்கிணறு, ஊருணி, கட்டுக்கிணறு, பூட்டைக்கிணறு, கேணி என்றெல்லாம் பல வகைகளில் அதன் அமைப்பு அடிப்படையில் அழைக்கப்பட்டுள்ளது.

**ஆழிக்கிணறு** : கடலருகே தோண்டிக் கட்டிய கிணறு

**உறைக்கிணறு:** மணற்பாங்கான இடத்தில் தோண்டிச் சுடுமண் வளையமிட்ட கிணறு.

**ஊருணி:** மக்கள் பருகுநீர் உள்ள நீர்நிலை

**கட்டுக்கிணறு:** சரளை நிலத்தில் தோண்டி கல், செங்கற்களால் அகச்சுவர் கட்டிய கிணறு. சிந்து சமவெளி நாகரிகத்திலும் இவ்வகை கிணறு அமைந்திருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

**பூட்டைக்கிணறு** : கமலை நீர் பாய்ச்சும் அமையுள்ள கிணறு

**கேணி** : அகலமும் ஆழமும் உள்ள பெருங்கிணறு.

இவ்வாறு கேணி என்ற சொல்லாடலுக்குரிய கிணறு அதன் தோற்றத்தின் அடிப்படையில் பல பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளதையும் பருகும் நீராக ஊருணி நீரே பயன்பட்டு உள்ளது என்பதையும் விளக்கிக்காட்டப்பட்டுள்ளது. இன்றளவும் ஊருணியை சில ஊர்களில் மக்கள் பயன்படுத்தி வருகின்றனர் என்றால் அது மிகையாகாது.

### 2.3.8 காட்டாறு

மலையில் அதிகமாக மழைபொழிவதினால் அருவிகளில் நீர்வரத்து அதிகரித்து மலையிலிருந்து விரைவாக வீழ்நது காட்டுப்பகுதியில்

வேகமாக பாய்ந்து ஓடும் நீரோட்டமே காட்டாறு என்றழைக்கப்படுகின்றது. 'ஆண்டில் பெரும்பகுதி வறண்டு கிடந்து திடீர் வெள்ளத்தால் பெருக்கெடுத்து ஓடும் ஆறு' என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி விளக்கமளிக்கிறது. காட்டாறு என்பது கான்யாறு என்றப்பெயரிலும் இலக்கண இலக்கியங்களில் பதிவு செய்யப்பெற்றுள்ளது. முல்லை நிலத்தின் நீர்நிலையாக கான்யாற்றினையே நம்பியகப்பொருள் குறிப்பிடுகின்றது. காட்டாறு உருவாகும் தன்மையை,

**"சூருடை நனந்தலைச் சுனை நீர் மல்க**
**பெருவரை அருக்கத்து அருவி ஆர்ப்ப**
**கல் அலைந்து இழிதரும் கடுவரற் கான்யாற்றுக்**
**கழை மாய் நீத்தம் காடு அலை ஆர்ப்ப"**[212]

என்ற பாடல்வரிகள் விளக்குகின்றன. இதன்மூலம் சிறிய இலையையுடைய சந்தன மரத்தைக் கொண்ட வாடிய பெரிய காட்டில் அச்சத்தைக் கொண்ட சுனைநீர் நிறையவும், பெரிய மூங்கில்களை உடைய மலைப்பக்கத்தில் அருவிகள் ஆரவாரிக்கவும் கற்களைப் புரட்டிக் கொண்டு காட்டாறு வேகமாக ஓடி வரும் என்பதை உணரமுடிகின்றது.

மேலும் காட்டாறு குமிழிகள் சுழன்று வருவதையும் ஆழ்ந்த நீர் குறையாத மடுக்களை உடையது என்பதை,

**"…. கான்யாற்று நடவை**
**வழூஉம் மருங்கு உடைய"**[213]

என்ற வரிகளில் மலைபடுகடாம் காட்சிப்படுத்துவதை அறியமுடிகின்றது. காட்டாறு பாயும் தன்மை குறித்து புறநானூற்றுப் பாடல் ஒன்றும் பதிவு செய்து உள்ளது.

**"வானம் தண்துளி தலைஇ ஆனது**
**கல் பொருது இரங்கும் மல்லல் பேர் யாற்று"**[214]

என்ற பாடல் வரிகளில் மின்னலுடன் கூடிய குளிர்ந்த மழை பொழியும் போது கல்லை உருட்டி கொண்டு காட்டாறு பாய்ந்துள்ளது என்பதை உணரமுடிகின்றது. கடலலையைப் போல காட்டாறும் அலைகளோடு வரும் என்பதை,காட்டாறு வரும்போது நிலத்தை அரித்தல், பொருட்களைக் கடத்தல், கடத்திய பொருட்களைப் படியச் செய்தல் என்ற மூன்று தொழில்களைச் செய்கின்றது. இவ்வாறு செயல்படும் காட்டாறு அல்லது கான்யாறு மக்களால் உருவாக்கப்பட்டதன்று. இயற்கையால் உருவானதாகும். காட்டாறு 'உயிர்கரை' என்ற அடையாலும் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

### 2.3.9 சுனை

குறிஞ்சி நிலப்பகுதியில் மலைநீர் வழியும் இடத்தில் அமைந்துள்ள நீர் ஆதாரம் சுனையாகும். சுனை என்பதற்கு மெய்யப்பன் தமிழகராதி மலையூற்று 34 என்று குறிப்பிடுகின்றது.

**"மல்லல் அறைய மலிர்சுனை"**[215]

**"வளம்மிகுந்த பாறைகளின் இடையே அமைந்துள்ள தெளிந்த பெருகிய நீரினுடைய சுனை ஆகும் நன்கு வடிவமைக்கப்பட்ட வெளிமுகத்தின் வழியாக ஒரு குறிப்பிட்ட பகுதியில் இருந்து நிலப்பரப்பிற்கு வெளியே நிலத்தின் நீரானது பாய்வது சுனை எனப்படும். இவ்வாறு பாயும் நீரானது சிறிது சிறிதாக தொடர்ந்து பாயும் நீரோடையாகக் காணப்படும். ஒரு குறிப்பிட்ட பகுதியிலிருந்து நீர் பூரித்ததனால் வெளியாகும் நிலையிலுள்ள நீர்க்கசிவு (See) என்று கே.ஆர்.வேங்கடசாமி சுனை என்பதற்கு விளக்கமளிக்கிறார்"**[216]

சங்கப் பாடல்களில் சுனையானது கலம் எறும்புப் புற்று பறையின் கண் நீர் இறைக்கும் சால் குடுவை போன்ற பல்வேறு வடிவங்களில் காணப்படுவதாகக் குறிப்பிடப்படுகின்றன.

**"மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன**
**இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை"**[217]

கள்ளைப் பெய்து வைத்த நீலமணி போன்ற நிறமுடைய கலத்தைப் போல சிறிய வாய்ப்பகுதியை உடைய சுனை என்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. கள்ளைப் பெய்து வைக்கும் கலத்தில் கள்ளைச் சேமிக்கும் பகுதி அகலமாகவும், வாய்ப்பகுதி குறுகியும், உள்புறம் அகன்றும் அவ்வாறே காணப்பட்டுள்ளதை மேற்கண்ட பாடல்வழி அறிய முடிகின்றது. சுனைகள் குறுகிய வடிவத்தில் பாறையின் இடுக்குகளில் காணப்பட்டுள்ளன.அதனை,

**“எறும்பி அளையின் குறும்பல் சுனைய**

**உலைக்கல் அன்ன பாறை ஏறி”**[218]

பாறை மிகப் பரந்து காணப்பட்டுள்ளது. ஆதில் சிறிது சிறிதாகக் குறுகிய பல சுனைகள் காணப்பட்டுள்ளன. அவை காண்பதற்கு எறும்புப் புற்றுக்களைப் போல் காணப்பட்டதாக ஓதலாந்தையார் குறிப்பிடுகின்றார். மேலும் சுனைகள் பறையின் கண் போன்று இருந்ததாகவும் சங்கப் புலவர்கள் சுட்டுகின்றனர்.

**“பறைக் கண் அன்ன நிறைச்சுனை தோறும”**[219]

**“பறைக் கண் அன்ன நிறைச்சுனை பருகி”**[220]

என்ற பாடல் பரிகள் சுனையின் வடிவம் பறையின் கண்ணையொத்ததாக இருந்ததைக் குறிப்பிடுகின்றன. நீர் இறைக்கும் சால் போன்றதாக சுனையின் வடிவம் காணப்பட்டதாக மலைப்படுகடாம் பாடல் குறிப்பிடுகின்றது.

**“அகளத்து அன்ன நிறை சுனைப் புறவின்”**[221]

இப்பாடல் வரியில் அகளம் என்று குறிப்பிடுவது நீர் இறைக்கும் சால் ஆகும். இங்கு சால் என்பது கிணற்றிலுள்ள நீரை இறைப்பதற்குப் பயன்படும் கருவியாகும். இதன் வாய்ப்பகுதி அகன்றதாக காணப்படும். இந்தச் சாலினை ஒத்ததாக நீர் நிறைந்திருக்கும் சுனை விளங்கியதாக மேற்கண்ட பாடல் வரி எடுத்துரைக்கின்றது.

### 2.3.10 படு

மதுரைத்தமிழ் பேரகராதி படு என்ற சொல்லிற்கு குளம் என்று விளக்கமளிக்கிறது படு என்பது குளம் போன்ற நீர்நிலை ஆகும். இது மடு என்ற பெயராலும் அழைக்கப்பட்டுள்ளது. **மடு என்பது அருவி விழும் கிடங்கு[218] என்று ஞா.தேவநேயன் குறிப்பிடுகின்றார்**. சங்கப்பாடல்கள் சிலவற்றிலும் இந்தப் படு என்ற நீர்நிலையைப் பற்றிய செய்திகள் காணக்கிடக்கின்றன. புறநானூற்றுப் புலவர் விரியூர் நக்கனார் இந்நீர் நிலையின் நீர் தெளிவானதாக இருந்தது என்று குறிப்பிடுகின்றார்.

**"தெண்நீர்ப் படுவினும்"**[222]

என்ற பாடல் வரி மேற்கண்ட செய்தியை எடுத்துரைப்பதாய் அமைந்துள்ளது. நீர் நிலை பாலை நிலத்தைச் சார்ந்தது எனவும், பாலையில் நீரின்றி நீர்நிலைகள் வறண்டு காணப்படும் காலத்தில் பாலை நிலத்திலுள்ள ஆறலைக்கள்வர்கள் படு என்ற இந்நீர்நிலையின் நீரை மட்டுமே அருந்தியுள்ளதை

**"கல்லுடைப் படுவில் கலுழி தந்து**
**நிறை பெயல் அறியாக் குறைத்து ஊண் அல்லில்**
**துவர்செய் ஆடைச் செந் தொடை மறவர்**
**அதர் பார்த்து அல்கும் அஞ்சுவரு நெறியிடை"**[223]

என்று இந்நீர்நிலையின் தோற்றம் பாடலிலேயே விளக்கப்பட்டுள்ளது. அதாவது இந்நீர்நிலை பொலிவிழந்த நிலையில் கல்லையுடையதாக காணப்படும் அக்கல்லையுடைய குழிகளில் உள்ள நீர் கலுழி நீர் என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளது. கலுழி என்பது முன்னர் கூறப்பட்டது போல அதிகப்படியான நீர்வரத்தைக் கொண்ட வெள்ளத்தைக் குறிக்கிறது. எனவே, அதிகப்படியான வெள்ள நீர் வந்து தேங்கியதால் வறட்சிக்காலத்திலும் இந்நீர்நிலையில் சிறிதளவு நீர் காணப்படுகிறது. அருவி விழும் கிடங்கு என்று தேவநேயன் கூறும் கருத்து இவ்விடத்தில் பொருத்திப் பார்க்கக் கூடியதாக அமைந்துள்ளது. கல்லுடைப்படு என்று குறிப்பிடுவதன் வழி பாறைகள் நிறைந்த பகுதியில் பாறைகளுக்கு

மத்தியில் இந்நீர் நிலை அமைந்துள்ளதை அறிய முடிகின்றது. மேலும் மழைபெய்யும் காலங்களில் அருவிகளில் நீர்வரத்து அதிகரிக்கும் போது அருவி நீரால் இந்நீர்நிலைகள் நிரம்பியிருக்க வேண்டும். இதன் வழி படு எனும் இந்நீர்நிலை குறிஞ்சி நில நீர் நிலை என்பதாகக் கருதலாம்.

**“கல்லறுத்து இயற்றிய வல்உவர்ப் படுவில”[224]**

என்ற அகநானூற்றுப்பாடல் கருங்கல்லைச் சமச்சீரான வடிவில் அறுத்தெடுத்து குழியமைத்ததாகக் குறிப்பிடுகின்றது. இதன்வழி அருவி நீரைத் தேக்கி வைக்க பாறையினை உடைய வன் நிலத்தை இடித்து அதனைக் குழியாக்கி நீரைச் சேமித்த குறிஞ்சிநில மக்களின் நீர்த்தேக்கத் தொழில் நுட்பம் வியப்படையக் கூடிய வகையில் அமைகிறது.

### 2.3.11 கூவல்

கூவல் என்பது சிறுகிணற்றினைக் குறிக்கிறது. காட்டிலுள்ள பாறைகள் நிறைந்த இடத்தில் அமைந்துள்ள சிறுகிணறு தான் கூவல் ஆகும். கூவல் என்பதனை கூவல் எனப்பிரித்துப் பொருள் பார்க்கும் போது கூ என்பதற்கு கதிரைவேற்பிள்ளையின் தமிழ்ச்சொல் அகராதி பூமி என்று விளக்கமளிக்கிறது. வல் என்றால் வல்லிய, வலிந்த எனப் பொருள்படும். வன்மையான பூமியைத் தோண்டி செய்யப்பட்ட நீர்நிலை ஆதலின் இது கூவல் என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளது.

கூவல் முல்லை நில நீர் நிலையாகும் செடி, கொடி மரங்கள் உள்ள இடங்களில் இருக்கும் நீர் உட்புகும் இடம் அதிகமாக இருக்கும். மரங்கள் இல்லாத இடத்தை விட மரங்கள் உள்ள பகுதியில் நீர் உட்புகும் அளவு மடங்காக இருக்கும் என்று கண்டுள்ளனர். அதிலும் செத்தை சருகுகள் உதிர்ந்து கிடந்தால் அவை மக்கி பூசுணங்களால் இணைக்கப்பட்டு மண்ணுடன் இணைந்த இம்மிகளாக நிலத்தின் மேல் இருக்கும். இவை வழிந்தோடும் நீரோட்டத்தை நன்கு கட்டுப்படுத்தி நீரை உட்புகச் செய்யும். செத்தை சருகு இல்லாத இடத்தை விட செத்தை சருகுகள் சிதறிக் கிடக்கும் இடங்களில் மூன்று மடங்கு நீர் உட்புகும்

எனவும் கண்டுள்ளனர். மேலும் மழைப்பொழியும் போது முதலில் பெய்யும் மழை நீரையெல்லாம் இச்செத்தை சருகுகள் உறிஞ்சிக்கொண்டு நிதானமாக கீழ்ப்பகுதிக்குக் கசிந்திடும் என்று பி.எஸ். மணி கூறுகின்றார். இவ்வாறு கானகம் நிலத்தடி நீர்மட்டம் மிகுந்ததாகக் காணப்பட்டுள்ளது. எனவே நிலத்தைச் சிறிதளவு தோண்டினாலே ஊற்று தென்பட்டு விடும். இதுதான் கூவல் என்ற பெயரால் அழைக்கப்பட்டது. வன்நிலத்தைத் தோண்டி செய்யப்பட்ட நீர்நிலை கூவல் என்பதை சங்கப்பாடல்கள் வழியும் அறிய முடிகின்றது.

**"சுரன் முதல் வருந்திய வருத்தம் பைபயப்**

**பாஅர் மலி சிறு கூவலின் தணியும"**[225]

தலைவன் இல்லற வாழ்க்கைக்காக பொருளீட்ட வேண்டி பாலை நிலத்தைக் கடந்துச் செல்கிறான். அங்கு தாகம் தணிக்கப் பாறைகள் சூழந்திருக்கும் சிறு கூவலிலிருந்து நீரைப் பெற்றதாக அறிய முடிகின்றது.

**"வன்புலம் துமியப் போகி கொங்கர்**

**படு மணி ஆயம் நீர்க்கு நிமிர்ந்து செல்லும"**[226]

என்ற அகநானூற்றுப் பாடலும் வன்புல நிலத்தைத் தோண்டி செயய் ப்பட்ட கூவலில் ஆநிரைகள் நீர் அருந்தச் செல்லும் என்பதன் வழி பாறை நிலத்தையுடைத்துச் செய்யப்பட்டதே கூவல் என்பது புலனாகிறது.

கோவலர்கள் தான் கூவலை முதன்முதலில் தோண்டியவர்கள் ஆவர். மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்டு வரும் கோவலர்கள் ஆடுமாடுகளை நீண்ட தூரங்களுக்கு ஓட்டிச் செல்லும் போது ஆநிரைகள் தாகத்தால் வருந்தும். ஆதனால் அவைகளின் தாகத்தைத் தணிக்க அமைக்கப்பட்டதே இந்தக் கூவல் ஆகும்.

கோவலர்கள் கூவல் தோண்டுவதற்கு முதலில் தம் கையிலுள்ள கோலையே பயன்படுத்தியுள்ளனர். இதனை சங்கப்பாடலொன்று எடுத்துரைக்கின்றது.

**“கோடை முகத்தலின்**

**நீர்க்குஇயங்கு இனநிரைப் பின்றை வார்கோல்”[227]**

நீர்ப்பருகுவதற்குச் செல்லும் பசுக்கூட்டத்திற்குப் பின்னே வரும் நீண்ட கோலுடையவர்கள் ஆயர்கள் என்று இப்பாடல் சுட்டுகின்றது.

**“கல்லாக் கோவலர் கோலின் தோண்டிய**

**ஆன் நீர்ப் பத்தல் யானை வௌவும”[228]**

என்ற ஐங்குநுறூற்றுப்பாடல் கோவலர்கள் தம் நிரைகள் உண்டற்பொருட்டு நீர் பெற பள்ளம் தோண்டினர். நிலத்தை இடித்து குழியமைத்து நீர் பெற தம் கையிலுள்ள கோலால் அரிதின் முயன்று நிலத்தைத் தோண்டியதாகவும், அதிலிருந்து பெற்ற நீரை ஆநிரைகள் அருந்த விடாமல் யானைக்கூட்டங்கள் கவர்ந்து சென்றதாகவும் குறிப்பிடுகின்றது. கல்லாக் கோவலர் என்று குறிப்பிட்டது நிலத்தைக் குழித்தால் நீர் கிடைக்கும் என்பதை கோவலர்களுக்கு யாரும் கற்றுக் கொடுக்கவில்லை குலவித்தை கல்லாமற்பாகம் படும் என்பதற்கேற்ப நிலத்தைக் குழியமைத்து நீர் பெறும் முறை கோவலர்களுக்கு இயல்பிலேயே அறறிந்த ஒன்றாக இருந்துள்ளது.

### 2.3.12 இலஞ்சி

இலஞ்சி என்ற நீர்நிலை மருதநில நீர்நிலையாகும். குளம் போன்ற அமைப்பைக் கொண்டதாகவே இலஞ்சி இருந்திருத்தல் வேண்டும் இலஞ்சி என்பதற்கு வீரமாமுனிவரின் சதுரகராதி ஏரி, குளம் என்று விளக்கமளிக்கிறது.

**“மள்ளர் அன்ன தடங் கோட்டு எருமை**

**மகளிர் அன்ன துணையொடு வதியும்**

**நிழல் முதில் இலஞ்சிப் பழனத் ததுவே”[229]**

மேற்கண்ட பாடலில் இலஞ்சி எனும் நீர்நிலை நிழல்முதிர் இலஞ்சி என்று அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. இலஞ்சியின் கரைகளில் நன்கு நிழல் தரக்கூடிய மரங்கள் இருந்துள்ளது. அதுபோல மிகப் பழமையான

நீர்நிலையாகவும் இலஞ்சி சுட்டப்பெறுகின்றது. நிழல்தரும் மரங்கள் நிறைந்ததால் ஆண்எருமைகளும் பெண்எருமைகளும், தங்கக்கூடிய இடமாக அமைந்துள்ளது.

இலஞ்சியில் மலர்களும், மீன்களும் நிறைந்து காணப்பட்டுள்ளன.

**“துணிநீர் இலஞ்சி கொண்ட பெரு மீன”**[230]

**“குண்டுநீர் இலஞ்சி கெண்டைக் கதூஉம”**[231]

**“முதுநீர் இலஞ்சிப் பூத்த குவளை”**[232]

மீன்களும், மலர்களும் நிறைந்த இந்நீர்நிலை முதுநீர் இலஞ்சி என்று அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. நாட்பட்ட பழமையான நீர்நிலை என்பதை மேற்கண்ட அடையின் மூலம் அறியலாம் இலஞ்சி ஆழம் மிக்கதாகவும், தெளிந்த நீரை உடையதாகவும் இருந்துள்ளது.

### 2.3.13 அகழி

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு பாடல்களில் இடம்பெறும் நீர் நிலைகளுள் அகழியும் ஒன்றாகும். அகழி என்பதற்குக் கழகத்தமிழ் அகராதி **மதிசூழ்கிடங்கு** என்று விளக்கமளிக்கிறது. மன்னர்கள் தங்களின் அரண்மனைப ˙பாதுகாப்பிற்காக அரண்மனையைச் சுற்றிலும் மதில் அமைத்து அவற்றருகில் அகழிகளையும் அமைத்துள்ளனர். இது பாதுகாப்பிற்காக அமைக்கப்பட்ட செயற்கை நீர்நிலையாகும்.

**“தேர் வண் சோழர் குடந்தைவாயில்**

**மாரி அம் கிடங்கின் ஈரியமலர்ந்த”**[233]

சோழ மன்னர்க்குரிய குடவாயில் எனும் ஊரில் மழை பெய்ததால் அகழி நிரம்பிக் காணப்படுவதாகக் குறிப்பிட்டுள்ளது. எனவே மன்னர்கள் அகழி அமைக்கும் போது இயல்பாக மழைநீர் வந்து தேங்கக்கூடிய அளவில் ஆழமானதாக அமைத்துள்ளனர். இந்த அகழி அமைக்கப்படும் விதம் குறித்து கபிலர் மற்றொரு பாடலில் குறிப்பிடுகின்றார்.

**பார் உடைத்த குண்டு அகழி**

**நீர் அழுவ நிவப்புக் குறித்து**[234]

பாறை நிலத்தைக் குந்தாலியால் இடித்துக் குழியாக அமைந்த நீர்நிலை தான் அகழி என்பதும், அது மிகவும் ஆழமாக இருந்ததையும் குறிப்பிடுகின்றார்.

**“கல் இடித்து இயற்றிய இட்டு வாய்க் கிடங்கின்**

**நல் எயில் உழந்த செல்வர்த் தம்மின”**[235]

மழைப்பொழிந்தால் அந்த நீர் அகழிக்கு வரக்கூடிய வகையில் வாய்க்கால்கள் அமைத்துள்ளனர். அகழியானது கல் தரையைப் பிளந்து செய்யப்பட்டதாகக் கூறப்படுகின்றது. அகழி மீது வீரர்கள் அமர்ந்து காவல் புரிந்ததாகவும் மேற்கண்ட பாடல் சுட்டுகின்றது. அகழியின் மதில் மேல் வீரர்கள் அமர்ந்து எதிரி நாட்டு வீரர்கள் யாரேனும் உள்நுழைந்து விடாமல் பாதுகாத்துள்ளனர். இதனை புறப்பொருள்வெண்பாமாலையின் ஒரு நூற்பாவும் குறிப்பிடுகினற்து.

**“அடங்காதார் மிடல் சாயக்**

**கிடங்கிடைப் போர்மலைந்தன்று”**[236]

உழிஞை மலரைச் சூடியவர்கள், நொச்சி மலர்களைச் சூடியவர்களுடன் அகழியிடத்தே போர் செய்ததாக மேற்கண்ட நூற்பா குறிப்பிடுகின்றது. இந்த அகழியில் பாதுகாப்பிற்காக முதலைகளையும் வளர்த்துள்ளனர். அகழியில் முதலையிருந்ததை,

**“கராஅம் கலித்த குண்டு கண் அகழி”**[237]

என மறோக்கத்து நப்பசலையார் பாடல் எடுத்துரைக்கின்றது. முதலை வாழும் அளவு அகழிகள் ஆழம் மிக்கதாக இருந்துள்ளது. அகழி மன்னன் பாதுகாப்பிற்காக அமைக்கப்பட்ட செயற்கை நீர்நிலைத்தேக்க மாயினும் மறைமுகமாக மழைநீரைச் சேமித்து அதன் மூலம் நிலத்தடி நீர்வளத்தினை மேம்படுத்தும் நீர் மேலாண்மை நுட்பமும் புலப்படுகின்றது.

## தொகுப்புரை

இவ்வியலில் சங்க இலக்கியத்தில் காணப்படும் நிலத்தின் தன்மை நிலப்பாகுப்பாடு , நீரின் தோற்றம் , மழையின் வகைகள் , ஆறுகள், நீா் ஆதாரங்கள் மற்றும் கடல் வளமும் ஆராயப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1.மது-470

2.ஐங் -320

3.கலி-106

4.ப.ப-17

5.அகம்-253

6.பரி-5-12

7.புறம்-2

8.குறள்-5

9.நற் - 6-7

10.சிலம்பு-1:7-9

11..பரி - 7-40-41

12.புறம்-51

13.அகம்-358-12

14.அகம்-202-1-3

15.குறிஞ்சி-54-55

16.திரு .- 254

17.குறிஞ் 57

18.மலை -212

19.அகம்-18

20.பரி -11-114

21.அகம்-100

22.நற்றி-159

23.ப.ப- 21

24.பொரு-240

25.மது-1-2

26.நற்-289

27.பெரு-285

28.திவாகரம்-1086

29.நற்- 2-9

30.நற்-381

31.மது-115

32.மலை-146

33.மலை-514

34.நற்-354

35.அகம்-10

36.திரு -116

37.சிறு-105

38.நெடு-75

39.ப.பா-126-131

40.அகம்-349

41.புறம்- 368-1

42.ப.ப-84-21-24

43.நற்-154-1-4

44.திரு-7-9

45.அகம்-43

46.அகம்-134

47.நற்-89

48.ஐங்-220

49.அகம்-271

50.நற்-229

51.ஐங்-252

52.அகம்-345

53.அகம்-213

54.அகம்-305

55.மது-265

56.புறம்-353

57.அகம்-344

58.புறம்- 161

59.நற்-62

60.நற்-275

61.ஐங் 371

62.குறு-220

63.குறு-261

64.நற்-76

65.நற்-68

66.நற்-17

67.ஐங்-328

68.குறு-144

69.அகம்-95 125 211 282 334

70.பிங்கலநிகண்டு-2561

71.அகம்-211 304 314

72.ஐங்- 437

73.ப.ப -50

74.பெரு-33 நற்-245-4 கு-250 கலி 7319 ப.ப-90-16 குறு-334 ஐங் - 159 குறு-49-2 குறு 299 ப.ப-5114 நற்-219-8 குறு- 311-1 கலி- 76-7

75.ப.ப 17

76.குறு-340

77.புறம் - 263

78.குறு-347

79.குறு-340

80.புறம்-3-2

81.நற்-130

82.திரு-13

83.பெரும்-409-10

84.திரு-7-8

85.நற்-347-1-2-5

86.குறள்-17

87.சங்க இலக்கியத்தில் நெய்தல் ப.எ 4

88.புறம்-18-1-2

89.அகம்-105-4

90.கலி-106-18-19

91.கலி-134-2

92.ப.ப-88-3

93.புறம்- 18-1-2

94.கலி-144-17

95.ப.ப -45-19-20

96.கலி-424-425

97.நற்-67-6-8

98.ப.ப - 5

99.நற்-207-10-12

100.நற்-299-7-9

101.நற்-35

102.அகம்-270

103.நற்-159-10

104.பெரும்-457

105.குறு- 340-5-6

106.நற்-117-1-2

107. ஐங்-155- 4-5

108.ச.இ.க ப.-12

109.அகம்-60

110.நற்-23-5-6

111. அகம்- 201

112.ஐங்-185-3

113.ஐங்-105-2-4

114.ஐங்-110

115.ஐங்-144

116.மதுரை-424-425

117.நற்-35-1-7

118.அகம்-10

119.மதுரை-315-317

120.தொல்.அகம்-37

121.புறம்-61

122.ஐங்-102

123.ஐங்-113

124.ஐங்-121

125.ஐங்-193

126.ஐங்-141

127.குறள்-737

128.பாரதியாரின் தேசியகீதங்கள்-20

129.குறள்-737

130.குறள்- 742

131.அகராதி-456

132.அகம்-253-19-20

133.அகம்-177

134.பொருநை வளம் - ப 20

135.கம்பராமாயணம்-நாடவிட்டபடலம்-31

136முக்கூடற்பள்ளு

137.மீனாட்சிஅம்மை பிள்ளைத்தமிழ்-88

138.புறம்-11-5-6

139.அகம்-93-20-24

140.புறம்-387-33-36

141.அகம்-92

142.மணி-10-11-12

143.அகம்76-11-12

144.ப.ப-7-8

145.பாரதிதாசன் கவிதைகள் - ப.எ 325

146.கு.சோ .பி.த -15

147.பெ.பு-1022

148.வி.சோ.உ 87

149.புறம்-35-6-10

150.புறம் -393-23-24

151.ப.பா- 1-8

152.ப.பா 10-102-109

153.அகம் -10-11

154.அகம்- 341-4-5

155.அகம்-6-6-7

156.புறம்-74-75

157.புறம்-68-10

158.ப.ப-86-9-13

159.நற்-141-12-13

160.குறு - 75

161.பெருங்கதை-உஞ்சை 58-42

162.அகம்-265

163.புறம்-9

164.கலி-104

165.சிலம்பு கானல் வரி 18-22

166.பரி-15-35-45

167.பா-15-17

168.பரி-15-21-23

169.பரி-11-90

170.சிலம்பு-168-170 புறஞ்சேரியிறுத்த காதை

171.மது-544

172.பரி-7-1-10

173.பரி-12-7-8

174.பரி-1-11

175.பரி-7-8-9

176.பரி 10

177.பரி-7:1-10

178.அகம்.36-9-10

179.கலித். 30-16

180.கலித்.98-10

181.அகம்.256:-10-11

182.கலித்.98-31

183.அகம்.296-5

184.பரி7-40-42

185.பரி11:15. பரி.11-106 .பரி.12:10 பரி.17:44 பரி.20:97

186.புறம்-71-10-11

187.தமிழக ஆட்சி -இராசமாணிக்கனார்-11-12

188.புறம்-6

189.சிலம்பு-235

190.புறம்-67

191.ப.ப-123

192.அகம்-35-16-17

193.அ.கு.பாலசுந்தரனார் திராவிடநாடு முதல்பாகம் ப.38

194.பதி-28-5-10

195.மலை-476

196.மலை-555

197.நற்-131-8

198.மதுரை.238-241

199.அகம்-241

200.நற்-32

201.ஐங்-208-224-2

202.அகம்-82

203.அகம்.42

204.மலை.220

205.அகம்-232

206.குறள்-298

207.குறள்-396

208.அகம்-210

209.அகம்-137

210.புறம்-399

211.நாலடி -275

212.நற்-7

213.மலை.214-215

214.புறம்.192

215.அகம்-308-10

216.நிலநீர் அறிவியல்- ப.எ 90

217.குறு 193-3-1-2

218.குறு -12-1-2

219.அகம்-324-6

220.அகம்-178-3

221.மலை104

222.புறம்-332-7

223.நற்-33-4-7

224.புறம்-331-1-2

225.நற்-41-3-4

226.அகம்-79-5-6

227.அகம்-225-6-7

228.ஐங்-304-5-2

229.ஐங்-94-1-3

230.அகம்-236-2

231-குறுந்-91-2

232.நற்-160-9

233.நற்-379-7-8

234.புறம்-14-5-6

235.ம.கா -730

236.புறம்-166-17

237.புறம்-167-37-7

# இயல்-3

## நீர் வறட்சியும், வறட்சி மேலாண்மையும்

இயற்கை மனித வாழ்விற்குத் தேவையான வளங்கள் அனைத்தையும் வழங்குகின்றது இவ்வியற்கையானது சில வேளைகளில் குறிப்பிட்ட வளர்ச்சி நிலையையோ அல்லது மாற்றத்தினையோ அடைகின்றது. இம்மாற்றத்தின் காரணமாக இயற்கையின் சமச்சீர்மையும் மாற்றம் அடைய நேரிடுகின்றது. இத்தகு காலகட்டத்தில் உயிரினங்களின் வாழ்வும் மாற்றத்தினை அடைகின்றது. சங்கஇலக்கியங்களின் வழி வறட்சியையும் , மக்கள் வறட்சியை மேலாண்மை செய்தமை குறித்தும் விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

### 3.1 வறட்சி குறித்த சொல்லாடல்கள்

வறட்சி என்ற சொல்லிலே வறண்ட நிலைக் காணப்படுகின்றது. **“வறட்சி என்பது ஒரு வறண்ட காலக் கட்டத்தைக் குறிக்கும். நீண்ட காலத்திற்கு மழை வீழ்ச்சி (பொழிவு) கிடைக்காமையால் ஏற்படுகின்ற சூழலை வறட்சி என்று எளிமையாக வரைவிலக்கணப்படுத்தலாம்”**[1] என மேற்கூறிய கருத்து தெளிவுபடுத்துகின்றது. இதன் வறட்சி என்பது நீர் வறண்ட நிலையில் காணப்படுவதையே குறிக்கின்றது.

மேலும் **“அந்தந்த காலநிலைக்குரிய சராசரி மழைவீழ்ச்சியின் 75% சதவீதத்திற்கும் குறைவாக மழை கிடைக்கும் போது அப்பிரதேசத்தில் வறட்சி நிலவுவதாகக் கூறப்படும். பல காலமாக மழை இல்லாத வறண்ட மற்றும் தண்ணீர் பற்றாக்குறை உள்ள நிலப்பகுதி வறட்சியில் பாதிக்கப்பட்டது எனப்படும். இங்கு வேளாண்மை மிகவும் குறைந்த அளவிலேயே நடைபெறும். வறட்சி காணப்படும் இடங்களில் வறுமையும் பெரிய அளவில் காணப்படும்”**[2] என வறட்சி பற்றி மேலும் விரிவுபடுத்துகின்றது.

மேகங்கள் மழையைப் பொழிவதால் நீர் கிடைக்கின்றது. பூமியின் மீது விழுகின்ற மழைநீரானது பற்பல கால்வாய்களாகப் பெருகி ஆறுகளில்

ஒன்றாக கலக்கிறது. ஆறுகள் இல்லாத இடங்களில் ஏரிகள் குளங்கள் அணைகளும் நீர்த்தேவையைப் பூர்த்தி செய்கின்றன. மழைநீரானது நிலத்தின் வழி ஊடுவுருவிச் சென்று தங்குகிறது. அங்குத் தங்கும் நீரானது கிணறு, சுனைகள் மூலம் நிலத்தடி நீராகக் கிடைக்கின்றது. இங்ஙனம் நீருக்கான அனைத்து வழிகளிலும் தடை ஏற்பட்டு நீரில்லா சூழலையே வறட்சி என்று குறிப்பிடுவர்.

மனிதனையும், நாட்டினையும் செழுமைப்படுத்துவது நீரே, உலகில் உள்ள அனைத்து உயிர்களும் உயிர் வாழ நீர் மிகவும் இன்றியமையாதது. **“உழவெனப்படுவது நிலத்தோடு நீரே”** என்கிறது புறநானூறு.

நீரானது மழை, அருவி, ஆறு, கடல் என்ற பல வடிவங்களைக் கொண்டது. இவை ஒவ்வொன்றுமே உயிர்களுக்கு உதவுகின்றன. இயற்கை மனிதனுக்குப் பல செல்வங்களை வாரி கொடுக்கிறது. ஆனாலும் மனிதன் அதைச் சுருட்டத் தொடங்குகிறான். காடுகளை அழிக்கிறான். அதனால் மழைவளம் குறைந்து வறட்சி ஏற்படுகிறது.

நீர் வறட்சி என்பது ஓர் இடத்தில் ஒரு பருவத்தில் பொழியும் மழையின் அளவானது குறைந்து விடுவதாகும். இத்தகைய வறட்சியால் உழவு பொருளாதாரம், மக்களின் வாழ்க்கைமுறை, சுற்றுப்புறச்சூழல் போன்றவை பெரிதும் பாதிப்புக்கு உள்ளாகின்றன.

**வறட்சி என்பதற்கு நீர்ப்பசையறுக்கை, நீரற்றுப்போதல், உடலை மெலியச் செய்யும் நோய், நீரில்லாமை, கோடை , பஞ்சம், வறண்டபூமி என்று பல பொருள்களை** குறிப்பிடுகின்றது.

சங்க இலக்கியத்தில் வறன், வறுமை, வறிய, வறும், பெருவறன் குன்றுவறன் போன்ற சொல்லாட்சிகள் பயன்படுத்தப்படுகின்றன. இவையாவும் வறட்சி, வறுமைநிலை, வறண்டநிலம், பஞ்சம், பொருள் இல்லாநிலை, வெறுமை நிலை முதலானப் பொருள்களை எடுத்து உரைக்கின்றன.

**“நாடு வறம் கூர”**[3]

**“வறனுற்று ஆர”**[4]

**“பெருவறன் ஆகிய பண்புஇல் காலை”**[5]

மேற்கண்ட பாடல்களில் வறன் வறம் என்ற சொற்கள் பஞ்சம், வெம்மை நிலையை உணர்த்துகின்றன.

**“விறலியர் வறுங்கை”**[6]

**“வறுங்கை வம்பலர்”**[7]

**“உணவுஅல் வறங்கூட்டு”**[8]

வளமையில்லாத இல்லா சூழலையும் பொருள் இல்லாத பாணர் மற்றும் விறலியர் நிலையையும் சுட்டுகின்றது

சங்கப்பாக்களில் பெரும்பாலான இடங்களில் வறட்சி, வறுமை இரண்டினையும் ஒன்றாகக் கருதக்கூடிய நிலையைக் காணமுடிகின்றது. மழைவளம் இன்றேல் உழவுத்தொழில் சிறக்காது .அதனால் மக்களின் வாழ்க்கை வளம் குன்றி வறுமை நிலைக்குத் தள்ளப்படுவர் என்ற காரணத்தினால் வறுமையையும் வறட்சியையும் ஒன்றெனக் கருதியுள்ளனர்.

சொல்லிலும் கலையிலும் புலமைப்பெற்ற புலவர்கள் பாணர் விறலியர் பொருநர் போன்றோர் வறுமையுற்று மன்னனிடம் பரிசில் பெற விழைந்தக் காட்சிகளைக் காணமுடிகின்றது. இதனையே ஆற்றுப்படை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

வான்சிறப்பு அதிகாரத்தில் மழைப்பெய்து நீர்வளம் மிகுந்தால் வாழ்க்கை வளமாகிறது. மழைப்பொய்து நீர்வளம் குன்றினால் வறட்சியும், வறுமையும் தோன்றி வாழ்க்கை வளமிழக்கிறது என்பதனை

**“விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து**

**உண்ணின்று உடற்றும் பசி”**[9]

வான்மழை பொய்ப்பின் கடல் சூழ்ந்த உலகத்தினுள் வருத்தும் மழையில்லாவிடில் விளைவு இல்லை. அதனால் பஞ்சம் உண்டாகும் என்கிறார்.

வாழ வைக்கின்ற நிலத்தை வசையின்றி வாழ வைக்க வேண்டும். நிலம் எவ்வாறு இருக்கிறதோ அதே தன்மைக்கேற்ப நீரும் மாறிப் போகும் என்பது வள்ளுவர் கருத்தாகும்.

**"நிலத்து இயல்பால் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்பது ஆகும் அறிவு"**[10]

நீரானாது எந்த நிலத்துடன் சேர்கின்றதோ அந்த நிலத்தின் தன்மையைப் பெற்றுத் தன் இயல்பிலிருந்து முற்றிலும் மாறிவிடும். அதுபோல மக்களும் அவர்கள் எந்த இனத்தாருடன் சேர்கின்றனரோ, அந்த இனத்தாரின் தன்மைக்கு ஏற்ற அறிவே ஏற்படும் என்பது இதன் கருத்தாகும்.

நீருக்கு நிறமும், சுவையும் இயல்பாக இல்லை. எனினும் செம்மண் நிலத்தில் விழுந்த நீர் செந்நிறமாகவும், கரிசல்மண் நிலத்தில் விழுந்த நீர் சற்று கருமை நிறமாகவும் மாறிவிடும் நீரானது அந்த மண்ணின் சுவைக்கும் மணத்திற்கும் ஏற்ப மாறிவிடும் தன்மையது என்பதை அறிய முடிகின்றது.

## 3.2 வறட்சி நிலைகள்

வறட்சி அந்நிலப்பகுதியில் நிலவும் பாதிப்பு, கால அளவுகளின் அடிப்படையில் நான்கு நிலைகளைக் கொண்டதாக வகுக்கப்படும். அவை,

**(1) வானிலைசார் வறட்சி**

**(2) விவசாய வறட்சி**

**(3) நீரியல்சார் வறட்சி**

**(4) சமூகப் பொருளாதார வறட்சி**

### 1. வானிலைசார் வறட்சி

வளமையான மழைப்பொழிவு காலத்திலும் குறைவான மழைப்பொழிவின் ஆரம்ப நிலையாகும். இந்நிலையில் மழைக்குறைந்த சூழலை உணரக்கூடியதாக இருக்கும்.

**2.வேளாண்மை வறட்சி**

மண்ணில் உள்ள நீரின் அளவு குறைந்து பயிர் செய்ய முடியாதநிலை தோன்றுவது ஆகும்.

**3.நீரியல்சார் வறட்சி**

வறட்சியான காலநிலை தொடர்ந்து இருப்பதனால் நீர்நிலைகளான ஆறுகள், குளங்கள், ஓடைகள், வாவிகள் முதலானவை வறண்டு போகும் நிலையாகும்.

**4.சமூகப் பொருளாதார வறட்சி**

தொடர்வறட்சி காரணமாக உற்பத்தி பாதிக்கப்பட்டு வறுமை முதலான நிலை தோன்றுதல்.

இங்ஙனம் எல்லா செயல்களும் நீரினை மையப்படுத்தியே அமைகின்றது என்பது புலனாகின்றது.

**3.3 வறட்சியின் வகைகள்**

வறட்சியை அறிஞர்கள் இரண்டு வகையாகப் பாகுபடுத்திக் காட்டுகின்றனர். அதுவும் நீரையே குறிக்கின்றது.

**(1) மண் வறட்சி**

**(2) இயல் மண் வறட்சி**

**1.மண் வறட்சி**

- இது பெரும்பாலும் வளிமண்டல வறட்சிக்கு வழி வகுக்கிறது. முக்கியமாக மண்ணின் காரணமாக ஏற்படுகிறது.
- இரண்டும் இணைந்தால் அது பேரழிவாக மாறுகிறது.
- இல்லையெனில் மண் வறட்சியில் தாவரங்களின் போராட்டம் வளிமண்டல வறட்சியை விட தீவிரமானது.

மேலும் மண்ணில் நீர்ப்பற்றாக்குறை இயற்பியலில் அல்லது இயக்கவியலில் இயற்கையாக இருக்கலாம்.

2. **இயல் மண் வளர்ச்சி**

மழை பொய்த்தால் பயிர்கள் வளராமல் அதனால் உணவு தானியங்களும், காய்கறிகளும் விளையாமல் போவதால் ஏற்படக் கூடிய உணவு கிடைக்காத நிலை. ஆனால் பிற வளமான பகுதிகளில் இருந்து கொண்டு வரப்பட்ட உணவுப் பண்டங்களை பணம் கொடுத்து வாங்கி உயிர் வாழலாம்.

பஞ்சம் என்பது மழை பெய்து தானியங்கள் விளையாததோடு பணம் கொடுத்தாலும் உணவு கிடைக்காத நிலையாகும் என்பது புலப்படுகின்றது.

சங்கப்பாடல்கள் நீர் வறட்சியைப் பற்றியும் வறட்சியால் மக்கள் அடையும் துன்பங்களையும் எடுத்துக்காட்டுகின்றன. வறட்சியின் தன்மை, வறட்சி உருவான விதம், வறட்சிக்கான காரணிகள், காலநிலை இவற்றைக் கருத்தில் கொண்டு நீர் வறட்சியை இயற்கை வறட்சி , செயற்கை வறட்சி என இருப் பிரிவுகளாகப் பிரித்து அறியலாம்.

**1.இயற்கை வறட்சி**

**1. பருவக்கால வறட்சி 2.கடற்கோள் 3.ஊழிக்காலம்**

- மழைநீரின்மை
- மண்ணின் நீர்ப்பிடிப்புத் தன்மையின்மை
- நிலத்தடிநீரின்மை
- நீர்நிலைகளின்மை
- பயிர் உற்பத்தியின்மை

**2.செயற்கை வறட்சி**

**1. போர்க்கால வறட்சி 2. காடுகள் அழித்தல்**

- நீர்நிலைகள் மாசுபடுதல்
- நீர்நிலைகள் அழித்தல்

### 3.3.1 இயற்கை வறட்சி

இயற்கை என்பது மலைகள், காடுகள், தாவரங்கள், கடல்கள் ஆறுகள், வளங்கள், ஐம்பூதங்கள் அனைத்தும் இயற்கையில் அடங்கும்.

இயற்கை மனிதனுக்கும் பலவகை உயிரினங்களுக்கும் பேரின்பத்தை நல்கக் கூடியதாகும். சில நேரங்களில் இயற்கை எண்ண இயலாத வகையில் பேரிடர்களை உருவாக்கிவிடுகிறது. அவை கடும்புயல், சுனாமி, பூகம்பம் வெள்ளம் போன்றன. அத்தகைய சீற்றங்களினால் உலகத்தின் நிலைமாறுகின்றது. அவற்றுள் ஒன்று இயற்கை வறட்சி.

இயற்கையில் தோன்றும் கால மாற்றங்களால் தற்காலிகமாக உருவாகக்கூடிய இடர் வறட்சியாகும். இவ்வறட்சியால் சுற்றுச்சூழல், பல்லுயிர் பெருக்கம், உணவு உற்பத்தி, நாட்டின் வளம், வளர்ச்சி நிலை போன்றவை பாதிப்புக்குள்ளாகின்றது.

**“இயற்கையாகப் பெய்யும் மழை பொய்த்துப் போவதால் நாட்டில் உழவுக்கும், குடிநீர்த் தேவைக்கும் தண்ணீர் வேண்டிய அளவு கிடைக்காமல் வறட்சி ஏற்படும். பல காலம் மழையில்லாமல் உணவு உற்பத்தி மிகக்குறைந்து ஒரு பகுதியிலோ, அல்லது நாடு முழுவதிலுமோ உள்ள மக்கள் பசியும், பட்டினியும் அடைந்து துன்புறும் காலம் பஞ்சகாலம் எனப்படும். உயிர்வாழ உணவும் கிடைக்காத நிலையே பஞ்சம் என்கிறது[11].**

**உலகில் ஏதோ ஒரு சில பகுதிகளைத் தவிர்த்து ஏனைய பகுதிகளில் எல்லாம் போதிய மழை பெய்து உழவுக்கும் குடிநீர்த் தேவைக்கும் வேண்டிய தண்ணீர் கிடைத்து வரும். சில ஆண்டுகளில் தொடர்ந்து மழையே பெய்யாது. அல்லது பெய்யும் மழையின் அளவு தேவையினும் குறைந்திருக்கும் ஆண்டு சராசரி மழையளவில் குறையலாம். அதற்கு மேலும் மழைவளம் குன்றுமாயின் நாட்டில் வறட்சி ஏற்படும் என விளக்கம் தருகிறது கலைக்களஞ்சியம்”[12]**

## 1. பருவக்கால வறட்சி

எல்லாக்காலங்களிலும் ஒரே மாதிரியான பருவநிலை நிகழ்வதில்லை வளிமண்டலத்தில் நிலவும் கோள்களின் இயக்கம், காற்று வீசும் திசைகள் மேகங்களின் சுழற்சி இவற்றை அடிப்படையாகக் கொண்டு பருவங்கள் மாறுபடுகின்றன. பருவமாற்றங்கள் பற்றிய சிந்தனை சங்ககாலத் தமிழர்களிடம் மிகுந்து காணப்படுகின்றது. ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட கால இடைவெளியில் பொழியும் மழையின் அளவு குறைவதால் பருவவறட்சி தோன்றுகிறது.

பருவங்களை கார்க்காலம், கூதிர்க்காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், முதுவேனில், இளவேனில் எனப் பெரும்பொழுதுகளாகப் பிரித்துள்ளனர். இதனையே தொல்காப்பியரும் அகத்திணையியலில்

**“முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே”**[13]

நிலங்களுக்கு இடமும் கடவுளும் கூறி அந்நிலங்களுக்குரிய காதல் ஒழுக்கங்களுக்கு ஏற்ற வண்ணம் பெரும்பொழுது சிறுபொழுதுகளைக் கூறுகின்றார். பெரும்பொழுதுகளை ஓர் ஆண்டினை இரண்டிரண்டு மாதங்களாக ஆறு பிரிவுகளாகக் குறிப்பிட்டுள்ளார்.

சங்கப்பாடல்களில் கார்க்காலத்தில் பொழியும் மழைநீரினை தேக்கி மற்ற பருவங்களில் பயன்படுத்துவதால் நீர்த்தேவையை மக்கள் பூர்த்தி செய்து கொள்வதை அறிய முடிகின்றது.ஆனால் முதுவேனில் காலத்தில் மழையானது பொய்த்துப் போவதால் அதிகப்படியான வறட்சி நிலவுகின்றது என்பதை

**“அகஇரு விசும்பில் பாய்இருள் பருகிப்**
**பகல்கான்று எழுதரு பல்கதிர்ப் பருதி**
**காய்சினம் திருகிய கடுந்திறல் வேனில்”**[14]

உலகத்திலுள்ள அனைத்துப் பொருட்களும் அகன்று விரிவதற்குக் காரணமாக இருப்பது வானம். அப்பெரிய வானிடத்தே பரந்த இருளை விழுங்கிப் பகற்பொழுதை உண்டாக்கியது். கதிரவன் தன் இயல்பில் இருக்கும் பொழுது உலகில் வாழும் பல்வேறு உயிரினங்களும் வாழ்வதற்கு வழி செய்கிறது. அதே கதிரவன் இயல்பிலிருந்து மாற்றம் அடையும்பொழுது தன் சினக்கதிர்களைப் பூமியில் அதிகப் படியாக விழச் செய்து கடுமையான வெப்பத்தால் **'கடுந்திறல்'** என்ற முதுவேனிற் பருவத்தை ஏற்படுத்துகிறது. இதன் காரணமாக பூமி வெப்பமடைந்து அனைத்து உயிர்களும் இடும்பைக்கு உட்படுகின்றது என்று பெரும்பாணாற்றுப்படையின் பாடல் வரி குறிப்பிடுகிறது.

பருவ மாற்றத்தினால் தோன்றுகின்ற வறட்சி நிலையையே பெரும்பாலும் இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

**"காய்ந்து செலற் கனவி கல்பகத் தெறுதலின்**
**ஈந்து குருதுஉருகும் என்றூழ் நீள்இடை**
**உளிமுக வெம்பரல் அடிவருந் துறாலின்"**[15]

நீர் வறட்சியின் காரணத்தினாலும், கதிரவனின் கடும்வெப்பத்தினாலும், மலைகள் நீரின்றி வெடிப்புற்றும், காய்ந்தும், பறவையினங்கள் உள்ளிட்ட அனைத்து உயிரினங்களும் புவியில் வருந்துகின்ற வகையில் வறட்சி நிலவுவதை இப்பாடல் விளக்குகிறது.

நீர் ஆதாரங்கள் அற்ற நிலங்களில் மக்கள் மட்டுமல்லாமல் உயிரினங்களும், தாவர இனங்களும் உயிர்வாழ இயலாது.

**"முளைத்த கள்ளியினைக் - கனல்**
**மொய்த்துக் கரியாக்கி**
**விளைந்த சாம்பலைப்போய் - இனி**
**மேலும் உருக்கிடவே**
**கொளுத்திடும் கானல், உயிர்**
**கொன்று தின்னும் காலை"**[16]

மழையில்லையென்றால் நீர்வளமென்பது இல்லை, அனல் காற்று வீசி மக்களைக் கலங்கடிக்கும், தாகம் வாட்டுவதால் தாயின் முகம் பார்க்கும் சேயாய்த் தரையும் வெடிக்கும் என்பதனை பாரதிதாசன்,

**“தாகம் வரட்டும் கொடுமையிலே**
**தாயின் முகம் பார்க்கும் சேயாய்த்**
**தரையும் வெடிக்குதம்மா”** [17]

என்று வறட்சி நிலையைப் பாடியுள்ளார்.

**2.வறண்ட காலம்**

மழைப்பொழிவுக்குக் காரணமாகிய விண்கோள்களின் இயக்கமானது மழை பொய்த்தலுக்கும் வழி வகுக்கிறது. விண்கோள்கள் , கதிரவன் , நிலவுத் தொடர்பான இயக்கங்கள் பற்றிய அறிவும் பருவகால மாற்றங்களை உய்த்துணரும் திறனும் வளிமண்டல அடுக்கில் நிலவும் நாள்மீன் மற்றும் கோள்மீன்களின் நகர்வினால் பூமியில் மக்களின் வாழ்க்கைநிலையில் மாற்றம் ஏற்படுவதையும் தமிழர்கள் நன்கு புரிந்து கொண்டதால் அவர்களின் வாழ்க்கைத் தேவைகளை முன்னேற்பாடாக செய்து கொள்வதில் போதிய விழிப்புணர்வுடன் இருந்ததை அறிய முடிகின்றது.

மழைப்பொழிவுக்கு வெள்ளி விண்மீன்களின் இயக்கத்தினுடைய நகர்வு முக்கியப்பங்கு வகிக்கின்றது. வெள்ளிக்கோளினை தமிழர்கள் மழைக்கோள் என்றழைத்துள்ளனர்.

**“கயம்களியும் கோடைஆயினும்**
**ஏலா் வெண்பொன் போருது காலை”**[18]

புறநானூற்றில் வெள்ளி மீனாது தனக்குரிய திசையிலிருந்து மாறுபட்டு தெற்கு நோக்கி நகரும் போது வறண்டகாலம் நிலவுவதாகக் குறிப்பிடுகின்றனர்.

**“வெள்ளி தென்புலத்து உறைய விளையல்**
**பள்ளம் வாடிய பயன்இல் காலை”**[19]

**“வசைஇல்புகழ் வயங்குவெண்மீன்**

**திசைதிரிந்து தெற்கு ஏகினும”[20]**

**“அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்**

**இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்”[21]**

இப்பாடல்களில் மழை பொய்த்து மழையின் அளவு குறையும் பொழுது நீர்வளம் குன்றி விளைச்சல் நிலங்களும் பயிர்கள் வளர நீரின்றி தானிய வகைகளும் காய்கறி வகைகளும் விளையாமல் போவதாலும் நீர்நிலைகள் வறண்டு விடுவதாலும் நீர்த்தட்டுப்பாடு தோன்றி மக்களும் பிற உயிரினங்களும் வாடி வறட்சி நிலவும் சூழ்நிலை உருவாகும் என்பதால் தான் வெள்ளியின் தெற்கு நோக்கிய நகர்வினை வறண்ட காலம் நிலவுவதைச் சுட்டுகின்றது.

மழை அதிகமாக பொழிந்தாலும், மழை பொழியாமல் இருந்தாலும் தானிய உற்பத்தி பாதிக்கப்பட்டு உணவுப் பொருள்களின் விளைச்சல் குன்றி உணவுத்தட்டுப்பாடு ஏற்பட்டு வளமற்று, வறுமையுற்று மக்களின் வளர்ச்சியில் முன்னேற்றம் அரிதாகி விடும். மழை பெய்யாது இருப்பது வறட்சி ஏற்படுத்தும் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன.

**“வெள்ளி தென்புலத்து உறைய விளைவயல்**

**பள்ளம் வாடிய பயன்இல் காலை”[22]**

**“வெள்ளிக்கோள் தென்திசையில் எழுதல் தீயநிமித்தம் இந்நிகழ்ச்சி மழை பெய்யாமைக்கும் வற்கடம் உண்டாவதற்கும் காரணம் என்பர்”[23] என்பது உ.வே.சாமிநாதையர் அவர்களின் குறிப்புரை.**

**“மைம்மீன் புகையினும் தூமந் தோன்றினும்**

**தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்”[24]**

சனிக்கோள் கருமை நிறங் கொண்டதால் காரிக்கோள் என்றும் மைம்மீன் என்றும் அழைக்கப்பட்டுள்ளது.. இராசிகளுள் இடபம், சிங்கம், மீனம் இவற்றுடன் சனி முரண்பட்டால் நாட்டிற்கு கேடு விளையும்.

அதிலும் சிம்மராசியில் மகத்தில் புகுந்தால் உலகிற்குப் பெருந்தீங்கு விளையும் என்பது சோதிடநூல் குறிப்பு.

புகைக்கொடி என்பதற்கு தூமம் என்று பெயர். இதனை தூமகேது என்றும் குறிப்பிடுவர். தூமகேதுவின் இயக்கமானது உலகிற்குப் பேராபத்தினை விளைவிக்கும்.

**“தூம கேதுபுவிக கெனத்தோன்றிய”**[25]

என்று தூமகேதுவால் பூமிக்குத் தீமை நிகழும் என்பதைக் கம்பராமாயணத்தில் கம்பர் குறிப்பிடுகிறார்

**“கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**
**விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்”**[26]

என்று சிலப்பதிகாரத்திலும் தூமகேது குறிப்பு இடம் பெற்றுள்ளது, பண்டையக் காலத் தமிழர்கள் கோள்களின் நிலையை நன்கு கவனித்து வேனில்காலம், மழைக்காலம், முதலியவற்றை அறிந்துணரும் வான்நூலில் புலமையுடையராய் இருந்தனர் என்பது பெறப்படும். கோள்களின் இயக்க வேறுபட்ட நிலையில் உலகின் பிற பகுதிகளில் மழை இல்லையாயினும், குடகு மலையில் மழைபெய்து காவிரியில் நீர்பெருக்கெடுத்தோடும் என்பதை வலியுறுத்தும் வண்ணம் இப்பகுதி அமைந்தது.

**“வசையில்புகழ் வயங்குவெண்மீன்**
**திசை திரிந்து தெற்கேகினும்**
**தற்பாடிய தளியுணவிற்**
**வான் பொய்ப்பினும் தான் பொய்யா**
**மலைத் தலைய கடற்காவிரி”**[27]

எனப் பட்டினப்பாலையிலும்,

**“கல்காயும் கடுவேனிலொடு**
**இருவானம் பெயல்ஒளிப்பினும்**

**வரும்வைகன் மீன்பிறழினும்**

**வெள்ளமா றாது"**[28]

என மதுரைக்காஞ்சியிலும் குறிப்பிடப்படுகின்றன. எனினும் மழைப்பெய்யாது போனால் வறட்சி ஏற்படும் என்பதையும் இவை வெளிப்படுத்துகின்றன.

**"அகன் ஞாலம் பெரிது வெம்பினும்**

**மிகவானுள் எரி தோன்றினும்**

**குளமீனொடும் நாள் புகையினும்"**[29]

**"வறிதுவடக்கு இறைஞ்சிய சீர்சால் வெள்ளி**

**பயங்கெழு பொழுதோடு ஆநியம் நிற்ப"**[30]

**"நிலம்பயம் பொழிய சுடர்சினம் தணியப்**

**பயங்கெழு வெள்ளி ஆநியம் நிற்ப"**[31]

**"கோல்நிலை திரிந்திடில் கோள்நிலை திரியும்**

**கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்**

**மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை"**[32]

என்னும் சான்றுகளால் கோள்களும் நட்சத்திரங்களும் தம் நிலையிலிருந்து மாறுபட்டால் மழை பெய்யாது உலக வறுமைக்கு ஏதுவாகும் என்பது உரையாசிரியர் குறிப்பாகும்.

இயற்கையாக வானவெளியில் தோன்றும் நிகழ்வினால் ஏற்படும் மாறுபாட்டினை உணர்கின்ற வல்லமைப் படைத்தவர்களாகவும் வானியல் அறிவு நிரம்பியவர்களாகவும் தமிழர்கள் இருந்ததை அறிய முடிகின்றது.

**3.வறண்ட நிலம் - பாலை**

சங்கப்பாடல்களில் பாலை வறண்ட நிலமாகவே பதிவு செய்யப்பட்டுள்ளது. குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் எனத் தமிழர்கள் நிலத்தை நான்கு வகையாகப் பிரித்துள்ளனர்.

முல்லை காடும் காடு சார்ந்த பகுதி குறிஞ்சி மலையும் மலை சார்ந்த பகுதி மருதம் வயலும் வயல் சார்ந்த பகுதி நெய்தல் கடலும் கடல் சார்ந்த பகுதியாகும்.பாலை நான்கு நிலப்பகுதிகளிலும் விரவி வருவதால் நிலம் வகுக்கப்படவில்லை என்பர்.

**:நச்சினார்க்கினியரும் பாலை ஒருபாற்படாது நால்வகை நிலத்திற்கும் பெரியதாய்ப் புலனெறிவழக்கம் செய்து வருதல் பற்றி நிலம் அதற்குக் கூறப்படவில்லை என்பர்"**[33]

பாலை நிலத்தின் உரிப்பொருள் தலைவன் தலைவி இருவரின் அன்புகலந்த பிரிவு ஒழுக்கமாகும்.

முல்லைத்திணையில் தலைவனுக்காக தலைவி காத்திருந்து ஆற்றியிருப்பாள் இங்ஙனம் ஆற்றியிருத்தலுக்கு அடிப்படை பிரிவாகும். அதனால் முல்லை பாலைத்திணை ஒழுக்கத்தின் அடியாகத்தான் பிறக்கின்றது. மருதத்திணையில் தலைவன் பரத்தையிடம் செல்வதால் ஊடல் காரணமாக பிரிவுத் தோன்றுகிறது.அப்பிரிவுக்கும் அடிப்படை பாலையாகும். நெய்தல் திணையில் பொருளீட்டச் செல்லும் தலைவனுக்கு இரக்கம் தோன்கிறது. அவனது இரக்கம் பிரிவு பற்றியே நிகழ்கின்றது. ஆகவே நெய்தல் திணையும் பாலைத்திணையின் அடியாகப் பிறக்கிறது. குறிஞ்சித் திணையில் புணர்தல்

**"இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீஆ கியர்எம் கணவனை**
**யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே"**[34]

என்று பிரிந்தவர்கள் அடுத்த பிறவியில் ஊழின் காரணமாகப் பிறந்து ஊடுவர்.இவர்கள் சேர்வதற்கும் காரணமான பிரிவுக்கு அடிப்படை பாலைத் திணையாகும்.

எனவே பாலைத்திணையின் ஒழுக்கமே மற்ற ஒழுக்கங்களை இயக்கும் ஆற்றல் பெற்றதால் ஏனைய ஒழுக்கங்களுள் கலந்து வருவதால் நடுவுவைத்து எண்ணத்தக்கதாக விளங்குகின்றது.

இதனையே தொல்காப்பியரும்

**“நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்**

**படுதிரை வையம் பாத்திய பண்பே”**[35]

எனக் குறிப்பிடுகிறார்.

இவை மட்டுமல்லாமல் பாலையின் கருப்பொருட்கள் யாவும் நால்வகைப் பாகுபாட்டோடு விரவி வருகின்றன. முதல், கரு, உரிப்பொருட்கள் போன்றன மற்ற நிலப்பகுதிகளோடு சேர்வதால் அங்கு நீர்வளமில்லாச் சூழலை நான்கு நிலங்களுக்குள் ஏற்படுவதாகக் கருத வேண்டியுள்ளது.

பாலைநிலப் பெருவழியில் தலைவன் தலைவியை விட்டு பிரிந்து சென்று விடுவானோ என அஞ்சுவதாக அமைந்துள்ள பாலை நிலம் வறண்ட நிலமாக காட்சிப்படுத்தப் பட்டாலும் அது அன்பின் வெளிப்பாடாகவே புலப்படுகிறது.தலைவியைப் பிரிந்து சென்ற தலைவனின் நிலை கொடுமையான வழியில் தலைவன் சென்றதை எண்ணி தலைவி வருந்தும் நிலை என்ற அடிப்படையில் வறட்சிப்பதிவு செய்யப்பட்டுள்ளது.

பாலை என்பது வறட்சியுற்ற பரற்கற்கள் நிரம்பிய பாலையில் மரங்கள் வெம்பிய நிலை பருகுவதற்கு நீரற்ற சூழல் மக்கள் செல்ல இயலாத பகுதி இதனையே புலவர்கள் வறண்ட நிலமாகக் கூறியுள்ளனர்.

**“முனிவுஇல் பரத்தையை எற்துறந்து அருளாய்**

**நனிபுலம்பு அலைத்த எல்லை நீங்க**

**புதுவறங்கூர்ந்த செறுவில் தண்ணென**

**மலிபுனல் பரத்தந் தாஅங்கு**

**இனிதே தெய்ய நிற்காணுங் காலே”**[36]

பரத்தையிடம் சென்ற தலைவா அவளிடமே இரு. இங்கு வராதே உன்னைப் பார்த்த போதே வறண்ட நிலத்தில் பாய்ந்த புதுமழை வெள்ளம் போல என் உள்ளம் குளிர்ந்து இருக்கிறது அதுபோதும்

இங்ஙனம் மழைபொழியாமல் இருந்தால் அந்த இடம் வறண்ட அல்லது வறட்சிப்பகுதி எனப் பெயர் பெறும் என்பதை அறியமுடிகின்றது.

**குறிஞ்சி, முல்லை நிலங்கள் தன்நிலை திரிந்து பாலையாதல்**

வளமிக்க சங்ககால வாழ்நிலங்கள் வெப்ப மிகுதியால் தம் இயல்பில் திரிந்து உயிரினங்களின் வாழ்வியலைப் பாதிப்பிற்குட்படுத்தும் நிலை ஏற்பட்டிருந்தது. குறிஞ்சி நிலமானது தன் இயல்பில் திரிந்து பாலையாதல் பற்றி

**"மணிமலைப் பணைந்தோள் மாநில மடந்தை ..........**
**பாலை நின்ற பாலை நெடுவழிச்**
**சுரண்முதன் மாரஅத்த வரிநிழல் அசை"**[37]

என்ற பாடலில், மூங்கில் போன்ற தோள்களையுடைய நிலமாகிய மடந்தை மீது மணியால் செய்யப்பட்ட அழகிய மாலை ஆகிய மார்பின் மேல் கிடந்து அசைகின்ற முத்துமாலை போன்ற காட்டாறுகளில் பாய்ந்தோடுகின்ற நீரானது வற்றிவிட்டதால், வருத்தமுற்று நிற்க, தொலைவிலே காட்டாற்றின் கரைகளில் நறுமணம் கமழும் ஒரு பூஞ்சோலை தென்படுகிறது. அச்சோலையிலே கருநிறக்குயில்கள் தன்அலகால் குடைந்து உதிர்த்த பூக்கள் விழுந்து கிடக்கின்றன. அப்பூக்களைச் சூடிய தன் இரு கரைகளும் கருநிற கூந்தலை விரித்தாற் போன்று கருமையான நிறத்தைத் தன்னிடத்தே கொண்டது நுண்ணிய கருமணல், கரிய வெம்மையை ஏற்றதைப் போன்று வெம்மையுற்று நிற்கின்றது. அம்மணல் பரப்பில் மெதுவாக நடந்தாலும் வெயிலின் வெப்பத்தால் பரற்கற்கள் கிழிந்து உள்ளங்கால்களை வருத்தும் இளவேனில் பருவம் நிலைபெற்று வெம்மை செய்த பருவத்தின் வழிதாக்கிய முதுவேனில் நாட்கள் நிகழும் பருவம். கதிரவனது கதிர்கள் காலை நேரத்தில் மிகுந்த வெப்பத்தைத் தருவதாகிய பாலைத் தன்மை நிலைபெற்ற பாலைநிலப்பெருவழியில் நீண்ட நெடிய காட்டுப்பகுதியின் இடத்தே நின்ற கடம்பமரத்தின் நிழலில் தங்கியிருந்தது சிறுபாணனின் குடும்பம் என்று குறித்துள்ளார். இங்ஙனம் முல்லை, குறிஞ்சி நிலங்கள் தம்மியல்பு திரிந்து மாறுபடுவதால் மக்களின் சூழல் பாதிப்பதைக் காணமுடிகிறது.

**“தமிழர்கள் பாலை என்ற சொல்லால் குறித்து பிற நிலப்பகுதிகளைக் குறிப்பாக மலைப்பகுதிகள், மேய்ச்சல் நிலங்களைத்தான். பருவமழை தப்பியோ, இயற்கையாக நீர் வறண்டதாலோ கோடைக்காலத்தில் அவை பாலைவனம் போன்ற தோற்றத்தைப் பெற்றன. நிலநடுக்கோட்டுத் தட்பவெப்பத்தில் இத்தற்காலிகப் பாலை நிலம் மலைப்பகுதிகளிலும் தோன்றலாம். முல்லைப் பகுதிகள் வறட்சிக்கு ஆளாகும் போது. வெப்பமும் உலர்ந்த, பசுமையற்ற இயற்கை நிலத்தோற்றமும் சமவெளிப்பகுதியைவிடக் கூடுதலாகவே புலப்படும்”**[38]

என்று பாலை நிலத்தின் இயல்புத் தன்மையை தனிநாயக அடிகள் விளக்கியுள்ளார். இதன் மூலம் ஞாயிற்றின் இயல்புத் தன்மை மாற்றம் பெற்றால் வறட்சி மிகுந்த பாலை நிலத்தை உருவாக்கும் என்பதை உணரமுடிகிறது. இவ்வாறாகவே சங்ககாலத்தில் பாலையெனக் குறிப்பிடப்பட்ட நிலம் வருப்பெற்றது. இதனையே பிற்கால சிலப்பதிகாரமும்

**“முல்லையுங் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்தும்**
**பாலை யென்பவோதார் படிவங் கொள்ளும”**[39]

முல்லை - குறிஞ்சி ஆகிய நிலங்கள் தத்தம் இயல்பு திரிந்து பாலை ஆவது இயல்பாகும் என்று குறிப்பிட்டுள்ளார் நச்சினார்க்கினியர்

காலையும் மாலையும் நண் பகலன்ன கடுமை கூரச் சோலைத் தேம்பிக் கூவல் மாறி நீரும், நிழலுமின்றி நிலம்பயம் துறந்து புள்ளும், மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெறுவது என்று உரை செய்துள்ளார்.

**“பைந்நனை அவரை பவழங் கோப்பவும் .....**
**கருநனைக் காயாக் கணமயில் அவிழவும்**
**ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவிர்”**[40]

என்ற பாடலில் பசுமையான அரும்புகளையுடைய அவரையானது பவளத்தை கோத்தது போன்ற அழகிய மலர்களால் பூத்திருக்கும்.

கருநிறத்தைக் கொண்ட காயாம் பூவின் அரும்பானது திரண்ட மயிலின் கழுத்து நிறத்தில் மலர்ந்திருக்கும். வளமை பொருந்திய கொடியை உடைய முசுண்டை, கொட்டைப்பெட்டிகள் போன்ற பூக்களைத் தன்னிடத்தே கொண்டிருக்கும். செழுமையான காந்தள் மலர்கள் கைவிரல்கள் போன்று மலர்ந்திருக்கும். முல்லை கொல்லைகளின் வழியில் கிடந்த நெடிய இடங்களிலெல்லாம் இந்திரகோபப் பூச்சிகள் ஊர்ந்து செல்லும். முல்லைக்கொடி படர்ந்து நிற்கும் அழகிய காட்டிடத்தே அருவிகள் வீழும் மலைப்பகுதியின் பின்பக்கம் கதிரவன் மறையும் அழகினைப் பார்த்து அந்திப்பொழுதின்கண் வலிமைமிக்க வேல் நுனி போலப் பூத்த கேணியையுடைய, வெற்றியையுடைய வேலூரைச் சேருவீர். அங்குள்ள உள்ளுறைவோர் வருந்த அமைத்த வெப்பமிக்க குடில்களில் உறையும் எயினர் குலத்தில் பிறந்த மகளிர் சமைத்த இனிய புளி இட்டசோற்றினைச் சமமான ஆமான் ஆட்டிறைச்சியுடன் நும்பசி தணியுமாறு நிறைய பெறுவீர் என்று பாணனின் வறுமைக்கு ஆற்றுப்படுத்துகிறார்.

**'உறுவெயிற்கு உலைஇய உருப்பவிர் குரம்பை'** என்ற வரிகளால் மிகுதியான வேனில்காலத்தில் உள்ளுறைவோர் வருத்தமுறுவதற்கு ஏற்ற வெப்பம் மிக்க சிறுகுடிலைக் குறித்தது. முல்லை நிலமானது இயல்புத் தன்மையில் வளமுடையதாக முதலில் காட்சிப்படுத்தப்பட்டுப் பின்பு கதிரவனின் கதிர்களால் வளமான முல்லைநிலம் தன் இயல்பினை அழகினை இழந்து நிலத்தின் மாறுபாட்டால், வறட்சி மிகுந்த பாலை நிலப்பெருவழியில் வாழுகின்ற மக்களான எயினர் எயிற்றியர் என்று நில வளங்களுக்கேற்ப மக்களின் வாழ்வியலும் சூழலும் மாறுபாடு அடைந்துள்ளதை நல்லூர் நத்தத்தனார் தெளிவாகக் காட்சிப்படுத்தி விளக்கியுள்ளார்.

**"நீர் நுங்கின் கண்வலிப்பக்**
**கானவேம்பின் காய் திரங்கக்"**[41]

எனும் பாடலடிகளில், வேனில் காலத்தின் தாக்கத்தால் இனிய இளநீரை உடைய பனை மரத்தின் நுங்கிலுள்ள் நீரானது வற்றி காட்டிலுள்ள வேம்பினுடைய காய்கள் பழுக்காமல் உலரந்து போக, ஆழமான

நீர்நிலைகள் நீரின்றி வற்றி வறண்ட காலம் ஆவதற்குரிய கோடையில் இயல்பு இல்லாமல் தெற்கே செல்லும் வெள்ளிக்கோளானது மற்றக் கோள்களோடு போர்புரியும் காலம் என்று கோடைகாலத்தின் வெம்மையைப் பாடலில் குறிப்பிட்டுள்ளார். வளமான நிலப்பகுதிகள் தம் நிலைத்திரிந்து மாற்றம் கொள்வதால் பாலை நிலமெனக் கொண்டனர். இங்ஙனம் ஏற்பட்ட வறட்சியினால் மக்கள் வாழ்வதற்க்குத் தகுதியற்ற நிலமாகவே பாலை நிலம் சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ளது. இதிலிருந்து வெப்பத்தினால் சங்ககாலத்தில் உயிரினங்கள் வறட்சியால் சந்தித்த துன்பங்களைத் தெளிவாக உணரமுடிகிறது.

இலக்கியங்களில் பெரும்பாலும் வறண்ட நிலமாகிய பாலையே வறட்சி நிலமாகவும் சுட்டப் பெறுகிறது. பாலை நிலங்களில் காணப்படும் கானல் நீர்,

**"விளைந்தவா வின்று வியன் கானல் வெண்டோத்**

**துளங்குநீர் மாமருட்டி யற்று"** [42]

பாலை நிலத்தில ஒடுகின்ற விலங்குகளுக்குத் தண்ணீர் போலக் காட்சியளித்ததாக மேற்கண்ட வரிகள் மூலம் அறியலாம்.

**4.அதிக மழை**

**"மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை"**[43]

மழையே விளைச்சலுக்கு முதற்காரணம் அத்தகைய மழையானது அதிகப்படியாக பொழியும் போது விளைச்சல் நின்று மக்கள் இல்லத்திற்குள் அடையும் நிலையேற்பட்டு வேளாண்மை முற்றிலும் அழிந்து விடும் என்பதை குறள்

**கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே**

**எடுப்பதூஉம் எல்லாம் மழை**[44]

மழையின்றேல் உணவு உற்பத்தி குறையும். அதனால் மழை வேண்டிக் கடவுளிடம் முறையிடுகின்றனர் சங்ககால மக்கள். பெய்யாது கெடுக்கும் மழை விடாமல் பெய்தும் கெடுக்கும்.

இதனை நன்கறிந்துள்ள குறவர்கள் பொழிவதற்கு வழிபட்ட இறைவனிடம் மழை நிற்பதற்கும் வேண்டுவதையும், வேண்டுதல் நிறைவேறிய பின் மகிழ்ச்சி அடைவதையும் காண முடிகின்றது.

**மலைவான் கொள்க!என உயர்பலி தூஉய்**

**மாரி ஆன்று மழைமேக் உயர்க!எனக்**

**"கடவுட் பேணிய குறவர் மாக்கள்**

**பெயல்கண் மாறிய உவகையா"[45]**

**"குன்றக் குறவ னார்ப்பின் எழிலி**

**நுண்பல் அழிதுளி பொழியும் நாட"[46]**

மழைப்பெய்வதற்குப் பிரார்த்தனை செய்வது தற்காலத்திலும் நடைமுறை வழக்கமாக உள்ளது.

**"வையக முற்று மாமழை மறந்து**

**வயலி னீரிலை மாநிலந் தருகோம்**

**உய்யக் கொள் கமற் றெங்களை யென்ன**

**ஒளிகொள் வெண்முகி லாய்ப் பரந் தெங்கும்**

**பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்**

**பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்**

**செய்கை கண்டுநின் திருவடி அடைந்தேன்**

**செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே"[47]**

என்னும் தேவாரத்திலும் மழை பெய்யாதிருப்பதும், வெள்ளமாகப் பெய்து கெடுத்துவிடக் கூடாது என்று நினைப்பதும் இடம்பெற்றுள்ளது. மழைப்பொய்த்தலும் அதிகப்படியான மழையும் வறட்சி நிலைக்கு வழிவகுக்கின்றது

**"பொய்யா வெழிலி பெய்விடம் நோக்கி**

**முட்டை கொண்டு வற்புலஞ் சேரும்**

**சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக் கேய்ப்ப"[48]**

என்பதில் தவறாது பெய்யும் மழை மேகம் மழை பெய்து நீர் பெருகும் இடம் விட்டு எறும்பானது முட்டைகளை கொண்டு மேட்டுநிலமேறினால் மழையானது பொழியும் என்ற நம்பிக்கையும் மக்களிடம் நிலவி உள்ளது.

**5.மழை பொய்த்தல்**

**“துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்**

**தூவும் தூவும் மழை”**[49]

மழைநீரானது இவ்வுலகிலுள்ள அனைத்து உயிரினங்களுக்கும் உணவினை வழங்கி நீர்தேவையை தணிக்கின்றது என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார். அத்தகைய மழையானது பொய்த்துப் போகும் போது உயிரினங்கள் பல்வேறு இன்னல்களுக்கு உட்படுகின்றன.

சங்கப்பாடல்கள் ஓர் இடத்தில் ஒரு பருவத்தில் பெய்யும் சராசரி மழை அளவானது குறையும் போது வறட்சிநிலை ஏற்படுவதாக குறிப்பிடுகின்றன.

**“.............கல்பகக்**

**கனமழை துறந்த கான்மயங்கு அழுவம்”**[50.]

**“பயம்கெழு மாமழை பெய்யாது”**[51]

தலைவனும் தலைவியும் மேகங்கள் மழை பெய்யாததால் காடுகள் யாவும் உலர்ந்து போயிருந்தது அத்தகைய காட்டு வழியில் போயினர். புள்ளிகளும் வரிகளும் அல்ல அக்காட்டில் ஆண் யானை நீரினைத் தேடி அலைந்து நீர் கிடைக்காததால் மரம் அசையும்படி குத்திப் பிளத்தலால் ஈரப்பதம் இன்றி ஓமை மரத்தின் பெரிய பட்டை உரிந்த சிவந்த அடிப்பகுதியைப் பார்த்து வந்து தங்கும் .அப்படிப்பட்ட வானாளாவிய உயர்ந்த உச்சியை உடைய மலைவழியில் கோடைக்காற்று வீசுவதால் அசையும் இலைகளை உடைய மூங்கில்கள் அடர்ந்த பகுதியில் விழையும் இயல்புடைய காளையைப் போன்றவன் என் மகளை உடன் கொண்டு சென்றான் .மழையில்லாததால் காட்டிலுள்ள மரங்கள் தன் பசுமையை இழந்து இலைகள் யாவும் சருகுகளாக மாறியதை அறிய முடிகின்றது.

பெருங்கடுங்கோ என்ற புலவர் மழைப்பொழியாமல் காட்டின் கடுமையினை தம் பாடலில் அழகுற காட்டியுள்ளார்.

மழையானது பெய்யாமல் காடு வறட்சியுற்று மரங்கள் யாவும் வெம்மையுற்று மரையாமரல் கவர நின்றது. இருபுறங்களிலும் மலைகள் ஓங்கி வளர்ந்துள்ளன. இவையெல்லாவற்றிற்கும் மேலாக நடுகவிகந்தொரீஇ நயனில்லான் வினைவாங்கக் கொடிதோர்த்த மன்னவன் கோல்போல் ஞாயிறு தெறுதல் செய்த பாலையிடத்தே வழிப்பறி செய்யும் கானவர்களின் அம்புபட்டு வருத்தமுற்றோர் உண்ண நீரற்று வாடி தமது கண்ணீரைக் கொண்டு நனைக்கின்ற கடுமையான காட்டு வழி என்று தலைவனிடம் தலைவி குறிப்பிடுவதாக அமைத்துள்ளார்.

**6.கடும்வறட்சி**

**"அக்கால (சங்ககால) இயற்கையின்படி ஆதவனின் கதிர்கள் அதிகவெப்பக் கதிர்களாகவே வீசிக்கொண்டிருந்தது. காற்று மண்டலமும் நீராவி கொண்டதாகவே இருந்ததால் அக்கால அந்நிலமக்கள் கடும்வெப்பத்தைத் தாங்கியே வாழ்ந்தனர்."**[52]

என்று சங்ககால நிலவியலில் கதிரவனின் வெப்பத்தின் தாக்கத்தைப் பற்றி வி.ஆனந்தகுமார் குறிப்பிடுகின்றனர்.

கதிரவனின் கதிர்கள் நிலத்தை வெடிக்குமாறு பசுமையின்றிச் சுடுவதால் நிழலானது சுருங்கி மரங்கள் வாடின. வெம்மையால் பாறைகள் கொதித்து நீரற்ற பைஞ்சுனைகளின் நீரானது ஆவியாகி ஈரமின்றிக் காய்ந்தன. கதிரவனின் வெம்மை மிகுவதால் நிலங்கள் வெப்பமுற்று வறட்சி ஏற்பட்டு உயிரினங்களுக்கு இடர் ஏற்படுவதை,

**"..................................நிலம்பக**
**அழல்போல் வெங்கதிர் பைதுஅறத் தெறுதலின்**
**நிழல்தேய்ந்து உலறிய மரத்த அறைகாப்பு**
**அறுநீர்ப் பைஞ்சுனை ஆம்அறப் புலர்தலின்"**[53]

எனும் வரிகள் உணர்த்துகின்றது.

**“வெம்பா தாக வியனில வரைப்பென”**[54]

எனும் வரிகளில் இந்நிலவுலக்கத்தை கதிரவனின் கதிர்கள் காய்தலால் வெப்பமாகாமல் மழையினால் குளிர்ச்சி அடைவதாக புலவர் வாழ்த்துகின்றார். இப்பாடல் வரியில் வெம்மையின்றி மழைவளம் பெருக வேண்டும் என்பதின் மூலம் **கடும்வறட்சியினால்** அழிவு தோன்றும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றார்.

இதன் காரணமாக,

**“மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்”**[55]

என்று மழையினை வாழ்த்தியுள்ளனர். சங்ககாலத் தமிழர்கள் வெப்பத்தினால் வாழ்க்கை நிலையில் ஏற்பட்ட மாற்றத்தைக் குறித்தும் தாங்கள் அனுபவித்த அனுபவத்தின் வெளிப்பாடாகச் சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

இம்மண்ணுலகிற்கு வளங்களை அள்ளித்தருகின்ற கதிரவன் தன் இயல்புத்தன்மையில் மாறி மழைபொழியாமல் தடுத்து நிறுத்தும் போது இவ்வுலக உயிர்கள் வாழ்வாதாரமின்றி வறட்சி, பசி, பட்டினியால் வாடும்நிலை தோன்றும் இத்தகு வறட்சியான சூழல் சங்ககாலத்தில் நிலவியதை அக்காலப் புலவர்களின் பாடல்கள் வழி அறியலாம். வெம்மையால் நிலமானது நீரின்றி கடும் வறட்சி ஏற்பட்டது என்பதை,

**“...........................................................இருள்அற**
**விசும்புடன் விளங்கும் விரைசெலல் திகிரிக்**
**கடுங்கதிர் எறித்த விடுவாய் நிறைய**
**நெடுங்கால் முருங்கை வெண்பூத் தாஅய்**
**நீர்அற வறந்த நிரம்பா நீள்இடை”**[56]

என்ற பாடல் வரிகளில், விரைந்து செல்கின்ற ஞாயிற்றின் கதிர்கள் இருளானது விலகுமாறு வானிடத்தே உதயமாயிற்று. அதன் கொடுமையினால் நிலங்கள் எங்கும் பிளவுபட்டு பள்ளங்கள் தோன்றின.

அப்பள்ளங்கள் யாவும் தெரியாதவாறு நீண்ட அடியினையுடைய முருங்கை மரத்தின் வெண்மையான பூக்கள் பரந்து கிடந்தன. செல்லுவதற்கு அஞ்சுகின்ற நீண்ட நெடிய வழி நீரில்லாமல் வறட்சியுடன் காணப்பட்டது

சங்ககாலத்தில் தீயைப் போன்ற வெப்பம் நிறைந்த நாட்களும், அனல் காற்று வீசிய சூழலும் வெப்பம் மிகுதியாகிப் போவதால் ஆறு, கிணறு, கூவம், சுனை, அருவி போன்ற நீர்நிலைகள் நீரின்றியும் இருந்தன. கடும் வெப்பம் பரவியதால் நடை வெளிப்பாதைகளில் கிடக்கும் குறுங்கற்கள் தீயில் காய்ச்சிய இரும்பு போல் பாதம் சுட்ட நிகழ்வுகளையும், கனிதேடிச் சென்ற பறவைகளுக்குக் கனி கிடைக்கப் பெறாமையால் வெப்பக்காற்றால் சிக்கி முயன்று மீண்ட நிகழ்வை எண்ணிக் கவலை கொண்டது. மரங்கள் ஒன்றுடன் ஒன்று உரசியதால் வெப்பமிக்க காடுகளில் தீப்பற்றியச் சூழலும் பாலைக் கிணற்றின் தன்மையையும் வெப்பம் மிகுதியால் சுற்றுச்சூழல் மாற்றம் கொண்டது. இவ்வாறு இயற்கையாகிய ஞாயிறு தம் இயல்பிலிருந்து மாறுபடும் பொழுது பேரிடர்கள் ஏற்படும் அப்பேரிடரால் மக்கள் மற்றும் பிற உயிரினங்கள் தம் உயிர் உடைமை மற்றும் வளங்களையும் இழக்கும் நிலை ஏற்படும் என்பதைச் சங்கப்பாடல்களில் காணப்படும் குறிப்பினால் அறியமுடிகின்றது.

**7.மண்ணின் நீர்ப்பிடிப்புத் தன்மையின்மை**

இயற்கையில் மண்ணானது சிறுசிறு துகள்களைக் கொண்டதாகவும் மிருதுவான தன்மையுடையதாகவும் இருக்கும். இத்தகைய மண்ணில் நீர்ப்பிடிப்புத் தன்மை அதிகரித்து நீராவிப்போக்கு கட்டுப்படுத்தப்பட்டு நீரினைச் சேமிக்கின்றது. இதனால் வேனில்காலத்தில் வறட்சிநிலை தடுக்கப்படுகிறது.

ஆனால் மழைக்காலங்களில் நீரை உறிஞ்சித் தக்க வைக்கும் தன்மையில்லாத மண் வகைகளினால் வறட்சித் தோன்றுகிறது.

இதனை சங்கப்பாடல்

**“அரிமணல் இயவில் பரல் தேர்ந்து உண்டு”**[57]

காட்டு வழியில் மணற்பாங்கான இடத்தில் கூழாங்கற்களைப் பார்த்துப் பொறுக்கி உண்ணும் ஓர் இடத்திலும் தண்ணீர் இராது என்பதில் அரிமணல் என்பது நுண்மணலாகவும் மின்னுகின்ற தன்மையுடையதாகும். பெரும்பாலும் பாலைநிலப் பெருவழியில் காணக்கூடிய மணலுக்கு அதன் துகள்களுக்கிடையே பெரிதும் இடைவெளிக் காணப்படுவதால் நீரைச் சேமித்து வைக்கும் திறன் குறைவாகுகிறது.மழைக்காலங்களில் நீரினை உறிஞ்ச இயலாமல் மண் ஈரப்பதம் குன்றிக் காணப்படும் வேனிற்காலம் அல்லது மழை பொய்க்கும் காலங்களில் மழைநீரினைச் சேமித்து அளிக்க இயலவில்லை அதனால் அப்பகுதியில் வறட்சி நிலவுகின்றது.

**8. நீர்நிலைகளின்மை**

கார்காலத்தில் பொழியும் மழைநீரைச் சேமிக்கும் களன்களாக நீர்நிலைகள் செயல்படுகின்றன. நீர்நிலைகளில் சேகரமாகும் நீரானது இதன் ஆழம் நீர்த்தேங்கும் தன்மையைக் கொண்டு கணக்கிடப்படுகிறது. வேனிற்காலங்களில் கதிரவனின் தாக்கத்தால் நீர்நிலைகளிலுள்ள நீர் ஆவியாகின்றது.கொள்ளளவு குறைவான நீர்நிலைகளில் முற்றிலும் நீரானது வற்றி வறட்சிநிலையை உருவாக்குகிறது.

முறையான பராமரிப்பு அற்ற நீர்நிலைகளில் நீரானது நிலத்தினால் உறிஞ்சப்படுகிறது. இச்சூழலில் நீரின்றி வறட்சி நிலவுகின்றது. அதனை சங்கப்பாக்களில் காண முடிகின்றது.

**தாமரைப் பொய்கையுள்**

**நீர்நீத்த மலர் போல**[58]

**“சுனை வறந்தன்ன இரு”**[59]

**“கயன்அறக்**

**கண் இழிந்து உலறிய பல்மர**

**நெடுநெறி”**[60]

**“கயம்அற வறந்த கோடையோடு நயன் அறப்**

**பெருவரை நிவந்த மருங்கில்”**[61]

**“நிலம்நீா் அற்று நீள் சுனை வறப்ப”**[62]

போன்ற பாடல்களில் பொருளீட்டச் செல்லும் தலைவன் காட்டுவழியில் செல்கின்றான்.கோடை காரணமாக மழை பெய்யாமல் மரங்கள் இலையற்று வாடி. இருக்கின்றான். கோடைக்காலம் நீண்டமையால் வெப்பத்தின் தாக்கத்தால் குளங்கள், சுனைகள் நீரின்றிப் பொலிவிழந்துக் காணப்படுவதாகக் குறிப்பிடுகின்றது.

**“நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅப்**

**அவிரறல் கொண்ட விரவுமணல் அகன்துறைத”**[63]

என்ற பாடலில் நெடியக் கரைகளைக் கொண்ட காட்டாற்றின் வேகம் மிக்க பெருவெள்ளம் அற்றுப் போயிற்று. அகன்ற நீர்த்துறைகள் விளங்கும் அறல் ஆகும் தன்மையினைக் கொண்ட பரந்த மணலையுடையனவாயின என்று கோடை காலத்தில் வெப்பத்தின் நிலைமாறி கடுமையான வெப்பத்தினால் உலகில் உள்ள நீர்த்துறைகள் வற்றி மக்களும், பிற உயிரினங்களும் நீரின்றி பெரும் அழிவிற்கு உள்ளாவர் என்பது வெளிப்படுகிறது.

**“கடுநவை யார்ஆற்று அறுசுனை முற்றி**

**உயங்கு நீர் வேட்ட உடம்பு உயங்கு யானை**

**கடுந்தாம் பதிவு”**[64]

காட்டு வழியேச் செல்லும் தாகம் கொண்ட யானைகள் நீரற்றுக் காணப்படும் சுனையைச் சுற்றி நின்று தன் துதிக்கையை நீட்டி

சுனையிலுள்ள நீர் எடுக்கச் சென்று நீர் கிடைக்காதால் வெப்பத்தால் சுட்டுக் கொண்டதை அறிய முடிகின்றது.

நீா்நிலைகள் வற்றுவதால் அவற்றை நம்பியிருக்கும் அனைத்து உயிரினங்களும் பாதிப்பு அடைவதை உணர முடிகின்றது.

**“படிமுழம் ஊன்றிய நெடுதல் யானை**

**கைதோய்த்து உயிர்க்கும் வறுஞ்சுனை**

**மைதோய் சிமைய மலைமுதல் ஆறே”**[65]

போர்செய்து புலியால் தாக்கப்பட்ட யானை சுனையில் உள்ள நீரினை அருந்த தன் காலை மடித்து நிலத்தில் ஊன்றி நீரைத் தேடுகின்றது.நீரின்றி வறண்டு சுனைக் காணப்படுவதால் பெரு மூச்சு விடுகின்றது. அப்பாடலில் வறுஞ்சுனை என்பது வேனிற்காலத்தில் நீரில்லா சுனையைக் குறிக்க பயன்படுத்தப்பட்டுள்ளது.

**“அழல் போல் வெங்கதிர் பைதுஅறத் தெறுதலின்**

**நிழல்தேய்ந்து உலறிய மரத்த அறைகாய்பு**

**அறுநீர்ப் பைஞ்சுனை ஆம்அறப் புலர்தலின்”[66]**

வேனிற்கால வெப்பத்தால் நிலமானது வெடித்து பசுமையான சுனைகள் நீரில்லாமல் அதன் அடிப்பகுதி காய்ந்து காணப்படுவதை மேற்கண்ட பாடல் குறிப்பிடுகிறது. நிழலைத் தரும் மரங்கள் யாவும் உலர்ந்ததால் சுனைகள் தோறும் நீரின்றி கடத்தற்கு அரிய வறண்ட பாலை நிலப் பெரு வழியாக காட்சியளிகின்றது.

நீண்ட கரையினை உடைய ஆறும், நீர் வளம் குன்றினால் மலையாகக் காட்சியளிப்பதை,

**“நெருங்கரைக் சான்யாற்றுக் கரும்புனல் சாஅய**

**அவிர் அறல் கொண்ட விரிவுமணல் அகந்துறைத”[67]**

என்ற பாடல் அடிகள் விவரிக்கின்றன.

சுனைகள் மட்டுமல்லாது அருவிகளும் குளங்களும் வற்றிக் காணப்படுவதை

**“கோடை நீட குன்றம் புல்லென**

**அருவி அற்ற பெருவறல் காலையும”[68]**

என்ற பாடலில் கோடைக்காலம் நீட்டிப்பதால் மலைகள் வறண்டு கடுமையான வறட்சி அதாவது பஞ்சம் நிலவுவதை பெருவறல் என்று சுட்டியுள்ளனர்.

**“வானம் ஊர்ந்த வயங்கு ஒளி**

**நெருப்பு எனச் சிவந்த உருப்புஅவிர் அம்காட்டு**

**கயம்துகள் ஆகிய பயம்தபு கானம்**

**எம்மோடு கழிந்தனர் ஆயின்”[69]**

**“அறுகோட்டு எழிற்காலை அறுகயம் நோக்கிற்**

**தெண்நீர் வேட்ட சிறுமையின் தழை மறந்து**

**உண்நீர் இன்மையின் ஒல்குவன நிரை”[70]**

கதிரவனின் வெப்பம் மிகுதியானதால் குளங்களிலுள்ள நீரானது முற்றிலும் வற்றி அதன் உட்பகுதி காய்ந்து காடுகளிலுள்ள மரங்களிலிருந்து இலை தழைகளெல்லாம் காற்றினால் பரந்து அக்குளத்தை நிரப்புவதால் கயமானது தூசித்துகள் போல காட்சியளித்ததை இப்பாடல் குறிப்பிடுகின்றது.அறுகயம் என்ற சொல் நீரில்லாக் குளத்தைச் சுட்டுகின்றது

**“நீர் நுங்கின் கண்வலிப்பக்**

**கான வேம்பின் காய்திரங்க**

**கயம்களியும் கோடை ஆயினும்**

**ஏலா் வெண் பொன் பொருகு காலை”[71]**

**“பயம் கெழு மாமழை பெய்யாது மாறிக்**

**கயம் களி முளியும் கோடை ஆயினும”[72]**

நீா்நிலைகளில் நீரில்லாமல் நிலங்கள் எல்லாம் வெடித்துக் காணக் கூடிய நிலை உள்ளது.பனைமரத்தில் உள்ள நுங்குகளின் நீரானது வற்றி கெட்டியாக மாறவும், காடுகளிலுள்ள வேப்ப மரத்தின் காய்கள் பழுப்பதற்கு முன்பாகவே காய்ந்து போகவும், குளங்களெல்லாம் வற்றி விடக்கூடிய வேனிற்காலம் வந்ததை அறியலாம்.

**“அழிநீா் மீன் பெயா்ந்தாங்கு”[73]**

**“வறுமைச் சூழலுக்கான காரணங்களில் முதன்மையானதாக நீா்வளமின்மையே காட்டப்பட்டுள்ளது. நீா்வற்றிப்போன குளத்தில் நிலையும்**

**வறுமை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. வறிது சிறிதாகும் என்பது தொல்காப்பியம் எனவே வறுமை என்பது நீரோ உணவோ பொருளோ இல்லாது போகும் நிலையையே குறிப்பிடுவதற்கு ஆளப்பட்டுள்ளதை அறியலாம்.”**[74]

என்ற பெ.மாதையனின் கருத்தின் வாயிலாகவும் வறட்சி என்பது நீரின்மையால் ஏற்படும் தன்மையே என்பதைத் தெளிவாக உணரமுடிகின்றது.

நீரில்லா காலங்களில் மக்களும் மற்ற உயிரினங்களும் துன்பம் அடைந்து வருந்துவதை அறிய முடிகினற்து.

**9.நிலத்தடிநீரின்மை**

நிலத்தடி நீரானது ஆறுகள் பெருகி ஓடுவதற்கு முக்கிய காரணியாகும்.பருவநிலை மாறுபாடு தோன்றும் பொழுது அடர்த்தியான மரங்கள் இருக்கும் பகுதிகளில் மழைநீர் கடலில் சென்று கலப்பதைத் தடுத்து நிலத்தடிக்குச் செல்கிறது. இந்த நீர் வறட்சியான காலங்களிலும் நீரோட்டங்களை அதிகரிக்கிறது.

இந்தியாவில் நிலத்தடிநீர் நிலையானது மிக மோசமான நிலைக்கு சென்று கொண்டிருக்கிறது.2011 ல் இந்தியாவில் ஏறக்குறைய 30 % மாவட்டங்களில் நிலத்தடி நீரின் நிலையானது மோசமான நிலையிலேயே உள்ளது. 1995ல் இது வெறும் 8 % விழுக்காடு மட்டுமே இருந்தது. இதே நிலை நீடிக்குமானால் அடுத்த 20 வருடங்களில் 60 % அளவிற்கு இந்தியாவின் அனைத்து நீராதாரங்களும் ஒரு அபாயகரமான சூழலுக்குத் தள்ளப்படும் என்று உலக வங்கி அறிக்கை சொல்கிறது.

**“................................. பிறங்கல்**

**பெருங்களிறு உரிஞ்சிய மண்அரையாத்து”**[75]

பாலைநிலப் பெருவழியில் யானைகள் நீரின்றி நிலத்தினை தோண்டி தேடுகிறது.நிலத்தடியில் நீரின்மையால் அருகிலுள்ள யா மரத்தின் பட்டைகளை உரித்து உண்ணும்.வேனிற்காலத்தில் மரங்கள் செறிவான பகுதிகளில் நிலத்தடிநீர் குறைவதால் மீதமுள்ள நீரினை மரங்களின்

வோ்கள் தங்கள் தேவைக்காக இழுத்துக் கொள்ளும் சூழ்நிலை உருவாகும் பொழுது நிலம் நீர்த்தன்மையின்றி வறட்சியானது காணப்படுகின்றது.

**10. கடல் நீர் வற்றுதல்**

**“நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிச்செழிலி**

**தான் நல்காமாகி விடின”[76]**

கடலில் நீரானது கதிரவனின் கதிர் தாக்கத்தால் ஆவியாகி மேகத்தோடு கலந்து மழை பொழியாமல் கடலானது வற்றும் .இதனால் கடல் வாழ் உயிரினங்கள் யாவும் அழிந்துபடக் கூடிய நிலையினைக் காணலாம்.மேலும் பூமியில் வறட்சிநிலை தோன்றுகின்றது.

**“கருவி வானம் கடல் கோள் மறப்பவும்**

**பெரு வறனாகியப் பண்பு இல் காலையும்”[77]**

**“வெந்தெறல் கனலியோடு மதிவலம் திரிதரும்**

**தண்கடல் வரைப்பில் தாங்குநீர்ப் பெறாது**

**பொழிமழை துறந்த புகைவேய்க்குன்றத்து”[78]**

வெப்பத்தினால் கதிரவனின் கதிர்களானது கடலிலுள்ள நீரினை கிரகித்துக் கொள்வதால் கடல்நீரானது வற்றி மழைப்பொழியாமல் நிலத்தில் தோன்றும் வெப்பமும் வளிமண்டலத்தில் தோன்றும் வெப்பமும் ஒன்றாக இருக்கும் . அதனால் நிலவிய புகைமூட்டமானது மலைகளின் மீது எழுவதாகக் குறிப்பிடுகின்றது.

**11. பயிர்கள் உற்பத்தியின்மை**

நீரின்மையால் விளைநிலங்கள் விளைச்சல் இல்லாமல் வறட்சி நிலை தோன்றும். உரிய காலத்தில் மழை பொழிந்தால் மட்டுமே உழவுத் தொழிலை மேற்கொள்ள இயலும் என்பதை

**“காலை மாரி பெய்து தொழில் ஆற்றி**

**விண்டு முன்னிய புயல் நெடுங்காலக்**

**கல் சேர்பு மாமரை தலைஇப”**[79]

இப்பாடல் உணர்த்துகின்றது.

**“அலந்தலை உன்னத்து அம்கவடு பொருந்திச்**

**சிதடி கரைய பெருவறம் கூர்ந்து**

**நிலம்பைது அற்ற புலம்கெடு காலையும்**

**வாங்குபு தகைத்த கலப்பையர் ஆங்கண”**[80]

நீரின்மையால் நிலம் பசுமைமாறி மிகுந்த வறட்சி உண்டாகி விளை நிலங்கள் விளைவு இல்லாததாக பயிர் உற்பத்தி பாதிப்படைகின்றது. சிள் வீடு என்னும் வண்டுகள் காய்ந்த தலையினைக் கொண்ட உன்ன மரத்தின் கிளைகளில் ஓசை எழுப்புகின்றன. அத்தகைய வறட்சிக் காலத்தில்பாணன் கூத்தர் போன்றோர் பசியால் அவதியுறுகின்றனர். மற்றொரு அகப்பாடலில் பயிர் விளைச்சல் இன்மையை

**“நாடுவறற் கூர நாஞ்சில் துஞ்சக்**

**கோடை நீடிய பைதறு காலைக்**

**குன்றுகண் டன்ன கோட்ட யாவையுஞ்**

**சென்றுசேக் கல்லாப் புள்ள உள்ளில்**

**என்றூழ் வியன்குளம”**[81]

கோடைக்காலம் நீட்டித்ததால் பசுமை குன்றிய வறண்டகாலம். மழை பெய்யாது பொய்த்தமையால் நாட்டில் வறுமை உண்டானது. கலப்பை முதலிய வேளாண்கருவிகள் யாவும் செயலற்று முடங்கிக் கிடந்தன. குன்றுகளைப் போல நீண்ட கரைகளையுடைய குளங்களில் வெயிலின் சீற்றத்தினால் உள்ளே நீரின்மையால் பறவைகள் வந்து தங்குதல் இன்றி காணப்பட்டது. வெப்பம் நீடித்தலால் கருவிகள் வருந்துகின்ற நிலையினை அறியமுடிகின்றது.

**“பல்வளம் பகர்புஊட்டும் பயன் நிலம் பைதுஅறச்**

**செல்கதிர் ஞாயிறு செயிர்சழனம் சொரிதலின்**

**தணிவுஇல்லெங் கோடைக்கு தண்நயந்து அணிகொள்ளும் ............**

**ஊறுநீா் அமிழ்து ஏய்க்”**[82]

மழைப்பொழிவினால் மிகுதியான விளைச்சலைத் தருகின்ற நிலமானது கதிரவனின் தாக்கத்தால் வெப்பமுற்று நிலம் நீரின்றி காய்ந்து பயிர்கள் விளைவில்லை. மேலும் அங்குள்ள நீர்நிலைகளெல்லாம் வறண்டு வெறும் மண் புழுதிபட்ட வெறும் தரைகளாகக் காட்சியளிக்கிறது.

**12 கடற்கோள்**

கடற்கோளினை இலக்கியங்கள் ஆழிப்பேரலை என்று குறிப்பிடுகின்றன. கடலுக்கு அடியில் தோன்றும் நிலஅதிர்வுகளால் கடலைகள் மிக வேகமாக யாரும் எதிர்பார்க்காத சமயத்தில் மிகப்பெரிய பேர் அலைகளாக உருமாறி கரைப்பகுதியைச் சேர்ந்து பெரும் அழிவுகளை ஏற்படுத்தும் இதனை ஆழிப்பேரலை என்றும் கடற்கோள் என்றும் சுனாமி என்றும் அழைப்பர்.

பூமியின் நிலையானது மாற்றமடையும் போது ஏற்படும் ஆபத்துகளை விட நீர்ப்பகுதிகளில் மாற்றமடையும் போது அதிகப்படியான விளைவுகளை தோற்றுவிக்கின்றன. ஆழிப்பேரலையால் பலவகையான உயிர்கள் மாண்டு அழிந்து விடுகின்றன.

தமிழ்மொழியினை வளர்ப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட முதல் சங்கம் தென்மதுரையும் இரண்டாம் சங்கம் கபாடபுரமும் கடலில் மூழ்கிவிட்டதாகவும் இன்றைக்கு காணப்படும் மதுரையில் மூன்றாம் தமிழ்ச் சங்கம் நிறுவப்பட்டதாக உரையாசிரியர்கள் குறிப்பிடுவர்.

சங்க இலக்கியத்தில் கலித்தொகையில் பறுளியாறும் குமரிக்கண்டமும் கடற்கோளினால் தாக்கப்பட்டு அழிந்ததை உணர்த்துகின்றன.

பாண்டியன் ஆட்சி செலுத்தியப் பகுதி கடற்கோளால் அழிக்கப்பட்டுள்ளதனை

**“மலிதிரை ஊர்ந்துதன் மண் கடல் வெளவலின்**

**மெலிவுஇன்றி மேல்சென்று மேவார் நாடு இயம்பட**

**புலியொடுவில் நீங்கி புகழ் பொறிந்த கிளர் கொண்ட**

**வலியினான் வணங்கிய வாடாச்சீர்த் தென்னவன”[83]**

பாண்டியனது நாட்டின் ஒரு பகுதியைக் கடல் பொங்கி அழித்ததால் உயிரினங்கள் அழிந்து வறட்சியானது தோன்றினாலும் இயற்கை எதிர்கொண்டு மனம் சோர்வடையாமல் பகைவர் நாட்டின் மீது படையடுத்துச் சென்று சோழ சேர நாடுகளில் முறையே புலி வில் ஆகிய கொடிகளை அகற்றி மீன் கொடியைப் பொறித்த செய்தியை அறிய முடிகின்றது.

இச்செய்தியை சிலம்பும்

**“பறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக்**

**குமரிக் கோடுங் கொடுங்கடல்கொள்ள**

**வடதிசைக் கங்கையுமிமயமுங் கொண்டு**

**தென்னிசை யாண்ட தென்னவன் வாழி”[84]**

கடற்கோள் மலைகளையும் குமரியாற்றினையும் தாக்கி மூழ்கச் செய்தாலும் பாண்டின் வடப்பகுதியில் தன் கொடியை நாட்டினான என்பதைப் பகர்கின்றது.

**“நிலம்புடை பெயரினும் நீர்த்தீப் பிறழினும்**

**இலங்குதிலைப் பெருங்கடற் எல்லை தோன்றிலும”[85]**

**“இலங்கு அருவிய வரை நீந்தி**

**சுரம் போழ்ந்த அகல் ஆற்றல்**

**உயர்ந்து ஓங்கிய வீழுச்சிறப்பின்**

**நிலம் தந்த பேர்உதவி**

**பொலந்தார் மார்பின் நெடியோன் உம்பல”[86]**

**“தொல் அணை நல்லாசிரியன்**

**புணர் குட்டு உண்ட புகழ்சால் சிறப்பின்**

**நிலத்தரு திருவின் நெடியோர்”[87]**

நிலந்தருவிற் பாண்டியன் பகைவர் நாட்டைப் பாலைநிலமாக்கி போர் ஆற்றலையுடைய மிகப்பெரிய சிறப்பினையுடையவன் கடல்கோள்களால் தமிழகத்தின் தென்பகுதி குறைய பாண்டியர்க்காக இரு பெரு வேந்தர்களையும் வேளிரையும் வென்று அவன் நாட்டையும் பெற்றுத் தந்தவன்.

கடற்கோள் தோன்றுவதற்கு நில அதிர்வுகளின் தாக்கமே காரணம் என்று குறுந்தொகைப் பாடல்

**“நிலம்புடை பெயரினும் நீர்த்தீப் பிறழினும்**

**இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்”[88]**

மூலம் அறியலாம்.

இயற்கை வளங்களான நிலம் நீர் காற்று தீ இவற்றின் இடையே மாற்றங்கள் ஏற்பட்டாலும் கடலின் இயல்புநிலை மாற்றம் பெற்றாலும் அழிவுத் தோன்றுவதை தமிழர்கள் உணர்ந்துள்ளனர்.

**“பெருநிலம் கிளறினும திருநல உருவின**

**மாயா இயற்கைப் பாவையின்”[89]**

**“நிலம்புடை பெயர்வதாயினும்”[90]**

**நிலம்திறம் பெயருங்காலை யாயினும்”[91]**

**“நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்**

**செய்தி கொன்றோர்க்கு உய்தி இல் என”[92]**

**13. ஊழிக்காலத் தீ**

கடலின் அடிப்பரப்பில் ஊழித்தீ இருப்பதாகவும் இது உலகம் அழியும் காலத்தில் கடல் நீரோடு சேர்ந்து மேலெழும்பி நிலவுலக்ததை அழிக்கும் தன்மையுடையதாகப் புலவர்கள் குறிப்பிடுவர்.இதனை வடவைத்தீ என்றும்

வடமுகாக்கினி என்றம் பெருந்தீ என்றும் வட மொழியில் இயற்றப்பட்ட நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

இந்தியாவில் ஆந்திரப்பிரேசத்தில் இராட்சதப் பேரலைகள் வந்து ஆயிரக்கணக்கான உயிர்களைப் பலி வாங்கிய போது கடலில் தோன்றிய மர்மத் தீயே காரணம் என்று விஞ்ஞானிகள் கருத்து தெரிவித்தனர்.இந்த தீயானது புயல்காற்று உருவாகும் கடலில் பேரலைகள் தோன்றும் அந்த பேரலைகள் ஒன்றோடு ஒன்று மோதுவதால் உண்டான மின்சாரசக்தி என்றும் கூறினர்.

சங்கப்பாடல்களில் மடங்கல் என்ற சொல்லாட்சி அழித்தல் பொருளில் நிலவுகின்றது.

**“மடங்கலும் நீ”**[93]

**“மடங்கல்போல் சினைஇ மாயஞ்செய் அவுணரைக்**

**கடந்தடு முன்பொடு”**[94]

**“மடங்கலும் கணிச்சியும் காலனும் கூற்றும்”**[95]

**நாற்றிசையும் நடுக்குறூஉம் மடங்கற் காலை”**[96]

ஊழிக்கால முடிவில் உயிரினங்கள் ஒன்றன் பின் ஒன்றாக இறக்கும் அதன் நடுக்கத்தை நான்கு திசைகளும் உணரும். ஊழிக்காலத்தில் இந்நிலவுலகமானது அழிவதைப் புலவர்கள் குறிப்பிபட்டுள்ளனர்.

### 3.3.2 செயற்கை வறட்சி

மனிதனின் வஞ்சக எண்ணம் சூழ்ச்சி பேராசை கோபம் போன்ற காரணங்களால் மனிதனின் நாகரிகமற்ற செயல்பாடுகளால் உருவாகும் வறட்சியை செயற்கை வறட்சி எனலாம்.

உண்டி முதற்றே உணவின் பிண்டம் என்பர். உணவெனப்படுவது நிலத்தோடு நீரே என்ற மெய்யை விளக்கிய சங்ககால புலவர்களின் பாக்களில் நிலங்கள் யாவும் ஒரே மாதிரியான தன்மை பெற்றதாக இல்லை.பல வளங்களைத் தன்னகத்தே கொண்டு அள்ளித் தருகின்ற

மலைப் பகுதியும் வனப்பு நிறைந்த காட்டுப் பகுதியும் நெல்லும் கரும்பும் செழித்து வளர்கின்ற நன்செய் பகுதிகளும் விலையுயர்ந்த முத்தும் உப்பும் மீனும் அடங்கிய கடல்பகுதியும் இவ்வுலகில் காட்சியளிக்கின்றது.உவர் மணலையும் வெம்மையால் தாக்குற்ற பகுதிகளும் இடம் பெற்றுள்ளன.

**"எவ்வழி ஆடவர் நல்லவர் ஆடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே"**[97]

நிலப்பகுதிகளிடையே காணப்படும் ஏற்றத்தாழ்விற்கு ஏற்ப மக்களின் வாழ்வியலும் மாற்றம் பெறுகின்றன.வாழ்கின்ற பகுதிகளில் இருக்கும் மண் நீர் வளங்களுக்கு ஏற்ப வளமுடையதாகவும் வளமற்றதாகவும் அமைந்தது.நல்ல விளைநிலங்களில் வாழ்ந்த மக்கள் பேரின்பவளத்தைப் பெற்றவராயினர்.உவர்நிலம் பாலை நிலப்பெருவழியில் வாழப் பெற்றவர்கள் வறுமையினாலும் வறட்சியாலும் வாடினர்.

வளம், வறட்சி இருநிலைகளும் வாழ்கின்ற நிலத்தின் தன்மைக்கு ஏற்ப அமைகின்றன. அங்ஙனம் தனக்குக் கிடைத்ததை எண்ணி நிறைவடையாமல் வளமிக்க நிலங்களைக் கண்டு அலையும் அவா மிகுந்தவர்களாகவும் இருந்தனர். அவ்வாசையினை நிறைவேற்றிக் கொள்வதற்குப் போர்முறை உருவானது.

இயற்கையாக ஆற்றல் பெற்ற ஒருவன் வலிமை குன்றிய ஒருவனை ஆட்டிப்படைக்க வழிகோலிட்டது.இங்ஙனம் தோன்றிய போரினால் சங்க கால மன்னர்கள் மற்ற நாடுகளைப் போரினால் வென்று தம் ஆளுகைக்கு கீழ் கொணர்ந்து செங்கோலாட்சி நடத்திய அரசர்களின் காழ்ப்புணர்ச்சியே செயற்கை வறட்சிக்கு வித்திட்டது.

**1.போர்க்கால வறட்சி**

சங்க காலத்தில் போர்கள் என்பது தவிர்க்க இயலாததாய் அமைந்தன இரு அரசர்களிடையே மண்வேட்கை காரணமாக போர் விளையும். போரில் தோல்வியடைந்த மன்னன் தன் உறவினர்கள் தன்மறவர்கள் பலர் இறந்து கிடப்பதைக் கண்டு, மனம் வெதும்பி

குறிப்பிட்ட கால இடைவெளியில் பகைக்கொண்டு மீண்டும், தன்னை, தன்னைச் சார்ந்தவர்களை வென்ற மன்னரிடம் போரிட்டு வெற்றி பெறுவேன் என்று சூளுரைக்கின்ற நிலையினைச் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. இவ்வாறு போரானது ஒருமுறை மட்டுமே நிகழாமல் தொடரும் அவலமாக இருந்துள்ளது. இதனால் அங்குள்ள நீர் நிலைகளையும் வளங்களையும் அழிக்கப்பட்டு நீர்நிலைகள் மாசடைந்து வறண்ட நிலமாகக் காணப்படுகிறது.

**2. நீர்நிலங்களை அழித்தல்**

அரசர்களின் போர் வெறியானது தனிப்பட்ட ஒரு சில மன்னர்களை அழிப்பதோடு நிற்காது கொடுமை புரிவதும் பகையரசர்களின் நாடு நகரங்களை அறவே அழித்து அவ்வழிவு கண்டு மனம் மகிழும் நிலை வளர்ந்து பெருகியது. மனித அதிகாரத்தினாலும், வேட்கையினாலும் நிகழ்ந்த போரினால் வறட்சி ஏற்பட்டு நாட்டின் நிலை மாற்றம் பெறும். போரின் மூலம் ஒரு நாட்டில் ஏற்பட்ட வறட்சியான நிகழ்வுகளையும், நிலங்களையும் சங்க இலக்கியப் புறத்திணைப்பாடல்கள் பெருவாரியாகப் பதிவு செய்துள்ளன.போர்வெறி கொண்ட மன்னர்களின் செய்கையால் நீர்நிறைந்த குளங்கள் அகழிகள் அழிக்கப்பட்ட நிலையினையும் போர் முடிந்த பின்னர் அந்நாட்டில் நிலவிய அவலநிலையை,

**“உறுசெறுநர் புலம்புக்கு அவர்**
**கழுநீர் பொலிந்த கண்ணகன் பொய்கைப்**
**பாழா யினநின் பகைவர் தேளம்”**[98]

இப்பாடலில் தலையானங்கானத்து நெடுஞ்செழியன் பகைவர் நிலத்தினை தனது நான்கு வகையான படைகளால் தாக்குண்டு அந்நாட்டில் தொன்றுதொட்டு வந்த பகைவர்களின் காவலையுடையச் சோலைகளையெல்லாம் அழித்தான். வற்றாதவளம் நிறைந்த மருத நிலத்தைத் தீயால் புகையூட்டி எரியூட்டினான். அத்தகைய மருதநிலம் நாடு என்ற பெயரை மாற்றி காடு எனப் பெயர் நிலைபெறுமாறு செய்தான். வயலவெளிகளில் நன்கு விளைந்திருந்த தானியவகைகளையும் நன்கு முற்றிய நெற்கதிர்களையும் நெருப்பிட்டு பொசுக்கினான். ஆநிரைகள்

மேய்ந்த இடங்களில் புலி போன்ற கொடிய விலங்குகள் தங்கச் செய்தான். ஊர் பொதுமன்றங்களில் மகளிர் ஆடிமகிழ்ந்த குரவை துணங்களை இழந்து ஒளி இழக்கச் செய்தான். ஆன்றோரும் சான்றோரும் இருந்த அவைகளில் பேய்க்கூட்டத்தின் ஆட்டம் பெருகச் செய்தான் இல்லமும் கொடையும் சிறப்பற்று விருந்தினரை வரவேற்ற இல்மகளிர் மக்களையும் மனைகளையும் இழந்து வாழ்விடம் தேடிப் பிறநாடு நோக்கிப் புறப்படவும் கழுநீர் மலர்ந்த பொய்கைகளில் கோரைப்புற்கள் வளரும்படி பாழுங்குளமாக்கினான்.

இருஅரசர்கள் தங்களுக்குள் பகைநேர்ந்து போரிட்டதால் வளம் பெருகிய நாடுகள் பலவற்றையும் அழகிய வளத்தை இழந்து காடுகளாக உருமாறச் செய்தனர்.

**“வழங்குந ரற்றென மருக்குகெடத் தூர்ந்து**
**பெருங்கவி னழிந்த வாற்ற வேறுபுணர்ந்**
**தண்ணன் மரையா வமர்ந்தினி துறையும்**
**விண்ணுயிர் வைப்பின் காடா யனநின்”**[99]

என்னும் அடிகளால் அறியமுடிகிறது. நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார் பாடிய பாடலில்

. **“மதிலும் ஞாயிலின்றே கிடங்கும்**
**நீஇ ரின்மையிற் கன்றுமேற் துகளும்**
**ஊராது நிலையு மிதுவே”**[100]

என்னும் வரிகளில் சிறந்து விளங்கிய கோட்டையின் உயர்ந்த மதிலிடத்து ஞாயில் என்ற நீர் அரணாகிய அகழியும் நீர் இன்மையினால் ஆநிரைகள் உலா வந்து தங்கும் இடமாயிற்று. இரு நாட்டு வேந்தர்களின் போருக்குப் பின்பு நாட்டில் காவல்பணி நடைபெறாது, மேலும் போரின் போது நிலமும் நீரும் பகைவரால் அழிக்கப்பட்டதால் மக்கள் வாழ்வதற்குத் தேவையான நீர்நிலைகள் யாவும் பாழ்பட்டுள்ளன. இங்ஙனம் போரினால் நீர் வறட்சியை குறிப்பினால் உணரமுடிகிறது.

**“------------------------ தானே பாங்கற்**

**கமழ்பூந் தும்பை நுதலசைத் தோனே”[101]**

என்னும் பாடலில் போரில் தன் தோழன் ஆரல் கால்களால் சூழப்பட்ட வண்டி உருளையின் குடம் போல மார்பிலே வேல் பாய்ந்து தங்க, அவன் உயிர் உடலை விட்டு நீங்காத நிலையில் சினம் கொண்டு திண்ணையில் விளையாடும் பாவை செறிந்த மணலில் குவித்து வைத்து விளையாடும் மென்மையான தோள்களைக் கொண்ட பெண்கள் நன்கு பாதுகாக்க பசிய இலைகளை கொண்ட மணமிக்க தும்பைக் கண்ணியைத் தன் நெற்றியிலே கட்டினான் போரில் தன் நண்பன் இறந்து விட்டதால் அவனது இறப்பிற்கு காரணமான பகைவரைக்கொல்வதாகத் தும்பைச் சூடிப் போர்ப்புரிய தயாராகிறான் ஒருவன் என்று பதிவு செய்துள்ளார்.

இருவருக்கும் ஏற்பட்ட போரிலே வீரர்கள் பலரும் இறந்துபட்டனர். நீர் வளங்களெல்லாம் அழிக்கப்பட்டன. இதைக் கண்டு வஞ்சினம் உரைத்து பலர் போர்புரிய முற்படுகின்றனர். அப்போரில் மீண்டும் வீரர்கள்,படைகள் இயற்கை வளங்கள் அழிவினை சந்திக்க நேரிடுவதோடு மட்டுமின்றி தோற்ற மன்னனின் ஊர்களிலுள்ள நீர்நிலைகளும், வளங்களும் அழிந்து வறண்ட நிலையே காணப்படுவதை அறிய முடிகின்றது.

வஞ்சினம் உரைத்துப் போருக்குப் புறப்படும் என்பது பேரழிவிற்கு வழிகோலும் என்பதை மற்றொருப் பாடலில், போரில் இறந்துபட்ட தன் உடன் பிறந்தவனுக்காகப் போரிட வஞ்சினம் உரைக்கின்ற நிலையை,

**“எம்முற் றம்பியேன் நம்பியொ டொரங்கு**
**நாளைச் செய்குவெ னமரெனக் கூறி**
**புன்வயி நருத்தலுஞ் சொல்லான் பன்மான்**
**கடவு மென்ப பெரிதே யதுகேட்டு**
**வலம்படு முரசின் வெல்போர் வேந்தன்**
**இலங்கிரும் பாசறை நடுங்கின்**
**றிரண்டா காதவன் கூறிய தெனவே”[102]**

எனும் புறப்பாடலில் போரில் நேற்று என் தமையனைக் கொன்றவனுடைய தம்பியுடன் ஒரு படித்தாக, நாளை யானைப் போர் செய்து அவனைக் கொல்வேன் என சூளுரைத்துத் தன்னுடையப் புல்லிய வயிற்றினை உண்பித்தலையும் கருதாதவன், ஆராய்ந்த குதிரையை மிக விரைவாகச் செலுத்துவான். அச்செய்தியைக் கேட்டு வெற்றி உண்டாவதற்கு காரணமாகிய முரசினையும், வெல்லும் போரினையும் உடைய வேந்தனையும், விளங்குகின்ற பெரிய பாசறை, அவன் கூறிய சூளுரை பிழையாகாது என்று நடுங்குவதாயிற்று என்று அமைந்துள்ளது.

இதன்மூலம் போரில் இறந்துப்பட்ட தன் உடன் பிறந்தவருக்காக வஞ்சினம் கூறிச் சென்று போர் புரிவதால் நாட்டின் வளங்களான விலங்குகள், தாவரங்கள், நீர்நிலைகள் எல்லாம் அழிக்கப்பட்டு வறட்சி நிலை காணப்படும்.

**“-------------------------தாவாது**

**வஞ்சினம் முடித்த வொன்று மொழி**

**மறவர்”**[103]

என்று மேற்கூறியப் பாடலடிகளும் இதனை மெய்ப்பிக்கின்றன.

சங்ககாலத்தில் போரில் பகைநாட்டின் இயற்கை வளங்களாகிய நீர்நிலைகளையும் வயல்வெளிகளையும் அழித்துப் பொருளாதார நிலையில் பேரழிவுகளை ஏற்படுத்தினர்.

**“மாவாடியபுல நாஞ்சிலாடா**

**குடாஅத் சென்னிய கடுங்கண்யானை**

**இனம் பரந்தபுலம் வளம்பரப்பறியா**

**நின்படைஞர் சேர்ந்த மன்றங் கழுதை போகி”**[104]

என்ற அடிகளில் போரில் குதிரைகள் சென்ற பகையரசருடைய வயல்கள் கலப்பைகள் உழ வேண்டாதனவாயின. யானைப்படையிலுள்ள மதத்தைத் தலையிலேயுடையனவும் கொடுமையானவையுமாகிய யானைக்கூட்டங்கள் பரந்து சென்று போர் செய்த வயல்கள் மிகுந்த வளம் தருதலை ஒழிந்தன

நின் காலாட்படையிலுள்ள போர் வீரர்கள் சென்று போர்ப்புரிந்த மன்றங்கள் கழுதைகள் சென்று மேயும் பாழிடங்களாயின.

**“நானிலங்களில் நீர்வளப்பெருக்கத்தால் நன்செய் வேளாண்மையை அடிப்படைப் பொருளாதாரமாகக் கொண்ட மருதநிலம் செழிப்பு மிக்கதாகக் கவர்ச்சிநிலப் பகுதியாக அமைந்திருந்தது. அரசுக்கான நிரந்தர வருவாய் ஆதாரமாக வேளாண்மை அமைந்ததால் இந்த நிலத்தை மையப்படுத்தியே வேந்தர்தம் போர்கள் நிகழ்ந்துள்ளன.”**[105]

போரின் மையமாகச் செல்வச்செழிப்பு மிகுந்த ‘மருதநில’ வளமானது பேரழிவிற்குக் காரணமாக அமைந்ததை இவ்விளக்கத்தின் மூலம் அறியமுடிகிறது. மேலும், மனித வாழ்வின் முதன்மை ஆதாரமான வாழ்விடங்களுக்கும் வாழ்வியல் பொருட்களுக்கும் அழிவினை ஏற்படுத்தி மிகப்பெரும் பேரழிவுகள் உருக்கொள்வதற்குச் சங்கப்போர்நெறிகள் வழிவகுத்தன என்பது புலனாகின்றது.

**3.நீர்நிலைகள் மாசடைதல்**

பகைவர்களின் நீர்நிலைகளை அழித்ததோடு நில்லாமல் யானைகள் குதிரைகள் போன்ற படைகள் மூலம் நீர்நிலைகளை மாசடையச் செய்ததையும் அறிய முடிகின்றது. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் போர்த்திறமையைப் பாடும் நெட்டிமையார் அவரால் அழிக்கப்படும் பகைவரது நகரின் அழிவை,

**“கடுந் தேர்குழிந்த ஞெள்ள லாங்கண்**
**வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்**
**காப்புடைய கயம்பாடினை”**[106]

இப்பாடலடிகளில் பாண்டியன் பகையரசனின் அகன்ற இடமுடைய மதில்களைத் தேர் விரைந்து செல்லத் தெருக்களில் வெண்மையான வாயுடைய கழுதையைப் பூட்டிப் பாழ் செய்தான். பகைவர் நாட்டில் பறவைகள் ஆரவாரிக்கும் புகழ் நிறைந்த விளைவயல் அங்கு செருக்குடைய குதிரைகளின் கவிந்த குளம்புகள் தாவுமாறு தேரைச்

செலுத்தினான் பரத கழுத்தையும், பரந்த அடியையும் சினங்கொண்ட பார்வையையும்,ஒளிபொருந்திய தந்தங்களையும் உடைய ஆண் யானைகள் பலவற்றைப் பகைவர் தம் காவல் நிறைந்த நீர்நிலைகளில் படியச் செய்து கலக்கினான் என்று பாடியுள்ளார். நாட்டிற்கு முதன்மை ஆதாரமாக விளங்கும் நிலம்,நீர் இவையனைத்தையும் அழிப்பது என்பது மக்கள் வாழ்வதற்கான வாழ்வாதாரங்களை அழிவிற்கு உட்படுத்திப் பேரழிவினை ஏற்படுத்துவதாகும். மேலும்,

**“இரும்பூதால் பெரிதே கொடித்தேர் அண்ணல்**
**வடிமணி அணைத்த பணைமருள் நோன்தாள்**
**கடிமரத்தான் களிறு அணைத்து**
**நெடுநீர துறை கலங்க”**[107]
**“களிறுபொரக் கலங்கக கழல்முள் வேலி**
**அரிது உண் கூவல் ”**[108]

வடித்துச்செய்ய பெற்ற வலிமையான கால்களையுடைய யானைகளை பகைவர்களின் காவல்மரத்தில் கட்டுகின்றனர். அங்ஙனம் கட்டுவதால் அருகிலுள்ள நீர்நிலைகளைக் கால்களால் கலக்கம் செய்து பயன்பாட்டுக் உதவாத வகையில் மாசுஅடைய செய்கின்றன.

**“களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்**
**வினைபுனை நல்லில் வெவ்வெரி பினைப்பக்**
**கணையெரி யுரறிய மருங்கும”**[109]

எனும் பாடலில் பகைவரது நாட்டில் உள்ள நீர்த்துறைகளை யானைகள் கலக்கின. வாள் ஏந்திய ஏவல் வீரர்கள் கைக்கொண்டு எஞ்சியப் பொருளைப் பகைவர்கள் உண்ணாதவாறு விளைநிலங்கள் அழிக்கப்பட்டன. இல்லில் சமைத்தற்கு எழும் தீயைப் பெருந்தீயாக அழித்தலால் நகரின் புறம் எங்கும் ஓசை கேட்டது. நாட்டிற்கு முதன்மையான நீர்நிலைகளைப் பகைநாட்டவர் உண்ணாதவாறு அழித்தனர். மேலும் வீட்டில் சமைப்பதற்கு எழும் தீயைப் பெருந்தீயால் அழித்தல் என்பதை உணரமுடிகிறது.

இவ்வாறு மனித ஆளுகையில் உச்சமாகப் பகைநாடு பேரழிவிற்கு உள்ளான கல்லாடனார் பதிவு செய்துள்ளார்.

**“நெறிசெல் வம்பலர்க் கொனற் தெவ்வர்**
**ஏறிபடை கழீஇய சேயரிச் சில்நீர்**
**அறுதுறை அயிர்மணற் படுகரைப் போகி**
**சேயர் என்றலின்”**[110.]

பாலை நிலத்தில் வசிக்கக்கூடிய ஆறலைக் கள்வர்கள் தொழிலில் ஈடுபட்ட போது குருதிப்படிந்த கருவிகளை அருகாமையிலுள்ள குறைந்தளவே நீரினை உடைய நீர்நிலைகளில் கழுவினர் என்ற குறிப்பு உள்ளது.

பகையரசர்களின் நாடு நகரங்களை முற்றிலும் அழித்து இன்பமடைந்தனர். பகைவர் உள்ளே புக அஞ்சுகின்ற காவல் காட்டையும் உழவர்கள் செய்த ஏர்த்தொழிலால் விளைந்த நெல்மணிகளையும் நன்செய் பகுதிகளையும் மலர்கள் மலர்ந்து அழகுறக் காணப்படும் பொய்கைகளையும் முதலைகள் வாழும் ஆழமும் அகலமும் கொண்ட அகழிகளையும் அழித்தனர். இதனால் அப்பகுதியில் நீர்வளம் குன்றி வறட்சி தோன்றியது.

**4.குடிபெயர்தல்**

தொடர்ந்து பகை ஏற்படக் கூடிய நிலையில் மக்கள் வாழ்வதற்கு தேவையான உணவு நீர் போன்ற அனைத்திலும் தடை ஏற்பட்டு நீர்நிலைகள் பாழ்படுவதால் பகைவூரில் வசிக்க இயலாத சூழல் உருவாகும். அச்சூழ்நிலையில் மக்கள் தாங்கள் நிலத்தை விட்டு தொழிலுக்காக இடம்பெயர்கின்ற சூழல் தோன்றுகின்றது. வறட்சியால் மக்கள் நிலங்களை இழந்து புலம்பி நிற்கவும் தங்களுடைய வாழ்விடங்களை இழந்து பிற நாடுகளுக்கு செல்லவும் போர் வழிகோலுகிறது.

**“புலந்து உழைப்**

**பண்டிடை நன்னாட்டுப் பகை நிலை வந்தென**

**அதுகைவிட்டு அகன்று ஒரீஇ”**[111.]

மலர் நிறைந்த வயல்களில் தாமரை இசைபாடித் தன் துணையோடு மகிழ்ந்திருக்கும் ஆனால் பகைவரால் அந்நாட்டில் நீர் நிலைகள் வற்றி நீரின்றி போகும் காலங்களில் பொய்கைகளில் தாமரை சாய்ந்து விடும் அதனால் ஆண் வண்டு வேறு மலரை நாடிச் செல்லும் .அது போல் மக்கள் அந்நாட்டைக் கைவிட்டு வேறு நாட்டிற்கு குடிப்பெயர்ந்து சென்றதை அறியலாம்.

**5.மரங்கள் அழித்தலில் வறட்சி**

மனிதர்கள் மற்றும் பிற விலங்குகள் உயிரினங்கள் அனைத்தும் உயிர் வாழ்வதற்குத் தேவையான உயிர்வளியைக் கொடுப்பது மரங்கள். மரங்கள் அழிக்கப்படுவதினால் மழையும் குன்றி வறட்சி ஏற்படுகின்றது. பண்டைய காலத்தில் அரசுலாக்கம் ஏற்பட்ட பின்பு அங்குள்ள காடுகளையெல்லாம் அழித்து நாடாக மாற்றியதை,

**“காடு கொன்று நாடாக்கி”**[112]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதனால் காட்டிலுள்ள மரங்கள் விலங்குகள் என்று பல்வேறு விதமான உயிரினங்கள் பேரழிவிற்கு ஆட்ப்பட்டிருக்கும் என்பது தெளிவாகின்றது. வெட்டி எரிக்கப்பட்ட கொல்லை நிலத்தில் குறவனால் தறிக்கப்பட்ட துண்டம் போன்ற கரிந்த புறத்தையுடைய விறகால் அடுக்கப்பட்ட மரங்கள் என்று கூறுவதிலிருந்து மனிதன் தன் தேவைக்காக மரங்களை அழித்ததை,

**“எறிபுனக் குறவன் குறைய லன்ன**

**கரிபுற விறகி”**[113]

என்ற பாடல் அடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. மரத்தை வெட்டும் தச்சர் பெற்ற சிறுவர்கள் தம் மழுவோடு காட்டிற்குச் சென்றால் அங்குள்ள மரங்கள் அவர்களின் விருப்பத்திற்கு ஏற்றவாறு பயன்படும் என்று

அமைந்துள்ளது. இதன் மூலம் சங்ககாலத்திலும் மக்கள் தங்களது அடிப்படைத் தேவைகளை நிறைவேற்ற மரங்களை வெட்டி வீழ்த்தினர் என்பதை,

**"மரங்கொ∴றச்சன் கைவல் சிறாஅர்**

**மழுவுடைக் காட்டகத் தற்றே"**[114.]

எனும் பாடலடிகளில் புலப்படுத்துகிறது.

மனிதனின் ஆளுகை வேட்கையினால் இயற்கைக்கு ஏற்பட்ட பேரழிவில் காடழித்தலும் ஒன்றாகும். இவ்வாறு காடுகளை, மரங்களை அழிப்பதால் மழைவளம் இன்றி வறட்சி ஏற்படுகின்றது. வறட்சியினால் நீரின்றி மக்கள் துன்புறுகின்றனர். நிலவுலகு வெப்பமிகுதியால் பெருந்துன்பத்திற்கு ஆளாகின்றது. இவ்வாறு மரங்களை அழிவிற்குட்படுத்தி நீர் ஆதாரத்தினை அழித்துப் பேரழிவினை ஏற்படுத்தும் நிலை இன்று பன்மடங்கில் பெருகிவருகின்றது.

**"சுருங்கிக் கொண்டிருக்கிற நன்னீர் வளங்களுக்கான மோதல்கள், பலம் பொருந்திய போர்கள் சூழ்ந்த உலகத்தை நோக்கி நாம் சென்று கொண்டிருக்கிறோம். இந்த முரண்பாடு அல்லது சண்டை என்பது தேசங்களுக்கிடையே, ஏழை பணக்கார நாடுகளுக்கிடையே,கிராம நகர்ப்புற மக்களுக்கிடையே, அல்லது இயற்கைக்கும் செயற்கைகளுக்குமிடையே ஏற்படலாம்"**[115]

என்பதின் வாயிலாக இயற்கையை முரணித்து வாழும் நிலையில் இயற்கையினாலும் செயற்கையினாலும் பேரழிவுகள் ஏற்படும் என்பதை விளக்குகின்றது.

வளங்களை மனிதன் அழிப்பதால் ஏற்படும் பேரழிவுகள் பலவாகும். சுங்ககால மன்னர்கள் தங்களின் ஆளுகை வேட்கையால் மரங்களை அழித்ததால் பல்வேறு வகையில் பேரழிவுகளைச் சந்தித்திருக்கலாம். மேலும் மனிதர்கள் தங்கள் வாழ்வாதாரத்திற்காக மரங்களை அழித்துள்ளார். இதனை,

**“மருந்துகொண் மரத்தின்**

**ஆர நெருப்பின”**[116]

என்ற அடிகளின் மூலம் மனிதன் உணவிற்கும்,மருந்திற்கும் சில வகை மரங்களை அழித்துள்ளான் என்பதை உணர முடிகின்றது. உணவைச் சமைத்து உண்பதற்கு விறகாக மரங்களை வெட்டி பயன்படுத்தினான். மேலும், மனிதன் தன் தேவைக்காகப் பல வளங்களையும் அழித்துள்ளான என்பதை,

**“மரையான் கறந்த நுரைகொ பீம்பால்**

**மான்றடி புழுக்கிய புலவுநாறு குழுசி**

**வான்கே ழிரும்புடை கழாஅ தேற்றிச்**

**சாந்த வறகி னுவித்த புன்கம்”**[117]

இப்பாடலில் மானின் இறைச்சியைச் சமைத்த புலால் நாறும் பனையை கழுவாதே. முரையாவைக் கறந்த நுரை கொண்ட இனிய பாலைஉலை நீராக வார்த்து ஏற்றி சந்தன விறகால் எரியூட்டித் திணையைச் சமைத்தனர், என்ற பதிவின் மூலம் மனிதர்களின் தேவைக்கு விலங்குகள் மற்றும் தாவரங்களை அழித்து வறட்சிகளை ஏற்படுத்தப்பட்டதை அறிய முடிகிறது. மேலும்,

**“கான்யாறு தழீஇய அகனெடும் புறவிற்**

**சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கு**

**வேட்டுப்புழை யடுப்ப மாட்டிக்காட்ட**

**இருமுட் புரிசை ஏமுற வளைஇப்**

**படுநீர்ப் புணரியற் பரந்த பாடி”**[118]

என்ற பாடலில் காட்டாறு சூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்து நீண்ட துரத்தேயும் மணம் வீசும் பிடவத்தோடு பசுமையான புதர்களை வெட்டியழித்து, வேருடைய அரணையும் அழித்து இடுமுள் வேலியாக இட்டு அமைத்த மதிலகத்துக் கடல் போன்று அகன்ற பரப்புடையதாக அமைக்கப்பட்டப் பாசறை என்று போர் நிகழ்வின் போது மனிதர்கள்,

யானைகள், குதிரைகள் மட்டுமல்லாது பல்வேறு தாவர உயிரினங்களும் அழிக்கப்பட்டுள்ளது. மனித ஆளுகையினால் இயற்கைச் சார்ந்த வளங்களும் அழிக்கப்பட்டு வறட்சி நிலையினை ஏற்படுத்தியுள்ளனர் என்பது புலப்படுகின்றது.

**“இயற்கையை நுகர்ந்து தீர்ப்பதற்கு என்றே கருதும் நவீன மனிதச் சமூகம் இயற்கையின் அழிவில் தனது கொண்டாட்டத்தை முன் வைக்கிறது. இதனால் இயற்கையும் உயிர்த்தொகுதிகளும் இயற்கையுடன் இணைந்த வாழ்வும் உற்பத்தி முறைகளும் பெருஞ்சிதைவை நோக்கிச் செல்கின்றன.”**[119]

என்று இயற்கையில் இருந்து முரண்படும் நிலையானது இக்காலத்தின் வறட்சிப்பதிவாக இருப்பினும் சங்ககாலத்திலும் இதற்கானச் சான்றுகள் இலைமறையாகக் காணப்படுகின்றன.

நீரால் தான் உயிரின வாழ்வு தொடர்ந்து நடைபெறுகின்றது. வருடந்தோறும் ஒரு ஆண்டிற்குத் தேவையான சராசரி மழை பெய்வதினால் மட்டுமெ நிலப்பகுதி செழிப்புற்று வளம் பெருகும். இத்தகைய மழை பொழியவில்லை என்றால் தமிழகத்தில் வறட்சி நிலை காணப்படும். மேலும் மரங்கள் அழிக்கப்படுவதால் நீர்ப்பற்றாக்குறை ஏற்படும். வேளாண்மை செய்வதற்கான இயற்கை வளம் அழியும். மழையின்மையினால் புவி வெப்பமடைந்து வருவதால் மக்கள் மற்றும் பிற உயிர்கள் வாழ்வதற்கு உகந்த சூழல் இல்லாமல் வறண்ட நிலை ஏற்படும்.

### 3.4 வறட்சி மேலாண்மை

மழைப்பொழிவிற்கு நீர்ச்சுழற்சியே காரணமாகிறது. அத்தகைய நீர்ச்சுழற்சியால் சில இடங்களில் மிதமான மழையும் சில இடங்களில் தேவைக்குப் போதுமான மழையும் மேலும் சில இடங்களில் பற்றாக்குறையும் காணப்படுகின்றது. இயற்கையாகவே மழை குறைந்த பகுதிகளில் மக்கள் பசி, பஞ்சம், நோய் போன்ற காரணங்களால் அவதியுறுகின்றனர்.பழந்தமிழர்கள் வாழ்விலும் வறட்சி பாதிப்பை ஏற்படுத்தி உள்ளதைச் சங்கப்பாக்கள் வாயிலாக அறியலாம்.

**“மக்கள் பெருக்கமும் அவர்களின் நீர்த்தேவையும் பெருகி வரும் இன்றையச் சூழலில் தனிநபருக்குக் கிடைக்கும் நன்னீர் வளம் உலகெங்கும் குறைந்து வருகின்றது .உலகளவில் சுமார் 110 கோடி மக்கள் தற்பொழுது நீர் கிடைக்காமல் பற்றாக்குறையுடன் வாழ்கிறார்கள். சுமார் 102 கோடி மக்கள் வறுமையின் காரணமாக உணவின்றிப் பசித்து வறியுடன் இருக்கிறார்கள்.சுமார் 86 கோடி மக்கள் ஊட்டச் சத்துக் குறைந்த உணவை உண்டு வாழ்கிறார்கள். அவற்றிற்கெல்லாம் நீர்ப் பற்றாக்குறை தான் காரணம்.என்று ப.மு.முனைவர் நடராசன் குறிப்பிடுகின்றார்”**[120]

சங்ககால மக்கள் இயற்கையோடு இணைந்த வாழ்வினை மேற்கொண்டவர்கள்.ஒன்றோடு ஒன்று சார்ந்த இயங்கும் திறன் பெற்ற ஐம்பூதங்கள் மக்களை பாதுகாக்கின்றது. இவற்றினூடே மாற்றம் நிகழும் போது மனிதன் அல்லலுறுகின்றான். நீரினால் தோன்றும் வறட்சி கடற்கோள் வெள்ளம் போன்ற வறட்சியால் பாதிக்கப் பட்டாலும் அதனை சமாளித்துப் பாதுகாக்கும் வழிமுறைகளை அறிந்தவர்களாக தமிழர்கள் இருந்துள்ளனர். அவ்வகையில் வறட்சி மேலாண்மை செயல்பாடுகளை வளம் மேலாண்மை, வாழ்வியல் மேலாண்மை என இருப்பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளது.

### 3.4.1 வளம் மேலாண்மை

இயற்கையில் கிடைக்கக்கூடிய தாவரங்கள் மூலம் மக்கள் தங்களின் நீர்த்தேவையைப் பூர்த்தி செய்தமையை சங்கப்பாக்களின் வழி அறிய முடிகின்றது.

### 1.வறட்சியைத் தாங்கும் தாவரங்கள்

பூமியில் சில வகையானத் தாவர வகைகள் நீரினை கிரகித்துக் கொண்டு வறண்ட காலங்களில் பயன்படுத்திக் கொள்ளும் தன்மையினை இயற்கையிலேயே பெற்றவையாக உள்ளன. அவ்வகையான தாவரங்களை சங்கஇலக்கியப் பாக்களில் காணமுடிகின்றது. பாலைநிலப்பெருவழியில் வளரக் கூடிய மரங்கள் செடிகள் வறட்சியைத் தாங்கி நிற்பவையாக உள்ளன.

**2.மரல் செடி**

மரல் செடி ஒரு வகையான கற்றாழை இனத்தைச் சார்ந்தது. பாலை நிலப் பெரு வழி மற்றும் குறிஞ்சி நிலங்களில் வளரக்கூடியதாகும்

**"மரல்நார் உடுக்கை மலை உறை குறவா"**[121]

**"மரைஆ மரல்கவர மாரிவறப்ப**
**வரையோங்கு அருஞ்சுரத்து ஆரிசைச் செல்வோர்**
**சுரையரபு மூழ்கிச் சுருங்கிப் புரையோர் தம்**
**ஊள்நீர் வறப்பப் புலர்வாடும் நாவிற்குத்**
**துண்ணீர் பெறாஅத் தடுமாற்று அருந்துயரம்**
**கண்ணீர் நனைக்கும் கடுமைய"**[122]

மலைகள் உயர்ந்து நிற்கும் காட்டுவழியில் காட்டுப் பசுக்கள் நீருக்காக அலைகின்றன. அப்பொழுது அருகிலுள்ள மரல் என்னும் செடியைத் தின்று உயிர் வாழ்கின்றது என்று இப்பாடல் குறிப்பிடுகின்றது.

**3.அறந்தலைப்பட்ட நெல்லிக்கனி**

பாலைபெருவழியில் பொருளீட்டச் செல்வோர் வம்பலர்கள் ஆறலைக் கள்வர்கள் ஆகியோர் தண்ணீர் பெறாது துன்புறுவர் என்று கருதி அதனை நீக்கும் பொருட்டு பாலைநிலங்களில் நெல்லி மரங்களை வளர்த்துள்ளனர். வழிசெல்வோர் இவற்றின் கனியை உண்டு நீர் விடாயைத் தணித்துள்ளனர். நீர் வேட்கைத் தணிப்பதற்காக சில வகையான மரங்கள் செடி வகைகளின் காய்களை உண்டதை சங்கப்பாக்களில் காண முடிகின்றது.

அதில் பசுங்காய் என்றழைக்கப்படும் நெல்லி சிறப்பிடம் பெறுகின்றது. நெல்லி மரம் பாலை நிலத்தில் வளர்பவை.நெல்லி மரத்திலிருந்து முதிர்ந்து விழும் நெல்லக்கனிகளை சுரத்திடைச்செல்வோர் இக்கனியை நீர் வேட்கைத் தீர்ப்பதற்கு சுவைத்துள்ளனர்.

**"சுரந்து இடைவழங்காச் சேண்சி னம அதர**
**சிறுஇலை செந்நித் தீம் சுவைத் திரள்காய்**

**உதிர்வன தாஅம் இத்தம் தவிர்வின்று**

**"சிறியிலை நெல்லிக் காயகண் டன்ன"[123]**

**"குறுவிழிக் கண்ண கூரல் அம்  குறுமுயல்"[124]**

**"நெல்லியம் புளிச்சுவைக் கனவி யாஅங்கு"[125]**

**"புன்காழ் நெல்லி வன்புலம் சீறநக"[126]**

மெல்லிய விதைகளைக் கொண்ட நெல்லி சிறிய வகையான இலைகளைக் கொண்டதாகவும் புளிப்புச்சுவையுடையதாகவும் உள்ள நெல்லிக்காயினைத் தாகத்தை தணிக்கப் பயன்படுத்தியுள்ளனர்.

அதியமான் நெடுமான் அஞ்சி அவன் பெற்ற அரிய நெல்லிக்கனியினை ஔவையாருக்குக் கொடுத்தான். இக்கனியினை உண்டால் சாதலை தவிர்க்க இயலும்.அதனைப் பெற்ற பிராட்டி

**"நீலமணி மிடற்ற ஒருவன் போல**

**மன்னுக பெரும் நீயே தொன்னிலைப்**

**பெருமலை விடகரத்து அருமிசைக் கொண்ட**

**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா**

**தாதல் நின்னகத் தடக்கிச்**

**சாதல் நீங்க எமக்கீற் தனையே"[127]**

இச் செய்தியை நத்தனாரும்

**"............மால் வரைக்**

**கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி**

**அமிழ்து வினை தீங்கனி ஔவைக்கீந்த**

**உரவுச் சினங்கனலும் உளித்திகழ் நெடுவேல்**

**அரவக் கடல்தானை அதிகனும"[128]**

அதியர் கோமானே அரசி பெறுதற்கரிய தென்று கருதாமல் அதனால் பெறும் பெரும் பேற்றினை எமக்குக் கூறாது சாதல் ஒழிய எமக்கு நெல்லிக்கனி அளித்தாய்.ஆதலின் நீலமணி மிடற்று ஒருவன் போல நீயும்

சாவாதிருத்தல் வேண்டும் என்று கூறி வாழ்த்துவதன் மூலம் இக்கனியின் சிறப்பை அறிய முடிகின்றது.

**“சுரந்தலைப்பட்ட நெல்லிஅம் பசுங்காய”**[129]

பசுங்காய் என்பது வறட்சியான சூழலிலும் நீர்த்தன்மை குறையாத பசுமைமாறாக் காய் என்பது புலப்படுகின்றது

**“செல்பெருங் காளை பொய்ம்மருண்டு சேய்நாட்டுச்**
**சுவைக்காய் நெல்லிப் போக்கு அருந் பொங்கர்**
**வீழ்கடைத் திரள்காய் ஒருங்குடன் தின்று”**[130]

பாலைப் பெருவழியில் வறண்ட காலங்களில் சுனையில் சிறிதளவே நீர் இருக்கும். அந்நீரானது தாகத்தைத் தீர்க்க இயலாது என்பதால் இளமரங்களாகிய திரட்சியான நெல்லிக்காயினை

**“மரையான் நல்லேறு தீப்புளி நெல்லியுண்டு**
**பைஞ்சுனை நீரைப் பருகும்”**[131]

என்று புலவர் குறிப்பிடுள்ளார்.

**“கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டு ஆடும்”**[132]

நெல்லிக்காயைத் தின்று விட்டு அதன் கொட்டைகளைக் கொண்டு கோடுகளைப் போட்டு வட்டாட்டம் ஆடியதை இப்பாடலில் அறியலாம்.

**சாத்துஇடை வழங்காச் சேண்சிமைஅதர**
**“சிறியிலை நெல்லித் தீம்சுவை திரள்காய்**
**உதிர்வன தாஅம் அத்தம் தவிர்வு இன்று**
**புள்ளி அம்பினை உணீஇய உள்ளி”**[133]

**“புறவுக் குயின்று உண்ட புன்காய் நெல்லிக்**
**கோடை உதிர்ந்த குவிகாண் பசுங்காய்”**[134]

உடன்போக்குக்கு உட்பட்டு காட்டித்தே செல்லும் தலைவி நெல்லி தின்ன வேட்டோளெனத் தோழி ஒரிடத்துக் குறிப்பிடுகின்றாள்.தாகத்தைத்

தணிக்க விலங்குகளும் பறவையினங்களும் நெல்லிக்காயை உண்டதை இப்பாடலில் அறியலாம்

**4.உயவைக் கொடி**

கருவிளை என்றும் காக்கட்டான் என்றும் சொல்லப்படும் உயவைக் கொடியினை தண்ணீர் தாகத்திற்கு மாற்றாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**“மாறுகொள ஒழுகின ஊறுநீர் உயவை**
**நூறொரு குழீஇயின கூவை சேற சிறந்து**
**உண்ணுநர் தடுத்தன தேமா”**[135]

வேளிர்குலத்தில் தோன்றிய நன்னனின் மலையில் காணப்படும் உயவைக் கொடியினைத் தின்றால் நீர் வேட்கைத்தணியும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**“உகாய் மரம்**
**மிளகு பெய்தனைய சுவைய புன்காய்**
**உலறுதலை உகாஅய்த் சிதர் சிதார்த்து உண்ட**[136]
**குயிற்கண் ணன்ன குரூஉக்காய் முற்றி**
**மணிக்காசு அன்ன மானிற இருங்கனி**
**உகாஅ மென்சினை உதிர்வன கழியம்**
**வேனில் வெஞ்சுரம்”**[137]

என்ற பாடல் வரிகள் பாலை நிலத்தில் வறட்சியைத் தாங்கவல்ல மரமாகும். அதன் காய்கள் குயிலின் கண் போன்று மிகச்சிறியதாக இருக்கும்.உகாய் காய்களின் சுவை மிளகு காரச்சுவையுடையதாகும்.

**“புறவுப்புறத் தன்ன புன்கால் உசாஅத்து**
**இறவுச் சினை அன்ன நளிகனி உதிர**
**விடுகணை வில்லொடு பற்றி கோடுஇவர்பு**
**வருநர்ப் பார்க்கும் வன் கண் ஆடவர்**

**நீ்நசை வேட்கையின் நார்மென்று தணியும்**

**இன்னாக் கானமும் இனிய பொன்னோடு”**[138]

என்ற பாடலில் பாலையில் வழிப்பறி கொள்ளையில் ஈடுபடும் கள்வர்கள் நீர் வேட்கையைத் தணிக்க உகாய் மரத்தின் பட்டையை மென்று தாகத்தைத் தணித்துள்ளதை அறியலாம்.

**யாமரம்**

யாமரம் தற்பொழுது உலைத்தி என்றும் கூந்தற்பனை என்றும் அழைக்கப்படுகிறது. அம்மரம் பார்ப்பதற்கு பெண்ணின் கூந்தல் போல காணப்படுவதால் அப்பெயர் பெற்றது.

**“பொத்து இல் காழ அத்த யாஅத்துப்**

**போரி அரை முழுமுதல் உருவக்குத்தி**

**மளம்கெழு தடக்கையின் வாங்கி உயங்கு நடைச்**

**சிறுகட் பெருநிரை உறுபசி தீர்க்கும்”**[139]

**“மிசை மரம் சேர்த்திய கவைமுறி யாஅத்து**

**நார்அரை மருங்கின் நீர்வரப் பொளித்துக்**

**களிறு அவைத்திட்ட கோதுடைத் ததரல”**[140]

பாலைநில பெருவழியில் தண்ணீர் கிடைக்காததால் யானை யாமரத்தின் அடிப்பகுதிப் பட்டையை குத்தி வளைத்து உரித்து நார் எடுத்து அதில் ஊறும் நீரைத் தானும் பருகித் தன் குடும்பத்திற்கு நீருண்ணுமாறு கொடுத்துப் பசியைத் தீர்த்துள்ளதை அறியலாம்.

இயற்கையிலேயே சில வகையான மரங்கள் செடிகள் கொடிகள் பூமியில் வாழும் உயிரினங்களுக்கு உணவுத்தேவையை மட்டும் பூர்த்தி செய்யாமல் தன்னிடமுள்ள வேர்களின் மூலம் நிலத்திற்குக் கீழுள்ள நீரைச் சேகரிக்கும் ஆற்றல் மையமாகத் திகழ்கின்றது.இவ்வுண்மையை உணர்ந்த தமிழர்கள் பாலை நிலத்தில் வறட்சியினைத் தாங்கக் கூடிய பனை ஈச்ச

ஆல் போன்ற பல வகையான மரங்களை வளர்த்துள்ளனர். இதனால் தான் வறட்சியான சூழலிலும் நீர்த்தேவையை நிறைவேற்றியுள்ளனர்.

**"சேற்று நீர்**
**மரல்சாய மலைவெம்ப மந்தி உயங்கு**
**உரல் போல் அடிய உடம்பு உயங்கு யானை**
**ஊறுநீர் அடங்களின் உ்கயம் காணாது**
**சேறு சுவைத்துத்தம் செல்லுயிர் தாங்கும்"**[141]

மலை முழுவதும் வெப்பத்தால் காய்ந்து விட்டதால் நீர்ப்பசையின்றி மரம் செடி கொடிகள் வாடி நிற்கின்றன. மெலிந்து விட்ட யானை பருகுவதற்கு நீரில்லாமல் சேற்றைக் கிளறி அந்நீரினைச் சுவைத்துள்ளதை அறியலாம்.

வெப்பத்தினால் நிலத்துக்கு அடியிலுள்ள நீர் ஆவியாகி மேலெழும்பும் பொழுது நிலத்தின் மேற்பகுதி சற்று சேறுசகதியுமாக இருக்கும். அச்சேற்றிலுள்ள நீரினை அருந்தி யானை உயிர் வாழ்கின்றது என்பதன் மூலம் வறண்ட காலங்களிலும் நிலத்தடி நீர் இருந்துள்ளதை அறியலாம்.

### 3.4.2 வாழ்வியல் மேலாண்மை

அன்றாட வாழ்வியல் தேவைகள், பழக்கங்கள் வாயிலாக மக்கள் தங்களின் வறட்சியை போக்கிக் கொண்டதை இலக்கியங்களில் விளக்கப்பட்டுள்ளது.

#### 1.பண்ட மாற்றுதல்

பழந்தமிழர்கள் நிலத்தினைக் கொண்டு அவர்களின் தொழிலானது வரையறுக்கப்பட்டதால் வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து உணவுப் பொருட்களையும் உருவாக்க இயலாது. அச்சூழலில் தான் விளைவித்த பலபொருட்களைக் கொடுத்து பிற நிலங்களிலுள்ள மக்களின் பொருட்களைப் பெற்றுக் கொண்டார்கள்.சங்க இலக்கியங்களில் அப்பண்டமாற்று முறையானது நான்கு வகையான நிலங்களுக்கு

இடையிலே நடைப்பெற்றுள்ளது. பின்பு வணிகமாக மாறி பிற நாடுகளிலும் காசு கொடுத்துப் பெற்றுக் கொண்டதை அறிய முடிகின்றுது.

**“பகர்விரைவு நெல்லின் பல அரி அன்ன**

**தகர்விரவு துருவை வெள்ளையோடு விரைஇக்**

**இல்லெ கடத்திடைக் கடலிடைக் கடலின் இரைக்கும்**

**புல்யாட்டு இனநீரே எல்லினீர் புகினே**

**பாலம் மிதவையும் பண்ணது பெறுகுவீர்”**[142]

மலைகளில் கானவர்கள் தங்களிடமுள்ள கிழங்கு தேன் போன்றவற்றைக் கொடுத்து மருதம் மற்றும் முல்லை நில மக்களிடம் பல நிறமுடைய அரிசியையும் செம்மறியாடுகளையும் பெற்ற செய்தியை இப்பாடலில் அறிய முடிகின்றது.

கோவலர்கள் தங்களிடமிருந்த பாலைக் கொடுத்து அதற்கு பதிலாக தானியங்களைப் பெற்றச் செய்தியை

**“பாலொடு வந்து கூழொடு பெயரும்**

**யாருடை இடையன்”**[143]

முதுகூத்தனார் விளக்குகின்றார்.

மருதநிலங்களில் நெல்லுக்கு மாற்றாக உமணர்கள் உப்பினை விற்றதை

**“கதழ்கால் உமணர் காதல் மடமகள்**

**சில் கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி**

**நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்**

**சேரி விலைமாறு கூறலின்”**[144]

மலைப்குதிகளில் வாழ்ந்த குறவர்கள் தங்களின் சுற்றத்தினரின் பசியைப் போக்க யானைத் தந்தங்களைக் கொடுத்து மாற்றாக தானியங்களைப் பெற்றுச் சோறு சமைத்து உண்டனர் என்பதை கபிலர் குறிப்பிடுகின்றார்.

வறட்சியான காலங்களில் தங்கள் பசியைப் போக்குவதற்கும் எதிர்கொள்ளுவதற்கு இம்முறை பேருதவியாக இருந்துள்ளதை அறியமுடிகின்றது.

**2. பகிர்ந்துண்ணும் மரபு**

தமிழர்களிடையே தனக்கு கிடைத்த நீரை மற்றவர்களுக்கு கொடுத்து பகிர்ந்து மானும் தானும் உண்ணும் மரபு தொன்றுதொட்டு வழக்கமாக இருந்துள்ளது.

**"களிறு ஆடிய விடுநில மருங்கின்**
**வம்பப் பெரும் பெயல் வரைந்து சொரிந்து இறந்தெனக்**
**குழிகொள் சில்நீர் குராஅல் உண்டலின்**
**சேறுகிளைத் திட்ட கலுழ்கண் ஊறல்**
**முறையின் உண்ணும் நிறையா வாழ்க்கை"**[145]

கருநிறப்பன்றிகள் நீராடிச்சென்ற ஊற்றுக்கு அருகிலுள்ள நிலத்தில் மழைபெய்த காரணத்தினால் பள்ளத்தில் நீர்தேங்கி நிற்க அதனால் அங்கு சேறும்சகதியும் ஏற்பட்டது. அச்சேற்றிற்கு அருகிலுள்ள ஊர்களிலுள்ள மக்கள் நீர்த்தேவைக்காக ஊற்றுநீரையே வரிசையில் முறைமுறையாகச் சென்று முகந்து அனைவரும் பகிர்ந்து அருந்தியுள்ளதை புலவர் உறையூர் முதுகண்ணன் பாடல் மூலம் அறியலாம்.

தற்காலத்திலும் சில கிராமங்களில் தண்ணீருக்காக பொதுவான குழாய் அமைந்திருக்கும் இடங்களில் இத்தகைய முறையை பின்பற்றுவதைக் காண முடிகின்றது.

நீர்வளமில்லாததால் முல்லை நிலத்தில் உழவுத் தொழிலுக்குத் தேவையான ஆறுகளில் நீர்ப்பாசனமின்றி தானியங்களின் விளைச்சல் குறைந்தது இதனால் மக்கள் வாழ்வியலில் வறட்சி நிலவியது. தன்னிடமுள்ள வரகு தினை போன்ற தினை வகைகளை இரவலருக்குக் கொடுத்துள்ளதை

**"………………. புறவு சேர்ந்திருந்த**

**புன்புலச் சீறூர் நெல்விளை யாதே**

**வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**

**இரவல் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன"[146]**

இப்பாடலில் அறிய முடிகின்றது.

**"பயம்தலை பெயர்ந்து மாதிரம் வெம்ப**

**வருவழி வம்பலர்ப் பேணி கோவலர்**

**மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி**

**செவி அடை தீரத் தேக்கிணைப் பகுக்கும்**

**புல்லி நல்நாட்டு உம்பர்"[147]**

நீரற்றுப்போனதால் நான்கு திசைகளும் வெப்பத்தால் கொதிக்கின்றது. அவ்வழியே வருகின்ற வழிப்போக்கர்களின் பசியைப் போக்க ஆயர்கள் எருதுகளின் கழுத்தில் கட்டியுள்ள மூங்கில் குழாய்க்குள் வைக்கப்பெற்ற குளிச்சோற்றைத் தேக்கு மரத்தின் இலைகளில் கொடுத்து பகிர்ந்து தந்ததை இப்பாடல் சுட்டுகின்றது.

**"பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்**

**தீப்பிணி தீண்டல் அரிது"[148]**

என்று வள்ளுவரும் பகர்கின்றார்.

மனிதர்களைப் போல மிருகங்களும் பல விதங்களில் ஒத்திருப்பதைக் காணமுடிகின்றது. சுரமோ வறனுற்றது. உண்ண நீரில்லை .ஒரு சிறு குழியில் அடியில் சிறிது வண்டல் நீர் உள்ளது. அதனைக் கண்ட களிறு தானுண்ணுவதற்கு மனமில்லாமல் தனது கன்றுக்கு ஊட்டிற்று. கலக்கிய சின்னீரைப் பெண்யானைக்கு கொடுத்து பின் தானும் அருந்தியது.

**"துடிஅடிக் கயம்தலை கலக்கிய சின்னீரைப்**

**பிடியூட்டிப் பின்உண்ணும் களிறுஎனவும் உரைத்தனரே"[149]**

வறட்சி மேலாண்மையில் தனக்குக் கிடைக்கும் உணவு நீரினை வறட்சியால் வாடித்தவிப்பவர்க்கு பகிர்ந்து உண்ணும் பண்பும் இயல்பாகவே தமிழர்களுக்கிடையே காண முடிகின்றது.

**3.பந்தர்**

தற்காலத்தில் வழிப்போக்கர்களின் நீர்த்தேவைக்காக நல்லுள்ளம் படைத்தோர் தண்ணீர்ப்பந்தல் நீர்மோர்பந்தல் அமைத்திருப்பதைக் காண முடிகின்றது. இந்த வழக்கம் சங்ககாலத்தின் தொடர்ச்சியாக இருந்துள்ளதை அறிய முடிகின்றது

**“விருந்து ஒழிவு அறியாப் பெருந்தண்பந்தர்**

**வருத்தி வருநர் ஒம்பி”**[150]

பாலை பெருவழியில் நீர்வேட்கையால் வருகின்ற விருந்தினர்க்கு நீர் கொடுப்பதற்காக குளிர்ச்சியுடைய பந்தரை அமைத்துள்ளனர். **பெருந்தண் பந்தர்** என்பதை புலவர்கள் நீர் பந்தரைச் சுட்டுகின்றனர். இந்தப் பந்தர் என்ற சொல்லே தற்காலத்தில் மருவி பந்தல் என்று வழங்கப்படுகிறது.

**“நன்கல வெறுக்கை பந்தா”**[151]

கலங்களில் இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்களை மன்னன் பண்டசாலையை ஏற்படுத்தி உலக மக்களைக் காப்பதால் மக்கள் வறுமையின்றி உள்ளனர் என்று புலவர் கூறுவதிலிருந்து

பந்தர் என்பது பண்டசாலையை குறிக்கின்றது.உணவுப் பண்டங்களைச் சேகரிப்பதற்கான இடமாகவும் வறட்சித் தோன்றும் காலங்களில் பண்ட சாலையில் சேமித்து வைக்கப்பட்ட பொருட்கள் மக்களுக்கு பயன்பட்டதையும் அறியலாம்.

**“மதிநிறைந்த மலிபண்டம்**

**பொதிமூடைப் போர் ஏறி.......**

**ஏழகத் தகரோடு உகளும் முன்றில”**[152]

மலை மலையாகப் பொருட்கள் பண்டசாலையில் குவிந்தை அறியலாம்.

**4.போதிய விழிப்புணர்வு**

வறட்சியான காலங்களில் குளங்களில் நீர் இல்லாமல் வறண்டு காணப்படும் நிலையில் அக்குளத்தில் சிறிய அளவிலான குழி தோண்டி பெற்ற நீரினைப் பயன்படுத்தியுள்ளனர்.

> **“வேனில் நீடிய வான் உயர் வழி நாள்**
>
> **வறுமை கூரிய மண்நீர்ச் சிறுகுளத்**
>
> **தொடுகுழி மருங்கில் துவ்வாக் கலங்கல்”**[153]

கோடைக்காலத்தில் மழை பெய்யாமல் மேகமானது நீங்கிச் சென்றது. அதனால் பாலை நிலப் பெருவழியில் ஊர்மக்கள் குளிக்கின்ற மண்ணில் தோண்டப் பெற்ற குளிக்கின்ற சிறிய குளத்தில் நீரானது கலங்கலாகத் தோன்றியது. அந்நீரினைத் தண்ணீர் கிடைக்காமல் தாகத்தால் தேடி அலையும் யானைக் கூட்டம் குடித்தது.மிகுதியான மழைப்பொழியும் கார்காலப் பருவத்தில் புதுவெள்ளமானது பெருகி வரும். அந்நீரினை குளங்களில் தேக்கி நீர்த் தேவைகளுக்கு பயன்படுத்தினர். மண்ணில் தோண்டப் பெற்றச் சிறுகுளம் என்பதால் நீரானது குளத்தின் அடிப்பகுதியின் மூலம் நிலத்தின் வழியே ஊடுருவிச் சென்று நிலத்தடி நீராக சேகரமாகின்றது.வறட்சியான பருவத்தில் தோண்டும் பொழுது நீர் மேலே வருகின்றது.அந்நீரை தன் தேவைகளுக்கும் தமிழர்கள் பயன்படுத்தியதை அறிய முடிகின்றது.

பழந்தமிழர்கள் வறட்சியான காலங்களில் நீரைப் பெறுவதற்காக மழை மூலமாக பெற்ற நீரினை நிலத்தின் மேலுள்ள நீர்நிலைகள் மூலம் சேமித்து அதனைத் தொழிலுக்கும் குடிப்பதற்கும் மற்ற தேவைகளுக்கும் பயன்படுத்தினர்.நீர்வற்றும் காலங்களில் நிலத்தின் கீழுள்ள நீரினை குளங்கள் மற்றும் ஆறுகளில் குழி போன்ற அமைப்பை உருவாக்கி நீரினைப் பெற்றுள்ளனர்.

இன்றைய காலகட்டங்களில் மக்களிடம் போதிய விழிப்புணர்வு இல்லாத காரணத்தினால் ஏரிகள் குளங்களை அழித்ததாலும் இவைகள் மீது பல வகையான கட்டுமானங்களை எழுப்பியதாலும் அதிகப்படியான

மழைநீர் பொழியும் காலங்களில் தேங்குவதற்கு இடமில்லாமல் வீணாகக் கடலில் சென்று சேர்கின்றது.இதனால் நிலத்தடி நீர் குறைந்து உலக மக்கள் அனைவரும் தண்ணீர் பற்றாக்குறையால் இன்னலுறுகின்றனர்.

ஆனால் சங்ககால மக்களிடம் நீர் குறித்த சரியான புரிதல்கள் இருந்ததால் தான் வறட்சி மேலாண்மையில் சிறந்து விளங்கியுள்ளனர்.

**தொகுப்புரை**

இவ்வியலில் வறட்சி குறித்த சொல்வாட்சிக்கான விளக்கங்கள், வறட்சி நிலைகள், வறட்சிக்கான காரணங்கள், வறட்சியிலிருந்து பாதுகாக்க தமிழர்கள் கையாண்ட வழிமுறைகள் போன்றன ஆராயப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1.கே.அய்யனார் புவியியல் அமைப்பு ப.எண் -303

2.கே.அய்யனார் புவியியல் அமைப்பு ப.எண் -301

3.அகம்- 42-5

4.நற்- 64-6

5.பொரு-237

6.மது- 218

7.அகம் 15-6

8.ப.ப -267

9.குறள்-வான்சிறப்பு - அதிகாரம் 2 -13

10.குறள்-சிற்றினம் சேராமை-452

11.கிரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.658

12.பதிப்பாசிரியர் குழு, கலைக்களஞ்சியம், தொகுதி-10, ப.479

13.அகம்-950

14.பெரும்-1-3

15.அகம். 55-1-2

16. பாரதிதாசன் கவிதைகள் - கானல்- ப.எ- 56

17. பாரதிதாசன் கவிதைகள் - கானல்- ப.எ- 56

18.புறம்-389-3-4

19.புறம் -388-1-2

20.ப.பா 1-2

21.புறம்-35-6-7

22.புறம்:388: 1-2 ப.எ -887

23.புறநானூறு உ.வே.சா. குறிப்புரை, ப.579

24.புறம்:117-1-2 ப.எ- 628

25.கம்பராமாயணம், மந்தரை சூழ்ச்சிப்படலம், பா.21

26.சிலம்பு : 10: 102-103

27.ப.பா : 1-6

28.மதுரைக் : 106-109

29.புறம் : 395: 33-35 ப.எ - 118

30.ப.ப : 24: 24-25 ப.எ - 46

31.ப.ப 69 : 13-14

32மணிமேகலை - துயிலெழுப்பிய காதை-7-8-9

33.குறுந்தொகைச் சொற்பொழிவுகள் -ப.எ- 84

34.குறுந்தொகை-49-3-6

35.தொல்- அகம்-348

36.நற்- 230 - 5-10

37.சிறு 1-12

38. ப.சிவகாமி உலகாயுதம் ப.எ - 25 -1-2

39.சிலம்பு-காடுகாண் காதை 64-66

40.சிறு- 164-177

41.புறம்-389-1-2

42.முத்-25 ப.எ 184

43.நான்மயி-48-1

44.குறள் - வான் சிறப்பு -15

45.புறம் : 143: 1

46.ஐங் : 251: 1-2

47.சுந்தரர் தேவாரம்,

48.புறம்-173

49.குறள் - 12

50.அகம்-397-15

51.புறம் -266-1

52.ஆனந்தகுமார்

53.அகம்- 1

54.பரி-11-80

55.சிலம்பு- மங்கலவாழ்த்து - 7

56.அகம்-192

57.அகம்-27 - 3

58.கலி- 5-15

59.பெரு -10

60.நற் 224-3-8

61.அகம்-291-4-5

62.அகம்-295-1

63.அகம்- 25-1-2

64.கலி- 12

65.அகம்119

66.அகம் 01

67.அகம். 25: 1-2

68.ப.ப 28-8-9

69.அகம் 11

70.அகம் -353

71.அகம் 389

72.புறம்-263

73.அகம்-303

74.மாதையன்

75.அகம்-17

76.குறள் 17

77.பொருநர் -236-248

78.பெரு16-20

79.ப.ப 84

80.ப.ப-23-1-4

81.அகம்-42-5-10

82.கலி-20

83.கலி -104

84.சிலம்பு 1- 11-17-22

85.நற்- 9

86.மது 55-60

87.மது 761-765

88.குறுந்-373

89.நற்-201

90.நற் -9

91.ப.ப 63-6

92.புறம் -34-35

93.பரி -1-47

94.கலி-2

95.கலி 105-20

96.கலி- 120-8

97.புறம்-187-3

98.ம.கா-152-176

99.ப.ப- 23-12-15

100.புறம்- 355 - 1-3

101.புறம்- 283-9-15

102.புறம் - 304-4-11

103.ப.ப -41-17-18

104.ப.ப 25- 1-4

105.பே.மாதையன்-சங்க இலக்கியத்தில் குடும்பம் ப.எ 155

106.புறம் -18-5

107.ப.ப-33

108.புறம்-306

109.புறம்-23-2

110.அகம்-113-18-21

111.கலி- 78

112.ப.பா - 283

113.புறம்- 231-1-2

114.புறம்-206-11-12

115.மாட் விக்டோரியா பார்லோ நீராதிபத்தியம் ப 203

116.புறம் - 302- 1- 2

117.புறம் - 168-8-11

118.மு.பா -24-28

119.க.ஜவகர்.திணைவெளி ப.எ-79

120.ப.மு.நடராசன்-

121.குறுந் 221-3-4

122.அகம்-140-5-8

123.குறு - 100

124.நற் 64-4

125.கலி- 6

126.அகம் 291-15-17

127.அகம்- 284-1-2

128.நற்-87

129.புறம்-314

130.புறம்- 91-6-11

131.சிறு-99-10-3

132.நற்-3-4

133.நற் 227-1

134.நற்- 3

135.ம.ப.கடாம்-18

136.அகம்-291

137.அகம் -315

138.மலை136-139

139.நற் -66

140.அகம் -293

141.குறுந் - 274

142.குறுந் -255

143.அகம் 259

144.கலி -13

145.புறம்325-1-5

146.புறம்- 328-1-5

147.அகம் - 311

148.குறள்-227

149.கலி-11-8-9

150.அகம்-351-

151.ப.ப-55-5

152.ப.பா-120-136

153.அகம்-121-2

# இயல்-4

# நீரின் பயன்பாடுகள்

இயற்கையான புவியமைப்புகளின்பால் ஒத்தியைபு காண்பதற்கான அக்கறை சங்கத்தமிழர்களிடம் வெளிப்படையாகக் காணப்பட்டது. அவர்கள் இயற்கையின் படைப்புகளை சரியான புரிதல்களோடு அணுகினர். இயற்கையின் ஆற்றல்களைத் தேவைக்கேற்ப மட்டுமே பயன்படுத்தினர். தன்னைச் சுற்றியுள்ள சூழல் நிலைப்பாட்டினைப் பாதுகாப்பதற்கான உணர்வு அவர்களிடம் இயல்பாகவே அமைந்திருந்தது. இதற்குச் சங்க இலக்கியப் பாக்கள் சான்று பகிர்கின்றன. அம்மக்களின் வாழ்வியல் படிப்பினைகள் அனைத்தும் இயற்கையால் கற்பிக்கப் பெற்றவை. இன்றைய இப்பொருண்மைகளின் அடியொட்டியே நீரின் சிறப்புணர்ந்த பழந்தமிழரின் வாழ்வியலில் நீர் எந்தெந்த வகையிலும் எவ்வாறும் பயன்பட்டுள்ளது என்பதை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 4.1 வாழ்வியல்

வாழ்வியல் என்பதனை ஆங்கிலத்தில் Biology என்பர்.அரிதரிது மானிடராய் பிறத்தல் அரிது என்று ஔவை குறிப்பிடுகின்றார். பெறுவதற்கு அரிதான மானிடப்பிறவியை மண்ணில் நல்ல வண்ணம் வாழ வேண்டுமெனில் சில வகையான நெறிமுறைகளையும் பின்பற்றுதல் வேண்டும். வாழ்வில் உயர்ந்த குறிக்கோள் இருக்க வேண்டும். அவ்வாறு உயர்ந்த குறிக்கோளினை அடைவதற்கு சில வகையான நெறிமுறைகளையும் நடைமுறைகளையும் பின்பற்ற வேண்டும். இங்ஙனம் பிறப்பு முதல் இறப்பு வரை மனிதன் கடைப்பிடிக்கும் நெறிமுறைகள், பழக்கவழக்கங்கள், பொழுதுபோக்குகள், உடல் மற்றும் உளவியல் உறவுகள் தொழில் தேவைகள், குடும்பம் போன்ற மனிதன் அன்றாடம் நிகழ்த்தும் அனைத்துச் செயற்பாடுகளையும் உள்ளடக்கியதே வாழ்வியல் எனலாம்.

உலக உயிர்களின் ஆரம்பம் நீர் எனவே தான் அவர்களின் பழக்கவழக்கங்கள் சமயசடங்குகளில் நீர் பின்னிப்பிணைந்துள்ளது.

தூய்மையின் மறுஉருவாக நீர் கருதப்படுகின்றது. அத்தகைய நீர் மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை நிகழும் வாழ்வியலில் முக்கிய இடங்களில் சிறப்பிடம் பெறுகின்றது. தாயின் கர்ப்பபையின் கருகட்டியது முதல் கருவைச் சுற்றியுள்ள திரவத்திலிருந்தே தனக்குத் தேவையான உணவைப் பெற்றுக் கொள்கிறான்

மக்களின் அன்றாடத் தேவைகளில் நீர் பெரும்பங்கு வகிக்கின்றது. வாழ்வியலின் ஒவ்வாரு கூறுகளிலும் நீரின் தாக்கம் அதிகம். காரணம் ஒவ்வொரு மனிதனின் எண்ணங்கள், வழிபாடுகள், வார்த்தைகள், நம்பிக்கைகள் உணர்வுகள் தான் வாழ்வியலை கட்டமைக்கின்றன. மனிதனின் எண்ணங்கள் பிரார்த்தனைகள் வார்த்தைகள் நம்பிக்கைகள் உணர்வுகள் இவையனைத்திற்கும் நீருக்கும் பெரிதும் தொடர்பு இருப்பதை ஆய்வாளர்கள் உறுதிபடுத்துகின்றனர். நீரில் காணப்படும் மூலக்கூறுகள் மனிதன் எண்ணும் எண்ண அலைகளுக்கு ஏற்ப மாறுவதை நிறுவியுள்ளனர். ஜப்பான் நாட்டைச் சார்ந்த ஆராய்ச்சியாளர் இமெட்டோ என்பவர் ஒரு குவளையில் தண்ணீரை நிரப்பி அதன் உள்ளே காகித்தில் அன்பு என்ற வார்த்தையை உள்முகமாக எழுதிப் போட்டார். பின்பு சிறிது நேரம் கழித்து நுண்நோக்கி வழியாகப் பார்த்த பொழுது அற்புதமாக நீரின் வடிவம் மாறி இருந்ததைக் கண்டார்.பின்பு அதே குவளையில் முட்டாள் என்ற வார்த்தையை எழுதிப் போட்டார் அதனை உறைய வைத்துப் பார்த்த பொழுது நீரின் மூலங்கூறுகள் ஒழுங்கில்லாத வடிவமாக இருந்ததை நிரூபித்தார். அதுமட்டுமல்லாமல் நீரில் நேர்முகமாக சொற்களைப் பயன்படுத்தும் பொழுது அற்புத வடிவத்தை தந்தாகவும் எதிர்மறை சொற்களைப் பயன்படுத்தும் பொழுது ஒழுங்கில்லாத வடிவத்தை தந்தாகவும் கூறுகின்றார்.நீருக்கு மனிதனின் எண்ணங்களை உள்வாங்கும் தன்மை இருப்பதாகக் கண்டறிந்தார்.

இவ்வுண்மையை தமிழர்கள் அறிந்திருந்த காரணத்தினால் தான் வாழ்வின் ஒவ்வொரு சடங்குகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், விழாக்கள், வழிபாடு களவு மற்றும் கற்பு உணர்வுகள் என்று அனைத்திலும் நீரை முன்வைத்தே நிகழ்த்தியுள்ளனர். அது மட்டுமல்லால் நீருக்கு

நெகிழ்வுத்தன்மை அதிகம்.துறவிகள் கமண்டலத்தில் நீரை நிரப்பி உடன் வைத்திருந்தனர். அந்நீரை சாபமிடல், வரமிடல் இரு நிகழ்வுகளிலும் பயன்படுத்தியுள்ளதைப் புராண இதிகாசக்கதைகள் வாயிலாக அறிகின்றோம்.

நீர் உயிராக மட்டுமல்லாமல் உணர்வாக இருப்பதையும் அறிய முடிகின்றது. அவ்வகையில் சங்ககால மக்களின் வாழ்வியலில் நீர்ப்புரையோடிய விதத்தை அறியலாம்.

- வழிபாடுகளில் நீர்
- சடங்குகளில் நீர்
- உணர்வுகளில் நீர்
- விழாக்களில் நீர்
- பொழுதுபோக்கில் நீர்

போன்ற பாகுபாடுகளின் அடிப்படையில் அறியலாம்

### 4.1.1 வழிபாடுகளில் நீர்

பழங்காலந்தொட்டே தமிழர்கள் மலை முதல் கடல் வரையுள்ள அனைத்து இயற்கைப் பொருள்களிலும் இறைவனைக் கண்டனர். உயிரினத் தோற்றத்திற்கு அடிப்படை நீராகும். இவ்வுலகத்தின் நிலைப்பாட்டிற்கும் உயிர்கள் உயிர்ப்பிற்கும் நீர் இன்றியமையாதத் தேவை. நீர் இல்லையேல் இவ்வுலக இயக்கமில்லை என்பதனை உணர்ந்திருந்த பழந்தமிழர்கள் நீரையும் நீர்த்துறைகளையும் கடவுளாகக் கருதி வழிபட்டனர். நீருக்கு முதற்காரணமான மழையைத் தெய்வமாகப் போற்றினர். மழைத்துளிகள் இணைந்து மிதக்கும் மேகத்திடம். முழைப்பொழிகவென வேண்டினர். பெற்ற மழைக்கு நன்றிபாராட்டவும் செய்தனர். மழையை ஈர்க்கும் மரங்களைத் தெய்வமாக வழிபட்டனர். மரங்கள் அடர்ந்த வனங்களையும் வணங்கிப் பாதுகாத்தனர்.

**1.இறைமையும் நீரும்**

குன்றுகளில் வீற்றிருக்கும் தெய்வம் திருமால் ஆவார்.இருங்குன்றம் என்ற நகரில் திருமால் எழுந்தருளிக் காட்சியளிப்பதால் மாலிங்குன்றம் எனப் பெயர் பெற்றது. மால் முல்லை நில காடுறைத்தெய்வமாக மக்கள் வழிபடுகின்றனர்.

**"மாஅல்"**[1]

**"மாயோன"**[2]

**"தொல்கதிர்த் திகிரியாற"**[3]

என்று திருமாலைச் சிறப்பிக்கின்றது.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**

**சேயோன் மேய மைவரை உலகமும்"**[4]

எனத் தொல்காப்பியம் ஐவகை நிலத்தெய்வங்களில் திருமாலையும் முருகனையும் போற்றியுள்ளது.

திருமால் எங்கும் நிறைந்த பரம்பொருளாகவும் இவ்வுலகை இயக்குகின்ற ஐம்பூதங்களின் நீராகவும் இருப்பவன் என்று

**"தீ வளி விசும்பு நிலன் நீா் ஐந்தும்"**[5]

எனப் பரிபாடல் சுட்டுகிறது.

உலகத்திலுள்ள பரந்தப்பொருள்களில் நீா் திருமாலிடமிருந்து தோன்றியதோடு அந்நீரின் உள்ளுறு பண்புகளாகவும் இறைவன் காட்சியளிக்கிறான்.

**"நின் சுரத்தலும் வண்மையும் மாரி உள.....**

**நின் தோற்றமும் அகலமும் நீரின் உள"**[6]

நீரின் தோற்றமாகவும் ஆறுகளாகவும் எழுந்தருளியவன் இறைவன். திருமாலின் திருமாா்பில் வீற்றிருக்கும் திருமகள் யானைகள் மலருடன் நீரையும் சொரிகின்ற தாமரை மலரின் பொகுட்டிலே அமா்ந்திருக்கும் திருமகள் எனக் கலித்தொகை

**“வரிநுதல் எழில் வேழம் நீர்மேல் சொரிதரப்**

**புரி நெகிழ் தாமரை மலர்அம் கண் வீறுஎய்தி**

**திரு நயந்து இருந்தன்ன தேம் கமழ் விறல் வெற்ப”**[7]

நீரில் மலரும் தாமரை மலரே திருமகளின் இருக்கையாகச் சுட்டப்பெறுகின்றது. ஊழிக்காலத்தில் ஏழுக்கடலும் பெரியநிலமும் நீருக்குள் மூழ்கி கிடந்த காலத்தில் அவ்வுலக உயிர்கள் யாவும் தோன்றுவதற்காக திருமால் எடுத்த அவதாரம் வராகம்.இக்கோலத்தில் நீருள் அமிழ்ந்த நிலத்தைப் பெயர்த்துக் காத்தார்.

**“கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய**

**ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்கு**

**ஊழி யாவரும் உணரா”**[8]

ஒருகாலத்தில் பெரிய ஆகாயத்தில் எழுவகையான மேகங்களும் மழையைப் பொழிந்து உலகை அழிக்க முற்பட்ட நேரத்தில் திருமால் அன்னச் சேவலாக உருவெடுத்து வந்து தன் சிறகுகளினால் அம்மழை நீரினை வற்றச்செய்து உய்வித்தார்.

**“மாவிசும்பு ஒழுகுபுனல் வறள அன்னச்**

**சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோய்”**[9]

மாவலியின் செருக்கை அடக்கும் பொருட்டு மூன்றடிநிலம் இரந்து அவன் தானமாக வார்த்த நீர் தன் கையிலே விழ நீண்ட நெடிய மாலாக உருக்கொண்டு மூன்று உலகங்களையும் தன்னுள் அடக்கினார்.

**“நீர்செல நிமிர்ந்த மாஅல் போல”**[10]

முருகன் குன்றத்திலே வாழும் மக்களின் உறைகடவுள்

**“குறிஞ்சி கிழவன்**

**பிறங்கு மலை மீமசைக் கடவுள்”**[11]

என்று போற்றுகின்றது.

**“காடும் காவும் கவின்பெறு துருத்தியும்**

**யாறும் குளனும் வேறுபல் வைப்பும”[12]**

ஆற்றிலும் குளத்திலும் ஆற்றிடைக்குறைகளிலும் முருகன் வீற்றிருப்பதாக திருமுருகாற்றுப்படைச் சுட்டுகின்றது. ஆலைவாய் எனப்படும் திருச்செந்தூரில் அலைகள் மோதுகின்ற கடல் அருகிலே முருகன் நிலைபெற்றிருத்தலை

**”தாழ்நீர் வெண்தலைப் புணரி அலைக்கும் செந்தில்**

**நெடுவேள் நிலைஇய காமர் வியன் துறை”[13]**

என்று அகநானூறும் புறநானூறும் பகர்கின்றது.

**“ஆறு அறி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து**

**தேறுநீர் சடைக்கரந்து”[14]**

**“பிறங்குநீர் சடைக்கரந்தான்”[15]**

சிவன் தன் சடையிலே கங்கையைத் தாங்கியுள்ளதால் அச்சடை ஈரமாக உள்ளது.

**திருமணி விளக்கின் அலைவாய்ச்**

**செருமிகுசேய[16]**

இங்ஙனம் இந்திரன் திருமால் முருகன் சிவன் திருமகள் போன்ற தெய்வங்களின் வடிவமாகவும் நிலைக்களனாகவும் பண்புக்கூறுகளாகவும் நீர் விளங்கியுள்ளது.

**2.மழை வழிபாடு**

உலகில் கடல்நீரே அதிகப் பரப்பளவில் பரந்து விரிந்துள்ளது. எனினும் கடல்நீரினை குடிக்க இயலாது. கடல் நீரிலுள்ள அதிக உவர்த்தன்மையே அதற்குக் காரணம். உவர்த்தன்மையில்லா நன்னீரே உயிரினங்களுக்கும் ஏற்றதாகும். அத்தூய நன்னீரை அளிப்பது மழையாகும். மழைநீர்த்துளி மண்ணில் படாவிடில் சிறுபுல்லும்கூட முளைக்காது.

இயற்கையோடு இயைந்து இணைந்து வாழ்ந்த முன்னோர்கள் பயன்பாட்டிற்கு உதவுவதும் தேவைகளை நிறைவுச் செய்வதற்குமான நீராக மட்டுமே கருதாமல் அந்நீருக்கு ஆதாரமான அனைத்துக் கூறுபாடுகளையும் போற்றி வணங்கி வாழ்த்தி வழிபட்டுள்ளனர். மயக்கம் தரும் இருளை, வானில் தோன்றிய மதியமானது போக்கிக் கொண்டிருக்கும் மாலைப்பொழுதில் மதுரைவாழ் மக்கள் நீர்விளையாடிக் களித்தனர். அம்மக்கள் நீரைத் தெய்வமெனப் போற்றினர். பாடுபவரது பாடற்பொருள்கள் நீர்த்தெய்வத்தை வேண்டுவனவாகவும் நீர்த்தெய்வத்தின் புகழைப் போற்றுவனவாகவும் விளங்கின. அவ்வழிபாட்டில் மகளிர் தெளித்துக் கொள்ளும் பனிநீரும் அகிற்புகையும் நறுமணப் புகையும் காற்றோடு கலந்து, காற்றையும் மணமுடையதாக மாறச் செய்தன.

**“மதிமாலை மால்இருள் கால்சீப்பக் கூடல்**
**வதிமாலை மாறும் தொழிலான் புதுமாலை**
**நாள்அணி நீக்கி நகை மாலைப்பூவேய்ந்து**
**தோள்அணி தோடு சுடரிழை நித்திலம்**
**பாடுவார் பாடல் பரவல் பழிச்சுதல”**[17]

நீரைப் போற்றித் வாழ்த்தியவர்கள் நீருக்கு ஆதாரமான மழையைப் போற்றி வணங்கவும் தவறவில்லை.

மழையைப் பெறுவதற்காகச் சுற்றுச்சூழலைப் பேணிப்பாதுகாக்க வேண்டுமென்ற நற்சிந்தனையும் மக்களிடையே நிலவியுள்ளது.

**“இருங்கண் ஞாலத்து ஈண்டு தொழில் உதவிப்**
**பெரும்பெயல் பொழிந்த வழிநாள் அமையத்து”**[18]

பெரிய இடமகன்ற உலகத்திலே இவ்வுலக உயிர்கள் தழைப்பதற்கு மழை தான் காரணம் என்பதனை உணர்ந்த முன்னோர்கள் உலகம் நிலைபெற்று வாழ்வதற்கும் இவ்வுலக மக்கள் பசிப்பிணியின்றி வாழ்வதற்கும் மழை சிறக்க வேண்டுமென வழிபட்டனர்.

**“வாழி ஆதன் வாழி அவினி**

**மாரி வாய்க்க வளம் நனி சிறக்க”**[19]

மாரி இடையின்றிக் காலத்தே தப்பாமல் வாய்ப்பதாக அதனால் வளமையும் மிகுதியாகப் பெறுவதாக வேண்டினர். மழையற்றுப் போய்விடின் இவ்வுலகு தீங்குறும் என அஞ்சினர். எனவே நல்ல மழை சிறக்க வேண்டுமென மேகத்தை நோக்கிக் கைகூப்பி வணங்கினர். இனிய புகழ்பெற்ற மேகத்தை நோக்கிக் கல்லின்மேல் உண்டான வெப்பம் நீங்குமாறு செறிந்த மழைத்துளிகளைச் சிதறுவாயாக எனக் கைகூப்பி வேண்டியதை

**“கன்மிசை உருப்புஅறக் கனைதுளி சிதறு என**

**இன்னிசை எழிலியை இரப்பவும்”**[20]

**“மாரி ஆன்று மழைமேக்கு உயர்க எனக்**

**கடவுட் போணிய குறவர் மாக்கள”**[21]

**“கடவுளோங்கும் வரை பேண்மார் வேட்டெழுந்து**

**கிளையோடு மகிழுங்குன்ற நாடன்”**[22]

என்ற இப்பாடல்கள் மலைப் பகுதிகளில் வாழும் குறவர்கள் மழை பெய்ய வேண்டினர். அவ்வேண்டுதலின் பயனாக மழையானது பொழிந்தது, பெருமழை பெய்யும் காலங்களில் பெய்யாமல் நிற்க வேண்டியும் மழை தெய்வத்தை வழிபட்டனர். மழை வேண்டிக் கடவுளை வேண்டுதலும் பெரும்மழையை நிறுத்த வழிபாடு செய்தலும் தற்காலத்திலும் நடைமுறையிலுள்ளது. உலக மக்களை வாழ்விக்கும் மழையைப் போற்றித் தொழுதவும் செய்துள்ளனர்.

மழையை மட்டுமல்லாது மேகத்தையும் வணங்கியதை

**“உலகிற்கு ஆணியாகப் பலர் தொழப்**

**பலவயின் நிலைஇய குன்றின் கோடுதோறு**

**ஏயினை உரையியரோ பெருங்கலி எழிலி”**[23]

மக்கள் அனைவரும் நல்வாழ்வு பெறவும் குறைகள் நீங்கி இன்புறவும் மெய்ஞானம் பெருகவும் வேண்டுமென மேகத்திடம் தலைவன் ஒருவன் வழிபட்டதை அறிய முடிகின்றது.

**3.கடல்துறைத் தெய்வம்**

நீரால் சூழப்பட்டதுவே இவ்வுலகம். சுமார் 71 சதவீதம் நீரைக் கொண்டது கடல். எப்போதும் வற்றாத நீர்நிலை கடலே ஆகும். புவியின் தட்பவெப்ப நிலையை ஒழுங்குபடுத்திச் சமநிலையில் வைத்திருப்பதில் கடல் பெரும் பங்கு வகிக்கின்றது. கடலானது நிலத்தைவிட மெதுவாக வெப்பமடையும், மெதுவாகக் குளிர்வடையும் தன்மை கொண்டது. நீர்சுழற்சிக்கு மிக முக்கியக் காரணியாக இருப்பது கடல்.

கடலில் பெரும் பரப்பளவில் இருக்கும் நீர் சூரிய வெப்பத்தின் தாக்கத்தால் ஆவியாக்கப்பட்டு மேலே செல்கின்றது. அங்குள்ள குளிர்காற்றுப் பட்டு உறைநிலையில் ஆவிக்கூட்டங்கள் மேகங்களாக வானில் மிதக்கின்றன. அவை பின் மழையாகப் பொழிந்து ஆறாகச் சென்று கடலை அடைகின்றன. இச்சுழற்சியில் தொய்வு ஏற்படின் அவை சூழல் சமநிலையைப் பாதிக்கின்றன. கடலின் முக்கியத்துவத்தை உணர்த்த பழந்தமிழர்கள் கடலைத் தெய்வமெனக் கொண்டு வழிபட்டனர். தங்களுக்கு உண்ணும் உணவையும் பருகும் நீரையும் அளிக்கும் அன்னையாகக் கடலைப் பாவித்தனர்.

உலகின் பரந்த நீர்ப்பரப்பை உடையது கடலாகும் இது நெய்தல் மக்களின் வாழ்வாதாரப் பகுதியாகும்.அப்பெரிய கடற்பரப்பிலே தெய்வம் உறைவதாகவும் அது மற்ற தெய்வங்களைக் காட்டிலும் மிகவும் வலிமையுடையது எனப் போற்றி வழிபாடு நடத்தப்படுகிறது.

**“பெருங்கடற் தெய்வம் நீா் நோக்கித் தெளித்து என்**

**திருந்திழை மென்றோள் மணந்தவன”**[24]

என்று தலைவி குறிப்பிடுகின்றாள்.

**“அணங்குடை முந்நீா”**[25]

**“பெருந்துறைப் பரப்பின்**

**அமர்ந்து உறை அணங்கோ”[26]**

என்ற சொல்லாடல்கள் கடல் தெய்வத்தைச் சுட்டுகின்றது.

கடல் தெய்வமானது ஞாழல் நெய்தல் பூக்களால் தொடுத்த மாலையினை அணிந்துள்ளதாக

**“வண்டுபடத் ததைந்த கண்ணி நெய்தல்**

**தண்அரும் பைந்தார் துயல்வர அந்திக்**

**கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு”[27]**

என்று கடல் தெய்வம் காட்சியளித்ததை அகநானூறு சுட்டுகின்றது. நீர்நிலைத் தெய்வங்களில் மிகவும் போற்றப்பட்டு வணங்கப்பட்ட தெய்வம் கடல் தெய்வமே. கடற்கரைத் தெய்வத்தை மலர்கள் தூவி வணங்கினர்.

**“பெருங்கடல் தெய்வம் நீர் நோக்கித் தெளித்துன்[28]**

**அருந்திறற் கடவுட் செல்லூர்க் குணாஅது[29]**

**அருந்திறற் கடவுள் அல்லன்**

**பெருந்துறைக் கண்டுஇவள் அணங்கியோனே”[30]**

என்னும் பாடல்கள் காட்டுகின்றன. நெய்தல் நிலத்தைப் பரதவர்கள் கடல் தெய்வத்திற்கு விழாவெடுத்து வழிபட்டதையும் குறிப்பிடுகின்றது.

**4.நீர்த்துறைத் தெய்வங்கள்**

மக்களின் நாகரிக வளர்ச்சிக்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் முதன்மையான ஆதாரம் வேளாண்மையே ஆகும். உணவு உற்பத்தியில் தடையேற்பட்டால் மக்களின் அனைத்துவிதமானத் தொழில்களும் பாதிப்படைந்து மனிதன் மீண்டும் ஆதிகாலச் சமூகத்திற்குப் செல்ல வேண்டிய நிலைத் தோன்றிவிடும். எனவே வேளாண்மை நலிவுற்றால் நாட்டின் அனைத்து வளங்களுமே அழிந்துவிடும்.

வேளாண்மை சிறந்து நாட்டின் வளம் சிறக்கவும் மக்களனைவரும் பசியின்றி வாழவும் தமிழர்கள் உருவாக்கிய வழிமுறைகளே

நீர்நிலைகளாகும். பலவகையானத் தொழில்நுட்ப உத்திமுறைகளைக் கையாண்டு பல்வேறு வடிவமைப்பிலான நீர்நிலைகளை ஏற்படுத்தினர். அவற்றை முறையாகப் பராமரித்துப் பாதுகாக்கவும் செய்தனர்.

நீர்நிலைகளைக் காக்கப் பாதுகாவலர்களை நியமனம் செய்தனர். மனிதத்தேவைகளாலும் அலட்சியப்போக்காலும் அந்நீர்நிலைகள் பாதிப்புக்குள்ளாகும் என்ற காரணத்தினால் நீர்நிலைகளில் பேரச்சம் தருகின்ற அணங்கு அரமகளிர் சூரமகளிர் ஆரணங்கு முதலிய தெய்வங்கள் உறைவதாக மக்களிடையே நம்பிக்கையை ஏற்படுத்தியுள்ளனர். அந்நம்பிக்கையின் வெளிப்பாடாகவே நீர்த்துறைத் தெய்வவழிபாடு தோன்றியிருக்கக் கூடும் என்பதை உணர முடிகின்றது.

சுனை குளம் ஆறு ஆற்றுத்துருத்தி கடல் கழிமுகம் போன்றவற்றில் தெய்வம் உறைவதாக சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றது. மலை மரங்களில் வாழும் தெய்வத்திற்கு படையலிட்டு வழிபடுவது போன்று கள் கண்ணி போன்றவற்றை நீரில் உறையும் தெய்வத்திற்கு படையலிடும் வழக்கமும் இருந்துள்ளது.

**“கள்ளும் கண்ணியும் கையுறை யாக**
**நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்**
**நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஒச்சித”**[31]

**5.சுனை தெய்வம்**

மலைகளில் உள்ள சுனைகளிலும் தெய்வம் இருந்ததை

**“கடவுள் கற்சுனை”**[32]

**“சூர்ச்சுனை”**[33]

மேற்காணும் பாடல்வரிகள் குறிப்பிடுகின்றது.

**6.உண்துறைக்கடவுள்**

**“உண்டுறை அணங்கிவள் உறைநோய் ஆயின்”**[34]

இப்பாடலில் தலைவியின் நோய்க்கு காரணம் அணங்கு என்று குறிப்பிடப்படுகின்றது. உண்டுறை என்பது மக்கள் நீர் உண்ணுகின்ற

துறையாகும். மக்கள் உண்ணுகின்ற நீர்த்துறையில் தெய்வமானது உறைகின்றது என்பது பண்டையத் தமிழர்களின் நம்பிக்கையாக இருந்துள்ளது.

**7.பனித்துறைக் கடவுள்**

பனித்துறைகளிலுள்ளே உறைந்து இருக்கும் தெய்வங்களுக்கு தாயும் ஆயமகளிரும் சேர்ந்து கைகுவித்து வணங்கிப் போற்றி அதற்குச் சிறப்பு செய்ததை

**“அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி”[35]**

**“துறைஎவன் அணங்கும”[36]**

**“அளைவா ழலவன் கூருகிர் வரித்த**

**வீர்மண வீர்நெறி**

**அணங்குடை பனித்துறை”[37]**

இப்பாடல்களில் அறிய முடிகின்றது.

மேலும் கொற்கைத் துறையிலே நெய்தல் நிலமகளிர் பனித்துறைத் தெய்வத்திற்கு முத்து , சங்கு போன்றவற்றைக் கொண்டு வழிபாடு நிகழ்த்தியதாக அகநானூறு குறிப்பிடுகின்றது.

**8.நிலைத்துறைக் கடவுள்**

நிலைத்துறை என்பது மரங்கள் வளர்கின்ற கரையோரப் பகுதிகளைக் குறிக்கும். நீர்நிலைகளையும் கடலையும் வணங்கியதோடு, மழைக்கு ஆதாரமான மரங்களையும் வணங்கியுள்ளனர்.

**“நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சித்”[38]**

துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும் முறையுளிப் பராஅய்ப் பாய்ந்தனர். நீர்த்துறையில் மட்டுமின்றி மரங்களிலும் தெய்வம் உறைந்ததாக பண்டை மக்கள் கருதியுள்ளனர்.

**9.மலையுறைத் தெய்வம்**

மழைப்பெய்யாமல் அருவி, சுனை, ஆறு போன்றவற்றில் நீர் குறைந்து வறண்டநிலைத் தோன்றிய காலங்களில் மழைப்பெய்ய வேண்டியுள்ளதை

**"மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்**

**மாரியான்று மழைமேக் குயர்கெனக்......."[39]**

மலையில் உறையும் தெய்வத்திற்கு குறவர்கள் உயிர்பலியிட்டு வழிபாடு நிகழ்த்தியதை அறிய முடிகின்றது.

10.**ஆற்றிடைக்குறைத் தெய்வம்**

ஆற்றின் நடுவில் சிறிய திட்டுகள் அமைந்திருக்கும். அத்திட்டுகள் துருத்தி என அழைக்கப்பட்டன. அத்திட்டுகளிலும் அச்சம் தரும் தெய்வம் உறைவதாகக் கூறினர்.

**"காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்"[40]**

திருமுருகாற்றுப்படையில் முருகனுக்கு காடுகளிலும் சோலைகளிலும் அழகு பொருந்திய ஆற்றிடைத்தீவுகளிலும் ஆற்றுநீர்ச் செல்லும் இடங்களிலும் குளங்களிலும் வழிபாடு நடைபெறுவதை இப்பாடல் வரியில் அறிய முடிகின்றது.

நீர்த்துறையிடத்தில் அச்சம் தரும் தெய்வம் உறைவதனை,

**"நாம அருந்துறைப் பேர்தந்து"[41]**

நீர்த்துறைகளை வணங்கி வழிபாடு செய்தமைக்கு அதனைப் பாதுகாத்தலே முதற்காரணம் என்பது தெளிவுபடுகின்றது. இவையே பின்னாளில் முனியப்பன் கருப்பண்ணசாமி போன்ற காவல் தெய்வங்களின் வழிபாடு தோன்றுவதற்கும் அடிகோலியதை அறியலாம்.

**11.கழித்துறைத் தெய்வம்**

ஆறுகள் கடலோடு கலக்கின்ற நீர்ச்சுழிகள் நிறைந்த கழிமுகப் பகுதிகளில் தெய்வம் உறைவதாக எண்ணி வழிபட்டுள்ளனர்.

**“கொடுஞ்சுழிப் புகாஅத் தெய்வம் நோக்கி”[42]**

எனும் பாடல் இதனைப் புலப்படுத்துகிறது.

நீர்நிலைகளான சுனை, குளம், ஆறு ஆற்றின் இடைக்குறை, கடல் கழிமுகம் முதலான இடங்களில் நீர்த்தெய்வங்கள் உறைந்தமையினை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

**“துறை எவன் அணங்கு”[43]**

**“எம் அணங்கு அன்னாளே”[44]**

**“நல் அணங்கு உற்ற”[45]**

என்னும் சான்றுகள் தெளிவுபடுத்தும். சுனைகளிலும் ஆற்றின் நடுவிலும் மலைமுகடுகளிலும் தெய்வங்கள் வாழ்ந்தன. ஆறு கடலோடு கலக்கும் இடம் நீர்ச்சுழிகள் நிறைந்திருக்கும் இடங்கள் ஆகியன தெய்வங்கள் வாழும் இடங்களாக இருந்துள்ளன.

**12.நீர்ப்படை**

வீரம் பொருந்திய போரிலே வீரத்தோடு போரிட்டு இறந்தவர்களுக்கு ஈமக்கடன் ஈந்து கல் நட்டு வழிபடுவது பண்டையத் தமிழர்கள் மரபாகும். இங்ஙனம் நடப்பட்ட கற்களே நடுகல் ஆகும்.சங்க இலக்கியத்தில் வெட்சி கரந்தைப் போர்களில் பசுக்களை கவர்ந்த மீட்டெடுத்த வீரர்கள் போரில் இறந்துப்பட்டால் அவ்வீரர்களின் பெருமைகளை எழுதி நடுகல் இட்டு வணங்கிய மரபினைக் காண முடிகின்றது.

**“பரலுடை மருங்கின் பதுக்கை சேர்த்தி**
**மரல் வகுத்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு**
**அணிமயில் பீலி சூட்டி பெயர் பொறித்து**
**இனிநட் டனரே கல்லும் கன்றோடு**
**குறவை தந்து பகைவர் ஓட்டிய**
**நெடுந்தகை கழிந்தமை அறியாது”[46]**

இதனை தொல்காப்பியரும்

**“காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**

**சீர்த்த சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்று**

**இருமூன்று மரபிற் கல்லொடு புணரச்**

**சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே”[47]**

நடுகல் வழிபாட்டு முறையில் நீர்ப்படை என்ற முறை காணப்படுகிறது. நீர்ப்படை என்பது கல்லினை தூய்மை செய்தலைக் குறிக்கும். புறம்பொருள் வெண்பாமாலை இதனை கல் நீர்ப்படுத்தல் என்று குறிப்பிடுகின்றது.

**“நட்ட போலும் நடாஅ நெடுங்கல்**

**அகல்இடம் குயின்ற பல்பெறா் மண்ணி**

**நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய[48]**

**புன்தலை சிதைத்த வன்தலை நடுகல்**

**கண்ணி வாடிய மண்ணா மருங்கில்”[49]**

வெட்சி கரந்தைப் போர்களில் உயிர் கொடுத்து இறந்த புகழ்மிக்க வீரர்களுக்கு மலைப்பகுதியில் அருகில் இயற்கையான கல்லில் வீரர்களின் வடிவங்களைச் செதுக்கினர். அக்கல்லினை நீராட்டினர்.பின்பு மஞ்சள் குழைத்த சாந்தைப்பூசி ஆத்தி மரத்தின் பட்டையால் உள்ள நாரினால் தொடுத்த கரந்தைப்பூவைச் சூடி வழிபட்டதை அப்பாடலில் அறிய முடிகின்றது.

சிலப்பதிகாரத்தில் சேரமன்னன் கற்புக்கரசிக்கு கல் எடுத்த பொழுது அதனை கங்கை ஆற்றில் நீர்ப்படைச் செய்ததை

**“செங்குட்டுவன்றன் சின வேற் றானையோடு**

**கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து பாற்படு**

**மரபிற் பத்தீக் கடவுளை**

**நூற்றிறன் மாக்களி னீர்ப்படை**

**சேய்து”[50]**

இப்பாடல் சுட்டுகின்றது.

தற்காலத்தில் இறந்தவா்களுக்கு ஈமச்சடங்குகளில் நீராட்டுதல் என்ற வழக்கம் தமிழா்கள் நடுகல்லுக்கு நீா்ப்படை நிகழ்த்தும் மரபின் எச்சமாக இருக்கலாம் என்பதை உய்த்துணர முடிகின்றது.தமிழா்கள் உருவாக்கிய நம்பிக்கைகளே இன்றைய காலக்கட்டத்தின் சடங்கு முறைகளுக்கு வழிவகுத்துள்ளதை உணரலாம். மேலும் நடுகல்லினை வழிபடுவதால் நாட்டில் மும்மாரி மழை பெய்து பயிா்கள் செழித்து வறட்சி நீங்கும் என்ற நம்பிக்கை சங்ககால மக்களிடம் இருந்துள்ளது.

**"தோழாதனை கழிதலோம்பு மதி வழாது**

**வண்டு மேம்படூஉ மிவ் வறநிலையாறே[51]**

**பெயரே**

**மடஞ்சான் மஞ்ஞை அணிமயிா் கூட்டி**

**இடம் பிறா் கொள்ளாச் சிறுவழிப்**

**படஞ்செய் பந்தா்க் கள்மிசை யதுவே"[52]**

என்பதில் போரில் வீரமாகப் போரிட்டு இறந்த வீரனின் பெயரையும் புகழையும் எழுதிய நடுகல்லினை நிறுத்தி அதற்கு மயிற்பீலி சூட்டி அவ்விடத்தில் சிறிய வகையில் பந்தரை அமைந்துள்ளனா்.

**4.1.2.சடங்குகளில் நீா்**

**"சடங்கு என்பது சாஸ்திர விதி பற்றியும் வழக்கம் பற்றியும் அனுஷ்டிக்கும் கிரியை என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராகராதி குறிப்பிடுகிறது"[53]**

**"சடங்கென்பது சிறந்த வாழ்விற்குரிய உந்துதலைப் பெற பொருத்தமான நிகழ்வுகளுடன் நிகழ்த்தப் பெறுவதாகும் மனிதன் கருவுயிா்ப்பது முதல் இறப்பது வரை பல நிலைகளைக் கடக்கிறான்.ஒவ்வொரு நிலையிலும் அந்நிகழ்ச்சியைக் குறிப்பதற்காகவும் அதன் பண்பையும் பரனையும் நினைவூட்டுவதற்காகவும் சில சிறப்புச்செயல்கள் செய்யுமாறு ஒவ்வொரு இனத்தவரும் விதிகள் உண்டாக்கி இருக்கிறாா்கள் அவை சடங்குகள் எனப்படும்."[54]**

சங்க காலம் தொடங்கி இன்று வரை சடங்குகள் காலத்திற்குக் காலம் சமூகத்திற்குச் சமூகம் இடத்திற்கு இடம் பல்வேறு மாறுபாடுகளுடன் தொடந்து வரும் மக்களின் நம்பிக்கையாக இருக்கின்றன.இந்தச் சடங்குகள் அன்றாட வழிபாட்டோடும் வாழ்வியலோடும் இணைந்துள்ளன. சடங்குகளில் முக்கியப் பொருளாக நீர் விளங்குகின்றது.

**“வாழ்வின் தகுதிப் பெயர்வினை அடையாளப்படுத்தும் வகையில் நிகழ்த்தப்படும் முறையான செயல் முறைகளே சடங்குகள். இச்செய்முறைகள் ஒவ்வொரு தகுதிப்பெயர்வின் போதும் பல்வேறு விதமான காரணங்களை நிலை நிறுத்துகின்றன. முன்னோரிடமிருந்து பெற்ற ஒவ்வொரு சடங்கும் அடுத்தடுத்த தலைமுறைக்காக மாற்றியளிக்கப்படுகின்றது. இம்மண்ணில் பிறக்கும் குழந்தைக்கு முன்னோர் மேற்கொண்ட பழக்கங்ளைப் பெற்றோர் செய்வதும் பின்னர் இக்குழந்தை வளர்ந்து தான் புரிந்து கொண்டவற்றைத் தன் சந்ததிகளுக்கு கற்றுக் கொடுப்பதும் மாறாத செய்முறையாகவே தொடர்கின்றது.குழந்தை பிறந்தது தொடங்கி ஒவ்வொரு பருவ மாற்றத்தின் அடையாளமாக அதன் உடல் வளர்ச்சிக்கும் மனவளர்ச்சிக்கும் தொடர்புடைய சடங்குகள் மேற்கொள்ளப்படுகின்றன. பிறப்பு பூப்பு திருமணம் இறப்பு என ஓர் உலகம் நேர்க்கொட்டில் சென்ற ஒட்டு மொத்தமாக அழிந்து விடுவதில்லை மாறாக சுழலேணி முறையில் இயங்கியலைக் கொண்டிருக்கிறது.வாழ்க்கை வட்டச் சடங்குகள் அனைத்தும் தம் குலங்கள் வாழ வேண்டும் என்ற மனித வளத்தை முதன்மைப்படுத்தியே செய்யப்படுகின்றன.அதனால் தான் மனிதனின் பிறப்பையும் வாழ்தலையும் மையமாகக் கொண்டு வாழ்க்கை என்ற வினைச் சொல் தேர்வு செய்யப்பட்டிருக்கின்றது என்று க.அ. ஜோதிராணி குறிப்பிடுகின்றார்”[55]**

**1.நோன்பில் நீர்**

சமணமுனிவர்கள் எண்ணாமல் பட்டினி கிடந்து நோன்பு இருப்பதால் வாடின தோற்றத்தைக் கொண்டவராகவும் நீராடமை என்னும் ஒழுக்கத்தை கடைபிடிப்பவராகவும் காரிக்கண்ணனார் இப்பாடலில்

**“ஆடாப் படிவத்து ஆன்றோர் போல”[56]**

குறிப்பிடுகின்றார்.

**2.வேள்வியில் நீர்**

செந்தீப்பேணி வேள்வி செய்து வழிபாடு செய்யும் முறை பண்டைய காலந்தொட்டே இருந்து வருகின்றது. வேள்வியினை அரசர்கள் பலரும் அறவோர்களைக் கொண்டு செய்துள்ளதை புறநானூறு , பதிற்றுப்பத்து மதுரைக்காஞ்சிப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

வேள்வி செய்கின்ற பொழுது பயன்படுத்தும் பொருட்களில் நெய் , நீர் முதலியன இடம்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

**“காடு என்றா நாடு என்று ஆங்கு**
**ஈர் ஏழின் இடம் முட்டாது**
**நீர்நாண நெய்வழங்கியும்”[57]**

**“நீர் நாண நெய் வழங்கிப்**
**புரந்தோன்”[58]**

வேதவேள்வியில் காட்டிலும் நாட்டிலும் வாழும் பசுக்களிலிருந்து பெறப்படும் நெய்யை நீர் நாணும்படியாக மிகுதியாகச் சொரிந்து எண்ணற்ற பல வேள்விகளைச் செய்தனர் என்று புலவர் குறிப்பிடுவதிலிருந்து நீரும் வேள்வியில் அங்கம் வகித்ததை உணர முடிகின்றது.

**3.படையல் வழிபாட்டில் நீர்**

கடவுளுக்குப் படையல் வைத்து வழிபடுவது மரபு. இருப்பினும் அதில் நீரும் இடம்பெற்றுள்ளது என்பதனை உறுதிப்படுத்தும் நோக்கில்

**“பழம்பல் நெல்லின் வேளூர் வாயில்**
**நறுவிரை தெளித்த நாறுஇணர் மாலைப்”[59]**

பலவகையாக சேமிக்கப்பட்ட நெற்கதிர்களோடு அங்கு இருக்கும் தெய்வத்திற்கு நீர்த்தெளித்து மலர்மாலைகள் சாத்திப் படையலிட்டு வைத்து வழிபடுவர்.அகப்பாடல் சான்றாக உள்ளன.மேலும் ஒவ்வொரு தெய்வத்திற்கும் உரிய விருப்பமான உணவு வகைகளோடு நீரினை வைத்து வழிபடுவது மக்களுடைய நம்பிக்கையாக இருந்ததோடு மட்டுமல்லாமல் அது தமிழரின் பண்பாடாகவும் அமைந்திருந்தது.

**4. நீர் வார்த்தல்**

நீர் வார்த்தல் என்பது ஒருவர் ஏதேனும் பொருளை மற்றொருவருக்கு தானமாக கொடுக்கும் பொழுது அதனை உறுதிப்படுத்துவதற்காக கையில் நீரினை வார்த்துக் கொடுப்பது தமிழர்களின் சடங்குகளில் ஒன்றாக உள்ளது. திருமணச்சடங்குகளிலும் மணமகளை , மணமகனுக்குத் தாரை வார்த்தல் அல்லது தாரைவார்த்துக் கொடுத்தலைக் காண முடிகின்றது.

**“நனந்தலை உலகம் வளைஇ நேமியோடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப் ...”[60]**

சங்கப்பாக்களில் முல்லைப்பாட்டியில் வாமன அவதாரத்தில் நெடியவனாகிய திருமால் வாமனவடிவத்தில் மாவலிச் சக்கரவர்த்தியிடம் நிலவுலகத்தை மூன்றடியால் அளந்து தானம் செய்த பொழுது திருமாலின் கையில் நீரை வார்த்துக் கொடுத்தான்.இதனை

**“அடி ஒரு மூன்றும் நீ அளந்து கொள்ள என**
**நெடியவன் புறியாக நீரில் நீட்டினாான”[61]**

**“கார்எதிர் புறவி னதுவே உயர்ந்தோர்க்கு**
**நீரோடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்**
**வரைகோள் அறியாச் சொன்றி**
**நிரைகோள் குறுந்தொடி தந்தை ஊரே”[62]**

தமிழர்கள் உயர்ந்தோருக்கு உணவைக் கொடுக்கும் போது நீர் வார்த்துக் தாரைவார்த்துக் கொடுத்த பின்பு மீதியுள்ள உணவினை அனைவருக்கும் அளவில்லாமல் வாரி வழங்குகின்ற தந்தையின் ஊராகும் என்ற செய்தி இடம் பெற்றுள்ளது. நீரைவார்த்தல் மரபு தம்மை விட உயர்ந்த நிலையிலுள்ள மாந்தருக்குரியதாக இருப்பதை காணமுடிகின்றது. இறைவனுக்கு உணவினைப் படைக்கும் பொழுதும் படையலைச் சுற்றியும் அந்தணர்கள் உணவினை உண்ணும் முன்பும் இறைவனை வேண்டி நீர் வார்ப்பதை அறியலாம்.

**"அந்தணர் அருங்கலம் ஏற்ப நீர்பட்டு**
**இருஞ்சோறு ஆடிய மணல்மலி முற்றத்துக்**
**களிறு நிலை முணைஇய தார்அருந் தகைப்பின்"**[63]

**"நன்பல**
**கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்க்கு**
**அருங்கலம் நீரோடு சிதறி"**[64]

**"கைபெய்த நீர் கடற் பரப்ப"**[65]

**"பூவும் பொன்னம் புனல்படச் சொரிந்து"**[66]

போன்ற பாடல்களில் கேள்விச் செல்வம் நிரம்பிய சிறந்த பார்ப்பனர்கள் புகழ்மிக்க பல வேள்விகளைச் செய்து முடித்த அந்தணர்களுக்கு மன்னர்கள் கொடையாக பொன்னால் செய்யப்பட்ட அணிகளை வழங்கினான். அப்பொழுது நீர் வார்க்கும் பொழுது உருவான நீர் மணல் முற்றங்களில் கலந்து சேறாகக் காட்சியளித்த குறிப்பு உள்ளது.இங்கு அந்தணர்களை கடவுளுக்கு நிகராக பார்த்துள்ள பாங்கும் சான்றோர்க்கு முதலிடம் கொடுத்த விதமும் புலப்படுகின்றது.

**"விழா முதலியவற்றில் இரவலர்க்கும் பிறர்க்கும் தானம் செய்தலும் உண்டு தானம் செய்கின்ற பொழுது நீரட்டித்தானம் செய்வர். உயர்ந்தோருக்கு நீரட்டித்தானம் செய்தலையும் ஏனையோருக்கு வரைவின்றி**

**சோறு வழங்குதலையும் கொண்டனர் என்று சண்முகம்பிள்ளை குறிப்பிடுகின்றார்”[67]**

**5.அறவோர் இயல்புகளில் நீர்**

இறைவன் வீற்றிருக்குமிடம் பஞ்சபூதங்களின் சேர்க்கையாகும். உலகமும் நம் உடலும் நீரினால் உருவானது. அதனால் தான்அண்டமும் பிண்டமும் ஒன்றே என்ற பழமொழி நிலவுகின்றது.

- நீரின் 72%
- மண் 12%
- காற்று 6%
- ஆகாயம் 6%
- நெருப்பு 4%

பஞ்ச பூதங்களின் விழுக்காட்டில் நீரின் ஆற்றலே அதிகமாகும். அதனால் நீரில் இறைவனின் இடப்பெயர்ச்சி பரிமாற்றம் மிகவும் அதீத அளவில் தோன்றக்கூடும். இதன் காரணத்தினால் இறைவனின் சிலைகளுக்கு புனித நீரினாலும் நீரால் உருவாக்கப்பட்ட பால் தயிர் இளநீர் தேன் போன்ற பொருட்களாலும் நீராடல் செய்யப்படுகிறது. அதன் மூலம் இறைவனின் அளப்பரிய ஆற்றலானது நேரடியாக மக்களினால் உட்கிரகிக்கப்படும் என்பதை உணர்ந்த முன்னோர்கள் ஆறுகள் குளங்கள் கடல்கள் இருக்கும் பகுதிகளில் கோவில்களை உருவாக்கி நீராடிய பின்பு ஈர ஆடையுடன் வழிபடும் வழக்கத்தையும் ஏற்படுத்தியுள்ளனர் என்பதை

**“புலராக் கழகம் புலர உடீஇ**
**உச்சிக் கூப்பாய கையினர் தற்புகழ்ந்து**
**ஆறு எழுத்து அடக்கிய அருமறைச்செல்வம்**
**நாஅயல் நீராடிய மருங்கில் நவிலப்பாடி”[68]**

திருவேரகத்தில் வீற்றிருக்கும் முருகனைத் தரிசிப்பதற்காக அறவோர்கள் நீராடிய உடனே ஈர ஆடையுடன் இறைவனை வணங்கச் சென்ற செய்தியை அறியலாம்.

நாளடைவில் இறைவனை வழிபடுவதற்கு உடலும் மனமும் தூய்மையாக இருக்க வேண்டும் நீரின் தூய்மைத்தன்மை மக்களின் உடல் மற்றும் மனரீதியான அழுக்குகளைப் போக்கி விடும் என்பதற்காக நீர்நிலைகளில் புனித நீராடல் வழக்கமாக மாறியுள்ளது.

**6.மணச்சடங்கில் நீர்**

தமிழரின் திருமணவிழா ஒவ்வொரு தனிப்பட்ட மனிதனின் சமூகத்தகுதியாகவும் சடங்குகளின் அங்கமாகவும் விளங்குகின்றது. இத்திருமண நிகழ்வில் மணமக்களை நீராட்டல் சங்க இலக்கியத்தில் சடங்காக இருந்துள்ளது என அறிகிறோம்.

**“பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்**
**முன்னம் பின்னவும் முறைமுறை தரத்தரப்**
**புதல்வற் பயந்த திதலை அவ்வயிற்று**
**வால்இழை மகளிர் நால்வர் கூடிக்**
**கற்பினின் வழாஅ நற்பல உதவிப்**
**பெற்றோற் பெட்கும் பிணையை ஆக என**
**நீரொடு சொரிந்த ஈர்இதழ் அலரி**
**பல்இருங் கதுப்பின் நெல்லோடு தயங்க”**[69]

அகநானூற்றுப் பாடலில் வீட்டில் நடைபெற உள்ள திருமண ஏற்பாட்டில் வரிசையாய்க் கால்களையுடைய குளிர்ந்த பந்தரில் மணல் பரப்பப்பட்டிருந்தது. பந்தலைச் சுற்றிலும் மலர் மாலைகள் தொங்க விடப் பட்டிருந்தன.மனை விளக்கு ஏற்றப்பட்டன. உளுத்தம் பருப்புடன் கூட்டிச் சமைத்த பொங்கலோடு விருந்து நடைபெற்றுக் கொண்டருந்தது.வானில் உரோகிணி விண்மீனுடன் கூடிய முழுநிலாக் காலத்தில் மங்கலமகளிர் மணமக்களை நீராட்டுவதற்குரிய நீரைமுகந்து தர மணமகனைப் பெற்ற மக்கள் நால்வர் கூடி நின்று கற்பினின்றும் வழவாது பல பேறுகளையும்

தந்து நின்னை எய்திய கணவனை விரும்பிப் பேணும் விருப்பத்தை உடையை ஆகுக என்று வாழ்த்தி அந்நீரில் நெல்லையும் மஞ்சளையும் கலந்து மணமகளை நீராட்டினர்.

இங்ஙனம் அக்காலத்தில் மணமகளை மங்கல மகளிர் நீராட்டுவது சடங்காக இருந்துள்ளது.

**“……..திங்கள்**

**சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்துக்**

**குடிநகர் புனைந்து கடவுட் பேணிப்**

**படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ**

**வதுவை மண்ணிய மகளிர் விருப்புற்றுப்**

**பூக்கணமும் இமையார் நோக்குபு மறைய……………”[70]**

மற்றொரு பாடலில் இறைச்சியும் நெய்யும் கூட்டியாக்கிய வெண்சோற்றை மணத்திற்கு வந்தவர் உண்டனர்.திங்கள் உரோகிணியுடன் கூடிய நல்லோரையில் மணமனையை அழகு செய்தனர்.கடவுள் வழிபாடு நடைபெற்றது.மணமுழவுடன் பெரிய முரசம் ஒலித்தது. வாழ்வரசிகள் மணமகளுக்கு மணநீராட்டினர்.வாகை இலையை மழை பெய்ததால் தழைத்த அருகிலுள்ள கிழங்கிடத்துள்ள நீலமணியைப் போன்ற இதழ் அரும்புகளுடன் வெள்ளை நூலில் கட்டப்பட்ட மாலையைச் சூட்டி மணமகளைத் தூய உடையால் பொலியச்செய்தனர். மேகம் ஒலித்தது போல உறவினர் அனைவரும் ஒன்று சேர்ந்து மணமகளை மனைவியாக்கினர்.

நாலாயிரதிவ்வியப் பிரபந்தத்தில்

**“குங்கும மப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து**

**மங்கல வீதிவ லம்செய்து மணநீர்**

**அங்கவ னோடுமு டஞ்சென்றங்**

**கானை மேல்**

**மஞ்சன மாட்டக் னாக்கண்டேன்**

**தோழீநான்”**[71]

என்று ஆண்டாளும் குளிர்ச்சியான சந்தமும் பூசி நறுமணம் மிக்க நீரினைக் கொண்டு அவள் தன் கணவன் கண்ணனோடு வருகின்ற வேளையிலே திருமஞ்சனம் செய்யக் கனவு கண்டதாக பாடுகின்றாள். பெண்வீட்டைச் சேர்ந்த தாய் மாமன் சம்மதத்துடன் மணவிழாவனது உறுதியானப் பின்பு அக்குடும்பத்திலுள்ளோர் மணமகளை மரத்தினால் ஆன மூன்று கால்களையுடைய பலகையில் உட்கார வைத்து காலுக்கு மெட்டியை அணிவிப்பர். பின்பு மணமகனின் தலையில் எண்ணெய் அரப்பு போன்ற நறுமணப் பொருட்களைக் கொண்டு நலங்கு நீராட்டுவார். இது பெரும்பாலும் மாலை நேரங்களில் நடைபெறும் நலங்கு முடித்த பின்பு மணமக்களை வெளியில் செல்ல அனுமதிக்க மாட்டார்கள்.தமிழர்களின் மங்கல நீராடல் தற்காலத்தில் நீராட்டும் நலங்கு வைத்தல் என்ற பெயரில் சடங்கு மரபாகத் தொடர்கின்றது.பழந்தமிழரிடையே திருமணச் சடங்கின் போது மணமகளை முல்லை மலரும் நெல்லும் இடப்பெற்ற மங்கலநீரால் நீராட்டும் வழக்கம் இருந்ததை அறிய முடிகின்றது.

மருதநில மக்கள் வளத்தின் அறிகுறியாக நீர் மணச்சடங்கில் பயன்படுத்தப்பட்டதையும் வளச்சடங்கின் சான்றாய்க் காணலாம்.நீர் பயன்படுத்தப்பட்ட நிலை வாழ்வின் செழுமைக்கு உதவுவதை வெளிப்படுத்துகின்றது.

**7.புதல்வர் ஈன்ற மகளிர் நீராடல்**

சங்ககாலத்தில் மகளிர் குழந்தையை ஈன்றெடுத்தவுடன் சில சடங்குகளை பின்பற்றியுள்ளனர்.

**“கணவர் உவப்ப புதல்வர்ப் பயந்து**

**பணைத்து ஏந்து இளமலை அமுதம்**

**பலவுப்புனிறு தீர்ந்து பொலிந்து சுற்றமோடு**

**வளமனை மகளிர் குளநீர் அயர”**[72]

தம் இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் உண்டாகும்படி மகனை ஈன்றெடுத்த தாயானவள் ஈன்று அணிமை நீங்க தம் சுற்றத்தினருடன் குளத்து நீரில் நீராடியுள்ளனர். தொல்காப்பியர் காலத்திலும்

**“புனிறு பயந்த  புனிறுசேர் பொழுதில்**

**நெய்யணி மயக்கம் புரிந்தோர் நோக்கி**

**ஐயர் பாங்கினும் அமரர் சுட்டியும்**

**சேப்பெருஞ் சிப்போடு சேர்தல”**[73]

குழந்தையை ஈன்ற தாய் தலையில் எண்ணெய் வைத்து குளிக்கும் வழக்கம் நடைமுறையில் உள்ளதை அறியலாம். இங்கு நெய்யணி மயக்கம் என்பது பெண்கள் எண்ணெய் தேய்த்து நீராடும் பொழுது உடல் சோர்வு தோன்றுவதைக் கூறுகிறது.

**8.தீவினை அகல்வதில் நீர்**

வாழ்நாளில் தீவினைகளை செய்த மக்கள் தங்கள் பாவங்களைப் போக்க நீர்நிலைகளில் நீராடும் வழக்கம் இன்றும் காணப்படுகின்றது. சங்க கால மக்கள் தங்களது தீவினை அகல கடலாடுதலும் காவிரி ஆறு கடலோடு கலக்கும் சங்கமத்திலும்  நீராடியுள்ளதை அறிய முடிகின்றது.

பரதவர்கள் காவிரியாறு கலக்கும் கடலினை வணங்கி தம் தீமைகள் நீங்கக் கடலில் நீராடினர்.

**“தீதுநீங்கக் கடல் ஆடியும்**

**மாசுபோகப் புனல் படிந்தும”**[74]

என்ற பாடலில் அறியலாம்.இதனை மணிமேகலையில்

**“பார்பனி சாலி காப்பக்கடை கழிந்து**

**கொண்டோற் பிழைத்த தண்ட மஞ்சித்**

**தென்றிசைக்குமரியாடியவருவோன்”**[75]

பாண்டியன் நாட்டில் மழைப்பொழிந்து வையை ஆற்றில் புதுவெள்ளமானது தோன்றியதால் மதுரை வளமையும் செழுமையும்

உற்றது. இதைக் கொண்டாட மன்னன் ஏழு நாட்கள் திருவிழா நடத்தினான். அவ்விழாவில் மக்கள் அனைவரும் ஒன்று கூடிக் களிப்புற்றனர்.

**"மழைகொளக் குறையாது புனல்புக மிகாது**
**கரைபொருது இரங்கும் முந்நீர் போலக்**
**கொளக்கொளக் குறையாது தரத்தரமிகாது**
**கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி**
**ஆடுதுவன்று விழவின் நாடு ஆர்த்தென்றே**
**மாடம் பிறங்கிய மலிப்புகழ்க் கூடல"**[76]

விழாவின் நிறைவாக தீவினைகளைப் போக்குவதற்காக நீராடி உள்ளதாகப் பாடல் குறிப்பிடுகிறது.

திருமுருகாற்றுப் படையில் முருகன் கோவிலில் குறமகள் வழிபாடு செய்கிறாள்.அவ்வழி பாட்டில் சிறிய வகையிலுள்ள பசுமையான மஞ்சளினை நல்மணப் பொருட்களையும் கலந்து தெளியக் கூடிய வழக்கம் இருந்துள்ளது.

**"சிறு மஞ்சளோடு நறுவிரை தெளித்து"**[77]

சங்க காலத்தில் தோற்றம் பெற்ற மரபானது தற்காலத்தில் மஞ்சள் நீராடல் சடங்குகளுக்கு வித்திட்டுள்ளது. மாரியம்மன் திருவிழா பூப்புனித நீராட்டு விழா போன்ற விழாக்களின் இறுதி நாளில் மஞ்சளானது நோய்க்கிருமிகளை நீக்கும் தன்மை கொண்டதால் நீரில் மஞ்சளினைக் குழைத்து நீராடுதலும் இல்லங்களில் தெளிக்கும் வழக்கமும் நடைமுறையிலுள்ளது.

### 4.1.3 உணர்வுகளில் நீர்

#### 1.பொருள்ஈட்டலில் நீர்

சங்க இலக்கியத்தில் தலைவன் பொருள் ஈட்டி வருதல் என்பது அவனுக்குரிய பண்பாகும். அங்ஙனம் பொருளைத் தேடுவதற்காக அயல்நாடுகளுக்குச் செல்வதில் கடல் வணிகம் சிறப்பிடம் பெறுகிறது.

**“அமரா்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்**

**நல் ஆனொடு பகடு ஓம்பியும்”[78]**

வணிகப் பெருமக்கள் நீரினும் நிலத்தினும் சென்று பொருளீட்டி வந்து நாட்டின் செல்வநிலையைப் பெருக்கியதைப் புறம் எடுத்துரைக்கின்றது.

**2.மானத்தில் நீா்**

மானம் என்ற சொல்லின் வோ்ச்சொல் மான் என்பதாகும். மயிா்நீப்பீன் வாழாக் கவரிமா என்று குறள் குறிப்பிடுகின்றது. காட்டிலுள்ள கவரிமானின் உடலிருந்து ஒரே ஒரு முடியானது கீழே விழுந்தாலும் உயிா் வாழாது. அத்தகைய மரபைச் சாா்ந்தவா்கள் தமிழா்கள்.

**“குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**

**ஆள்அன்று என்று வாளின் தப்பார்**

**தொடா்ப்படு ஞமலியின் இடபா்ப்படுத்து இரீஇய**

**கேளல் கேளிா் வேளாண் சிறுபதம்**

**மதுகை யின்றி வயிற்றுத்தீ தணியத்**

**தாம்இரந்து உண்ணும் அளவை**

**ஈன்ம ரோஅவ் வுலகத் தானே”[79]**

சேரமன்னன் கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கணானோடு திருப்போா் புறத்துப்போரில் தோல்வியுற்றான். அதனால் அவனை குடவாயிற் கோட்டத்துச்சிறையில் அடைத்தான். தாகத்திற்காக தண்ணீா் கேட்ட போது பகைவா்கள் தர தாமதித்தனா். அதனால் வெகுண்ட சேரன் குழந்தை இறந்து பிறந்தாலும் உறுப்புகள் முழுமையற்றுக் குறைபாடாக பிறந்தாலும் அரசா்குலத்துக்கு இழுக்கு என்று வாளால் வெட்டியப் பின்பே புதைப்பா் அத்தகைய அரசா் குலத்தில் தோன்றியோா் வயிற்றுப்பசியைப் போக்க இரந்துண்ண மாட்டாா்கள் எனக் கூறி தன்னுயிரை நீருந்தாமல் நீத்தான்.

**3.அன்பு வெளிப்பாட்டில் நீர்**

நீர் எல்லாப் பொருட்களோடு கலந்து விடும் குணமுடையது .எந்தப் பொருளோடு சேர்க்கின்றதோ அந்தப் பொருளின் தன்மையைப் பெற்று விடும்.இதனை அறிவியல் நீர் ஒரு கரைப்பான் என்கிறது. இக்கருத்தை வலியுறுத்தவே குறுந்தொகையில்

**“யாயும் ஞாயும் யார் ஆகியரோ**

**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**

**யானும் நீயும் எவ்வழி அறிதும்**

**செம்புலப் பெயல் நீர் போல**

**அன்புடைய நெஞ்சம் தாம் கலந்தனவே”**[80]

வானத்திலிருந்து பெய்யும் மழையால் செம்மண்நிலத்தில் கலந்து சிவப்பு நிறமாக மாறியது. அதைப்போலவே அன்புடைய இருமனங்களும் ஒன்றோடு ஒன்று கலந்து மாறிவிடும்.

**“நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**

**நீரினும் ஆர்அள வின்றே – சாரல்**

**கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே”**[81]

நீர்நிலைகள் கொண்ட பகுதிகள் ஆழமுள்ளதாக காணப்படும் அதன் ஆழத்தை அறிவது என்பது கடினமானச்செயல். நீரின் ஆழத்தை அளவிடலாம் அல்லது அளவிட முடியாததாக இருக்கும் அதுபோல தலைவரின் அன்பும் அளவிட முடியாத ஆழத்தை உடையது. அப்படிப்பட்ட நீரின் ஆழத்தை விட உயர்ந்தது தலைவனின் அன்பு என்று கூறுகிறார் புலவர்.

**“சுடர்த்தொடி கேளாய் ...................**

**உண்ணுநீர் வேட்டேன் என வந்தாற்கு அன்னை**

**அடர்பொன் சிகரத்தால் வாக்கிச் சுடர் இழாய்**

**உண்ணுநீர் ஊட்டி வா என்றாள்**[82]

தலைவி தோழியிடம் கூறுவதாக அமைந்த இப்பாடலில் நாம் முன்னொரு நாள் சிற்றில் இழைத்துச் சிறுவீடு கட்டி சமைத்து விளையாடிய நேரத்தில் நாம் செய்த சிறிய வீட்டினை காலால் அழித்த பட்டி மகன்.ஒருநாள் நானும் என்தாயும் வீட்டில் இருந்த பொழுது வந்தான். நீர் வேட்கை என்று கூறினான்.தாயானவள் பொன்னால் செய்யப்பட்ட கலத்தில் நீரைத் தந்து என்னை அனுப்பினாள் நானும் அவனுக்கு நீரினை தந்த போது அவன் என் முன்கையைப் பற்றினான்.நான் அன்னாய் அவன் செயலைக் காண் என்றேன்.தாய் அச்சமுற்று அலறினாள். நான் உண்மையை உரைக்காமல் அவன் உண்ணுநீர் விக்கினான் என்றேன் என்ற புலவர் பாடிய குறிஞ்சிக்லியில் நீர் தலைவன் , தலைவி இருவரும் ஒருவரையொருவர் கடைக்கண்களால் நோக்கி தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்த நீர் ஊடகமாக இருக்கின்றதை அறிய முடிகின்றது.

**“நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள் வைகறை**

**கார் பெற்ற புலமே போல் கவின்பெறும**”[83]

தலைவனின் வருகை எதிர்ப்பார்த்த தலைவி தலைவன் வராமையால் நீரின்றி வாடும் வயல் போலவும், தலைவன் இரவுப்பொழுது வந்து கண்ணுற்றதால் கார்காலத்தில் பெய்த மழையால் வளனுற்ற சோலை போலவும் அழகுபெற்றாள் என்று புலவர் பாடுவதில் நீரின் வருகையே பயிர்க்கு வளமும் நீர்வராமையே வாட்டமும் தருவதாக உவமைப்படுத்தியுள்ளார்.

**4.உடன்போக்கில் நீர்**

தலைவனுடன் தலைவியானவள் உடன்போக்குச் செல்கிறாள் அவளை எண்ணி வருத்தமுறும் பாடல்களில் நீர்ச்சார்ந்த நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளன.

பால்நிறைந்த பொற்கிண்ணத்தை கையில் ஏந்திக் கொண்டு அவள் பின்னால் ஓடி உண்ணக் கொடுத்தும் வேண்டாம் என்று கூறியவள்.

தற்பொழுது நிழலும் நீரும் அற்ற பாலைநிலப்பெருவழியில் விரைந்து சென்றதால் ஏற்பட்ட நீர்வேட்கைத்தீர சுனைகள் தோறும் வருந்தி அலைகின்றாள். எங்கும் நீரில்லாமையால் இனிய வற்றிய கலங்கிய நீரை விரும்பி அருந்துகிறாள் என்று தலைவி செயல்களைக் கண்டு வருந்துகின்றாள்.

**“சேயின் வருஉம் மதவலி**

**முன்னாள் உம்பர்க் கதிர”**[84]

வயலைக்கொடி நீர்வார்ப்பின்றி வாடுவதைக் கண்டு தன் மகள் கைவளையல்கள் குலுங்க நீர் மொண்டு வந்து வார்த்தவள். ஊரும் பேரும் தெரியாத தலைவனோடு சென்று விட்டாள்.அதனால் இனி உனக்கு நீர் ஊற்றிக் காப்பாற்றுபவர் யாரோ என்று புலம்புகின்றாள்.

இங்கு நீரின்றி வாடும் கொடியைப் போல தலைவி வாடுவதாக வருத்தமுற்று தலைவியின் நினைவுகளில் ஆழ்ந்து செவிலி குறிப்பிடுகின்றாள்.

**5.மன்னனின் கடமையில் நீர்**

ஒரு நாடு நல்ல நாடாக வளத்தோடு இருக்க வேண்டுமெனில் நாட்டில் உள்ள மக்கள் அனைவருக்கும் உண்ணுவதற்கு உணவு குறைவின்றி கிடைக்க வேண்டும். அவ்வுணவே மக்களுக்கு உயிர். உணவுப்பொருளைத் தருவது நீராகும். பள்ளமான நிலத்தில் நீரைப் பாய்ச்சினால் மட்டுமே நெல் முதலிய தானியங்களைப் பயிர் செய்ய இயலும். ஆதலால் சங்ககாலத்தில் ஏரி, குளம் போன்ற நீர்நிலைகளைப் பெருக்குவதே மன்னனின் தலையாயப் பணியாக இருந்துள்ளது.

பண்டைய மன்னர்கள் நீர்வளம் பெருக்குவதைத் தமது கடமையாகக் கொண்டனர். ஒரு நாடு சிறந்த நாடாக விளங்குவதற்கு மக்கள் உணவுக் குறையின்றி வாழ்தல் வேண்டும். உணவுப்பொருட்களைப் பெருக்குவதற்கு நிலத்தை வளப்படுத்தலே முறையாகும். அதற்கு ஏரி, குளங்கள் முதலிய நீர்நிலைகளைச் செப்பனிட்டுக் கரையை உயர்த்தி நீரைத் தேக்க வேண்டும்

என்று எண்ணினர். ஆற்றுநீரையும் தேக்கிக் கால்வாய்கள் மூலம் கொண்டு செல்லக் கருதி அப்பணிகளில் தமிழகஅரசர்கள் விருப்பத்துடன் செயல்பட்டனர் என்பதை பல்வேறு சங்கப்பாடல்கள் எடுத்துரைத்துள்ளன. அந்த வகையில் கரிகாலன் நீர்நிலைகளைப் பெருக்கியதை,

**"காடு கொன்று நாடாக்கிக்**
**குளந் தொட்டு வளம் பெருக்கி[85]"**

என்ற பட்டினப்பாலை வரிகள் உணர்த்துகின்றன. கரிகாலச்சோழனின் புகழைப் பட்டினப்பாலையும், பொருநராற்றுப்படையும் போற்றிப் புகழ்கின்றது.

இம்மன்னன் வழக்கமான மன்னர்களைப் போல போர்களில் ஈடுபட்டாலும் வடநாட்டு அசோகனுக்கு இணையாக மரம் நடுவிது, குளம் வெட்டுவது போன்ற செயல்களில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர். காவிரி அணையில் கல்லணையைக் கட்டியவர் என்பதை,

**"அரிகாலின் கீழுகூஉ மந்நெல்லே சாலும்**
**கரிகாலன் காவிரிசூழ் நாடு[86]"**

என்ற பொருநராற்றுப்படை வரிகள் மொழிவதை அறியமுடிகின்றது.

மழைக்காலங்களில் காவிரியாற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடி அந்நீர் கடலில் கலந்தது. வெயில் காலங்களில் காவிரியாறு நீரின்மையால் வறண்ட பூமியாக காணப்பட்டது. இதனால் மக்கள் விளைச்சலைப் பெருக்க வழியில்லாமல் போயிற்று இதனை அறிந்த கரிகாலச்சோழன் மழைக்காலங்களில் பெருக்கெடுத்து ஓடும் நீரைத் தேக்கி வைக்கவும் உழவுத்தொழில் தடையின்றி நடைபெறவும் காவிரி ஆற்றில் அணை கட்ட வேண்டும் என்று முடிவு செய்துள்ளான். ஆனால் ஒரு நொடிக்கு இரண்டு இலட்சம் கனஅடி நீர் பாயும் தண்ணீர் மேல் அணை கட்டுவது என்பது மிகவும் கடினாக இருந்த நிலையில் சுழல்விதியைக் கொண்டு கி.பி.2ஆம் நூற்றாண்டில் அணை கட்டியது வியப்பிற்குரியது. அந்த அணை வெள்ளத் தடுப்பிற்கும் , நீர்ப்பாசனத்திற்கும் இன்ற வரை பயன்படுத்தப்பட்டு வருகிறது.

இது சங்ககால மக்களின் நீர் மேலாண்மைத் தொழில்நுட்பத்திற்கு மிகச் சிறந்த சான்றாக விளங்கி வருகின்றது.

**“நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருக**
**தட்டோரம்ம இவண் தட்டோரே**
**தள்ளாதோர் மற்றிவண் தள்ளாதோரே”**[87]

பாண்டியன் நெடுஞ்செழியனிடம் சென்ற குடபுலவியனார் என்னும் புலவர் செல்லும் உலகத்து செல்வம் வேண்டினும் இவ்வுலகில் புகழை நாட்ட வேண்டினும் செய்யத்தக்கதைக் கேட்பாயாக உணவால் நிலைபெறுவது உடல் உணவுப்பொருள்களை உற்பத்தி செய்வதற்குத் தேவைப்படுவது நீர் அத்தகைய விளைவிற்குத் தேவையான நீரையும் நிலத்தையும் ஒன்றாக இணைப்போர் உடம்பும் உயிரும் படைத்தோர் ஆவார். வயலில் விளைத்து விட்டு நீர்க்கு வானத்தை நோக்கி இருப்பது இறைவன் என்ற சிறப்பிற்குரிய அரசன் முயற்சிக்கு இழுக்காகும்.ஆகவே நீர்நிலைகளைப் பெருக்கச் செய்தல் அரசனின் தலையாய கடமையாகும். அவ்வாறு செய்பவரே தம் புகழை இவ்வுலகில் நிலைநிறுத்தியோராவர் இதனைச் செய்யாதவர் தம் புகழை இவ்வுலகத்தில் நிலைபெறச் செய்யாதவரே ஆவார் என்று அறவுரை வழங்குகின்றார்.

நீரைச்சேமித்து முறையாகப் பயன்படுத்துவதினால் நாட்டின் பொருளாதார வளமும் நிறைவடையும் என்பதால் நீர்வளத்தினைப் பெருக்க, ஓடி வரும் மழை நீரை தேக்கி வைத்தனர்.

வேளாண்மைகளுக்குப் பயன்படுத்த அறையும் பொறையும் அமைத்த பகுதிகளை இணைத்து வளைந்த வடிவிலான நீர்த்தேக்கத்தை உருவாக்கிய விதத்தினை,

**“அறையும் பொறையும் மணந்த தலைய**
**எண்நாள் திங்கள் அனைய கொடுங்கரை**
**தெண்ணீர்ச் சிறுகுளம் சிறுகுளம”**[88]

எட்டாம்நாள் பிறை போன்ற வளைந்த குளம் அமைத்து வாழ்வாதார நிலையை உயர்த்திய அரசமைப்பைக் காணலாம்.

**“பார்உடைத்த குண்டுஅகழி நீர்**

**அழுவ நிரப்புக்கு குதித்து”**[89]

என்பதில் பாறைகளை உடைத்து குழியாக அமைத்த பொது நீர்நிலையினையும்,

**“ஓம்பா ஈகை மாவேள் எவ்வி புனல்**

**புதவின் மிழலையோடு கழனி**”[90]

என்பதில் பாசனத்திற்காக நீரை கால்வாய் வழியாக வெளியேற்றம் செய்யப்பட்டதை உணர்த்துகின்றது.

வானிலிருந்து பெய்யும் மழைநீரைத்தேக்கி பயன்படுத்தும் வகையில், குளம், கிணறு, ஏரி, கண்மாய் அமைத்தனர். இதனால் நீர் ஆதாரம் குறைந்த காலங்களில் அவ்வவ்விடங்களிலிருந்து தேக்கிய நீரைப் பாசனத்திற்கு பயன்படுத்தினர். மேற்கண்டவையால் பண்டையோர் நீரின் முக்கியத்துவம் உணர்ந்த நிலையினை எடுத்துக்காட்டுகின்றது. இது இன்றையச் சமுதாயத்தினரும் உணர்ந்திடும் முறையில் நீரின் பயனை விளக்கியுள்ளது.

சங்க கால அரசனின் கடமைகளுள் நீர்நிலைகளைப் பெருக்குதல் தலையான பணியாக இருப்பதை அறியலாம். இக்கருத்தினை

**இடியுடைப் பெருமழை எய்தாது ஏகப்**

**“பிழையா விளையுள் பெருவளம் சுரப்ப**

**மழை பிணித்து ஆண்ட மன்னன்”**[91]

என்ற பாடலடியில் மழைநீரினை ஏரி, குளங்களில் தேக்கி அவற்றைத் தகந்த முறையில் மக்களுக்குப் பங்கிட்டு நாட்டினை வளமுறச் செய்ததாக சிலம்பு குறிப்பிடுகிறது.

**6.வஞ்சினம் உரைத்தலில் நீர்**

வஞ்சினம் என்பது பின்னர் நடக்கும் நிகழ்ச்சியின் உறுதிப்பாட்டை முன்கூட்டியே தெரிவிக்க இசைவுத்தெரிவிக்கும் கருவியாக தமிழ்மக்களிடம் உள்ளது.

தமிழர்களின் பழக்கவழக்கங்களில் போர் மற்ற செயல்களிலும் வஞ்சினம் **உரைத்தல்** வஞ்சினம் கூறல் அல்லது சூளுரைத்தல் மரபாக இருந்துள்ளது. அங்ஙனம் நீர்க்குடித்துச் சூளுரைத்தல் ஒரு வகையாகும். சூளுரைத்தலை உறுதிப்படுத்தும் விதமாக இறைவன் முன்நின்று நீரினைக் குடித்து உரைக்கும் இயல்பினைச் சங்கப்பாக்களில் காண முடிகின்றது.

**"விருந்துண்டு உஞ்சிண மிச்சல் பெருந்தகை**
**நின்னோடு உண்டலும் புரைவது என்றுஆங்கு**
**அறம்புணை ஆகத் தேற்றி பிறங்குமலை**
**மீமிசைக்கடவுள் வாழ்த்திக் கைமொழு**
**தேமுறு வஞசினம் வாய்மையிற் றேற்றி**
**அம்தீர் தெண்ணீர் குடித்தலின் நெஞ்சமர்ந்து"**[92]..........

தலைவியோடு களவு வாழ்க்கை மேற்கொண்ட தலைவன் கற்பு வாழ்க்கை மேற்கொள்ள விரும்புவதாக மலையின் மீது எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் முன்னின்று அருவிநீரைக் குடித்து வஞ்சினம் செய்ததை இப்பாடலில் அறிய முடிகின்றது.

**"கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம்**
**நோக்கிக் கடுஞ்சூள் தருகுவன் நினைக்கே**[93]**"**

என்னும் அகப்பாடல் செவிலித்தாயை நோக்கி செவிலி கடல் கழிமுகத்தில் உறைந்த தெய்வத்தின் மேல் ஆணையிட்டமையினைக் குறிப்பிடுகிறது.

**"பெருங்கடல் தெய்வம் நீர்நோக்கித் தெளித்துஎன்**
**திருந்திழை மென்தோள் மணந்தவன் செய்த**
**அருந்துயர் நீக்குவேன் போன்மன்**[94]**"**

இப்பாடலடிகளில் தலைவியை அமைதிப்படுத்துவதற்காக கடல் தெய்வத்தின் முன் தலைவன் சூளுரைத்தச் செய்தி அமைந்துள்ளது. தெய்வத்தை முன்நிறுத்தி சூளுரைத்தால் தாங்கள் சொற்படி நடக்கவில்லையெனில் அத்தெய்வமானது துன்பம் தரும் என்று மக்கள் நம்பினர்.

பரிபாடலில் தலைவன் மீது காமக்கிழத்தியின் நாற்றம் வீசுவதாக ஐயுற்ற தலைவனிடம் ஊடல் கொள்கிறாள். அப்போது அந்நாற்றமானது மலைகளில் மலர்ந்துள்ள மலர்களின் மனத்தின் நாற்றம் என்றும் மற்றொரு பெண்ணின் நாற்றமன்று என்று வையைப்புனலின் ஆணையிட்டுச் சொல்வதாகப் புலவர் குறிப்பிடுகின்றார்.

**“இனிமணல் வையை அரும்பொழில் குன்றப்**
**பனிபொழி சாரலும் பார்ப்பாரும்**
**துனியின் மரலுன்கண் சொல்வேறு நாற்றங்**
**கனியின் மலரின் மலிர்கால்சீப்பின்னது”**[95]

மற்றொரு பாடலில்

**“புனைபுணை ஏறத் தாழ்த்ததை தளிரிவை**
**நீரில் துவண்ட சேஎய்குன்றம் காமர்**
**பெருக்கன்றோ வையை வரவு”**[96]

தலைவன் காலம் தாழ்த்தி வந்ததைக் கண்ணுற்ற தலைவி இற்பரத்தையுடன் புனலாடியதாக ஊடல் கொள்ள அவளைத் தணிப்பதற்காக வையை ஆற்றின் பெருவெள்ளத்தால் புணை மீது ஏறி வருவதற்கு காலம் தாழ்ந்ததாக உறுதிபடக் கூறுகின்றான்.

அகப்பாடல்களில் தலைவன் மீது தலைவி கொள்ளும் ஐயத்தைப் போக்குவதற்காகவும் தலைவியை ஆற்றுப்படுத்துவதற்காகவும் நீரைக் குடித்தும் நீர்த்துறைகளின் மீதும் ஆணையிட்டு சூளுரைப்பதை அறிய முடிகின்றது.

**7.தலைவனின் கடமையில் நீா்**

இல்லத்தில் வாழும் மகளிர் தலைவன் பொருளீட்டுவதற்காக தம்மைப் பிரிந்து வருந்துதல் தோன்றினாலும் அறத்தினால் மேற்கொண்ட செயலால் வருந்தமாட்டார். ஒருவேளை தலைவன் தான் மேற்கொண்ட செயலை இடையிலே விட்டு என் மீது கொண்ட அன்பினால் பொருள் தேடாது வந்துவிடுவாயோ என்று எண்ணி வருந்தினாள். இதனைக் கண்ட தோழி தலைவர் சென்ற காட்டில் ஆண்யானை தனது கடமையை உணர்ந்து யாமரத்தினது பட்டையைத் தனது சுற்றத்தினருக்குக் கொடுத்து அவற்றின் தண்ணீர் பசியை நீக்குகிறது. இதனைத் தவைன் காண்பான் அதனால் தமது கடமையினை உணர்ந்து பொருளீட்டியே வருவான் வருந்தாதே என்று தோழி ஆற்றுப்படுத்துகின்றாள்.

**“சிறுகட் பெருநிரை யுறுபசி தீர்க்கும்**
**தடமருப்பி யானை கண்டனா் தோழி”**[97]

தலைவனின் கடமையை யானையின் செயலாது நினைக்கூர்வதாகப் புலவர் பாடியுள்ளார்.

**8.ஓம்புதலில் நீா்**

**“அருவினகொல் தோழி அருளினகொல் தோழி**
**இரவெல்லாம் தோழி அருளின் என்பவை**
**குணங்கொல் இடுமணல் காவி வருந்தப்**
**பிணங்குஇரு மோட்ட திரைவந் தளிக்கும்**
**மணங்கமழ் ஐம்பாலார் ஊடலைஆங்கே**
**வணங்கி உணர்ப்பான் துறை”**[98]

எனும் பாடலில் கருங்குவளை மலர்கள் மணலிலே அகப்பட்டு வருத்தமுற நீர்அலைகளானது அவ்வபோது தோன்றி மலர்களின் மீது பட்டு மணலைக் கரைத்து அதன் வருத்தத்தை இரவெல்லாம் போக்கியது என்கிறார். இங்கு கழியிடத்தே உள்ள மணலில் மலர்கள் அகப்பட்டுக் கொண்டதைப் போல தலைவி தலைவனுடன் சோலையிலே களவொழுக்கம் நிகழ்ந்தது. வீசும்

காற்றினால் நாற்புறம் தோன்றிய மணலானது மலரைப் புரட்டியது போல ஊர்மக்களின் அலரினால் தலைவி வாடினாள். இறுதியில் நீர் அலைகளால் மலர்கள் காப்பாற்றப்பட்டது போலத் தலைவன் தலைவியை விரைவில் மணம் புரிந்து காப்பான் எனப் புலவர் பாடியப் பொருளில் நீர் அலைகளைப் போன்று பாதுகாக்கும் தலைவனின் நற்பண்பினைக் காட்சிப்படுத்தியதை உணரலாம்.

**10.ஏறுதழுவுதலில் நீர்**

ஏறுதழுலுதல் என்பது கொல்லேறுகளைத் தழுவி இடக்குதலாகும். அது ஏறுகோள் என்றும் அழைக்கப்படும்.இதனையே இன்று மஞ்சுவிரட்டு காளைப்போர் ஜல்லிக்கட்டு எனப் பல்வேறு பெயர்களில் வழங்கப்படுகிறது. ஏறுதழுவி மணமகளை திருமணம் செய்யும் முறை அக்காலத்தில் வழக்கில் இருந்துள்ளது.

இம்மணத்தினை நச்சினார்கினியர் ஆசுரம் என்கிறார். அறிமுகமில்லாத ஒருவன் கொல்லேறு கொள்ளினும் வில்லேறற்றினும் அவனுக்கு ஒருத்தியை அவன் பெற்றோர் கொடுக்கும் அளவினது ஆசுரமணம் என்கிறார். முல்லைக்கலியில் இடம்பெறும் ஏறுதழுவல் களவொழுக்கமாகிய காதலியின் ஏற்றதை காதலன் கொள்ளும் ஒருவரக்குறிப்பாகும்

இங்ஙனம் ஏறுதழுவுவதற்குச் செல்லும் ஆண்மகன் நீர்த்துறைகளில் வீற்றிருக்கும் தெய்வத்தை வணங்கி தெய்வத்திற்கு மாலையிட்டு செய்துள்ளதை

**“துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்**
**முறையுளி பராஅய் பாய்ந்தனர்”**[99]

**11.வாழ்த்தியலில் நீர்**

சங்கப்பாடல்களில் புலவர்கள் அரசர்களின் வீரச்செயல் கொடைமாண்பு வெற்றிச்சிறப்பு போன்றவற்றைப் புகழ்ந்து வாழ்த்துதல் மரபாக இருந்துள்ளது. வாழ்த்துதலில் நீர் முக்கிய இடம் பெறுகின்றது.

**“யாண்டு நாளும் பெருகி ஈண்டுதிரைப்**

**பெருங்கடல் நீரினும்”**[100]

என்ற பாடலில் பாண்டியன் அரவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைக் கடலிலுள்ள நீரை விடவும் நெடுங்காலம் வாழ வேண்டும் என்று புலவர் வாழ்த்தியுள்ளார். அளக்க இயலாத கடல்நீரை வாழ்நாளுடன் ஒப்பிட்டு உவமையாக்கியுள்ளார்.

**“வேங்கட விறல் வரைப் பட்ட**

**ஓங்கல் வானத்து உறையினும் பலவே”**[101]

கல்லாடனார் என்னும் புலவர் புல்லி என்பானின் வேங்கடமலையில் பொழியும் மழைத்துளியினும் அருவந்தை பல்லாண்டு வாழ வாழ்த்துகின்றார்.

என்றும் இவ்வுலகில் நிலைத்து இருக்கும் ஆற்றல் பெற்றக் கடலையும் மழைத்துளிகளையும் வாழ்த்தியல் துறையில் சுட்டியுள்ளார்.

**12.அருள்தன்மையில் நீர்**

**“தீ முரணிய**

**ஈரம் உடைமையின் நீர்ஓர் அனையை”**[102]

மக்களனைவரிடமும் எவ்வித வேறுபாடின்றி நீர் தண்மை நிறைந்தது போன்று மன்னர்களின் அருள்தன்மைக் காணப்படுவதாகப் புலவர் கட்டுகின்றார்.

**13.தன்மையில் நீர்**

சங்க காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு வறுமைநிலைத் தோன்றா வண்ணமும் தங்களைத் தேடிவரும் இரவலர்களுக்கு வாரி வழங்கும் வள்ளல்களாகவும் அரசர்கள் திகழ்ந்துள்ளனர்.

**“அறுகுளத்துஉகுத்தும் அகல்வயல் பொழிந்தும்**

**உறுமிடம் உதவாது உவர்நிலம் ஊட்டியும்**

**வரையா மரபின் மாரி போலக்**

**கடாஅ யானைக் கழற்கால் பேகன்**

**கொடைமடம் படுதல் அல்லது”**[103]

வற்றிய குளத்திலும் அகன்ற வயலிலும் களர்நிலத்திலும் குறைவு இல்லாமல் எல்லா இடங்களிலும் பெய்யும் மழைப்போன்று கொடைத்தன்மைமிக்க பேகன் தன்னை நாடுபவர்களுக்கு செல்வத்தை வாரி வழங்குவான் என்று எல்லையில்லை கொடைத்திறத்தைப் புலவர் மழையோடு குறிப்பிடுகின்றார்.

**14.இனிமையில் நீர்**

**“தேன்மயங்க பாலினும் இனிய அவர்நாட்டு**

**உவரைக் கூவல் கீழ்**

**மானுண்டு எஞ்சிய கலுழி நீரே”**[104]

என்ற பாடலில் விலங்குகளால் உண்ணப்பட்டு எஞ்சியிருக்கும் கலங்கிய நீர் தோட்டத்திலுள்ள இனிய தேனுடன் கலந்த பாலை விட இனிமை தலைவி உரைப்பதிலிருந்து தலைவன் மீது பொண்ட அன்பின் மீகுதியைச் சுட்டுகின்றது.

**15.துன்பநிலையில் நீர்**

தலைவியைக் காண தலைவன் இரவுப்பொழுதில் வருகின்றான். அதைக் கண்டுற்ற ஊர்மக்கள் அவளை அலர் தூற்றுகின்றனர். அதனால் தலைவிக்கு துன்பம் உண்டாகிறது.

கடற்கரைப் பகுதிக்கு அருகில் தாழை மடல் அழகாக மலர்ந்துள்ளது. அத்தாழைடமல் கடலில் அலைகள் கழி இருக்கும் திசையை நோக்கி பாயும் பொழுது கழியைப் பார்த்தப்படியும் கழியில் பட்ட நீர் மீண்டும் கடலில் சென்றடையும் போது கடலைப் பார்த்தபடியும் வளைந்து கொள்கிறது.அதுபோல தலைவன் தவைவியை கண்டு இன்புற வரும் வழியில் நேரும் துன்பங்களை எண்ணி வருந்துகிறாள்.

**“அழுவம் நின்ற அலர்குவேய்க் கண்டல்**
**கழிபெயர் மருங்கின் ஓல்கி ஓமத்**
**பெயர்தரப் பெயர்தந் தாங்கு**
**வருந்தும்”**[105]

கடல் அலையின் வருகையும் தாழையின் நெகிழ்வுத்தன்மையும் இருவரும் அடையும் துன்பநிலைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

**16.தீயாற்றுதல்**

இறந்தவர் உடலுக்கு எரியூட்டி மறுநாள் செய்யும் ஒரு சடங்கிற்குத் தீயாற்றுதல் என்பது பெயர். எரிந்து பட்டுக் கிடக்கும் பொடியின் மீது நீரினைத் தெளித்து வெப்பம் அகற்றிச் செய்யும் கடனே தீயாற்றுதல் ஆகும். அதனை கலித்தொகை

**“ஆற்றுதல் என்பதொன்றுக் அலந்தவா குதவுதல்”**[109]

என்று குறிப்பிடுகிறது.

**17. மன்னன் யானைகளை நீராட்டல்**

சங்க இலக்கிய அரசர்கள் போரின் மூலம் தங்கள் ஆட்சியை விரிவாக்குவதில் முனைப்புடன் செயல்பட்டுள்ளனர். ஆட்சிப் பகுதியின் எல்லையை அறிவதற்காக நீர்நிலைகளில் இருந்து கொணர்ந்த நீரினால் யானைகளை நீராட்டியுள்ளனர் என்பதனை

**“கண்ணகன் வைப்பி மண்வகுத்து ஈத்து**
**கருகளிற்று யானைப் புணர்நிலை நிட்டி**
**அருகடல் நீரும் உரு பகல் ஆடி”**[110]

இமயவரம்பன் தம்பி பல்யானை செல்கெழுகுட்டுவன் உம்பர் காடு என்ற பகுதியினை தன் ஆட்சிக்குக் கீழ் கொணர்ந்தான். தன்னுடைய மரபில் தோன்றிய முதியவர்களுக்கு ஆட்சிப்பகுதியினைப் பிரித்துக் கொடுத்தான். தனக்கு உரிய மேல்கடல் தன்னால் அகப்படுத்தப்பட்ட

கீழ்க்கடல் ஆகிய இரண்டு கடல்களின் நடுவே யானைகளை வரிசையாக நிறுத்தி அவற்றின் மூலம் கொணர்ந்த நீரினால் நீராடினான் என்ற செய்தியை பதிற்றுப்பத்தின் வாயிலாக அறிய முடிகின்றது.

**18. முரசு வேலுக்கு நீராட்டல்**

**"பொலங்குழை உழிஞையொடு பொலியச் சூட்டிக்**

**கருதி வேட்கை உருகெழு முரசம்"**[111]

அரசனுக்குரிய சின்னமான முரசினை போருக்குப் புறப்படும் முன்பு நீராட்டிப் போற்றியுள்ளனர். தெய்வத்திருவுருவங்களுக்கு மட்டுமல்லாது தன் வாழ்வியலில் தொடர்புடையப் பொருள்களையும் தெய்வமாக எண்ணி நீராட்டி வழிபட்டதை உணர முடிகின்றது.

**"அரைசுதலை வரினும் இடங்கல் ஆனா**

**நிரைகாழ் எஹகம் நீரின் மூழ்க"**[112]

பெருவேந்தர்கள் படையெடுத்து வந்தாலும் அடங்காத வேலை நீர்ப்படைக்கு வீரர்கள் எடுத்துச் சென்றதை புறநானூறு குறிப்பிடுகின்றது.

**4.1.4.விழாக்களில் நீர்**

**"விழவு என்பது கொண்டாட்டம் களியாட்டம் இரு வகையில் குறிக்கப்படும்.மக்கள் பலர் ஒன்று கூடித் தெய்வங்களின் பொருட்டுச் செய்யும் சிறப்பே விழா ஆகும்"**[113]

இது சாறு விழவு என்ற பெயர்களில் சங்கப்பாக்ககளில் இடம் பெற்றுள்ளன. திருமுருகாற்றுப் படையில்

**"ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும் என்றும்**

**சாறயர்களத்து வீறு பெறத்தோன்றி**

**சாறு கொள் ஊர்**

**சாறு அயர் மூதூர்**

**பேரூர் கொண்ட ஆர்கலி விழவு"**[114]

மக்கள் அனைவரும் தங்களுடைய மகிழ்ச்சிக்காகவும் இன்ப நுகர்ச்சிக்காகவும் விழாக்களைக் கொண்டாடியுள்ளனர்.

**“கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி**
**ஆடு துவன்று விழவின் நாடு ஆர்த்தன்றே**
**மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்**
**நாள் அங்காடி நனந்தலைக் கம்பலை”**[115]

விழாக்கள் தொடங்கிய ஏழாம் நாளின் அந்திப்பொழுதில் விழாவில் திரண்ட மக்களனைவரும் தீர்த்தமாடி ஆரவாரம் செய்து மகிழ்கின்றனர்.

**1.முந்நீர் விழா**

ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் மூன்றையும் தன்னகத்தே கொண்டுள்ளமையால் கடல்நீரை முந்நீர் எனப் போற்றுகிறார் நெட்டிமையார் எனும் புலவர். இவர் இக்கடல் தெய்வத்திற்கு முந்நீர்விழா எடுத்து, அவ்விழாவில் கூத்தர்க்குப் பசும்பொன் வழங்கிய பாண்டிய மன்னனை

**“முந்நீர் விழவின் நெடியோன்”**[116]

எனப் போற்றுகிறார்.

**2. பூந்தொடை விழா**

அதிக மழைப்பொழிவின் காரணமாக ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகையில் அதனை வரவேற்கும் விதமாக மக்கள் அந்நீரில் விதவிதமான வாசனைப் பொடிகளைத் தேய்த்துப் பலவண்ண மலர்களைச் சூடி நீராடி மகிழ்வர். இதனை நீர்விளையாட்டு என அக்கால மக்கள் ஒன்றுகூடிக் கொண்டாடி மகிழ்ந்தனர். இவ்விழாவினைப் பூந்தொடை விழா எனக் கூறும் வழக்கமும் இருந்தது.

**“பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன**[117]**”**

என்னும் பாடல் இதனைச் சுட்டும். புதுப்புனலிடத்தே மூழ்கித் திளைத்த மகளிர் தாம் பற்றியிருந்தப் புணைகளை விட்டுக் கரையேறி அகிற்கட்டைகளை இட்டுக் கனல் மூட்டித் தலைமயிரை உலர்த்தினர்.

அதில் இருந்து எழும் அகிற்புகையும் மகளிர்தம் நகிழ் முகடுகளில் இட்டுள்ள சந்தனக்குழம்பின் மணமும் ஆற்றங்கரைச் சோலைகள் தோறும் பரவியது. பொன்னாற் செய்யப்பெற்ற சங்கு, நண்டு, நடத்தலைக் கொண்ட இறால், வலிய வாளைமீன் ஆகியவற்றை நீர்த்தெய்வத்திற்குக் காணிக்கையாக அலைகளில் விதைத்துக் கழனிகள் விளைக, அதனால் நாடு சிறக்கவென வாழ்த்தி இன்புற்றனர். இதனை,

**“புனல் பொருது மெலிந்தார் திமில்விடக்.......**

**.....நத்தொடு நள்ளி நடையிறவு வயவாளை**

**வித்தி யலையில் விளைக பொலிகென்பர்”**[118]

என்ற பரிபாடல் கூறுகிறது. பகைவரை வெற்றி கொள்ளும் பொருட்டாக எறிகின்ற வீரமுரசினாலே வாகைப் போரினையுடைய சோழரது கடுப்பு இனிய கள்ளையுடைய உறையூரிடத்துக் கடுகி வருகின்ற நீர் உடைத்தலால் இடிந்த கரையினையுடைய காவிரிப் பேரியாற்றின் அழகிய வெண்மணலையடுத்த, தேன்மணம் கமழ்கின்ற குளிர்ந்த பொழிலிலே, பங்குனித் திங்கள் பௌர்ணமியோடு உத்திரநாள் கூடிய நன்னாளில் விழாக் கொண்டாடி மகிழ்ந்ததனை,

**“வருபுனல் நெரிதரும் இகுகரைப் பேரியாற்று**

**உருவ வெண்மணல் முருகுநாறு தண்பொழிற்**

**பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்”**[119]

என்ற அகநானூற்றுப் பாடல் உரைக்கிறது. மேலும் இவ்விழாவானது இந்நாளில் தென்பாண்டிப் பகுதியில் சாத்தனார் கோயில் வழிபாடும் உண்டாட்டுமாக நிகழ்ந்து வருகின்றதனையும் இறையனார் களவியல் உரையில் கொண்ட பெருவிழா நாட்களாகக் கருவூர் வெள்ளிவிழாவும், மதுரைஆவணி அவிட்டமும், உறையூர்ப் பங்குனிஉத்திரமும் கூறப்படுகின்றன என்கிறார் அகநானூற்றின் உரையாசிரியர் புலியூர்க்கேசிகனார்.

**3.புதுப்புனல்விழா**

கார்க்காலப் பருவத்தில் பெய்யும் மழை நீரினால் ஆற்றில் புதுவெள்ளம் பெருகி வரும்.அதனைக் கண்ட மக்கள் மகிழ்ச்சியால் திளைத்து அந்நீருக்கு விழா எடுத்துள்ளனர். பொன்னால் செய்யப்பட்ட மீன் புதுவகையான மலர்கள் நறுமணப்பொருட்கள் போன்ற மங்கலப் பொருட்களைப் புதுவெள்ளத்தில் இட்டு புனலை வாழ்த்திப் புதுப்புனல் விழா எடுத்துள்ளனர்.

பாண்டிய நாட்டில் புதுப்புனல் விழா சிறப்பாக நடைபெற்றதைப் பரிபாடல் குறிப்பிடுகின்றது.

ஆவணித்திங்கள் முழுநிலாக்கூடிய அவிட்டநாளில் ஆவணி அவிட்டத்தில் இவ்விழா நடைபெற்றுள்ளது. கார்காலத் தொடக்கமாகிய ஆவணித்திங்கள் தொடங்கி முழுமதி நிறைந்த நாளில் வையை ஆற்றில் மழைநீர் பெருவெள்ளமாகப் பாய்ந்துள்ளது. அந்நன்னாளில் மன்னனும் மக்களும் ஒன்று சேர்ந்து விழா கொண்டாடியுள்ளதை

**“விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப**
**எரி சடை எழில்வேழம் தலையெனக் கீழ்இருந்து ............**
**புரைகெழு சையம் பொழிமழை தாழ**
**நெரிதரூஉம் வையைப் புனல்**
**ஆம்நாள் நிறைமதி அலர்தரு பக்கம் போல்**
**நாளின் நாளின் நளிவரைச் சிலம்புதொட்டு**
**நிலவுப் பரந்தாங்கு..”**[120]

என்ற பாடல் வரிகள் குறிப்பிடுகின்றது.

இவ்விழாவானது பின்னாளில் திருமாவளவன் கரிகாலன் காலந்தொட்டு ஆடித்திங்கள் பதினெட்டாம் நாளில் காவிரியில் ஆடிப் பெருக்கென கொண்டாடப்படுகின்றது. இவைபோன்ற விழாக்களால் பழங்கால மக்கள் தங்களது உடலும் உள்ளமும் தூய்மையடைந்ததோடு புத்துணர்வு பெற்றும் மகிழ்ந்தனர். நீரால் நிலம் வளம் பெற்றுத் திகழ்வது போன்று

மக்கள் புதுப்புனலாடலால் தங்கள் வாழ்வும் வளமடைகிறது என்ற எண்ண வெளிப்பாட்டையும் காணமுடிகிறது. மேலும் மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத நீரினை வாழ்த்தி வணங்கி விழாவெடுப்பது அந்நாட்டின் வளமையை பறைசாற்றுகிறது. ஆறுகள் மற்றும் கடலில் புனலாடுதலை சங்கப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

வையையின் புதுப்பெருக்கினைக் கண்டு வரவேற்க வழிபாடு நடத்த மக்கள் வழிபாட்டிற்கு வேண்டிய பொருட்களைக் கையிலே எடுத்து வெள்ளம் பாய்கின்ற இடத்தை நோக்கிச் செல்கின்றனர். வையை பூக்களால் தூவி வணங்கி தீபம் காட்டி படையலிட்டு பொன்னையும் மீனையும் ஆற்றில் இடுவர். இதனால் தூபம் செய்வதற்கு தேவையானவற்றை எடுத்துச் செல்வர். புனலாட பலர் செல்வார்கள்.தம் காதலனோடு புனலில் விளையாடுவது மகிழ்ச்சியைத் தரும் என்பதால் மகளிர் காலைவேளையில் எழுந்து செல்வர்.

உண்ணுவதற்கும் உணவுக்கும் உரிய நீரையும் குற்றமில்லாத புனலையும் தருவதால் வையை வழிபாட்டிற்குரியது. அவ்வாறு வருகின்ற நீரால் அறமும் பொருளும் பெருகி இல்லந்தோறும் இன்பந் திளைக்கும். அதனோடு காதலர்கள் விளையாடுவதற்கும் வையை துணை செய்கின்றது என்பதால் விழா எடுத்து வையையை வரவேற்கின்றனர்.

வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப் பெறும் உணவை விளைவிக்க நல்ல நிலமும், நீர்வளமும் தேவை ஆற்றில் புதுப்புனல் வருகையின் போது நீரைச் சிறப்புச் செய்து புனலாட்டு விழாக் கொண்டாடினர். இதனை ஐங்குநுறூறு,

**“இந்திர விழவிற் பூவி னன்ன**
**புன்றலைப் பேடை வரி நிழல லகவு**
**மிவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி”**[121]

தேவேந்திரனுக்குச் சிறப்பு செய்யும் திருநாள் ‘இந்திர விழாவாகும். இந்திர விழா மருத நிலத்திற்குரிய விழாவாகும். இவ்விழாவில் மருதநில

மக்கள் பயிர் செழிப்பாக வளர வேண்டி மழைக்கடவுளான இந்திரனைக் கொண்டாடினர்.

**4.தைந்நீராட்டு விழா**

மார்கழித்திங்கள் திருவாதிரைக்குப் பின் தைத்திங்கள் பூசநாள் வரை ஆடும் நீராடல் தைந்நீராடல் எனப்படும்.

கதிரவனின் வெப்பம் தாக்காத முன்பனிப்பருவக்காலம் மார்கழித்திங்கள் ஆகும். அம்மாதத்தில் முழுமதி நிறைந்த திருவாதிரை நாளில் வேதங்களையும் ஆகமங்களையும் கற்று உணர்ந்த அந்தணர் ஆதிரைக்கு உகந்த சிவபெருமானுக்கு விழாவெடுப்பர். இதனை ஆதிரைத் திருவிழா சைவர்க்குப் பெருவிழா என்று சான்றோர் உரைப்பர்.

**ஆதிரை நாள் காணாதே பூம்பாவாய்** என்று ஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார்.

**"பூசம் அல்லது திஷ்ய நட்சத்திரக்கூட்டம் வானில் தோன்றுகின்ற நாளில் முழு மதியும் சேர்ந்து உருவான மாதமே தைஷ்ய மாதம் எனப்பட்டது.தைஷ்ய மாதம் என்பதே தைஇயதிங்கள் தைஇத்திங்கள் என சங்க இலக்கிங்கள் குறிப்பிடுகின்றன.இந்நாளில் ஆறுகளிலோ குளங்களிலோ நீராடுவது என்பது புஷ்ய ஸ்நாயனம் அல்லது திஷ்ய ஸ்நாயனம் எனக் குறிப்பிடப்படும். இதுவே தைந்நீராடல் ஆகும்"**[122]

கன்னிப்பெண்கள் இளமைப்பருவத்தில் பின்பற்றும் நோன்புகளில் தைந்நீராடல் ஒன்றாகும். தைந்நீராடும் கன்னியர் தத்தம் தாயாருடன் சென்று நீராடி வழிபடுவர். ஆதலின் இது அம்பாவாடல் எனபட்டது.

**"அம்பா ஆடலின் ஆய் தொடிக் கன்னியா"**[123]

அம்பா என்ற சொல்லினை அம்பு பா என்று பிரித்து நீர் தொடர்பான பாடலாகும்.நீர் விளையாட்டின் போது பாடுகின்ற பாட்டென்றும் கூறலாம்.மீனவர்களிடையே வழங்குகின்ற ஏஎலோ- ஏலசா என்று முடிகின்ற நாட்டுப் பாடலுக்கு அம்பா பாடல் என்று பெயர். இத்தகைய பாடல்களே நீராடுதல் அம்பா ஆடுதல் ஆகும். திருப்பாவை, திருவெம்பாவை

பாடல்களில் ஏலோ அம்பாவாய் என்றோ ஏலோ ரம்பாவாய் என்றோ முடிவடைந்திருக்க வேண்டும் என்கிறார்.

மார்கழித்திங்களில் முழுமதி ஆதிரை நாளில் தொடங்கிய நோன்பினை தைத்திங்கள் பூசநாள் வரையிலும் நோன்பிருப்பதை சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது.

**“ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து**
**மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை**
**விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்**
**புரிநூல் அந்தணர் அபாலங்கலம் ஏற்ப**
**வெம்பா தாக வியனில வரைப்பென**
**அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்**
**முனித்துறை முதல்வியர் முறைமை காட்டத”**[124]

தைந்நீராடும் பெண்கள் பூமியானது மழைவளம் பெற்றுக் குளிர வேண்டி அம்பா ஆடலை மேற்கொள்கின்றனர். அப்பெண்களுக்கு முதுப்பெண்டிர் நோன்பு நோற்கும் முறையினைத் தெரிவிக்கின்றனர். அம்முறைப்படி அதிகாலைப் பொழுதில் கன்னிப் பெண்கள் நீர்த்துறைகளில் நீராடி நோன்பு இருக்கின்றனர்.

**“தைத்திங்கள்இத் தண்கயம் போல**
**கொளக்கொளக் குறையாக் கூழுடை வியனகர்**[125]
**நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்**
**தைஇத் தண்கயம்**
**வையெயிற்றவர் நாப்பண்வகையணிப் பொலிந்து நீ**
**தையில் நீராடிய தவந்தலைப் படுவையோ”**[126]

போன்ற பாடல்களில் தைமாதத்து குளிர்ந்த நீரில் தம் தாயாருடன் சேர்ந்து நீராடி நோன்புற்று மகிழ்ந்ததை அறிய முடிகின்றது.

தைந்நீராடும் போது பெண்கள் நறுமணப்பொருட்களைக் கொண்டு நதியை வழிபட்டு ஆராதனைச் செய்ததை பரிபாடல்

**“வையை நினக்கு மடை வாய்த்தன்று**

**நீ தக்காய் தைந்நீர் நிறந்தெளிந்தாய”**[127]

வையை பெருகி வரும் வெள்ளத்திற்கு மடை கொடுத்து வாழ்த்தியதைக் காண முடிகின்றது.

**“தைஇய மகளிர்தம் ஆயமொடு அமர்ந்து ஆடும்**

**வையை வார் உயர் எக்கர் நுகர்ச்சியும் உள்ளார் கொல”**[128]

என்ற பாடலில் தைந்நீராடும் நோன்பில் மகளிர் வண்டல் மண்ணில் பாவை செய்து விளையாடுகின்றனர். அப்பாவையை நீர்த்துறையில் வைத்து இசை வாத்தியங்கள் முழங்க குரவை கூத்தாடுகின்றனர்.

**“தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்**

**பொலங்காசு நிரைத்த கோடு ஏந்து அல்குல்**

**நலம்கேழ் மாக்குரல் குழையொடு துயல்வர**

**................**

**வண்டற் பாவை உண்துறைத் தரீஇ**

**திருநுதல் மகளிர் குரவை அயரும்**

**பெருநீர்க் கானல் தழீஇய இருக்கை**

**வாணன் சிறுகுடி”**[129]

பாவையை நீர்த்துறைகளிலே வைத்துச் செய்யும் நோன்பு என்பதால் பாவைநோன்பு எனப்பட்டது.

**“படிவ மகளிர் கொடிகொய்து அழித்த**

**பொம்மல் அடும்பின் வண்மணல் ஒருசிறை”**[130]

தலைவன் மணம் செய்யாமல் காலம் தாழ்த்துகிறான். இதனால் ஏற்பட்ட பழிக்கு ஆளான மகளிர் கடல் தெய்வத்தை வேண்டி நோன்பு

இருந்துள்ளனா். பொங்கலிட்டு வழிபாடு மேற்கொள்ள வெண்மணல் மேட்டின் பகுதியில் அடுப்பங்கொடிகள் படா்ந்து இருந்த அக்கொடிகளை அறுத்து இவ்விடங்களில் நோன்பினைக் கொண்ட மகளிா் படிவமகளிா் எனப்பட்டனா்

**“வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்**

**தைஉண் இருக்கையின் தோன்றும் நாடன”**[131]

தைமாதத்தில் இயற்கையிலே நீரானது அதிகமாக குளிா்ச்சியுடன் இருக்கும் அதனால் தமிழா்கள் தைத்திங்கள் முழுமுதல் நாளில் நீராடி நோன்பினை நிறைவு செய்து விருந்துண்டனா் என்ற செய்தியும் காணப்படுகின்றது..

சரத்காலம் என்பது மாா்கழி மாதத்தில் தொடங்கிப் பங்குனி மாதம் வரை நீடிக்கும்.இதில் முதன்மையானது தைந்நீராடல் ஆகும்.தவந்நீராடுதல் தையல் நீராடிய தவம் எனப்பட்டது.

**“அருந்தவம் ஆற்றியார் நுகா்ச்சி போல் அணிகொள**

**விரிந்து ஆனாச்சினைதொறூஉம்”**[132]

அரிய தவம் செய்தவா்கள் அதன் பயனாகிய இன்பத்தினை நுகா்வது போல இளவேனிற் காலத்தில் சோலைகள் செழித்துக் காணப்படும். மகளிா் தவம் செய்யத் தொடங்கிய மாதம் மாா்கழி மாதமாகவும் தவத்தினை நிறைவு செய்து அப்பயனை நுகரும் மாதம் தைப்பூசத் திருநாளாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் தைந்நீராடுதலால் செல்வவளமும் குடும்பவளமும் பெருகும் என்பதை உய்த்துணர முடிகின்றது.

திருமணம் நிகழாத கன்னிப் பெண்கள் தைத்திங்களில் நீராடி நோன்பிருந்து பிறா் மனையின்கண் பாடி ஒவ்வொரு இல்லத்திலும் தாம் பெற்றவற்றை பிறருக்குக் கொடுத்தனா். இங்ஙனம் கொடுப்பது தமக்கு நற்பயன் உண்டாகும் என்று கருதியுள்ளனா்.

**“தையில் நீராடிய தவம்தலைப் படுவாயோ**

**உண்டியாா் தான்பணிவோம் ஆங்கவாக்கே பாங்கவோம்**

**ஆன்னவர எங்கணவ ராணி”**[133]

தனுர் மாதம் என்றழைக்கப்படும் மார்கழி சிறந்த மாதமாக இருப்பதால் ஆண்டாள் கண்ணனை மணக்க வேண்டி பாவைநோன்பு நோற்றதால் மணந்து கொண்டார். தமிழர்களின் தைந்நீராடல் நீர்நிலைகளில் என்றும் நீர் வற்றாமல் நீர்ப்பெருக்குத் தோன்றுவதற்கான வழிபாடாகவே அறிய முடிகின்றது.

தைந்நீராடலை பிங்கல நிகண்டு

**"பேணும் சிறப்பின் பெண்மகவு ஆயின**

**மூன்றாம் ஆண்டில் குழமணம் மொழிதலும்**

**ஐந்தின் முதலா ஒன்பதின் காறும்**

**ஐங்கணைக் கிழவனை ஆர்வமோடு நோற்றலும்**

**பனிநீர் தோய்தலும் பாவை ஆடலும்"**[134]

என்று குறிப்பிடுகிறது.

உலக மக்கள் மழை வளம் பெற்று வாழவும் கன்னியர் நல்ல கணவனை பெற வேண்டியும் சுற்றத்தினர் சிறப்புடன் வாழவும் தைந்நீராடல் நோன்பினை தமிழர்கள் மேற்கொண்டனர் என அறிய முடிகின்றது.

**5.மார்கழி நீராட்டு விழா**

பண்டையக் காலந்தொட்டே கன்னிப்பெண்கள் மழைவளம் வேண்டியும் நல்ல கணவரைப் பெற வேண்டியும் மார்கழித்திங்கள் அன்று வைகறையில் நீராடியுள்ளதை பரிபாடல் குறிப்பிடுகின்றது. சைவ வைணவத்தைச் சார்ந்த கன்னிப்பெண்கள் அந்நோன்பினை மேற்கொண்டுள்ளதை மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும், ஆண்டாளின் திருப்பாவையும் விளக்குகின்றன.

மார்கழி நீராடுவோர் ஐந்து முதல் பன்னிரெண்டு வயது வரையுள்ள கன்னிப்பெண்களாவர்.இப்பெண்கள் மார்கழித்திங்கள் திருவாதிரைக்கு பத்து நாட்களுக்கு முன்பு நோன்பினைத் தொடங்கி திருவாதிரை அன்று முடித்துள்ளனர். இப்பத்து நாட்களிலும் பேதை, பெதும்பை, மங்கை போன்ற பெண்கள் கதிரவன் உதிப்பதற்கு முன்பு வைகறைப் பொழுதில் எழுந்து

தோழியர்களுடன் ஆற்றில் நீராடி தூயமணலில் சக்தியின் வடிவத்தைச் செய்து வழிபட்டுள்ளனர்.

திருவெம்பாவையும்

**"முன்னி யவன்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே**

**என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய"[135]**

என்று மழை வரத்தை வேண்டியதைக் குறிப்பிடுகின்றது.

**6.இந்திர விழா**

வானுலகத்துக்கும் தேவர்களுக்கும் அதிபதியாக இருப்பவன் இந்திரன்.

**"ஆயிரம் கண்களையுடையவன்**

**அமரர் செல்வன்**

**விண்ணோர் வேள்வி முதல்வன்"[136]**

எனச் சங்க இலக்கியம் இந்திரனைக் குறிப்பிடுகின்றது

தேவமைந்தரும் மளகளிரும் புடை சூழ்ந்து வந்து ஆகாய கங்கையில் நீராடி அயர்பவன்.பாண்டிய மன்னன் கூடல்வாழ் மாந்தருடன் வையையில் நீராடிய காட்சியை இந்திரன் நிகழ்த்தும் நீராட்டத்துடன் ஒப்பிட்டுப் பேசுகின்றார்.

**"வெருவரு கொல்யானை வீங்குதோள் மாறன்**

**உருகெழு கூடரவரோடு வையை**

**வருபுனல் ஆடிய தன்மை பொருவுங்கால்**

**இருநீர் முந்நீர் வையம் படித்து என்னை ? யான் ஊர்க்கு**

**ஒருநிலையும் ஆற்ற இயையோ அருமரபின்**

**அந்தர வான் யாற்று ஆயிரம் கண்ணினான்**

**அந்திலன் ஆடும் தகைத்து"[137]**

இந்திரனுக்கு எடுக்கும் விழா இந்திர விழாவாகும். வயல்கள் பழனம் சூழ்ந்துள்ள இடங்களில் இந்திரவிழா நடைபெற்றதாகவும் இவ்விழாவினைக் காண மக்கள் அலையாகத் திரண்டு சென்றதைப் பதிற்றுப்பத்துச் சுட்டுகிறது

இந்திரன் மருதநிலமக்களின் தெய்வமாக வணங்கப்பட்டதால் மருதநிலப் பேரூர்களில் கொண்டாடியுள்ளனர்.

### 4.1.5 பொழுது போக்கில் நீர்

நீராடல் என்பதனை நீராடு நீராட்டு குளியல் ஸ்நானம் எனப் பல சொற்களில் குறிப்பிடலாம். உடலைக் குளிரச் செய்வதற்காக வைப்பதற்கு நல்ல பழக்க வழக்கமாக நீராடல் திகழ்கின்றது. கூழானாலும் குளித்துக்குடி என்ற பழமொழி இதனை உணர்த்தும்.சங்க இலக்கியங்களில் இயற்கைத்துறைகளில் நீராடுதல் நல்ல உடல் நலத்திற்கும் உடலின் வெம்மையை குறைப்பதற்கும் மனத்திற்கு புத்துணர்ச்சி தருவதற்கும் தமிழர்கள் உணர்ந்ததால் நீராடலை அவர்கள் பொழுதுபோக்காகவும் சடங்குகளாகவும் வழிபாடாகவும் வாழ்வியலோடு இணைந்துள்ளனர்.ஆறுகள் குளங்கள் கடல்கள் அருவிகளில் நீராடுவது பற்றியக் குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணக் கிடக்கின்றன. சங்கஇலக்கியப் பாக்களில் நீராடல் என்பதற்கு மண்ணுதல் என்ற சொல்லாட்சி நிலவுகின்றது.

**“பனித்துறை மண்ணி**

**வதுவை மண்ணிய மகளிர்”**[138]

சங்ககால மக்களின் பொழுதுபோக்குகளில் நீரில் விளையாடுவது முக்கிய இடம் பெறுகின்றது. கடல் ஆறு இயற்கையைப் போற்றியவர்கள் நீர்நிலைகளில் தம் தோழியரோடும் தலைவனோடும் ஆடிப்பாடி மகிழ்ந்துள்ளனர். அதில் ஆண் பெண் இருவருமே விளையாட்டுக்களில் ஈடுபட்டுள்ளனர்.

**“உயர்சினை மருதத்துறை உறத்ததாழ்ந்து**

**நீர்நணிப் படிகோடு ஊறிச் சீர் மிகக்**

**கரையவர் மருள திரையகம் பிதிர**

**நெடுநீர்க்குட்டத்துக் துடுமெனப் பாய்ந்து”**[139]

மருதமரத்தின் உயர்ந்த கிளைகளின் மீது ஏறி ஆழமான நீர்நிலைகளில் துடும் எனப் பாய்ந்து மூழ்கி அடிமணலைக் அள்ளிக் காட்டியுள்ளனர்.

**1.கான்யாறு நீராடல்**

மரம் செடி கொடிகள் நிரம்பிய காட்டின்கண் மழை பெய்தமையால் பெருகி வரும் கான்யாற்று நீரில் குளித்தால் அது பல்வேறு மருந்துச் செடிகளின் சேர்க்கை உடையதாதலால் அது பிணிப்போக்கும் தன்மை உடையது என்பதை அக்கால மக்கள் நம்பினர்.தலைவனைப் பிரிந்த தலைவி வருத்தமுற இருப்பதைக் கண்ட நற்றாய் தோழியிடம் வானுயர்ந்த மலைப்பகுதியில் மிகுதியான இடியுடன் கூடிய மழை பெய்ததால் நடுஇரவில் கரடு முரடான கற்கள் காணப்படும் காட்டில் ஓடுகின்ற கான்யாற்றில் புது வெள்ளமானது பல வகையான பூக்களையும் இலைகளையும் அடித்து ஓடி வருகின்ற நீரானது தலைவியின் நோயைப் போக்கி நடுக்கத்தை நீக்கும் மருந்தாகும் என்கிறாள்.

நீராடல் உடலில் தோன்றும் பல வகையான நோய்களைத் தீர்க்கும் வல்லமைப் பெற்றுள்ளதை அறியலாம்

**2.அருவியாடல்**

குறிஞ்சிநில மக்களின் பொழுதுபோக்குகளில் அருவியில் நீராடி மகிழ்தல் ஒன்றாகும். மலைச்சாரலில் இருந்து கீழே விழுகின்ற அருவியில் பெண்கள் தம் தோழியர் கூட்டத்துடனும் காதலர்கள் தம் அன்பைப் பரிமாறிக் கொள்ளவும் அருவியை பயன்படுத்தியுள்ளனர்.

**“பொருவில் ஆயமொடு அருவி ஆடியும்**

**நீர் அரைச் சிவந்த பேர்அமர் மழைக்கண்**

**குறியா நோக்கமொடு முறுவல் நல்கி**

**நீர்நீடு ஆடின் கண்ணும் சிவக்கும்”**[140]

குறிஞ்சி நிலப்பெண்கள் தம் தோழியருடன் நீராடியதால் கண்கள் சிவந்து காணப்படுகிறது.

**“பெருவரை அடுக்கத்து அருவி ஆடி**

**பாடுஇன் அருவி ஆடுதல் இனிதே”**[141]

பகல் நேரத்தில் நீண்ட உயர்ந்த ஆரவாரமிக்க மலைச்சாரலின் உள்ள மலை நாட்டுத் தலைவனின் மார்பினைத் துணையாகக் கொண்டு இனிய ஓசையைத் தருகின்ற அருவியில் நீராடுவது தலைவிக்கு இன்பம் தருவதாகக் குறிப்பிடுகின்றது.

அண்ணல் நெடுல்கோட் டிழிதரு தெண்ணீர் அவிர்துகில் புரையும் அவ்வெள்ளருவித் தவிர்வில் வேட்கையேம் தண்டா தாடிப் **பளிங்கு சொரி வன்ன பாய்சுனை குடைவுழி**[142] எனக் குறிஞ்சி நில மக்கள் புனலாடியதைக் காணலாம்.

புதிய நீரில் நீராடுதல் பற்றிய தகவல்களைப் பல இடங்களில் பதிவுச் செய்கின்றது. புது வெள்ளம் என்பது மழைப் பொழிவின் விளைவால் மலையில் உள்ள மூலிகைகளின் ஊடே பாய்ந்து வருவதின் காரணமாக நீராடும் மக்களுக்கு நீர் ஓர் அருமருந்தாக அமைவதை,

**“முள் இலை கழித்தன முகில் இனரொடு வரும்**

**விருந்த்தின் தமீந்நீர் மருந்து மாகும்”**[143]

என்பதால், பல்வகை வளங்களோடு மருத்துவ மூலிகைகளின் நலன்களையும் பெற்று வரும் நீரில் நீராடச் சொல்லும் விதம், புலவர்களின் நீர் பற்றிய சூழலியலை மக்களுக்கு உணர்த்துவதை அறிய முடிகின்றது.

**3.புனலாடல்**

பண்டைக் காலத்து தமிழர் வாழ்க்கையில் நிகழ்ந்த முக்கிய விளையாட்டு வகைகளில் புனலாட்டு என்பது ஒன்றாகும். இது பெரும்பாலும் வேனிற்காலத்தில் வெம்மையைத் தணிப்பதற்காக நிகழ்த்தப்பட்டுள்ளது. மற்ற பருவக்காலங்களில் ஆறுகளில் புதுநீர் பெருகிப் பொலிவுற்றுத் திகழும் சிறப்புக் குறித்துப் புனலாடச் செல்லல்

பண்டையோா் மரபாக உள்ளது. புனலாடுதல் பற்றி ஐங்குநூறு பரிபாடல் என்ற இரு இலக்கியங்களும் புனலாடுதலைச் சிறப்புற எடுத்துரைக்கின்றன.

குறிஞ்சி நிலத்து மக்கள் சுனை அருவி ஆறு குளம் முதலிய நீா்நிலைகளில் நீராடியும் முல்லை நிலத்து மக்கள் ஆறு கான்யாறு போன்றவற்றிலும் மருத நிலத்து மக்கள் ஆறு பொய்கையில் புனலாடியும் நெய்தல் நிலத்து மக்கள் கடலாடியும் உள்ளனா். ஆறாட்டு என்ற வகையில் சேரநாட்டில் இது மிக்க சிறப்புடன் கொண்டாடப்பட்டுள்ளது.

இப்புனலாட்டு செல்வரும் வறியரும் இளையரும் முதியவரும் ஆண்மக்களும் பெண்மக்களும் ஒன்றாகக் கூடி புனலாடி இன்பம் துய்த்துள்ளனா். செல்வச்சிறப்பு மிக்க தலைமக்கள் புனலாட்டினைப் பெரிதும் விரும்பித் தமக்கு இனிய காதலருடன் சென்று விளையாடி இன்பம் நுகா்வா் .

இளையோா் இவ்வாறு புனலாடி இன்பம் நுகா்தலின்றித் தம் மனையின் கண் செறிப்புண் டிருத்தல் தீது என்றும் பண்டைத் தமிழ்ச்சான்றோா் கருதினா்.

**“விளையா டாமோடு ஓரை ஆடைது இளையோா் இல்லிட்த்து இற் செறிந்து இருத்தல் இறனும் அன்றே ஆக்கமும் தேய்ம்”**[144]

என்ற பாடலில் புனலாடுதலில் ஆடவா் பெண்டிா் இருவரும் புனலாடுதலை விரும்பி உள்ள நிலையை அறியலாம்.

புனலாட்டு நயந்த தலைவன் தலைவியோடும் காமக்கிழத்தியோடும் கூடி தனது பதியிகந்து சென்று விளையாட்டு இன்பத்தினை நுகா்வான்

**யாறும் குளனும் காவும் ஆடிப் பதியிகத்து நுகா்தலும்உரிய**[145] குறிப்பிடுகின்றது.

**4.கடலாடுதல்**

கடல் நீராடல் என்பது ஒரு விளையாட்டாகவே அக்காலத்தில் நிலவியது கடற்கரை சாா்ந்த நெய்தல் நிலமக்கள் புனலாடக்கடலில் நீா் விளையாட்டு ஆடியுள்ளனா். இவ்விளையாட்டு கடலாடுதல் எனப்படும்.

இக்கடலாடுதல் மேனாடுகளில் உடல்நலம் குன்றிய இளைஞர்களுக்குப் பெரிதும் நன்மை செய்வதாகும்.ஆனால் அவர்கள் காலையில் உணவு கொண்ட பின்பு இரண்டு மணி நேரம் கழித்து கடலாட வேண்டும் குறைந்தது இரண்டு அல்லது மூன்று மணிநேரம் நீரில் நீந்தி விளையாட வேண்டும். உணவு உண்டவுடன் கடலாடக் கூடாது. மிகுதியான உழைப்பால் உடல் வருத்தியவர்க்கு கடலாடுதல் தீமை தரும்.நீராடுவோர் தம் உடல் சூடாக இருக்கும் பொழுது நீராட வேண்டும். கடலில் நீராட இறங்கி மூழ்குவதும் கரையேறி சிறிதும் நேரம் தாழ்த்தாது உடலைத் துடைத்துக் கொள்வதும் கடலாடுவோர் மேற்கொள்ள வேண்டியன. இவ்வழி முறைகளைப் பின்பற்றாமல் இருப்பின் பெருந்தீங்கு ஏற்படும். உடலில் படிந்த நீரைத்தானே காயுமாறு விடுதலும் கண்ணில் நீர் நெடிய நேரம் தங்குவதும் கூடாது. நீராடும் உடலில் குளிர்ச்சி தோன்றினால் கரையேறி விட வேண்டும்.

மேனாட்டில் கடலாடுவதைத் தொழிலாக கொண்டுள்ளனர். இவர்களில் காதுநோயால் மெலிந்து உயிரை இழக்கின்றனர். கடல்நீரானது காதுகளில் புகுந்து மயக்க நிலைக்குத் தள்ளும் எனவே காதுகளில் பஞ்சினை அடைத்துக் கொள்ள வேண்டும்.

கடலில் நீராடும் பொழுது பரதவப் பெண்கள் பனைநுங்கின் இளநீரினையும் கருப்பஞ்சாற்றையும் கலந்து பருகிக் கடலில் பாய்ந்து நீராடுவாராம். விளையாட்டுக் காலங்களில் உடல் சோர்வு அடையாமல் இருப்பதற்காக

**“பொம்மாற் படுதிரை நம்மோடு ஆடி**

**கடலாடு மகளிர் கானல் இழைத்த சிறுமனை என்றும்**

**தொடலை ஆயமோடு கடலுடன் ஆடியும் என்றும்”**[146]

நாள்தோறும் நீராடுதல் உடலுக்கு நல்லது. நீராடுதலைக் குளித்தல் என்பர். குளித்தல் என்றால் உடலைக் குளிர்வித்தல் என்று பொருள். உடலைக் குளிர்வித்து அகிற்புகை கொண்டு கூந்தலுலர்த்தி மார்பில் சந்தனமணிந்து திளைத்தலால் அம்மக்களின் உடற்தூய்மை பேணல்

குறித்து அறியலாம். மேலும் புதுப்புனல் பொருது வந்து அதனால் நாடுசிறக்கவென வாழ்த்துவதால் அம்மக்களின் அகத்தூய்மையை உணரலாம். ஆற்றில் மட்டுமல்லாது கடல்நீரிலும் புனலாடி மகிழ்ந்ததனை,

**"தேறுநீர்ப் புணரியோ டியாறுதலை மணக்கும்**

**மலியோதத் தொலிகூடல்**

**தீது நீங்கக் கடலாடியும்**

**மாசுபோகப் புனல்படிந்தும்"**[147]

என்ற பட்டினப்பாலை பாடலால் அறியலாம். இன்றும்கூட ஆடிப்பெருக்கு, தைநோன்பு நாட்களில் அருவி நீராடும் வழக்கம் குற்றாலம் போன்ற இடங்களில் காணப்படுகிறது, கொல்லிமலை ஆகாய கங்கையில் ஆடித்திங்களில் மக்கள் நீராடுவதால் அவர்களின் நோய் அகலுவதாகக் கூறப்படுகிறது.

மழை அதிகமாகப் பெய்ததால் பார்க்கும் இடங்களிலெல்லாம் நீரின் பாய்ச்சல். மண்பகுதியே கண்ணுக்குத் தெரியாமல் நீரானது நிரம்பி வழிகின்றது.மலையின் மீது தோன்றிய நீர்ப்பெருக்கால் அங்கு வாழும் உயிரினங்கள் அஞ்சுகின்றன. இங்ஙனம் வானம் பெய்த குளிர்ச்சியான புனல் எல்லா இடங்களிலும் பரவி ஓடி நன்மை செய்ததை

**"நிலம் மறைவதுபோல் மலி புனல் தலைத்தலைஇ**

**மலைய இனம் கலங்க மலைய மயில்அகவ**

**மலைமாசு கழியக் கதழும் அருவி இழியும்**

**மலிநீர் அதர் பல கெழுவு தாழ்வரை**

**மாசில் பனுவற் புலவர் புகழ் புல**

**நாவிற் புனைந்த நன்கவிதை மாறாமை**

**மேவிப் பரந்து விரைந்து வினை நந்தத்**

**தூயிற்றே தண்ணம் புனல்"**[148]

வையை ஆற்றில் புனலாடுதலைப் பற்றியும் புனலாடுதலின் சிறப்பினை பற்றியும் பரிபாடலில் புலவர்கள் எடுத்து உரைக்கின்றனர்.

புலவர்களின் பாடல்கள் மலையில் பெருகிய அருவியால் நீரானது மேலிருந்து வேகமாக கீழிறங்கி பாய்ந்து வையை ஆறு இதுவரைக்கும் காணா உயர்வைப் பெற்றது.

**4.2 நீர்பானங்கள்**

சங்கால மக்களின் உணவுத்தேவைகளுக்கான பொருட்களும் முறைகளும் இயற்கையோடு பின்னிப்பிணைந்துள்ளன. இயற்கைவளங்கள் மிகுந்த வாழ்வியலோடு வாழ்ந்த மக்கள் தங்களின் இருப்பிடத்தைச் சுற்றி கிடைத்த கனிகளையும், காய்களையும், தானியங்களையும் பயன்படுத்தி உருவாக்கிய நீர்பானங்களை அருந்தியுள்ளனர்.

**1.கஞ்சி உண்ணல்**

**“நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே**

**புல்லரிசியால் செய்யப்பட்ட கஞ்சியைக் குடித்தல்”**[106]

அரிசியால் ஆக்கப்பட்ட கஞ்சியை உண்டு வாழ்ந்ததை இப்பாடலில் அறியலாம்.

**2.கள்**

சங்கால மக்களின் நீர்ப்பானங்களில் கள் முக்கிய இடம் பெறுகிறது. கள்ளுண்டு கழித்தலை ஒரு நிகழ்வாகவே நடத்தியுள்ளனர். அரசன் முதல் குடிமக்கள் வரை அனைத்துத் தரப்பினரும் ஆண் பெண் என்ற பாகுபாடு இல்லாமல் கள் அருந்தியதை சங்கப்பாடல்களில் காண முடிகின்றது. கள்ளின் வகைகள் கள்ளுக்கடைகள் கள்ளுக்காக பொருளை அடமானம் வைத்தல் கள்ளுண்ட மயக்கம் கள்ளினால் மாண்ட செய்தி போன்ற பல செய்திகள் பற்றியக் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. தொல்காப்பியரும் உண்டாட்டுத்துறை என்று குறிப்பிடுகின்றார்.

**“பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனை**

**கால் கழி கட்டிலில் கிடப்பி**

**வெள் ளெறுவை போர்ப்பித் திலதே”**[107]

அளவுக்கதிகமாக கள்ளினை அருந்தியதால் மகன் இறந்துப்பட்ட செய்தியை அறியலாம்

**3.உண்டாட்டு**

வெட்சி மறவர்கள் போரிலே பசுக்களைக் கவர்ந்து வருகின்றனர். ஊர் மன்றத்தில் பகிர்ந்து கொண்ட பசுக்களைக் கள் விலைக்குத் தந்து கள்ளைப் பருகி மகிழ்ந்துள்ளனர்.

**"முடகால் காரை முது பழன் ஏய்ப்பகத்**
**தேறிப்ப விளைந்த தீம்கந் தாரம்**
**நிறுத்த ஆயம் தரைச் சென்று உண்டு"**[108]

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றது.

**4.3 ஐவகை நிலங்களில் நீர் குறியீடு**

சங்கப்பாடல்களில் நீராதாரங்களான அருவி, பொய்கை, மழை, நீர் போன்ற குறியீடாகக் காட்சிப்படுத்தப்படுகின்றன. ஐம்பூதங்களில் ஒன்றாகிய நீரில் குறியீட்டினை சூழல்களை மையமாகக் கொண்டு சங்கப்புலவர்கள் பாடியுள்ளனர்.

**1.குறிஞ்சியில் நீர் குறியீடு**

கைந்நிலையில் அமைந்த பாடல் ஒன்று அருவியைத் தலைவனுக்குக் குறியீடாகக் கொண்டு, தலைவியின் நிலையை நன்கு எடுத்துரைக்கின்றது.

**"வெந்த புனத்துக்கு வாசமுடைத்தாகச்**
**சந்தன மேந்தி யருவி கொணர்ந்திடூஉம்**
**வஞ்ச மலைநாடன் வாரான்கொ**
**றோழியென் னெஞ்ச நடுங்கி வரும்"**[149]

என்ற பாடலின் வழி தலைவி தோழியிடம் தீயினால் வெந்த காட்டிற்கு மணம் உண்டாகும்படி அருவிகள் சந்தனக் கட்டைகளை அடித்துக்கொண்டு

வருகின்றன. கள்ளமனம் கொண்ட தலைவன் இங்கு வராமல் இருப்பானோ என்று தலைவி வருந்துகிறாள். இங்கு இடம் பெறக்கூடிய அருவி தலைவனுக்குக் குறியீடாகவும், வெந்தபுனம் தலைவிக்குக் குறியீடாகவும் அமைகின்றன. அதாவது முன்பு அகிலும், சந்தனமும் வளர்ந்து மணமுடைய காடாக இருந்தது. மரங்களை வெட்டி தீயிட்டு தினை விதைத்தனர். தினை அறுவடையாகி மீண்டும் அருவி சந்தன மரத்துண்டுகளைக் கொண்டு வந்து மணமாக்கும் இயல்பு, தலைவியின் இயல்பினைச் சுட்டுகிறது. முன்பு தினைப்புனம் காக்க தலைவன் இன்பமளித்தான் தற்போது பொருளீட்டச் சென்றுள்ளான், மீண்டும் வந்து என்னை மணந்து இன்பமளிப்பான் என்பதே இங்கு குறியீட்டுப் பொருளாகும். அருவி, வெந்தபுனம் குறிப்பானாகவும், தலைவன், தலைவி குறிப்பீடாகவும் இடம்பெற்றுள்ளன.

**2.முல்லையில் நீர் குறியீடு**

கார்நாற்பதின் பாடல் ஒன்று மழையைச் செல்வம் என்று குறிப்பிடுகின்றது.

**“சிரல்வாய் வனப்பின வாகி நிரலொப்ப**
**ஈர்ந்தண் டளவந் தகைந்தன - சீர்த்தக்க**
**செல்வ மழைமதர்க்கட் சின்மொழிப்**
**பேதையூர் நல்விருந் தாக நமக்கு”**[150]

என்ற பாடலில் மழை செல்வத்திற்குக் குறியீடாக அமைந்துள்ளது. செல்வ வளம் மிக்க தலைவியின் ஊர் நமக்கு விருந்து தரும் இடமாகட்டும் என்பதன் வழி குறியீட்டினை நன்கு உணரலாம். இனிமை கொள்வதின்வழி மழை செல்வத்திற்குக் குறியீடாகின்றது. இங்கு மழை குறிப்பானாகவும், செல்வம் குறிப்பீடாகவும் வெளிப்படுகின்றது.

**3.மருதத்தில் நீர் குறியீடு**

மருதத்திணைப் பாடல்களில் நீர்நிலைகள் குறியீடாகின்றன. பொய்கை குறியீடாவதினை,

**"பொய்கைநல் லூரன் நிறங்கிளப்ப வென்னுடையை**

**அ.்.தன் றெனினு மறிந்தேம்யாஞ் - செய்தி நெறியி**

**னினியசொன் னீர்வாய் மழலைச்**

**சிறுவ னெமக்குடைமை யால்"[151]**

என்ற பாடல் உணர்த்துகின்றது. இப்பாடலின் பொருள், குளங்கள் நிறைந்த மருதநிலத்துத் தலைவன் பற்றி எனக்குத் தெரியும், அவன் தொடர்பு எனக்குத் தேவையில்லை, மழலைச் சொல்பேசும் என்மகனே எனக்குப்போதும் என்கிறாள் தலைவி. குளங்கள் என்பது பரத்தையர்களைக் குறிப்பிடுகின்றது. தலைவன் பரத்தையர்களுடன் கொண்டுள்ள தொடர்பு எனக்குத் தெரியும் என்பதே இங்கு முதன்மையான குறியீட்டுப் பொருளாகும். பொய்கை குறிப்பானாகவும், பரத்தையர் குறிப்பீடாகவும் விளக்கப்பட்டுள்ளது. பொய்கை தலைவனுக்குக் குறியீடாவதையும் காணமுடிகின்றது. இதனை,

**"கயநீர் பாய்ந் தோடுங் காஞ்சிநல் லூரன்**

**நயமே பலசொல்லி நாணினன்**

**போன்றான் பயமில்யாழ்ப் பாண பழுதாய**

**கூறா தெழுநீபோ நீடாது மற்று"[152]**

என்ற கைந்நிலைப்பாடல் உணர்த்துகிறது. கயம்' என்பது தலைவனுக்குக் குறியீடாவதினைக் காணலாம். பொய்கையில் உள்ள நீரானது, காஞ்சிமரங்கள் வழியாக பாய்ந்தோடும் மலைநாடன் முன்பு என்னை பொய் சொல்லி மணந்தான், முன்பு எங்கள் வீடுவரவே பயம் கொண்டவன், இப்போது பயமின்றி பரத்தை இல்லம் செல்கிறான் என்று தலைவி பாணனுக்கு வாயில் மறுக்கிறாள். இங்கு பொய்கை தலைவனுக்குக் குறியீடாகவும், காஞ்சிமரம் பரத்தைக்குக் குறியீடாகவும், நீர் செல்வத்திற்குக் குறியீடாகவும் அமைகிறது. பொய்கையில் இருந்து, நீர் காஞ்சிமரத்தின் வழி செல்வது; தலைவனின் செல்வம் பரத்தைக்குச் சென்று சேர்வது குறியீட்டுப் பொருளாகும். இங்கு கயம், நீர், காஞ்சி போன்றன குறிப்பானாகவும், தலைவன், செல்வம், பரத்தையர் போன்றன குறிப்பீடாகவும் விளக்கப்பட்டுள்ளன.

**4.நெய்தல் நீர் குறியீடு**

நெய்தல் நிலப்பகுதிகளில் காணப்படக்கூடிய கடல், மணல், முத்து போன்றன குறியீடாக இடம்பெற்றுள்ளன. நீர்நிலைப் பகுதிகளில் காணப்படக்கூடிய இவற்றில் பல்வேறு குறியீடுகள் காணப்படுகின்றன. நீர்நிலைப் பகுதிகளான கடலும், வண்டலும் ஐந்திணை ஐம்பதில் குறியீடாக அமைவதினை,

**“கொங்கண் பிரிந்த குளிர்பூம் பொழினோக்கி**

**யுண்கண் சிவப்ப வழுதே னொளிமுகங்**

**கண்டன்னை யெவ்வம்யா தென்னக்**

**கடல்வந்தென் வண்டல் சிதைத்ததென் றேன”**[153]

என்ற பாடல் குறிப்பிடும். இப்பாடலில், தலைவி வீட்டுக்காவலில் அழுதுகொண்டிருக்க, செவிலி கேட்கிறாள். அதற்குத் தலைவி நான் கடற்கரையில் மணல்வீடு செய்து விளையாடினேன். கடல் என் மணல் வீட்டைச் சிதைத்தது, தலைவன் இதை உணர்ந்து என்னை மணப்பானா என்று பொருள்படுகிறது. இதன் குறியீட்டுப் பொருள் தலைவியின் காதலை பெற்றோர்கள் அழித்து வீட்டுக் காவலில் வைத்துவிட்டனர். இதனை உணர்ந்து தலைவனே மணம்புரிய வரவேண்டும் என்பதாகும். கடல் பெற்றோர்க்குக் குறியீடாகவும், வண்டல் காதலுக்குக் குறியீடாகவும் அமைவதை காணமுடிகிறது. இங்கு கடல், வண்டல் குறிப்பானாகவும், பெற்றோர், காதல் குறிப்பீடாகவும் சுட்டப்பட்டுள்ளது.

நீர்நிலைகளில் காணப்படக்கூடிய முத்து ஐந்திணை ஐம்பதில் குறியீடாகின்றது. இதில் முத்து தலைவிக்குக் குறியீடாக அமைகிறது.

**“எக்க ரிடுமணன்மே லோதந் தரவந்த**

**நித்தில நின்றிமைக்கு நீள்கழித் தண்சேர்ப்ப!**

**மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தா**

**ரொற்கங் கடைப்பிடியா தார்”**[154]

என்ற பாடலின்வழி நித்திலம்’ தலைவிக்குக் குறியீடாக அமைகின்றது. தலைவனின் பிரிவால் தலைவி பொழிவிழந்து காணப்படுகின்றாள். அவளின் குறைநீக்க விரைவில் மணம்புரிந்துகொள் என்பதே குறியீட்டுப்பொருளாகும். நித்திலம் குறிப்பானாகவும், தலைவி குறிப்பீடாகவும் திகழ்வது குறிப்பிடத்தக்கது. இவ்வாறாகவே பாடல் ஒன்றில் முத்து’ அலருக்குக் குறியீடாக அமைந்துள்ளது.

**“எங்கு வருதி யிருங்கழித் தண்சேர்ப்ப!**
**பொங்கு திரையுதைப்பப் போந்தொழிந்த –**
**சங்கு நரன்றுயிர்த்த நித்தில வள்ளிருள்கால்**
**சீக்கும் வரன்றுயிர்த்த பாக்கத்து வந்து”**[155]

என்ற பாடலில் அலைகள் உந்துவதால் வெளியேறிய சங்குகள் முத்துக்களை ஈனும், அப்போது முத்துக்கள் அங்குள்ள இருளைப் போக்கும், நீ எவ்வாறு இரவில் வரமுடியும் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள். இங்கு முத்து அலருக்குக் குறியீடாக அமைகின்றது. சங்கிலிருந்து முத்துவெளியேறி இருளைப் போக்கி வெளிச்சம் கொடுப்பது தலைவன், தலைவி இருவரையும் நெய்தல் நில மக்கள் கண்டால் அலர் எழும் என்பதைக் குறிக்கின்றது. இரவில் நெய்தல் நில மக்களின் நடமாட்டம் மிக்குக காணப்படும் என்பதும் சுட்டப்படுகின்றது. மேலும் நித்திலம் குறிப்பானாகவும், அலர் குறிப்பீடாகவும் இடம்பெறுவது சுட்டத்தக்கது.

பாலைத்திணையில் நீர்க்குறியீடு இடம்பெறாதது குறிப்பிடத்தக்கது.

**தொகுப்புரை**

இவ்வியலில் சடங்குகள், விழாக்கள், பொழுதுபோக்கு, இறையுணர்வு போன்ற நிலைகள் அனைத்திலும் நீரின் பயன்பாடும், நீரின் பங்கும் ஆராயப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. மு.பா -3
2. புறம்-57-2
3. கலி - 104-78
4. தொல்- அகம்-5
5. பரி 3-4-11
6. பரி 4-25
7. கலி-44-4-5
8. பரி- 2-16-19
9. பரி- 3-25-26
10. முல்லை-3
11. முருகு-267
12. முருகு- 220
13. புறம்-55-17-18
14. கலி-1-1
15. கலி-150
16. அகம்-266-20
17. பரிபாடல்-10-111-116
18. நற்றிணை 157
19. ஐங்குநூறு 10
20. கலித்தொகை16
21. புறநானூறு143
22. நற்றிணை 165
23. நற்றிணை 139
24. கலி-131

24. அகம்-220-1

26. நற்-155
27. அகம்-370
28. கலி-131
29. அகம்- 90

30. ஐங்.,182:3-4.
31. அகம்- 156
32. நற் -34-1
33. அகம்-91-4
34. ஐங்குறு-28-1
35. அகநானூறு 240
36. ஐங்குநூறு 53
37. குறுந்-251
38. அகநானூறு-156
39. புறம் 143
40. திருமுருகாற்றுப்படை-223
41. அகநானூறு -18
42. அகநானூறு -110
43. ஐங்.,53:1.
44. அகம்., 366:6.
45. அகம்.,20:11.
46. புறம் -264
47. தொல்-புறம்-5
48. அகம்-269
49. அகம்-343
50. சிலம்பு - நீர்ப்படுகாதை-வஞ்சி- 13-16
51. புறம் -263
52. புறம்-260
53. சசடவழி -234
54. கலைக்களஞ்சியம் தொகுதி 4 ப.392
55. க.அ .ஜோதிராணி தமிழர் பண்பாட்டுத் தளத்தில் சடங்குகள்
56. அகம்- 123
57. புறம்-166-19-21
58. புறம்- 384-17
59. அகம் -166

60. முல்லை-1-4
61. பால காண்டம் -வேள்விப்படலம் 23
62. குறுந் - 233
63. ப.ப -64
64. புறம் 361
65. புறம்362
66. புறம்367
67. சண்முகம்பிள்ளை, ப.எண்.52.
68. திரு – 186
69. அகம்-86
70. அகம்-136
71. நாச்சியார் திருமொழி -62
72. அகம்-222
72. மது- 600-604
73. தொல்-1092
74. ப.பாலை -98-99
75. மணி-13-5-7
76. மதுரை- 424-429
77. திரு -235
78. புறம்-99
79. புறம் -74
80. குறுந்- 40
81. குறுந்-03
82. குறிஞ்சி கலி -51-1-16
83. கலி-38-15
84. நற்றி 198
85. ப.பா 283
86. பொரு -248
87. புறம்- 18
88. புறம்-118

89. புறம்-14

90. புறம்-24

91. சிலம்பு-காடுகாண்காதை -26-28

92. குறிஞ்சி - 205-211

93. அகம்.,110:4-5.

94. கலி-131:1-3.

95. பரி- 6

96. பரி-70

97. குறுந்-255- 4

98. கலி-131

99. கலி-101

100. புறம்-381

101. புறம்-385

101. புறம்- 2

102. ப.ப-90

103. புறம்- 142

104. ஐங்-203

105. குறுந் -130-3-7

106. புறம் 64

107. புறம் -286

108. புறம்- 258

109. கலி-133

110. ப.ப -3

111. புறம்-50-1-5

112. புறம் - 354

113. சங்கத்தமிழரின் சடங்குகள் -220

114. திரு-221

115. மது -427-430

116. புறநானூறு-9

117. அகநானூறு-187

118. பரி-11-1-15

119. அகநானூறு-137

120. பரி-31-49

121. ஐங். 62

122. எஸ்.இராமச்சந்திரன் தென்னிந்தியச் சமூக வரலாற்று ஆய்வு நிறுவனம்

123. பரி-81

124. பரி-11-74-76

125. புறம்-70-6

126. ஐங்-84

127. பரி-11-87

128. அகம்-21

130. நற்-272

131. நற்- 22

132. கலி-30-1-2

133. அகம்-269-14-20

134. பிங்கலநிகண்டு-1369

135. திருவெம்பாவை - 29

136. பரி-1-82

137. முத்-42.

138. அகம்-121

139. புறம்-243

140. நற்-228

141. நற்-334

142. நற்-57-8

143. நற்-51-57

144. நற்- 69

145. தொல்-கற்-50

146. நற்-96 குறு-326 அகம்-110

147. ப.பா-97-100

148. பரி-6-1-110

149. கை .2.

150. கா.நா.36.

151. கை 41.

152. மேலது. 46.

153. ஐ.ஐ-44

154. அகம்-269-14-20

155. மேலது 48.

# இயல்-5

## நீர்த்தேக்கமும், பங்கீட்டு முறைகளும்

### முன்னுரை

நீரே உலகிலுள்ள அனைத்து உயிர்களின் ஆதாரமாகும். உயிரினங்கள் உண்பதற்கு உணவு இல்லாமல் குறுகிய நாட்கள் வரை உயிர் வாழ முடியும் ஆனால் நீரின்றிச் சில மணித்துளிகள் வாழ்தல் என்பது அரிதான செயலாகும். நிலம், நீர், காற்று இவை மூன்றும் உயிர் வாழ்க்கையின் அடிப்படையான காரணிகளாகும். நீர் இல்லாமல் மண்ணுலகில் உயிர்த்தோற்றம் என்பது நிகழாது, நிலம் இல்லாமல் நீரின் பயனை அறிய இயலாது. நிலம் நீர் இரண்டோடும் காற்றும் சேர்ந்தால் தான் மண்ணில் உயிர்களின் வாழ்வென்பது பரிணமிக்கிறது. பணடையத்தமிழர்கள் இவ்வுண்மையினைத் தெளிவாக உணர்ந்திருந்தனர். அதனால் தான் இயற்கை அன்னையின் அசைவுகளையும் இயக்கங்களையும் கூறுபாடுகளையும் வணங்கி அவற்றின் நிலைத்த தன்மையினைப் போற்றிப் பாதுகாத்தலையே தங்களின் வாழ்நாள் கடமையென எண்ணி வாழ்ந்தனர். இப்பூமியானது ஒன்றுக்கு மேற்பட்ட மூலக்கூறுகளை தன்னகத்தே கொண்டுள்ளது எனினும் திட திரவ வாயு என்ற மூன்று நிலைகளில் வளிமண்டலத்தில் கண்ணால் காணக்கூடிய சிறப்பினைப் பெற்றிருப்பது நீர் ஒன்றாகும். உலக உயிரினங்களின் வாழ்வின் இயக்கத்திற்கு உணவுஉற்பத்தி அவசியமானது. அவ்வுணவினை உற்பத்தி செய்வதற்கு நீரின் உதவி தேவை. உயிரினங்கள் தாகத்தைத தணித்துக் கொள்வதற்கும், பசியினைப் போக்கவும், உடல் தூய்மைக்கும் என்ற வகையில் நீரின் பயன்பாடு அளப்பரியது. வளமிகுந்த நிலமும் பரந்து விரிந்த ஆகாயமும், வான் தரும் மழையும், ஆர்ப்பரிக்கும் அருவிகளும், கவின்மிகு பொழில்களும், கடலுள் நீர் முகக்கும் மேகங்களும், மேகம் மோதும் காற்றும், சுட்டெரிக்கும் ஞாயிறும் இவையாவும் இயற்கையின் அற்புத கொடைகள். இவைகள் இணைந்த ஆற்றல் மூலமே உலகம். இயற்கை வளக்கூறுகள் அனைத்தும் மனிதனின் செயல்பாடுகளால் மாசடைந்து அழிந்து வருகின்றன. பேராசைக் கொண்ட மனிதனின்

மனப்பான்மையும், தன்னலத்தோடு கூடிய நுகர்ச்சியும், வருங்காலப் பயன்பாடு குறித்த அக்கறை இன்மையும், சுற்றுச்சூழல் குறித்த விழிப்புணர்வு இன்மையும் இத்தகு காரணங்களால் இயற்கை தன்னிலையில் மாறிவருகிறது. தன்னைச் சுற்றியுள்ள இயற்கைச்சூழல் குறித்த இன்றைய மனித மனப்பான்மைகள் முரண்பட்டுக் காணப்படுவது பேராபத்தை விளைவிக்க வல்லவை.எனவே தான் நீரின் முக்கியத்துவத்தை உணர்ந்த தமிழர்கள் நீரை முறையாகக் கையாள பல உத்திகளையும் தொழில்நுட்பங்களையும் கையாண்டுள்ளனர். பழந்தமிழரின் நீர்த்தேக்க கட்டுமான நுட்பங்களையும் நீர் பங்கீட்டு முறைகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 5.1 நிலமும் நீரும்

**"செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு**
**தன்பெயல் தலைஇய ஊழியும்"**[1]

காற்றிலிருந்து தீயும் ஊழியும் தீயிலிருந்து பனியும் மழையும் பெய்த ஊழிகளும் தோன்றின இறுதியில் நீரில் நான்கு வகையான பூதங்களும் ஒன்றாக இணைந்து நிலத்தின் ஊழி தோன்றியது என்று நிலம் உருவான விதத்தை பரிபாடல் சுட்டுகிறது. இங்கு நிலம் தோன்றுவதற்கு நீரே முக்கியப் பணியாற்றுகிறது.

புறநானூறும்

**"மண்டிணிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்புதைவரு வளியும்**
**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீரும்**
**என்றாங்கு ஐம்பூதத்தியற்கை"**[2]

மண் செறிந்தது நிலம் அதன்மேல் உயர்ந்து நிற்பது வானம் அவ்வானத்தைத் தழுவி வரும் காற்று அக்காற்றால் எழுந்தது தீ. தீக்கு

முரணாக இருக்கின்ற நீர் என்று நீரின் தோற்றத்தையும் குறிப்பிடுகிறது. இங்ஙனம் உருவான நீரும் நிலமும் ஒன்றை ஒன்று சேர்ந்தே செயல்படுகிறது.

**“உலகின் பரப்பில் மூன்றில் இரண்டு பாகம் ஆழ்கடல் அந்த கடலிலுள்ள நீரின் அளவோ இவ்வுலகில் பனிக்கட்டிகளாக உறைந்து ஓடும் நதிகளிலும் தேக்கங்களிலும் நிலத்தடியில் ஓடி ஒளிந்தும் என்றும் இடம்பெயர்ந்து கொண்டுள்ள திரவமாகவும் காற்றின் ஈரப்பதமாகவும் உலவி பல வடிவங்களில் காணப்படுகிறது என்று முனைவர் ஆ.மோகனகிருஷ்ணன் குறிப்பிட்டுள்ளார்”**[3]

தமிழர்களின் தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியத்திலும் நிலமும் நீரும் இணைந்து இந்த உலகத்தில் உயிர்கள் தோன்றுவதற்கு அச்சாணியாக உள்ளதை

**“முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே தொல்-அகம்-4**
**நிலம் தீ நீர்வளி விசும்போ டைந்தும்**
**கலந்த மயக்கம் உலகம்**[4]

என்று நீரும் நிலமும் இல்லாமல் உலகில் உயிர்களின் உருவாக்கத்திற்கு காரணம் என்பதை பண்டைத் தமிழர்களின் சிந்தனையாகும்.

தொல்காப்பியர் வகுத்த குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என நான்கு வகையான நிலப்பகுதிகள் ஒவ்வொன்றிலும் நீரே முதன்மையாகத் திகழ்கின்றது. அவ்வகையில் பாலை நிலமானது நீரின்போக்கினைக் கொண்டு உருவாகியுள்ளதை அறிய முடிகின்றது. நீரின் தன்மைக்கேற்ப நிலமானது மாறும் பொழுது அப்பகுதியில் வாழும் மக்களின் வாழ்க்கைமுறை தொழில்கள் தாவரங்கள் மரங்களின் தகவமைப்பு சுற்றுசூழல் போன்றவை அனைத்தும் மாறுபடுவதை சங்கப்பாடல்கள் எடுத்து இயம்புகின்றது.

தொல்காப்பியரும் தன் நூற்பாவில் முதல் , கரு , உரிப்பொருட்களின் வாயிலாக குறிப்பிட்டுள்ளார்.

உழவர்கள் கடினமாக உழைத்தாலும் நிலவளமும் , நீர்வளமும் இன்றிப்பயிர் வளம் சிறக்காது நிலத்திற்கு ஏற்பவே விளைவு சிறக்கும் என்பதை உழவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.

**"நிலநலத்தால் நந்திய நெல்லேபோல் தத்தம்**

**குலநலத்தால் ஆகுவர் சான்றோர்"**[5]

என்பது தமிழறிஞர்கள் கருத்தாகும். நல்ல நிலத்திலும் நன்றாக உழுது பயிரிட வேண்டும். குறைந்த ஈரத்தில் உழுது பயிரிட்டால் உழுத பயனைக் காண முடியாது. கற்றறிந்தவர்களாயினும் அவர்கள் வறுமை நிலையில் இருப்பார்களாயினும் அவர்கள் சொல்கின்ற கருத்துகள் சமுதாயத்தில் சிறப்பு பெறுவதில்லை. அதனால் பயனும் விளைவதில்லை. ஈரமில்லாமல் செய்யும் உழவும் அதுபோல தான் என்பதை,

**"புல்ஈரப் போழ்தின் உழவேபோல் மீதாடிச்**

**சொல்லாவாம் நல்கூர்ந்தோர் சொல"**[6]

எனக் குறிப்பிடுகிறது நாலடியார்.

### 5.2 நீரின் அவசியம்

இவ்வுலகம் தன்நிலை திரியாமல் இருக்க நீர்ப்பதத்தோடு கூடிய மண் இன்றியமையாதென்பதைப் பழந்தமிழர் உணர்ந்திருந்தனர். உயிர்கள் வாழ உணவு எவ்வளவு இன்றியமையாத தேவையோ அதைப்போல இந்நிலம் வளமாக இருக்க நீர் இன்றியமையாத மூலமாகும் என்பதை உணர்ந்தினர். இதனை,

**"நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே**

**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**

**உணவெனப் படுவது நிலத்தோடு நீரே"**[7]

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. மேலும் இவ்வகையான சிறப்பு வாய்ந்த நீரினையும், நிலத்தையும் ஆங்காங்கே நீர்நிலைகளை ஏற்படுத்துவதன் மூலம் ஒன்றாகக் கலக்கச் செய்பவரே இவ்வுலகத்தில் உடலையும், உயிரையும் படைத்தவர் என்ற பெருமையைப் பெறுவர் என்பதனை,

**“நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**

**உடம்பும் உயிரும் படைத்திசி னோரே”**[8]

என்ற அடிகள் சுட்டுகின்றன.

## 5.3 மழை

வேளாண்மைக்கு அடிப்படை நீர் நீரின்று அமையாது உலகு என்பார் வள்ளுவர். பண்டையத் தமிழ் மக்கள் நீரின் மீது வைத்திருந்த மதிப்பீடுகளும், நம்பிக்கைகளும் மிக அதிகமாகும். மாமழை போற்றதும், மாமழை போற்றுதும் என்பார் இளங்கோவடிகள். மழை பொழிவு பற்றிய அறிவியல் உண்மைகளை பண்டைத் தமிழர் முன்பே அறிந்திருக்கின்றனர் என்பது புலனாகிறது. கடலில் இருந்து நீரை முகந்து மேகமானது மழையைக் கொண்டு வந்து நிலத்திற்கு தருகின்றது என்ற அறிவியல் கோட்பாடானது பட்டினப்பாலையில் இடம்பெற்றுள்ளது. வான்முகந்த நீர் மழைப்பொழியவும் மழைப்பொழிந்த நீர் கடற்பரப்பவும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது இதே போன்று,

**“மறந்து கடல் முகந்த கமஞ் சூல் மாமழை**

**பொறுத்தல் சொல்லாது இறுத்த வண் பெயல்”**[9]

என்ற பாடல்வரி நீர் பொழியும் அறிவியலை உணர்த்துகிறது. இரவுப்பெயல் பொழிந்த உதவியோயே என்ற வரி மக்கள் மழையை பார்த்த பார்வையை எடுத்துரைக்கிறது. வேறுபாடுகள் இல்லாமல் எல்லோரையும் சமமாக பாவிக்க வேண்டியது மன்னனின் தலையாயப் பண்பாகும். சாதிக்கு ஒரு நீதி என்பது அதன் அடிப்படை இதனை விளக்க வந்த புலவர் மழையை எடுத்துகாட்டாக விளக்கியுள்ளார்.

**“அறுகுளத்து உகுத்தும் அகல்வயல் பொழிந்தும்**

**உறுமிடத்து உதாவது உவர்நிலம் ஊட்டியும்**

**வரையா மரபின் மாரி போலக”**[10]

வற்றி போய்விட்ட குளத்தை நிரப்பியும் அதேபோல் வேறுபாடு இல்லாமல் அகன்ற வயல்களின் மீது பொழிந்தும் விளைச்சலே தராத உவர்நிலப் பகுதிகளிலும் நீரைச் சொரிந்தும் பாகுபாடின்றி கொடுக்கும் மழை என்பது அதன் பொருளாகும். மழைநீரைச் சேர்த்து வைத்து வேளாண்மை செய்ய வேண்டும் என்ற நிலை குறிஞ்சிநிலத்தில் இல்லை ஏனெனில் அவர்களுக்கு அருவிநீரும் , சுனைநீரும் எப்போதும் குறைவின்றிக் கிடைத்து வந்துள்ளது. அது மட்டுமல்லாது அவர்களது வேளாண் முறையானது மழைப் பாசனத்தை அடிப்படையாகக் கொண்டதாகும்.

மண்ணின் நீர் நிலைகளிலிருக்கும் நீர் ஆவியாகி மேகமெனத் திரண்டு குளிர்ந்து மேகம் இருண்டு மழையாகப் பொழிகிறது என்பதை அறிந்து ஆங்காங்கே நீர்நிலைகளை உருவாக்கினர் என்பதை,

**“நீண்டு ஒலிஅழுவம் குறைபட முகந்து கொண்டு**

**ஈண்டு செலல்கொண்மூ வேண்டுவயின் குழீஇப்**

**பெருமலை அன்ன தோன்றல் சூல்முதிர்பு**

**உரும்உரறு கருவியொடு பெயல்”**[11]

என்பதில் கடல்நீரிலிருந்து ஆவியான மேகம் மலையெனக் குவிந்து இருண்டு மழையாகப் பொழிந்தமைச் சுட்டப்படுகிறது. இவ்வகை நீர் மேலாண்மை நீர்நிலை நிர்வாகம் எனப்படுகிறது. நீர்நிலை நிர்வாகமானது ஒவ்வொரு வயலுக்கும் பாசனநீர் கிடைத்தல் பசிப்பிணிப் போக்குதல் வறுமையை அகற்றுதல் இயற்கைச் சமநிலையை மீட்டெடுத்தல் ஆகிய முக்கிய நோக்கங்களைக் கொண்டதாகும்.

### 5.3.1 மழைவளம் பெருக்கும் வழிமுறைகள்:

மழைவளத்தைப் பெருக்க உதவும் வழிகளுள் முதன்மையானது இயற்கை வளங்களாகிய மலைவளத்தையும் , வனங்களையும் காத்தலாகும்.

அதோடு மட்டுமல்லாது இயற்கைவளங்களை சீரமைத்து நீர்ச்சுழற்சி முறைக்கு வழி வகுத்தலாகும். மேலும் செயற்கைவளங்களைப் பயன்படுத்தியும் மழைவளத்தைப் பெருக்க இயலும் என்பதையும் பழந்தமிழர்கள் அறிந்திருந்தனர் என்பதை இலக்கியச் சான்றுகளும் எடுத்தியம்புகின்றன.

### 5.3.2 மழைநீரை சேகரித்தல்

குறிப்பிட்ட காலங்களில் மட்டும் பெய்யும் மழைநீரின் அவசியத்தை உணர்ந்து நேரடியாக சேகரிப்பதும் நிலத்துக்குள் செலுத்துவதுமே ஆகும்.மழை நீர் சேகரிப்பில் இரு வழிமுறைகள் உள்ளன.

1. நேரடியாக நீர்ச் சேமிப்புக் கலன்களில் நிரப்பி தேவைக்கேற்ப பயன்படுத்துதல்

2. மழைநீரை நிலத்தில் செலுத்தி நீர்மட்டத்தை உயர்த்துதல்

உலகிலேயே அதிகமாக மழைபொழியும் வரிசையில் பிரேசிலுக்கு அடுத்து இந்தியா இரண்டாம் இடத்தில் உள்ளது சுமார் 4000 கன கி.மீ பெய்யும் இந்நீரில் 690 கன கி.மீ அளவிற்கு நாம் பயன்படுத்துகிறோம். மீதமுள்ள நீர் முறையான சேமிப்பின்றி வீணாக கடலில் கலக்கின்றது. வீணாகும் நீரினைத் தடுத்து நிறுத்தி முறையாகப் பயன்படுத்தினால் நீரின் தேவையும் அதனால் உணவும் மற்ற பிற தேவைகளும் நிறைவேறும் மேலும் தொழில்களும் சிறந்து விளங்கும் என்பது குறிப்பிடத்தக்கதாகும். பழந்தமிழர் இவ்வகை நீரின் தன்மையை உணர்ந்திருந்ததால் அந்நீரினை பலவகையில் சேமித்து அதனைப் பலவகைத் தேவைகளுக்கும் பயன்படுத்தினர்.

நெடுநல்வாடையில் நிலாமுற்றத்தில் இருந்து மழைநீர் வெளியேற மீன்வடிவ தூம்பு அமைக்கப்பட்டுள்ளது. தூம்புக்கு அம்பணம் என்ற சொல் வழங்கப்பட்டுள்ளது.

**“நிலவுப் பயன்கொள்ளும் நெடுவெண் முற்றத்து**
**கிம்புரிப்பகுவாய் அம்பணம் நிறைய**
**கவிழ்ந்து வீழ் அருவிப் பாடுவிறந்துஅயல’’**[12]

என்ற நெடுநல்பாடல் வரிகளின் வழி அறியலாம். இதன்வழி மாடங்களில் பொழியும் மழைநீரைச் சிதறி சென்று வீணாகாமல் இருக்க ஓரிடத்தில் விழக்கூடிய அளவிற்கு மழைநீர்க்குழாய்கள் உள்ளதை உணர முடிகின்றது.

தமிழர்களின் கட்டுமானத்தில் நிலாமுற்றமும் ஒன்றாகும்.அரசன் நிலவுப் பயன் கொள்ளுவதற்காக உருவாக்கப்பட்ட மகர வாய் போன்று அமைக்கப்பட்டிருந்த அம்பணம் என்ற குழாயிலிருந்து அருவி போன்ற ஓசை வீழ்ந்து கொண்டிருந்தது என்ற கருத்தில் மழைநீரை வீணாக்காமல் மழைநீரைச் சேமிப்பதற்காக குழாய்களை ஏற்படுத்தி நீர் விரயம் ஆகாமல் அதனை நிலத்திற்குச் செலுத்தி நிலத்தடிநீரை உயர்த்தியுள்ளனர். அதன் மூலம் குடிநீர் மற்றும் இதரத் தேவைகளையும் பூர்த்தி செய்துள்ளதை அறிய முடிகிறது.

நற்றிணையிலும்

**“ஈர்மண் செய்கை நீர்படு பசுங்கலம்**

**பெருமழைப்அபயற்குஏற் றாங்குளம்”**[13]

வீட்டு முற்றங்களில் மழைநீரை சேகரிப்பதற்கு புதியதாக வனையப்பட்ட மண்பாண்டங்களைப் பயன்படுத்தி சேகரித்துள்ளனர்.

இன்று நாம் பயன்படுத்தி வருகின்ற மழைநீர்ச்சேகரிப்பு உத்திக்கு தமிழர்கள் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளனர்.

## 5.4 நிலத்தடி நீரை உயர்த்துதல்

மழைநீரை நிலத்தடியில் சேமித்து மழைப்பெய்யாத காலங்களில் அதனை முறையாகப் பயன்படுத்தும் நிலையினையும் அக்கால மக்கள் அறிந்திருந்தனர் என்பதற்கான பதிவினை,

**“நீரற வறியா நிலமுதற் கலந்த**

**கருங்குர னொச்சிக்”** [14]

**“.................................பிறங்கல்**

**பெருங்களிறு உரிஞ்சிய மண்அரையாத்து”**[15]

என்ற பாடலில், நீர் நீங்குத்தன்மையில்லாத நிலப்பகுதியில் மலர்ந்திருந்த கருமையான நிறமுடைய சிறியகொத்தான பூக்களைக் கொண்டது நொச்சி மரமாகும். 'நீரறவறிய' என்ற சொல்லின் மூலம் நிலத்தடிநீரைத் தேடிச்சென்று உட்நோக்கியவேர்ப்பகுதியினை ஊன்றி வளர்ந்துள்ள நொச்சிமரம் என்ற குறிப்பில் நொச்சி நிலத்தடிநீரினை கிரகித்து வளரும் தன்மையுடைய மரம் என்பதும் நிலத்தடிநீர் நிறைந்துள்ள இடங்களை அறிவதற்கு மூலமாக இருந்துள்ளதையும்˙ சங்கப்புலவர் குறிப்பிட்டுள்ளார்.

"பழஞ்செவ்வியல் நூல்களில் தமிழர்கள் கடினமாக உழைப்பவர்களாகவும் சுறுசுறுப்பானவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். இப்போதிருப்பதைவிட, சங்க காலத்தில் நிலவளம் மிகுதி. ஆனால் இப்போது தேவைப்படும் உழைப்பைவிட மிகக் குறைவான ஆற்றலும் உழைப்பும் தேவைப்படும் அளவுக்கு அவ்வளவு வளமிக்கதாக இல்லை. பஞ்சம், வறட்சி, வறுமை யாவும் அறிய வராதவை அல்ல" என்ற கூற்றின் மூலம் சங்ககால மக்கள் தங்கள் வாழ்வின் இயல்பை நிலைநிறுத்த பல்வேறு நிலைகளில் வாழ்ந்துள்ளனர் என்பதை இவ்விளக்கம் உறுதிப்படுத்துகின்றது.

ஆற்றுநீர், மழைநீர் என்பதைப் போன்று சங்க காலத்தில் நிலத்தடி நீரினைப் பற்றிய புலமைப் பெற்றிருந்தனர். மழைப்பெய்யும் காலங்களில் பெறப்படும் மழைநீர், உழவுக்காக நிலங்களில் பாய்ச்சப்படும் நீர், ஏரி, குளம், கற்சிறை போன்ற நீர்த்தேக்கங்களிலுள்ள நீர் மண்ணிற்குள் ஊடுருவி நிலத்தடி நீராக உள்ளது என்ற உண்மையை அறிந்தும் அந்நீரினைப் பயன்படுத்தியும் நீரியல் திறன்மிக்கவர்களாக பழந்தமிழர்கள் செயல்பட்டனர் என்பதும் புலப்படுகின்றது.

### 5.5 நீர்த்தேக்கங்கள்

நீருக்கு அடிப்படையானது மழைநீர்.அம்மழையானது பெய்யும் காலங்களில் ஆறுகளில் ஓடிவரும் நீரினைத் தேக்கி வைக்க நீர்த்தேக்க அமைப்புகளை உருவாக்கும் வழக்கம் சங்கத்தமிழர்களிடம் மிகுந்துள்ளது. அத்தகைய நீர்த்தேக்கங்கள் உருவாக்குவதிலும் பழந்தமிழரின் கட்டுமான தொழில்நுட்பத்தினைக் காண முடிகிறது. நீர்த்தேக்கங்கள் ஏற்படுத்துதல் நீரினைப் பாசனத்திற்கு முறையாகப் பயன்படுத்துதல் பாதுகாத்தல் நீரினைப்

பங்கிட்டு கொள்ளுதல் போன்றவற்றில் அவர்களின் தொழில்நுட்பத்திறன் வெளிப்படுகிறது. நீர்த்தேக்கங்களிலிருந்து நிரம்பி நீர் போக மீதமுள்ள நீர் கடலில் கலக்கும்படி ஏற்படுத்தப்பட்டுள்ளது.

மழைக்காலங்களில் தேவைக்குமேல் பெருகும் நீரை நதியின் குறுக்காக அணைக்கட்டி உருவாக்கப்படும் சேமிப்பை நீர்த்தேக்கம் என்பர்.குறைந்த பரப்பளவில் மிகுந்த ஆழமும், கன அளவும் நீர்த்தேங்கக் கூடிய கொள்ளளவும் உள்ள இடத்தைத் தேர்வு செய்ய வேண்டும் .மழைமிகுதியும் விழக்கூடிய இடமாகவும் கூடுதலான நீரைச் சேமித்துத் தரும் நிலப்பகுதி உள்ள இடமாகவும் இது அமைய வேண்டும் நீர்த்தேக்கத்திலிருந்து பயன்பாட்டுக்குச் செல்லும் நீர் தானாகவே சரிவாகச் செல்லுமாறு இடத்தைத் தேர்வு செய்ய வேண்டும்.நீர்த்தேக்கம் நீர் பயன்பட வேண்டிய இடத்திற்கு அருகில் அமைவது நல்லது. நீர்த்தேக்கம் அமைக்கக் கூடிய இடத்தில் நிலப்பாங்கு அருகில் நீர் கசிந்து வெளிச்செல்ல முடியாதவாறு இருத்தல் வேண்டும் என்று அறிவியல் களஞ்சியம் வரையறை செய்கின்றது.

### 5.5.1 நீர்த்தேக்கக் கட்டுமான அமைப்புகள்

மழைநீரினை நம்பி உழவுத்தொழிலினை மேற்கொண்ட மக்கள் மழையில்லாத போது நீரினைச் சேமிக்கும் கட்டாயச்சூழல் ஏற்பட்டது. அதற்காக பல சிறிய பெரிய வகையிலான கட்டுமான நுட்பத்துடன் கூடிய நீர்த்தேக்கக்கட்டுமான அமைப்புகளை உருவாக்கினர். சங்கத் தமிழர்களிடையே இயற்கையாகப் பெய்யும் மழைநீரினை ஏரி, அணை குளம் , கண்மாய் போன்ற அமைப்புகளை உருவாக்கி சேமிக்கும் வழக்கம் மிகுந்துள்ளது. தேக்கி நீரினை உரிய முறையில் பங்கீட்டுப் பாதுகாத்த புலமையையும் சங்கப்பாடல்கள் வாயிலாக அறிய முடிகின்றது.

### 5.5.2 ஏரிகள்

ஆறுகளில் உருண்டு ஓடி வரும் அந்நீரினை முறையாகத் தேக்கி பாசனத்தேவைக்காக உருவாக்கப்பட்ட அமைப்பு ஏரி.

**“மழைநீரினைச் சேர்த்து வைத்து மண் உழவைக் கையாள மனிதர்கள் உருவாக்கிக் கொண்ட மண்பாத்திரங்கள் ஏரிகள் என்று பெருங்குப்பம் சம்பத்து குறிப்பிடுகிறார்”**[16]

சங்ககால மக்கள் அமைத்த அணைகளின் உறுதி பற்றி, **“ஏரிகள் அமைக்கும் போது இடத்தேர்வு, வடிவம், நீர்வளம் போன்றவை கவனத்துடன் தீர்மானிக்கப்பட்டதுடன், காரை, மடை, கலிங்கு போன்ற கட்டுமானங்கள் தொழில்நுட்ப அடிப்படையில் உலகத்தரம் வாய்ந்தவையாக இருக்கின்றன”**[17] என்பதன் மூலம் சங்ககால மக்கள் அணைகளை மிகவும் உறுதிப்பட அமைத்துள்ளனர் என்பது புலப்படும். இதனால் சங்கமக்களின் நீர் சார்ந்த மேலாண்மைப் பாங்கு தெளிவாகிறது.

ஏரிகள் செயற்கையான முறையில் மனிதர்களால் வெட்டுவதோடு அல்லாமல் இயற்கையாகவும் ஏரிகள் காணப்படுகிறது.

அவை

1.பூமிதட்டுகளின் அசைவு காரணமாகக் தோன்றுபவை்

2.எரிமலை வெடிப்பினால் தோன்றுபவை

3.தொடர் காற்று வீசுவதால் தோன்றுபவை

4.தொடர் நீர்ப்பாய்வதால் தோன்றுபவை

5.பனிப்பாறை சரிவுகளால் தோன்றுபவை

6. கடலோர இயக்கங்களால் தோன்றுபவை

போன்றவை இயற்கையின் ஆற்றலால் உருவாவதாக புவியியலாளர் கருதுகின்றனர். சங்கப்பாடல்களில் மனிதனால் உருவான ஏரிகள் பற்றியச் செய்திகளைக் காணமுடிகின்றது.

### 5.5.3 ஏரியின் அமைப்பு

**“பூமியின் மேற்பரப்பில் பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு காரணங்களால் சிறிதும் பெரிதுமான பள்ளங்கள் ஏற்பட்டு அதில் மழைநீரோ பனிநீரோ ஆற்றுநீரோ நீரோடையோ கலப்பதனால் வற்றும் அல்லது வற்றாத**

**நீர்நிலைகளாக அவைகள் அமைந்து விடுகின்றன.இவைகளே ஏரிகள் என்றழைக்கப்படுகின்றன என்பது புவியியில் வல்லுநர்களின் கருத்தாகும்”**[18]

சிறந்த ஆற்றலையுடைய தமிழர்கள் ஆறுகள் குளங்கள் இல்லாத பகுதிகளைத் தேர்ந்தெடுத்து ஏரிகளை நிறுவி இதன் நீரினை பாசனத்திற்கும் இதர தேவைகளுக்கும் பயன்படுத்தியுள்ளனர்.

ஆறுகள் குளங்கள் இருக்கும் பகுதிகளில் ஏரிகளை அமைத்தால் நீரானது மண்ணால் உறிஞ்சப்பட்டு நிலத்தடிநீராக மாறும் என்பதால் அவை அல்லாதப் பகுதிகளில் அமைத்துள்ள நுட்பம் வியக்கத்தக்கது

ஏரியின் உறுப்புகள் மூன்று

நீர்ப்பிடிப்புப் பகுதி - மழைநீர் ஏரிக்குள் விழும் பகுதி

நீர் சேமிக்கும் பகுதி - நீர் தேங்கும்பகுதி

நீர் பயன்படும் பகுதி - ஆயக்கட்டுப் பகுதி

இக்கருத்தையே சிறுபஞ்சமூலத்தில் ஏரியின் ஐந்து பகுதிகளைப் பற்றி

**“குளந்தொட்டுக் கோடுபதித்து வழிசீத்து**
**குளந்தொட்டு உழுவயலாக்கி வளந்தொட்டுப்**
**பாடுபடும் கிணற் றோடென்றிவ்வைம் பாற்படுத்தான்**
**ஏகுஞ் சுவர்க்கத் தினிது”**[19.]

குளம்(குளம் தொட்டு)

கலிங்கு (கோடு பதித்து)

மதகு (வழி சீத்து)

ஆயக்கட்டு ( உழுவயலாக்கி)

பொதுகிணறு அமைத்தல் (கிணறு)

ஏரியின் அங்கங்களை அமைப்பவன் சொர்க்கத்துக்குப் போவான் என்று சிறுபஞ்சமூலம் குறிப்பிடுகிறது.

### 5.5.4 ஏரியின் கரைகள்

பழந்தமிழர்கள் ஏரிகள் பெரு நீரைத்தேக்கி வைக்கும் சிறுகுளம் என்பதால் அதன் கரைகளை வலுவுடன் ஏற்படுத்தியுள்ளனர்.

**“ஏரிகளை ஈரமான களிமண் கலவையில் அமைப்பது அவசியம் என்ற ஆங்கிலேய பொறியாளர்களின் கருத்துக்கு மாறாகப் பண்டைய தமிழர்கள் எல்லாவிதமான விளைநிலங்களின் மண் எடுத்து பல்லாயிரக்கணக்கான ஏரிகளை மண் கரை கொண்டு கட்டியுள்ளார்கள்”**[20] என்ற கூற்றின் மூலம் மண்ணால் கட்டப்பட்ட அணைகளின் திடத்தையும் சங்கத் தமிழர்களின்˙ புலமையையும் அறியமுடிகின்றது.

ஏரியின் கரையமைப்பினை கபிலர்

**“அறையும் பொறையு மணந்த தலைய**
**எண்ணாள் திங்கள் அனைய கொடுங்கரை**
**தெளிநீர்ச் சிறுகுளம்”** [21]

பாறைகளும் சிறுமலைகளும் பகுதிகளில் எட்டாம்நாள் பிறை நிலவைப் போல் வளைந்த கரையைக் கொண்ட தெளிந்த நீரை உடைய சிறிய குளம் என்று பாரியின் பறம்பு நாட்டிலுள்ள ஏரியைப் பற்றி இப்பாடல் கூறுகிறது.

ஏரிகள் வளைந்துள்ளதால் அதன் நீர் தாங்கும் திறன் அதிகமாகவும் நீளம் குறைவாகவும் இருக்கும் என்பதால் அதிகளவில் நீரினைத் தேக்கி வறண்ட காலங்களிலும் நீரைப்பயன்படுத்திய தமிழர்களின் கட்டுமானம் போற்றத்தக்கது.

**“இத்தகு ஏரி சிக்கனமான மற்றும் சிக்கலான வடிவமைப்பாகும். இன்றும் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள கவிநாட்டுப் பேரேரியில் காணப்படுவதாக மணி.மாறன் குறிப்பிடுகிறார்”**[22]

### 5.5.5 இணைஏரிகள்

**“மதி சேர்ந்த மக.......**

**அரு காமத்து இணை ஏரிப”[23]**

என்ற பாடலில் ஒன்றுக்கு ஒன்று அடுக்காகப் பல ஊர்கள் நிறைந்து சோழ நாடு பகைவர்களால் உண்டாகும் அச்சமே அவ்வூர்களில் இல்லை.அந்த நாட்டில் கடற்கரையில் விளங்குவது காவிரிப்பூம்பட்டினம். உமணர்கள் படகிலே உப்பைக் கொண்டு விற்று அந்தப் படகிலே நெல்லை பரப்பிக் கொள்கிறார்கள். நகரத்துப் புறம்பே தோப்புகளும் பூஞ்சோலைகளும் செறிந்திருக்கின்றன. வலிமையைப் பெற்ற கரைகளையுடைய இரண்டு மிகப்பெரிய நீர்நிலைகள் உண்டு அவற்றை இரு காமத்திணை ஏரி என்று சொல்லுவார்கள்.அவை பார்ப்பதற்கு ஓவியம் போல் காட்சியளிப்பதாக இப்பாடல் சுட்டுகிறது.

**“சோம குண்டம் சூரிய குண்டம் இத்துறைகளில் முழுகி எழுந்து காமனை வழிபட்டால் கணவனை அடைந்து இன்புறுவர் என்று காமத்திணை ஏரி பற்றி சிலம்பு பகர்கின்றது”[24]**

**“வைஎர் வால்எயிறு ஊறிய நீரே”[25]**

**“குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்**

**முகந்தனர் கொடுப்ப”[26]**

இப்பாடல்களில் வால் என்ற சொல் தூய்மை அல்லது வெண்மையைக் குறிக்கும் சொல்லாகும்.நன்னீரையுடைய ஏரிகளில் நீர் நிரம்பி வழிவதால் உறையூர் நீர்வளம் மிகுந்து செல்வமுடையதாக இருப்பதாக அறிய முடிகின்றது. இந்தச் சொல்லாட்சியை

**பாலொடு தேன்கலந்தற்றே பணிமொழி**

**வாலெயிறு ஊறிய நீர்[27]**

என்ற குறளிலும் அறியலாம்.ஏரியையும் குளக்கரையும் அங்கு விளைந்த நெல்லையும் வளத்தையும் குறிப்பிடுவதால் சங்ககாலத்தில் ஏரிப்பாசனம் நிகழ்ந்துள்ளதை அறிய முடிகின்றது.

இன்று கண்டுபிடித்த தொல்லியல் மற்றும் கீழடி அகலாய்வுகளில் நூற்றுக்கணக்கான ஏரிகள் சங்க காலத்தில் உருவானவை என்று நிருபிக்கப்பட்டுள்ளது. அத்தகு ஏரிகள் இன்றும் பயன்பாட்டில் இருந்து வருவது நம் முன்னோர்களின் பொறுப்புணர்வையும் ஏரித் தொழில்நுட்பத்திறனையும் அறிய முடிகின்றது.

- மழைநீர் சேகரிப்புக் கலன்கள் நீர்ப்பெருக்கத்தைத் தடுக்க
- நிலத்தடி நீர்மட்டம் பல்லுயிர்கள் பெருக்க
- உழவு மற்றும் மீன்பிடித்தொழில் குடிநீர் பயன்பாடு

போன்ற பல்வேறு நிலைகளில் சங்ககாலத்தில் நிர்வகிக்கப்பட்ட ஏரிகள் இன்றும் உபயோகிக்கப்படுகிறது.

### 5.5.6 கற்சிறை

ஏரி குளங்களை அமைத்துப் பயன்படுத்துதல் என்பது சிறிய பரப்பளவு கொண்ட ஆற்றுக்கால் பகுதிகளில் வரும் வேகம்குறைந்த வெள்ளத்திற்குப் பொருத்தமுடையதாக இருந்தது. எனினும் பெருக்கெடுத்து வரும் அதிக பரப்பளவு கொண்ட ஆற்றுநீரைத் தடுத்து நிறுத்தும் வல்லமையை இவை பெற்றிருக்கவில்லை. சில நேரங்களில் அதிக நீர்வரத்தால் ஏரியின் கரைச்சுவர் உடைந்துவிடுவதும் உண்டு.

அதிகக் கொள்ளளவு நீரைத்தேக்க பூமியின் கடினத்தன்மை கொண்ட பாறைவரையிலான கட்டுமானம் அமைப்பதுவே சரியான முறையாக அமையும் என்று உணர்ந்து, பூமியின் கடினத் தன்மை கொண்ட பாறைகள் வரை களிமண் பூசப் பெற்ற பெரிய பெரிய பாறைகளை அடுக்கி மிகப் பிரமாண்டமான கட்டுமானங்களை அமைத்தனர். இத்தகு முயற்சிகளின் வெளிப்பாடே பெரிய ஆற்றின் குறுக்கே அணைகளை எழுப்பி நீரைத் தேக்கி ஆளுவது.

அணைகளைக் கட்டுவதற்கு மிகவும் பொருத்தப்பாட்டுடன் கூடிய தொழில்நுட்பங்களைப் பழந்தமிழர்கள் சிந்தித்துச் செயல்படுத்தினர். குறிப்பாக அணைக்கட்டின் வலிமைக்கு முக்கியத்துவம் கொடுத்தனர்

(அதன் கொள்ளளவைக் காட்டிலும், இச்சிந்தனையை மிகச் சரியாகச் செயல்படுத்தி அமைத்த அணைகள் இன்றளவிலும் பயன்பாட்டில் இருப்பது நடைமுறைச் சான்றாகும்.

மழைபொழியும் காலங்களில் ஆறுகளில் மிகுதியாக வரும் வெள்ள நீரைத் தடுத்து வாய்க்காலில் செலுத்துவதற்காக ஆற்றின் குறுக்கே கட்டப்படும் அமைப்பாகும். பாறைகளிலிருந்து வெட்டியெடுக்கப்பட்ட கருங்கற்களைக் கொண்டு கட்டியதால் தமிழர்கள் கற்சிறை என்று அழைத்துள்ளனர்.

பல ஆண்டுகளுக்கு முன்பே விளைநிலங்களுக்கு நீர்பாய்ச்சவும் வாழ்நாள் தேவைகளுக்கும் தேவையான நீரைச்சேமிக்கும் தொழில்நுட்பம் தமிழர்களிடையே இருந்துள்ளது.

கற்சிறை பெரும்பாலும் பாறைகள் உள்ள ஆற்றுப்படுகைகளில் மழையில்லாத காலத்தில் அமைக்கப்பட்டுள்ளது. வெள்ளத்தினால் பாய்ந்து வரும் நீரைத்தடுக்க தமிழர்கள் கற்களையும் இயற்கைப் பொருட்களையும் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.5.7 கற்சிறை அமைப்பு

**“வருந்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை**
**மீதுஅழி கொண்ட கடுநீர்நோக்கி”[28]**

மழைக்காலத்தில் உழவர்கள் காஞ்சி மரத்தின் குறுகிய துண்டுகளை குறுக்கே வைத்து அடைத்து நெற்பயிரை உடைய வயலாகிய பள்ளங்களில் நீரைத்தேக்குவர். அவர்கள் வருந்தி முயன்று அமைந்த வளைவான அணையின் மேல் இருந்து நீரைப்பார்த்தபடி கொக்குகள் இருக்கும் என்ற பாடலடிகளில் சங்ககாலத்தில் அணை வளைவான அமைப்புக் கொண்டதாக உள்ளதை அறிய முடிகின்றது.

வாத்து போல் வளைவாக அமைவது சிறந்தது என்று இன்றைய நீரியல் நிபுணர்களின் கருத்து.அப்பொழுது தான் அணையின் செயல்திறன்

சிறப்பாக இருக்கும் என்றும் கூறுகின்றனர். இதனை ஆங்கிலத்தில் DUCKBILL WEIR என்று அழைக்கின்றனர்.

இன்றைய வல்லுநர்களின் நுட்பத்தினை தமிழர்கள் இனங்கண்டு செயல்படுத்தியுள்ளத் திறத்தை அறிய முடிகிறது.

தொல்காப்பியர் தன் நூற்பாவில்

**"வருபுனல் கற்சிறை கடுப்ப இடைஅறுத்து**
**ஒன்னார் ஏட்டில் செருப்புகல் மறவா"**[29]

பெருகி வரும் வெள்ளத்தை கற்சிறை தடுப்பது போல பாய்ந்து வரும் படையை அவன் ஒருவனே தாங்கி நிற்கிறான் என்று குறிப்பிடுகிறார்.

மதுரைக்காஞ்சியும்

**"வருசிறைப் புனலைக் கற்சிறை போல**
**ஒருவன் தாங்கிய பெருமையானும்"**[30]

வருகின்ற வெள்ளத்தைக் கற்சிறை கட்டித்தடுத்து நிறுத்தினாற் போல பகைவரைத் தடுத்து நிறுத்தி அவரைப் புறமுதுகிட்டு ஓடச் செய்ததாக மாங்குடிமருதனார் உவமைப்படுத்துகிறார்.

**"கொல்புனற் சிறையின் விலங்கியோன்"**[31]

எனும் அடிகளிலும், கரையை உடைத்துச் செல்லும் பெருவெள்ளத்தைத் தாங்கி நிற்கும் அணையைப் போன்று வீரன் செயல்பட்டான் என்று வீரத்தின் அடையாளத்தைக் குறிப்பதாயினும் ஆற்றின் இடையே அணைகட்டிய நிலையைப் புலப்படுத்துகின்றன.

**"...மல்லற் புனல்வையை மாமலை விட்டிருத்தல்**
**இல்லத்து நீதனிச் சேறல் இளிவரல் எனவாங்கு,**
**கடையழிய நீண்டகன்ற கண்ணாளைக் காளை**
**படையொடுங் கொண்டு பெயர்வானைச் சுற்றம்**

**இடைநெறித் தாக்குற்ற தேய்ப்ப அடல் மதுரை**

**ஆடற்கு நீர் அமைந்தது யாறு"**[32]

மிக்க புனலையுடைய வைகைப் பெண்ணானவள் பிறந்தவீடாகிய பெருமலையை விட்டு நீங்கி, நீ நிலையாகத் தங்கியிருத்தற்குரிய இடமாகிய கடலை நோக்கிச் செல்லும் வழியில், காளையானவன் தனது காதலியைக் கைப்பற்றி உடன்போக்கு அழைத்துச் செல்லும் வழியில் தலைவியின் சுற்றத்தார் இடைமறித்து அவர்களின் போக்கைத் தடுத்து நிறுத்தியதைப்போல வெற்றியாளராகிய மதுரை மக்கள் வைகைப் பெண்ணை அணையிட்டுத் தடுத்து நிறுத்தினர் ஆதலால் அவர்கள் நீராடி மகிழ்வதற்கு வைகை பொருந்தியதாக அமைந்தது என்று வைகையின் நீரை வீணாக்காமல் அணையிட்டுத் தடுத்து நிறுத்தி மேலாண்மை செய்து பயன்பெற்ற மக்களைப் பற்றி இப்பாடலின்கண் கூறுகிறார் நல்லந்துவனார் எனும் சங்கப்புலவர்.

சேயாற்றில் இருந்து மதகுகள் அமைத்து அப்பகுதி விளைநிலங்களுக்கு நீர்வழங்கப்பட்டதை,

**"வனைகலத் திகிரியின் குமிழி சுழலும்**

**துனைசெலற் றலைவாய் ஓவிறந்து வரிக்கும்**

**காணுநர் வயாஅங் கட்கின் சேயாற்றின்**

**யாணர் ஒருகரைக் கொண்டனிர் கழிமின்"**[33]

எனும் மலைபடுகடாம் பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வாற்றில் அமைக்கப்பட்ட மதகுகள் குயவன் வனையும் மட்கலத்தின் சக்கரம் போல் இருந்ததாகவும் இப்பாடல் கூறுகிறது.

### 5.5.8 கரிகாற்சோழன்

சங்ககால மன்னர்களுள் ஒருவரான கரிகாற் சோழனால் கட்டப்பட்ட கல்லணை இன்றளவும் உலகிலேயே அனைத்து வல்லுநர்களாலும் சிறந்த தொழில்நுட்பமாகவும் பாராட்டுக்குரியதாகவும் திகழ்கின்றது. ஆற்றுநீரை அணையிட்டு ஆண்ட சங்ககால மக்கள்தம் சிந்தனை வளத்திற்கு

எண்ணற்ற சான்றுகள் இருப்பினும் இன்று கண்கண்ட சான்றாக நிலைத்துச் சிறப்பது கி.பி. முதலாம் நூற்றாண்டில் கரிகாலன் கட்டிய கல்லணை ஆகும்.

காவிரி நாட்டினை ஆட்சிபுரிந்த கரிகாலன் மழைநீரினால் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு மக்கள் இன்னலுறுவதைக் கண்டு அந்நீரின் போக்கினைத் தடுக்க காவிரிக் கரையில் கல்லணை எழுப்பியுள்ளான்.

### 5.5.9 கல்லணையின் தொழில்நுட்பம்

காவிரி ஆற்றின் மீது பெரிய அளவிலான பாறைகளைக் கொண்டு வந்துள்ளனர் அப்பாறைகள் நீரினால் அரிப்பு ஏற்பட்டு அதன் காரணமாக பாறைகள் யாவும் மண்ணுக்குள் சென்றது.பின்பு அதன்மேல் வேறொரு பாறைகளை அடுக்கி வைத்து இடையே நீரில் கரையாத களிமண்ணைப் பூசி இரண்டு பாறைகளும் ஒட்டிக்கொள்ளும்படி அமைக்கப்பட்டது. அறிவியல் தொழில்நுட்பம் வளர்ச்சியுறாத அக்காலக்கட்டத்தில் கரிகாலன் ஏற்படுத்திய கல்லணை தமிழர்களின் நுண்மான் நுழைப்புலத்தை இக்கால அறிஞர்களும் பாராட்டும் விதமாக உள்ளதை அறியமுடிகின்றது.

**....அரிகாலின்கீழ் அந்நெல்லே சாலும்**

**கரிகாலன் காவிரி சூழ் நாடு”**[34]

என்ற வரிகள் காவிரி சூழ்ந்த சோழநாட்டனை ஆட்சிச் செய்தவன் என்று குறிப்பிடுகிறது.

சங்ககால மக்கள் அமைத்த அணைகளின் உறுதி பற்றி**, “ஏரிகள் அமைக்கும் போது இடத்தேர்வு, வடிவம், நீர்வளம் போன்றவை கவனத்துடன் தீர்மானிக்கப்பட்டதுடன், காரை, மடை, கலிங்கு போன்ற கட்டுமானங்கள் தொழில்நுட்ப அடிப்படையில் உலகத்தரம் வாய்ந்தவையாக இருக்கின்றன”**[35] என்பதன் மூலம் சங்ககால மக்கள் அணைகளை மிகவும் உறுதிப்பட அமைத்துள்ளனர் என்பது புலப்படும். இதனால் சங்க மக்களின் நீர் சார்ந்த மேலாண்மைப் பாங்கு தெளிவாகிறது.

இயற்கைச் சீற்றமான பெருவெள்ளத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அணைகள் பயன்பட்டுள்ளதை,

**“மழைநீங்கிய மாவிசும்பின்**

**மதிசேர்ந்த மகவெண்மீ**

**னுருகெழுதிற லுயர் காட்டது”**[36]

எனும் பாடலடியில் மழை மாசு நீங்கிய பெரிய ஆகாயத்தில் திங்களைச் சேர்ந்து விளங்கும், மகம் என்னும் வெண்ணிற நாள் மீனின் வடிவத்தைப் போன்ற வடிவத்தைக் கொண்டதாக வலிமையுடன் அமைக்கப்பட்ட உயர்ந்த கரைகளைப் பெற்ற நல்ல பொய்கை என்று நீர் மிகுதியால் அருகில் உள்ள நிலங்கள் பாழ்படாமல் இருக்க வெண்ணிற நாள் மீனின் தோற்றம் போன்று கரைகளை அமைத்துள்ளனர்.

**“மழை வேளாண்மை தொடக்கம் நீரியல் வேளாண்மை வரை தமிழகத்தின் பாசன வளர்ச்சி தமிழர்களின் அறிவியல் திறனை எடுத்துக் காட்டுகிறது. மழை தொடர்பான வானியல் அறிவு, நீரியல் கோட்பாடுகள், ஏரிகள் அமைப்பதில் தேர்ந்த தொழில்நுட்பம், மணற்பாங்கான ஆறுகளிலும் அணை கட்டும் வடிவமைப்பும் நீரியல் வடிவமைப்புகளும் தமிழர்தம் பொறியியல் வல்லமையைக் காட்டுகின்றன”**[37] என்ற பழ. கோமதிநாயகத்தின் விளக்கத்தின் மூலம் தமிழர்கள் நீரியல் மேலாண்மை செய்துள்ளது தெளிவாகின்றது.

வையை ஆற்றில் உடைப்பெடுத்து கரையை அடைத்து ஒழுகுவதை, பின்னும் மீண்டும் ஊற்றுநீர்

**“வையை உடைந்த மடையடைத்தக் கண்ணும்**

**பின்னு மலிரும் பிசிர்போல”**[38]

என்ற பதிவின் மூலம், வையை அணைக்குக் கரையமைத்து நீரைச் சேமித்ததை உணர்த்துகின்றது. பாறைக் கல்லிணையுடைய நிலம் போன்று அசையாத பரந்த கல்லணையால் தடுக்கப்பட்டுத் தேக்கி வைத்த நீர்

என்று நீரினைத் தேக்குவதற்குத் திடமான பாறை போன்ற கல்லினைக் கொண்டு அணைக்கட்டி நீரைத்தேக்கினார் என்பதை,

**“பாறைப் பரப்பின் பரந்த சிறைநின்று”**[39]

இப்பாடலடிகளால் அறியலாம். கரிகாலனால் கட்டப்பட்டதாகக் குறிப்பிடப்படும் கல்லணையின் கட்டமைப்பைப் பற்றி, **“ஆற்று மணல்படுகையில் மிகப்பெரிய பாறை போடப்பட்டது. பாறைக்கு அடியில் உள்ள மணல் ஆற்றுநீரில் அரித்து இழுத்துச் செல்லப்பட்டதால், பாறை மெதுவாக மணலுக்குள் புதைந்தது. அதன் மேல் களிமண்ணைப் பரப்பிவிட்டு மற்றொரு பெரிய பாறை வைக்கப்பட்டது. இப்போது அடியில் உள்ள பாறை மேலும் ஆழத்திற்குள் புதையும். இப்படி ஒன்றன் மேல் ஒன்றாகப் பெரிய பாறைகளை அடுக்கிப் புதைத்திருந்தனர்.மணல் பகுதி முடிந்து கடினப்பகுதி வந்ததும் கீழ்மட்டத்தில் உள்ள பாறை இறங்காது. இப்படித்தான் கல்லணை கட்டப்பட்டிருந்தது”**[40] **என்று பழ.கோமதிநாயகம் குறிப்பிடுகின்றனர்**.

இவ்விளக்கத்தின் வாயிலாக சங்கத்தமிழர்கள் அணைகள் கட்டி நீரினைத் தேக்கி, நீரியல் மேலாண்மைச் செய்த திறத்தை உணரலாம்.

## 5.6 நீர் பங்கீட்டு முறைகள்

நீர்த்தேக்கங்களால் சேமிக்கப்பட்ட நீரினை உரிய முறையில் வழங்குதல் என்பது முக்கியப் பணியாகும்.மழைக்காலங்களில் நீரினை சேமித்தல் வறட்சிக் காலங்களில் நீரினை முறையாகப் பயன்படுத்துதல் நீரினை வழங்குதல் போன்ற அனைத்து நிலைகளிலும் தமிழர்கள் சிக்கன முறைகளில் கைதேர்ந்தவர்களாகவும் இருந்ததைக் காண முடிகின்றது. நீரின் இன்றியமையாமையை உணர்ந்த மக்கள் பல்வேறு வழிகளை உருவாக்கி

தங்களுக்குத் தேவையான நீர்த்தேவையைப் பூர்த்தி செய்து கொண்டனர்.மீதமுள்ள நீரினை நிர்வகித்து வந்ததால் காலம் முழுவதும் நீர்ப்பற்றாக்குறையின்றி வளமான வாழ்வு வாழ்ந்துள்ளனர்.

தமிழர்கள் நீரினை பங்கீடு செய்யும் முறைகளை மூன்று வகையாகப் பிரித்து அறியலாம்.

1.நீரினை வழங்கும் அமைப்புகள்

2.நீரை பயன்படுத்துதல்

2.நீரைப் பராமரித்தல்

### 5.6.1 நீரினை வழங்கும் அமைப்புகள்

நீர் வழங்குதல் என்பது நீர் கிடைக்கும் இடத்திலிருந்து இதைத் தனித்தனியே நிலங்களுக்கு எடுத்துச் செல்லுதலாகும்.தமிழர்கள் நீர்த்தேக்கி வைக்கும் தொழில் நுட்பத்தை மட்டுமின்றி நீரை வழங்கும் அமைப்புகள் பற்றிய தொழிநுட்ப அறிவையும் பெற்றுள்ளனர்.இவ்வமைப்புகள் மிகத் துல்லியமாக கட்டப்பட்டுள்ளதை அறியலாம்.

இப்பணிக்காக பழந்தமிழர்கள் மதகு மடை குமிழ் தூம்பு சுருங்கை கால்வாய் போன்ற அமைப்புகளை தொழில்நுட்பத்துடன் ஏற்படுத்தியுள்ளனர். அதனை நீர் வெளியேறும் தன்மையினைக் கொண்டு இரண்டு வகையாகப் பிரிக்கலாம் .

1. மிகு நீர் வழங்கும் அமைப்புகள்
2. குறு நீர் வழங்கும் அமைப்புகள்

### 5.6.2 மிகு நீர் வழங்கும் அமைப்புகள்

பெருகி வரும் வெள்ளத்தைக் கட்டுப்படுத்த இயலாத நிலையில் மிகுதியான நீரினை மக்களின் தேவைகளுக்காக வழங்கும் அமைப்பாகும். இதில் மடை குறிப்பிடத்தக்கது.

### 5.6.3 திண்மடை

மடைதிறந்தாற் போல என்ற பழமொழிக்கேற்ப மடையில் திறந்து விடப்படும் நீரானது பெருவெள்ளமாகப் பாய்ந்தோடும் உரிய காலங்களில் வேளாண்மையை மேற்கொள்ளும் பொருட்டு மடைகளை தமிழர்கள் ஏற்படுத்தியுள்ளனர்.

மடை என்பது தண்ணீரை வெளியேற்றுவதற்காக அமைக்கப்படுவது .அந்த மடையில் ஒரு கதவு இருக்கும் இக்கதவினைத் திறந்தால் மடைதிறந்த வெள்ளம் போல் தண்ணீர் வெளியேறும்.இந்த அமைப்பில் வெளியேறும் தண்ணீரின் அளவைக் கூட்டவோ குறைக்கவோ முடியாது என்று கோமதிநாயகம் குறிப்பிடுகின்றார்.

சங்கப்பாடல்களில்

**“மடைமாண்**

**நுண்இழை**

**செறிமடை**

**திண்மடை**

**இருமடை**

**கலி மடை”**[41]

போன்ற பாடல்களில் மடை என்கிற சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டுள்ளது. மடை என்பது மூட்டுவாய் பொருந்துவாய் என்ற பொருளில் வழங்கப்படுகிறது. நீரினை வழங்குவதற்காக ஏற்படுத்தப்பட்ட வாய்ப்பகுதி என்பது புலப்படுகின்றது.

### 5.6.4 மடை இயங்கும் விதம்

மடையில் திறந்து விடப்படும் நீர் கால்வாய் வழியே ஓடி வயலைச் சென்றடைகிறது.இதனை

**“படைமாண் பெருங்குள மடைநீர் விட்டென**

**கால்அணைந்த எதிரிய கணைக்கோட்டு வாளை”**[42]

என்பதில் செழியனால் உருவாக்கப்பட்ட குளத்தில் அடைக்கப்பட்டிருந்த நீர் மடை திறந்துவிட்டதால் வெளியேறிக் கால்வாயை எதிர்த்து வரும் கொம்பை உடைய வாளை மீன் கால்வாயில் இருந்து சேறுடைய வயலின் உள்ளே ஓடுமாறு செல்லும் .அங்கு உழுத எருதின் காலில் பட்ட சேறு புள்ளினங்களுடன் வெண்மையான நிறத்தில் மேற்புரத்தில் விளங்கும்

இத்தகைய வாளை சிறுகுடி என்பதில் மடையிலிருந்து வரும் நீரானது கால்வாய் வழியாக வயலில் சென்று உழவுத்தொழிலை மேம்படுத்துகிறது.

**“வையை உடைத்த மடை அணைந்தக் கண்ணும்”**[43]

இங்கு வையை ஆற்றில் அதிக நீர்ப்பெருக்கு தோன்றுவதையும் வையயில் மடையை அடைத்தப் பின்பும் நீர்க்கசிவு தோன்றுவது கூறப்படுகிறது.

### 5.6.5 மடைநீர் செல்லும் பிரிவுகள்

மடை நீரானது திறந்து விடப்பட்டவுடன் கால்வாய் வழியாகச் செல்லும் போது மூன்று நிலைகளை அடைகிறது.அதனால் வயல்களுக்கும் தண்ணீர் சீராக கிடைக்கிறது.

- முகப்பு மடை (தலைமடை) - நீர்ப்பாசனம் தொடங்கும் இடம்
- நடு மடை (இடை மடை) நீர்ப்பாசனம் தொடரும் இடம்
- *கீழ் மடை (கடை* மடை) நீர்ப்பாசனம் முடியும் இடம்

என வகைப்படுத்தப்படுகிறது

ஏரி அணையிலிருந்து மடை வழியே வரும் நீரானது தலை இடை கடை பகுதிகளில் வழியே பாசனத்திற்கு சென்றடையும் இடமாகும். தலைமடை மற்றும் நடுமடை பகுதியில் நீரைச் சிக்கனமாக பயன்படுத்துவதால் கடைமடை பகுதிக்கு அதிகமான நீர் கிடைக்கிறது.. நீர்வரத்தினைப் பொறுத்து அதன் அளவு நீட்டிக்கப்படுகிறது..

சங்கப்பாடல் ஒன்றில் கீழ்மடை வழியே நீர் சென்று வயலை வளப்படுத்தியதாகச் செய்தி உள்ளது

**“ஆனா ஆகை அடுபோர்.......**

**.....அரிநர்**

**கீழ்மடைக் கொண்ட வாளையும்”**[44]

சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவன் செங்கோலாட்சி செய்பவன் .அவனது நாடு மிகச்சிறந்த புதுவருவாய் உடையதாக

விளங்குகிறது. அவனது நாட்டில் உழவர்கள் நெல்லை அரிபவர் கடைமடையில் பிடித்து வைத்த வாளை மீனும் உழுவோர் கலப்பையால் தட்டுப்பட்ட ஆமையும் கரும்பு அறுப்பர் கரும்பில் எடுத்த தேனும் நீர்த்துறையில் மகளிர் பறித்துக் கொண்டு வந்த குவளைப் பூவும் என்னும் இவற்றை மலை காடு ஆகிய வலிமையான நிலங்களில் இருந்து வரும் உறவினர்க்கு விருந்தாகத் தரும் மருத வளநாட்டினர்.

தலை இடை கடை பயனை அறிந்த தமிழர்கள் சங்ககாலம் தொட்டு பயன்படுத்திய இம்முறையானது இன்று வரை கடைப்பிடிக்கப்படுகிறது.

**"வேட்டச்சிறா அர் சேட்பலம் படராது**

**படுமடைக் கொண் குறுந்தா ளுடும்பின்"**[45]

வேடர் குலத்தைச் சேர்ந்த மனைவியும் இளைய சிறுவர்களும் நெடுந்தொலைவு செல்லாமல் மடைப்பகுதியில் குட்டையான கால்களையுடைய உடும்பினைப் பிடித்துச் சமைத்தனர் எனக் கூறுவதில் மடைநீரானது அப்பகுதியில் மக்களின் நீர்த் தேவைக்கு பயன்பட்டதை அறிய முடிகின்றது.

## 5.7 குறு நீர் வழங்கும் அமைப்புகள்

நீர்த்தேவையைப் பொறுத்து நீரினை சிறியளவில் வழங்கும் அமைப்பாகும். அதில் மதகு, புதவு, தூம்பு, சுருங்கை போன்ற அமைப்புகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.7.1 மதகு

மதகு என்பது மடை போன்றே அமைக்கப்படுவது .ஆனால் அதன் கதவைச் சிறுகக் சிறுக திறக்கலாம்.வெளியேறும் தண்ணீரின் அளவைக் கூட்டவோ குறைக்கவோ முடியும். அது தற்காலத் திருகு மதகு அடைப்பான் என்பதற்கு ஒப்பாகும் என்று மதகின் வடிவமப்பைப் பற்றி பழ.கோமதிநாயகம் குறிப்பிடுகின்றார்.

கணக்கதிகாரம் என்ற நூலில் நீர்வழிச் சூத்திரத்தில் மதகுகளில் அளவு நீர் வெளியேறும் அளவு காலஅளவும் பாசனங்களின் அளவு குளத்தின் நீரியற் திறன் பற்றி குறிப்பிடுகின்றது.

மதகு என்பதற்கு குளம் முதலியவற்றில் நீர் பாயும் மடைவகை என்று பொருள்படும். நீரின் போக்கைக் கட்டுப்படுத்த கட்டப்பட்ட அமைப்பாகும்.மதகுகளில் நீர்த்தேவை ஏற்படாத பொழுது மூடி வைக்கும் வசதியும் உண்டு

**"நுரையுடன் மதகுதொரு இழிதரு புனல"[46]**

காடுகளிலும் மலைகளிலும் நீரானது வேகமாக ஓடி வரும்பொழுது நுரையுடன் காணப்படும்.நுரையுடன் கட்டுமானங்களில் சேர்ந்து மதகின் வழியே வழிந்தோடுவதை இப்பரிபாடல் பகர்கிறது.

### 5.7.2 புதவு

புதவு என்பதற்கு கதவு என்று பொருள்.அணைகள் குளங்கள் போன்ற நீர்நிலைகளில் தேக்கி வைத்த நீர் புதவின் வழியே திறக்கப்பட்டு, கட்டப்பட்ட கால்வாய்களின் வழியாக வேளாண்மைக்குப் பயன்படுத்தப்பட்டது. சங்க இலக்கியங்களில் அரண்மனைகள் வீடுகள் போன்ற அனைத்து இடங்களிலும் புதவு என்ற தொழில்நுட்பத்தை பயன்படுத்தியுள்ளனர். மேலும் ஏரி குளம் அணை போனற் நீர்த்தேக்க கட்டுமானங்களில் நீரினை வெளியேற்றுவதற்கு மதகு மடையின் வாய்ப்பகுதியில் அமைக்கப்பட்டுள்ளது.

**அமைப்பு**

**"கூடுடைப் புதவு**
**கொழுநுகம் தழிஇய புதவு பெரும்பகடு**
**புதவில் பூட்டி உயர்ந்து ஓங்கிய நிரைப்புதவு**
**புகுமனைப் பலிப்புதவு**
**புல்லரைக் காஞ்சிப்புனல் பொரு புதவு"[47]**

இப்பாடல்களில் புதவு என்பது திரட்சியான வலிமைமிக்க கணைய மரங்களைக் கொண்டு பலகைகளால் ஆக்கப்பட்டு அதனை இரும்பு கம்பிகளால் இணைத்துக் கட்டி பூட்டும் வகையில் நீண்டதாக உருவாக்கப்பட்டுள்ளன என்ற செய்தி இடம் பெற்றுள்ளது.

**“புனல் மலிபுதவு**

**புனல்அம் புதவு**

**இழுமென ஒலிக்கும் புனல்அம்புதவு**

**ஓம்பா ஈகை மாவேள் எவ்வி**

**புனலம் புதவின் மிழலையொடுக் கழி”**[48]

என்ற பாடல்களில் நீர்ஒழுகும் ஓசையுடன் கலிங்கில்கள் பலவற்றை உடையதாகவும் நீரானது மோதும்பொழுது புதவில் இழும் ஓசையும் கேட்பதாகவும் சுட்டப்பெறுகின்றது.

### 5.7.3 குமிழி

குமிழி என்பது நீர்த்தேக்க குளங்களிலிருந்து நீரை வழங்கும் அமைப்பாகும்.

குமிழி என்பது குளங்களிலிருந்து நீர் வெளியேற கல்லால் ஆன பெட்டி ஒன்று அமைத்து அதில் துளையிட்டு அத்துளை வழியே நீர் வெளியேறச் செய்யும் அமைப்பாகும்.குமிழியின் வழியே நீர் வெளியேறும் போது சுழல் உண்டாகும் என்று மணி.மாறன் குறிப்பிடுகிறார்.

**“குமிழி சுழலும் கண்டுகய முடுக்கர்**

**வனைகலத் திகிரியின் குமிழி சுழலும்**

**தெண்நீர்க்குமிழி”**[49]

குமிழியின் சுழல் குயவன் வனைகின்ற மட்கலத்தின் உருளை சுழலுவது போல் இருக்கும் என்று குறிப்பிடுகிறது.

### 5.7.4 சுருங்கை

கோட்டையின் கள்ளவழி நுழைவாயில் மாளிகையின் சாளரம் போன்ற வழிகளில் நிலத்துக் கற்களால் அமைக்கப்படும் என்று அகராதி குறிப்பிடுகிறது.

சுருங்கை என்பது நிலத்துக்கு அடியில் செல்லுகின்ற பெரிய குழாய் போன்ற அமைப்பு இது ஏரிகளின் வழியே தேக்கப்படும் நீர் மக்களின் வாழ்வாதரங்களுக்கு குளங்களுக்கு நீரை கொண்டு செல்வதற்கான குழாய் போன்ற கட்டுமான அமைப்பு என்று மணி.மாறன் குறிப்பிடுகின்றார்.

**“சுருங்கையின் ஆயத்தார் சுற்றும் எறிந்து**

**அருவி செரிந்த திரையின் துரத்து**

**.................................... உயர்மதிலில்**

**நீர்ஊர் அரவத்தால் துயில் உணர்பு எழீஇ”**[50]

உயர்ந்த மதிலில் சுருங்கை வழியே நீர் சென்ற ஒலியால் மக்கள் துயில் எழுந்து வையை ஆற்றுக்குத் தேரில் புறப்பட்டனர் என்ற பாக்களில் சுருங்கை பற்றியக் குறிப்புகள் உள்ளன.

பரிபாடல் சுருங்கையினை நீர்ச் செல்லும் பாதையாகவும் குறிப்பிடுகின்றது.

**“நெடுமால் சுருங்கை நடுவழிப்போந்து**

**கடுமா களிறணைத்துக் கைவிடு நீர்போலும்**

**நெடுநீர் மலிபுனல் நீண்மாடக் கூடல்**

**கடிமதில் பெய்யும் பொழுது”**[51]

நகரத்தில் இருந்து சுருங்கை வழியாக வரும் நீரானது இல்லந்தோறும் சென்று சேர்வதாகவும் நீண்ட சுருங்கையில் வரும் நீரானது கோட்டையின் அரணாகிய அகழியில் விழுந்ததாகவும் சுட்டுகின்றது.

சுருங்கை வழியே செல்லும் நீரானது மேலிருந்து கீழே விழுதல் அலையால் அடித்துக் கொண்டு நீண்ட பெரிய குழியில் நடுவழியாக வந்த மிகுதியான நீர் மதிலில் சொரியும் பொழுது யானை தன் தும்பிக்கையில் நீரைச் சொரிவது போல் தோன்றுவதாக காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

சுருங்கை மூங்கிலால் செய்யப்பட்டதாகவும் நிலத்தின் அடியில் நீண்ட யானையின் துதிக்கை போல் உள்ள குழாய்கள் அமைக்கப்பட்டு இருந்ததாகவும் அவற்றில் வழியே நீர் வெளியேறியதாக பரிபாடல் குறிப்பிடுகிறது.

மணிகேலையில்

**“பெருங்குள மருங்கில் சுருங்கைச்சிறுவழி**

**அரும்பெரு நீத்தம் புகுவது போல”**[52]

**“பெருங்கை யானை நிரை இனம் பெயரும்**

**சுருங்கை வீதி மருங்கிற் போகிக்**

**கடிமதில் லாயில் காவலின் சிறந்த”**[53]

தழிழர்களின் கட்டுமானத்தில் தனித்தன்மைக் கொண்டஅமைப்பு முறை சுருங்கையாகும்.சுருங்கை நிலத்துக்கடியில் இருக்கும் பாதையாகும். அந்தச் சுருங்கை வழியே யானை முதலிய படைகள் நுழைந்து மதிலின் வாயிலை சென்றடையும் என்று சிலம்பு பகர்கின்றது.

நீரை வெளியேற்ற உருவாக்கப்பட்ட அமைப்பு பின்னாளில் சுரங்கப் பாதையாகவும் மாறியிருப்பதை அறிய முடிகின்றது. சுருங்கைகள் தெருக்களின் நடுப்பகுதியில் கட்டப்பட்டிருப்பதால் கழிவு நீரினை வெளியேற்றுவதற்கு உருவாக்கப்பட்டதாகவும் உய்த்துணர முடிகின்றது.

சுருங்கை என்பது பகைவர் கோட்டைக்குள் செல்வதற்கு பயன்பட்ட கள்ளப்பாலம் என்றும் இல்லங்கள் தோறும் வெளியேறும் கழிவு நீர் அகழியில் வந்து சேரும் கழிவு நீர்ப்பாதையாகவும் வீடுகளுக்கு நீர்ப்பாலமாவும பல வேறு நிலைகளில் இருப்பதை அறிய முடிகின்றது.

இன்று நிலத்துக்கடியில் குழாய்கள் பதித்து நீர் வழங்கும் முறையினையும் புதை சாக்கடை முறையினையும் அன்றே தமிழர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.7.5 தூம்பு

பெரிய ஏரிகளில் இருக்கும் நீரினை குளங்களுக்குக் கொண்டு செல்வதற்காக தமிழர்களால் ஏற்படுத்தப்பட்ட கட்டுமான அமைப்பு தூம்பாகும்.தேவைக்கு ஏற்றபடி நீரினை வழங்கும் அமைப்பாகும்.

குமிழி அமைப்பில் இரண்டு கற்தூண்களுக்கு கீழ்ப்பகுதியில் இருபலகைகளால் செய்யப்பட்ட பெட்டி போன்ற ஒரு அமைப்பு இருக்கும். இதற்கு கல் பெட்டி என்று பெயர்.கல்பெட்டியின் மேற்பகுதியில் ஒரு துளை பக்கவாட்டுபகுதிகளில் இரண்டு துளைகள் இருக்கும் .அதில் ஒரு திறப்பான் இருக்கும்.அந்த துளைக்குப் பெயர் தூம்பாகும்.

கற்தூண்களுக்கு இடையில் இரண்டு பலகைகள் பொருத்தப்பட்டு துளைகள் கம்பிகள் மூலம் இணைக்கப்பட்டு அடைப்புக்கல்லினை அமைத்திருப்பர்.அக்கல்லினை மேலே தூக்கினால் நீரானது வெளியேறும் என்பது தற்கால நீரியல் வல்லுநர்களின் கருத்தாகும்.

**“நீர்வளர் ஆம்பல் தூம்படைத் திரள்கால”**[54]

நீரில் வளர்கின்ற அல்லித்தண்டின் உட்துளை என்று குறிப்பிடுகிறது.

குமிழி தூம்பு சுருங்கை என்ற மூன்று அமைப்புகளும் மக்களின் பயன்பாட்டிற்கு தேவையான நீரை ஏரிகள் மற்றும் கற்சிறைகள் மூலம் அமைப்புகளாகும் இவை ஒன்றோடு ஒன்று தொடர்புடைய கட்டுமானங்களாகும்.

### 5.7.6 கால்

மதகு மடைகளில் திறக்கப்படும் நீரானது கால் வழியாகச் சென்று பாசனத்திற்கு பயன்படுத்தப்பட்டுள்ளது.

இதனை கால்வாய் வாய்க்கால் என்று அழைப்பர்.அதாவது நீரோடும் வழியாகும்

**“...புனற்கால்**

**அயிர்இரு குப்பையின் நெஞ்சு நெகிழ்ந்து அவிழக”[55]**

கால்வாயில் ஓடிய நீர் மணற்குவியலை அடுத்து வரும் நீர் கரைக்கும் செய்தி காணப்படுகிறது. அணைகள் ஏரிகளின் மூலம் தேக்கப்படும் நீரானது கால்வாய் வழியாக உழவுத் தொழிலுக்குப் பயன்பட்டதை

**“ஓம்பா வீகை மாவே ளெவ்வி**

**புனலம் புதவின் மிழலையொடு கழனிக்**

**கயலார் நாரை போர்விற் சேக்கும்”[56]**

என்பதில் அறியலாம்.

**5.8 நீர் இறைக்கும் கருவிகள்**

ஏரிகள் கிணறுகள் ஆறுகளில் வழிந்தோடும் நீரானது தாழ்வான பகுதிகளுக்குத் தானே சென்று விடும். ஆனால் நிலத்திலிருந்து உயரமான இடங்களுக்கு நீரைப் பாய்ச்சுவதற்கு சில கருவிகள் தேவைப்பட்டது. அதனால் சங்ககால மக்கள் உழவுத்தொழிலில் பாசனத்திற்காகவும் பிறத் தேவைகளுக்காகவும நீரை இறைப்பதற்கு பல கருவிகளைப் கண்டறிந்து அதனைப் பயன்படுத்தி உழவினை மேற்கொண்டுள்ளனர்.

நீரை இறைப்பதற்கு உபயோகித்த கருவிகள் அனைத்துமே பெரும்பாலும் வலிமைமிக்க மரத்தால் அல்லது இரும்பாலானவையாகவே இருந்தன. இங்கே மனித உழைப்பின் ஆற்றலே அதிகம். கருவிகள் மனித உழைப்பிற்கு துணையானதொரு ஆற்றல் மட்டுமே. ஆகவே கருவிகளினால் சுற்றுச்சூழலுக்கு எவ்வித ஊறும் தோன்றவில்லை.சங்கப்பாடல்களில் நீரை இறைக்க ஏற்றம் ஆம்பி பன்றிப்பத்தர் போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.8.1 ஏற்றம் ஆம்பி கிழார்

ஏற்றம் என்ற சொல்லுக்கு உயரம் என்று பொருள்.ஏற்றமான இடங்களில் நீரை நிரப்ப தமிழர்களால் பயன்படுத்தப்பட்ட சொல்லாட்சியாகும்.

புதியவகைத் தொழிநுட்பங்கள் கருவிகளும் இயந்திரமாக்கலும் அதிகரித்த பொழுதும் மனிதனின் கைகளைப் பயன்படுத்தி ஏற்றத்தினால் நீர் இறைத்து வயல்களுக்குப் பாய்ச்சும் முறை இன்று வரை சங்ககாலந்தொட்டு இன்றளவும் மரபாகத் தொடர்கிறது.

உழுது விதைவிதைத்தபின் செய்யப்படும் முக்கியச் செயல் நீர்பாய்ச்சுதல் இதற்கு நீரை முகந்து இறைக்கும் கடகத்தால் (காண்டா), நீர் இறைக்கும் ஏற்றம், குளத்து நீரை இறைக்கும் மெல்லிய கயிறு கட்டப்பட்டிருக்கும் நீர் இறைக்கும் கருவி போன்றவற்றைப் பயன்படுத்தினர்.

**"நீர் தெவ்வு நிரைத் தொழுவர்**

**பாடுசிலம்பு மிசை யேற்றத்**

**தோடுவழங்கும் அகலாம் பயிற்**

**குயன கைய வயனிறைக்கு**

**மென்றொடை வன்கிழா அர்"**[57]

ஆம்பி என்பது பன்றிபத்தர் என்று பொருள்படும். இது ஏற்றத்துடன் நீரை இறைக்கும் கருவியாகும்

### 5.8.2 கிழார்

தோட்டங்களுக்கு நீரைப் பாய்ச்ச மென்மையான கட்டுகளையுடைய வன்மையான பூட்டைப்பொறியாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**"தாம்பியும் கிழாரும் வீங்கிசை யேத்தமும்**

**ஓங்குநீர் பிழாவு மொலித்தல் செல்லாக"**[58]

என்று சிலம்பு பகர்கின்றது.

### 5.8.3 முகவை

முகவை என்பது இறவைவாளி நீரை முகக்கும் கருவி என்று அகராதி குறிப்பிடுகிறது.

**“சிரறு சில ஊறிய நீர் வாய்ப்பத்தற் கயிறு**

**கயிறு குறு முகவை**

**புகர் முக முகவைக்கு வந்திசின்பெரும”[59]**

போன்ற பாடல்களில் முகவை குறிப்புகள் காணப்படுகின்றன.

## 5.9 நீரைப் பராமரித்தல்

வேளாண்மை தவிர்த்த அன்றாடத் தேவைகளுக்கான நீர்த்தேக்கங்களை பழந்தமிழர் அமைத்தனர். நீர்த்தேக்கங்களிலிருந்து பெறப்படும் நீரினைத் தூய்மைப் படுத்திப் பயன்படுத்தினர். நீர்ச்சேகரிப்பு அனைவருக்கும் கட்டாயமாக்கப்பட வேண்டும் நீர் ஆதாரங்களை மேம்படுத்தும் வகையில் தடுப்பணைகள் கட்டப்படுவதும் நீர்ப்பிடிப்பு அமைப்புகளை மேம்படுத்துவது குளங்களையும், ஆறுகளையும் புதுப்பிப்பதும் அவசியமாகும். மேலும் வெள்ளப்பெருக்கு கரையுடைப்பு ஏற்படும் காலங்களில் அவற்றைப் பராமரித்தலும் காவலாளர்கள் பாதுகாத்தலும் முக்கியமான பணியாகும்.இவற்றைப் பற்றிய குறிப்புகள் சங்கப்பாடல்களில் காணக்கிடக்கின்றன.

### 5.9.1 நீர்ச்சமூகத்தினர்

நீர்நிலைகளை பராமரிக்கவும் செப்பனிடவும் நீர் வழங்கவும் தமிழர்கள் மடையர்கள் , நீராணிகாரர்கள் , நீர்வெட்டியர் , ஏரி காப்பாளர்கள் கரைகாப்பாளர்கள் போன்ற பல்வேறு நிலைக்காவலர்களை நியமித்துள்ளனர்.

- ஏரிகளை காக்க ஏரி காப்பாளர்கள்
- குமிழிஅமைப்பு மூலம் ஏரி குளங்களுக்கு வரும் வண்டல் மண்ணை அதன் வாயிலிருந்து தடுத்து ஏரியை சுத்தம் செய்ய குளத்துப்பள்ளர்கள்

- பாசனக்கால்வாய் நிர்வகிப்பவரை நீர்வெட்டியார்
- வெள்ளக்காலங்களில் ஏரியைத் திறக்க மடையர்கள்

என நீர்ச்சமூகத்தைச் சார்ந்த பிரிவினர் இருந்துள்ளனர் என்பது தற்கால வல்லுநர்களின் கருத்தாகும். சங்க இலக்கியங்களில் இவர்களைப் பற்றிய குறிப்புகள் மிகுதியாக காணப்படவில்லை.ஆனாலும் குளம் ஏரி அணை போன்ற நீர்த்தேக்கங்களைப் பராமரிக்க காவலாளர்கள் இருந்த செய்திகளை அறிய முடிகின்றது.இவர்கள் இரவு பகல் மழை கோடை என்று பாராமல் திறம்பட நிர்வகித்துள்ளனர்.மடையர்கள் என்ற ஒரு பிரிவினர் சங்ககாலத்தில் இருந்தனர்.

**மடையர் புகையர் பூஏந்தி**

**குடைஅடை நீரின் மடையினள் எடுத்த**[60]

இப்பாடல்களில் மடையர் , மடையினள் என்ற இரு சொல்லாட்சி நிலவுகிறது.அரசியருடன் ஆனேற்றோடு மாறுபட்டு அதனை வெல்வார் போல் வீறுடன் நிமிர்ந்து நடக்கும் ஆடவர் என்றும் வயலைக் கொடிக்கு நீர்ப்பாய்ச்சும் மடையினள் என்றும் கூறுவதில் இருந்து இவர்களே மடையைத் திறந்திருக்கலாம் என்று அறியலாம்.

### 5.9.2 கரைக்காப்பாளர்கள்

ஆற்றுநீரை அணைகள் கட்டித் தேக்கிய நிலையில் அளவிற்கு அதிகமான வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு தடுப்புகள் உடைந்தது. அவ்வுடைப்பினால் பேரழிவு ஏற்படாமல் உயிர்களைக் காக்கும் பொருட்டு ‘பறை’ முதலிய கருவிகள் கொண்டு அணைக் காவலன் மக்கள் பாதுகாப்பான இடங்களுக்குச் செல்ல வெள்ள எச்சரிக்கை விடுத்ததை,

**“வரைச்சிறை யுடைத்ததை வையை வையைத்**

**திரைச்சிறை யுடைத்தன்று கரைச்சிறை அறைகெனும்”**[61]

**“உரைச்சிறைப் பறையெழ வூரொலித் தன்று**

**.... பறை அறையப்**

**போந்து வையைப் புனல்”**[62]

மேற்கண்ட பாடல்களில் வையையில் ஏற்பட்ட வெள்ளத்தினால் சிறகுகளாகிய அலைகள் காவலையுடைய மலை போன்ற அணைகளை உடைத்தன. உடைந்தகரைகளை அடைப்பதற்கு ஆள் எழுந்து வருக என்று கூறும் கரை காப்பாளரின் சொல்லாகிய ஒலியொடு பறையின்; ஒலியும் எழுந்திட அவ்வொலிகளுடன் கிளர்ந்து எழும் ஊர் மக்களின் ஆரவாரமும் சேர்ந்து ஒலித்தன. பறைஅறிவித்தல் என்ற வழக்கம் சங்ககாலந்தொட்டு இருந்ததையும் அறிய முடிகின்றது.

இப்பாடலில் சங்ககாலத்தில், மழை பெய்யும் காலத்தே மிகுதியான நீரினை அணைகள் கட்டி தேக்கி வைத்ததோடு அணைகளுக்குக் காவலாக ஆட்களை நியமித்து பாதுகாத்தனர் என்பதும் புலப்படுகிறது. அணை உடைந்ததை மக்களுக்கு அறிவித்து, மக்கள் அனைவரும், ஒன்று கூடி கரையை அடைக்க முற்பட்டனார் என்பதன் மூலம் சங்ககால மக்கள் ஒன்றிணைந்து அணைகளை உருவாக்கியிருக்கலாம் என்பதை அறிய முடிகிறது.

மேலும், அதில் ஏற்படும் குறைபாடுகளை ஒனறு கூடி களைய முற்பட்டதன் மூலம் சங்க மக்கள் முறைசார் மேலாண்மை என்ற அமைப்பில் நீரியல் மேலாண்மை செய்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. மற்றொரு பதிற்றுப்பத்துப் பாடலில், தோலினால் போர்த்து முழக்கப்பட்ட பறை ஓசையால் உழவர்களை, ஊர் மக்களை அழைத்து புது வெள்ளத்தினால் மடைகள் உடைத்துக் கொண்டு செல்லாதபடி அவ்வெள்ளத்தை அடைப்பர் என்பதை,

**"போர்த்தெறிந்த பறையாற் புனலசெறுக் குநரும்"**[63]

என்ற அடிகளால் உணரலாம். இதனை ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, **"புதுப்புனல் மிக்க கரையையுடைத்துப் பெருகி வருங்கால் உடைமையைக் கட்டுவதற்குப் பறையறைந்து கடையரைத் தருவித்துத் தொடுத்தல் பண்டையோர் மரபாதலால் போர்த்தெறிந்த பறையால் புனல் செறுக்குநரும் என்றார். புனலடைக்கும் குறிப்பைத் தன்னோசையால் தெரிவித்ததற்குப் பறையே யேற்றதாதலால் அதனை விதந்தோதினார்"**[64] என்று சங்கத்

தமிழர்களின் புனல் சார்ந்த நிர்வாகத்திறத்தை தம் உரையில் குறிப்பிட்டுள்ளார்.

குளிர்ந்த நீர் பரந்த ஓசையையுடைய உடைப்புகள் மண்ணால் அடைக்கப் பெறாமல் மீனால் அடைக்கின்ற வளத்தை,

**"தண்புனல் பரந்த பூசல் மணம் றுத்து**

**மீனிற் செறுக்கும்"**[65]

என்ற பாடலில், நீரினைத் தேக்கி வைக்கும் வழக்கமும் அதற்கு மண்ணால் அணைகட்டும் திறத்தையும் அறியமுடிகிறது. இப்பாடலில் நீர் பெருக்கத்தால் பேரிழப்பு ஏற்படுவதைத் தடுக்க மண்ணால் அவ்வுடைப்பைச் சரி செய்யும் வல்லமைப் பெற்றுச் சங்கச் சான்றோர் திகழ்ந்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

### 5.9.3 குளத்துக்காப்பாளர்கள்

**"ஒரு நாட்டின் நீர்நிலைகள் என்பவை அந்நாட்டின் உயிர் நாடிகளாக அமைகின்றன. அவ்வகை நீர்நிலைகளை உருவாக்கினால் மட்டும் போதாது. அவற்றை இயற்கைச் சீற்றங்களிலிருந்தும், எதிரிகளிடமிருந்தும், விலங்குகளிடமிருந்தும், பாதுகாத்தல் வேண்டும். நீர்நிலைகளை உருவாக்குதலும், அவற்றைக் காத்தலும் நாட்டின் வளர்ச்சிக்கு ஏற்ற செயல்களாக அமைகின்றன. அவ்வகையில், இயற்கைச் சீற்றங்களிலிருந்து, எதிரிகள் மற்றும் விலங்குகளிடமிருந்து நீர்நிலைகளைக் காக்க, காவலர் அமர்த்தப்பட்டனர்."**[66]

குளங்களில் உடைப்பு ஏற்படாமல் பாதுகாக்கவும் கோடையில் குளங்களில் நீரின்மையால் வழுக்கும் தன்மை உடையதாக இருக்கும் அந்நேரங்களில் மக்கள் விழாமல் இருக்கவும் காவலர்களை அமர்த்தியது தமிழர்களின் நீர் பராமரிப்புத் திறத்தைப் புலப்படுத்துவதாகும்.

குளங்களில் கட்டிய அணைகள் உடைந்துவிடாது ஆட்களை வைத்துப் பாதுகாத்தனர் என்பதனை,

**“... ஈங்கைத்**

**துய் யவிழ் பனிமலர் உதிர வீசித்**

**தொழின்மழை பொழிந்த பானாட் கங்குல்,**

**எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்**

**பெருங்குளங் காவலன”**[67]

இப்பாடல், ஈங்கையின் குளிர்ந்த மலர்கள் உதிருமாறு மேகம் பெருமழை பெய்த நள்ளிரவில், அலைகள் மோத அதன் துளிகள் பரத்தலால் சிறிய கரையினையுடைய பெரிய குளமானது உடைப்பு ஏற்பட்டு பேரழிவுகள் ஏற்படாவண்ணம் காவல் செய்யும் பொருட்டு காவலாட்களை அமர்த்தியுள்ளனர்.

கோடைகாலத்தினால் வறட்சி ஏற்படா வண்ணம் அமைத்த குளங்கள் ஆழம் நிறைந்ததாக இருந்தது. அக்குளங்களை காவல்புரிய காவலாளிகளைப் பணிக்கு நியமித்தனர் என்பதை,

**“கோடை நீடினும் குறைபட லரியாத்**

**தோடாழ் குளத்த கோடுகாத் திருக்கும்”**[68]

இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. மண்ணால் தூர்ந்த குளங்களைத் தோண்டி நாட்டின் செல்வ வளத்தைப் பெருக்கியதோடு, ஒரு நாட்டிற்கு நீர் மிகவும் இன்றியமையாதது என்பதை உணர்ந்து, அந்நாட்டில் உள்ள குளங்களையெல்லாம் தூர் வாரி, செப்பம் செய்து அதனுள் நீரினைத் தேக்கி வைத்து மக்களின் நீராதாரத்தைப் பெருக்கி வளமாக வாழ்ந்துள்ளனர்.

### 5.9.4 வலைஞர்கள்

மீன்பிடித்தொழிலை மேற்கொண்டவர்கள் வலைஞர்கள் என்றழைக்கப்பட்டனர். கடற்கரை இருகே தன் குடிலை அமைத்து குளங்களை காக்கும் காவல்பணியை செய்துள்ளனர்.

**“கோடை நீடினும் குறைபடல் அறியாத்**

**தோள்தாழ் குளத்த கோடு காத்திருக்கும்**

**கொடு முடி வலைஞர் குடிவயிற் சேப்பின்”**[69]

கோடைகாலத்திலும் கடற்கரையை அடுத்த பாலைநிலத்தில் உள்ள குளத்தில் ஓர் ஆள் கையைத் தூக்கிடினும் தோள் உயரத்திற்கு மேல் உள்ள ஆழத்துடன் நீர் இருக்கும்.இந்தக் குளத்தை வளைந்த முடியுடைய வலைஞர் காப்பர் என்கிறது. இதில் தமிழர்களின் பொறுப்புணர்வு வெளிப்படுகிறது.

### 5.9.5 அரைமண்கலவை

ஏரிகள் அணைகளில் நீர்ப்பெருக்கத்தின் போது உடைப்புத் தோன்றும் அதனை தடுப்பதற்காக அரைமண் கலவையை பயன்படுத்தி கட்டுமானங்களையும் கரைகளையும் உருவாக்கியுள்ளனர். அரைம ணிஞ்சிநாட் கொடி நுடங்கும்[70]

மண்ணை அரைத்து அதனுடன் இயற்கைப் பொருட்களையும் கலந்து கட்டுமானங்களையும் கரைகளையும் அமைத்துள்ளனர்.மண்ணை அரைத்து பயன்படுத்த எந்திரங்கள் புழக்கத்தில் இருந்துள்ளன.

**“மண்புனை யிஞ்சி மதில்கடமந் தல்லது”**[70]

மண்அரவை மூரம் கட்டப்பட்ட மதில் என்று குறிப்பிடுகின்றது.

### 5.9.6 தூர்வாரல்

**“காடுகொன்று நாடாக்கிக்**

**குளந்தொட்டு வளம்பெருக்கிப”**[71]

சோழ நாட்டினை ஆட்சி செய்த திருமாவளவன் பகைவர்களால் அழிக்கப்பட்டு பாழ்பட்டிருந்த காடுகளையெல்லாம் மக்கள் வாழ்வதற்கு ஏற்ற இடமாக மாற்றினான்.அங்கு சருகுகளும் தூசுகளும் நிறைந்த குளங்களெல்லாம் தூர் வாரி நீர் வளத்தை உருவாக்கியுள்ளான்.

**5.9.7 ஆறுகளைப் பராமரித்தல்**

நீரின் அவசியத்தை நன்குணர்ந்து மழை பெறும் காலங்களில் பிற்காலத்தின் நீரின் தேவையைப் போக்கும் விதமாகச் சங்ககால மக்கள் நீர்ப் பராமரிப்பு செய்தனர்.

மலையில் பிறந்த ஆறுகள் மலையை விட்டு அகன்று நில எல்லையை அடைந்து அங்குள்ள நிலங்களை வளம் பெறச் செய்து பின்பு கடலில் சென்று கலந்த செய்தியை,

**“மலையி னிழிந்து மாக்கட னோக்கி**

**நிலவரை யிழிதரும் பல்யாறு”**[72]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இச்சிறப்பான செய்கையினைக் கொண்ட ஆறுகளை வெட்டுவித்து வறட்சியைப் போக்கி மக்களை வளம் கொள்ளச்செய்யும் நீர்ப் பராமரிப்பு மாண்பு சங்க மன்னர்களுக்கு அமைந்திருந்தது. பாண்டியன் நெடியோன் ப.்.றுளி ஆற்றை உருவாக்கியதை,

**“முந்நீர் விழவி னெடியோன்**

**நன்னீர்ப் ப.்.றுளி மணலினும் பலவே”**[73]

இப்பாடல் அடியில் நெட்டிமையார் எனும் புலவர் முதுகுடுமிப் பெருவழுதியைப் புகழ்ந்து பாடும் பொழுது அவனது முன்னோரைப் புகழ்ந்துள்ளார்.

இன்றையக் காலகட்டத்தில் நதிநீர் இணைப்புத் திட்டம் என்ற ஒன்றை முன்வைத்திருப்பதன் காரணம் ஒரு பகுதியில் வளங்கள் அதிகம் பெற்று மறு பகுதியில் நீரின்மையால் ஏற்படும் வறட்சியைப் போக்குவதற்கேயாகும்.

சங்கச்சான்றோர்கள் இத்தகு வறட்சியால் ஏற்படும் பேரிடரைப் போக்கும் வகையில் ஆறுகளை அமைத்து தங்கள் நாட்டில் வறட்சியைப்

போக்கும் வகையில் மேலாண்மையுடன் ஆட்சிச் செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

குடகு மலையில் பிறந்த குளிர்ந்த காவிரி ஆறு, மிக்க ஆழத்தையுடைய புகார் கடலிலே சென்று கலக்கும் முன்பு தான் வரும் இடைப்பட்ட பகுதிகளில் வளங்களை அளித்து மக்களுக்கு வறட்சி மற்றும் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்து பேரழிவிலிருந்து பாதுகாவலை மேற்கொள்கின்றது. இதை,

**“குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி**
**கடன்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப”**[74]

எனும் அடிகள் உணர்த்துகின்றது. வறட்சியிலிருந்து மக்களை மீட்டு வளம் கொடுக்கும் பணியைக் காவிரியாறு செய்கின்றது என்பதை,

**“... பன்மாண்**
**எல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்**
**குல்லை கரியவுங் கோடெரி நைப்பவும்**
**அருவி மாமலை நிகழ்த்தவு மற்றக்**
**கருவி வானங் கடற்கோள் மறப்பவும்**
**பெருவற னாகிய பண்பில் காலையும்**
**நறையு நரந்தமு மகிலு மாரமும்**
**துறைதுறை தோறும் பொறையுயிாத் தொழுகி”**[75]

பல உயிர்களும் மாட்சிமைப்படுவதற்குக் காரணமாகிய கதிரவன் மிகுதியாகக் கதிர்களைப் பரப்புதலால், கஞ்சங்குல்லை தீய்ந்து போகவும், மரங்களின் கொம்புகளைத் தீ உண்ணவும், மலைகளில் அருவிகள் இல்லாது போகவும், முகில்கள் கடல்நீரை முகத்தலை மறந்தழியவும் என்ற இச்செயல்பாடுகளால் பெரிய வறட்சி, பஞ்சம் உண்டாகும். அத்தகைய காலத்தும் நாறைக்கொடியும் நரந்தம் புல்லும் அகிலும் சந்தனமாகிய சுமைகளைச் சுமந்து இளைப்பாறிப் பின் மேலும் நடந்து செல்லும் இயல்புடையது காவிரி என்று காவிரியின் தன்மை கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு பல்வேறு புகழுடைய காவிரியானது மேற்கு திசையின் கண் பொன்படுகின்ற நெடிய குடகு மலையில், முகிலின் இடியேறு முழங்கின் பூப்பரந்த புது நீரையுடைய காவிரி உலகத்தைப் பாதுகாக்கும் என்று காவிரியாற்றின் பிறப்பும், அதன் சிறப்பும் உணர்த்தப்பட்டுள்ளது.

கோடைகாலத்தின் காரணமாக நிலம் வறட்சி, வளங்குன்றும் நிலை ஏற்படினும் அக்காலங்களில் காவிரியின் மூலம் நீரைப் பெற்று வளங்களைக் காத்து வாழ்ந்துள்ளனர். வறட்சி காரணமாகப் பேரழிவுகள் ஏற்படா வண்ணம் காவிரியாற்றின் நீர் பெற்று செய்தனர் என்பதனை,

**"கோடை யாயினுங் கோடே வொழுக்கத்துக்**

**காவிரி புரக்கும்"**[76]

இப்பாடல் பதிவின் மூலம் அறியமுடிகிறது. மேலும் தோட்டங்களையும் நெல்விளையும் கழனிகளையும் கொண்ட அம்பர் எனும் ஊர் காவியாற்றினால் செழிப்பாக இருந்ததை,

**"காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை**

**நெல்விளை கழனி யம்பர்"**[77]

என்ற பாடலடிகள் விளக்கிச் செல்கின்றன. அறிவியல் தொழில்நுட்பம் என்ற ஒன்றை அறிந்திராத சங்கச்சான்றோர்கள் காலத்தைச் செலவு செய்து தாங்கள் பெற்ற அனுபவங்களைக் கொண்டு பல அளப்பரிய அறிவியல் உண்மைகளை,

**"அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்**
**இலங்குகதிர் வெள;ளி தென்புலம் படரினும்**
**அந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்**
**தோடுகொள் வேலின் றோற்றம் போல**
**ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்**
**நாடெனப் படுவது நினதே யத்தை"**[78]

என்ற பாடலடிகளில், சுடர் விளங்குகின்ற கதிர்களை உடைய ஞாயிறு நான்கு திசைகளிலும் தோன்றினாலும், ஒளியை உடைய கதிர்கள் வெள்ளி

மீன் தென் திசைக்குச் சென்றாலும் அழகிய குளிர்ந்த காவிரி பல கால்வாய்களாய் பிரிந்து வளமூட்டிவிடும் அதனால் வேலின் தொகுதி போல கணுக்களையுடைய கரும்பு அசையும் போது கரும்பின் வெண்மையான பூவும் அசையும். இத்தகைய நின் நாடே நாடு என்று கிள்ளிவளவனின் நாட்டு வளத்தைக் குறித்து வெள்ளைக்குட்டி நாகனார் பாடியுள்ளார்.

இப்பாடலடிகளில் கதிரவன் நான்கு திசைகளிலும் தோன்றுதல், வெளியானது வடதிசையில் இருந்து தென் திசையில் இயங்குதல் ஆகியன மழை பொழியாது வறண்டு போகச் செய்தது என்பதைச் சங்கச் சான்றோர் அறிந்திருந்தனர். ஆதலால் இவ்வாறு ஏற்படும் வறட்சிக் காலத்தில் குளிர்ந்த காவிரிநீரைப் பல கால்வாய்களாகப் பிரித்து பயிர் விளைவித்தலுக்குத் தேவையான நீரைப் பெற்றனர். இதனால் கரும்பானது செழிப்புடன் வளர்ச்சி பெற்றுள்ளது என்று கூறுகிறார்.

இதனை, **“மண்ணின் விளைவாற்றல், அம்மண்ணுக்குரியவனாம் உழவனுக்கு நிலத்தை உழுத பின்னர், நெல் முதலாம் உணவுப்பொருட்களை விளைவிக்கும் முறையினைக் கற்றுத்தந்தது. ஆறுகளின் இரு பக்கங்களிலும் படிப்படியாகத் தாழ்ந்து செல்லும் நில அமைப்பு, தங்கள் விளை நிலங்களுக்கு உயிர் ஊட்டும் நீரைக் கொண்டு செல்லும் முறையினை, வெள்ளத்தை அது விரும்புமாறு ஓடவிடாது, தாம் விரும்புமாறு கொண்டு சென்று, வெள்ளநீரை ஆட்சி கொள்ளவல்லராகிய வெள்ளாளர்க்குக் கற்றுத் தந்தது”**[80] “ன்று தொடக்க காலங்களில் ஆற்றின் போக்கினை கால்வாய்களை வெட்டி வறட்சி ஏற்படும் முன்பு வயல் வெளிகளுக்குத் தேவையான நீரினை அளித்து நீரியல் மேலாண்மை செய்துள்ளதை அ.மார்க்ஸின் கூற்றுவழி உறுதியாகிறது. மேலும்,

**“தேறுநீர்ப் பரப்பின் யாறுசீத் துய்த்துத்**

**துறைதொறும் பிணிக்கும் நல்லூர்”**[81]

என்ற பாடலின் மூலம், ஆரவாரத்துடன் ஓடங்களை நீர் பரந்த கடந்துச் செல்லும் வழியாகிய ஆற்றைச் செம்மை செய்து செலுத்தினர் என்பதன் மூலம் ஆற்றினை செம்மை செய்து எல்லா இடங்களிலும் பாய்ந்து வளம்

பெருகச் செய்துள்ளனர். பெருகி வரும் காவிரி நீரை வீண் செய்யாது கால்வாய் அமைத்து வறட்சி போன்றவற்றின் மூலம் நீரின்மையால் ஏற்படும் பேரிடரை மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

நீர் வளத்தைப் பெருக்க வேண்டுமானால் இயற்கை வளங்களான மலைகளையும், காடுகளையும் காத்தல் அவசியம். மலையிலிருந்து வரும் மழை நீரானது தான் செல்லும் அனைத்துப் பகுதிகளையும் வளப்படுத்திவிட்டு இறுதியில் கடலில் சென்று கலப்பதை,

**“இமையவ ருறையுஞ் சிமையச் செவ்வரை**
**வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுகோட்டுப்**
**பொண்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்**
**பெருநீர் போகும் இரியல் மாக்கள்**
**ஒருமரப் பாணி”**[82]

இப்பாடலடியில் நெடிய சிகரத்தினின்றும் பொன்னைக் கொழித்துக் கொண்டு குதிப்பதும், மக்கள் கடத்தற்கு அரிதாகவும் உள்ள கங்கையாற்றைக் கடந்து செல்ல விரும்பும் மக்கள் தோணியைப் பயன்படுத்தினர். கங்கையின் செழிப்பையும் வெள;ளம் வரும் காலங்களில் அதனைக் கடக்க மக்கள் தோணியைப் பயன்படுத்தி, அதிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொண்டதையும் உணரமுடிகிறது.

ஒரு நாட்டின் வளம் என்பது அந்நாட்டில் இயற்கை அன்னையால் உருக்கொண்ட ஆற்றின் வளத்தை முதன்மையாகக் கொண்டே அமைகிறது என்பதை,

**“………………. மலி புகழ்**
**வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்”**[83]

எனும் வையை ஆற்றின் வளத்தைக் காட்டுவதிலிருந்து அறியலாம். இயற்கையின் அரிய படைப்புகளில் ஒன்றான ஆறு மனிதவாழ்விற்கு அடிப்படை ஆதாரமாக இருந்து வருகின்றது என்பது மேற்கண்ட பாடலடிகள்

புலப்படுத்துகின்றன. மேலும் வையை ஆற்றினால் உலகம் வளம் பெற்றது எனும் செய்தியை,

**“ஆநா ணிறைமதி அலாத் ரு பகக் ம்போல்**

**நாளி னாளி னளிவரைச் சிலம்புதொட்டு**

**நிலவுப்பரந் தாங்கு நீர்நிலம் பரப்பி**

**உலகுபயம் பகர ஓம்பு பெரும்பக்கம”[84]**

எனும் அடிகளில் நல்லந்துவனார் பதிவு செய்துள்ளார். பிறைநிலவு தோன்றிய நாள் தொடங்கி நாளுக்கு நாள் வளர்கின்ற வளர்பிறையைப் போல் நாளுக்கு நாள் வளர்ந்து அதன் நிலவொளி உலகம் எங்கும் பரவுவதைப் போல, செறிந்த மலைச்சாரல் முதலாக நிலப்பரப்பு எங்கும் நீரைப்பரப்பி உலகத்திற்குப் பயனை விளைவித்துக் கொடுத்து பாதுகாத்து வரும் இயல்புடையது வையை ஆறு என்று வையை ஆற்றின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. மேற்கூறிய பாடல்களின் மூலம் சங்க காலத்தில் மழைவளம் குறைந்த காலக்கட்டத்தில் காவிரி, கங்கை, பொருநை, வையை போன்றவை நீரியல் மூலங்களாக இருந்தன. அவ்வாறுகளின் நீரினைக் கால்வாய் அமைத்தும் செப்பனிட்டும் நீர்மேலாண்மை செய்துள்ளனர். இதனால் வறட்சி போன்றவற்றால் ஏற்படும் பேரிடர் நீங்கியதை அறியலாம். மேலும் இயற்கை வளங்களை முறையாக மேலாண்மை செய்யும் திறமும் சங்கமக்கள் பெற்றிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### 5.9.8 குளங்களைப் பராமரித்தல்

சங்கால மக்கள் ஆற்றுநீர் மட்டுமல்லாது மழைக் காலங்களில் பெய்த மழை நீரினைக், குளங்கள் அமைத்துத் தேவைப்படும் காலங்களில் பயன்படுத்தி நீர் மூலம் பேரழிவுகள் ஏற்படாவண்ணம் செய்துள்ளனர்.

சங்கச்சான்றோர்கள் என்பதனை,

**“குளந்தொட்டு வளம் பெருக்கிப்”[85]**

**“நிலனெளி மருங்கிற் நீர்நிலைப் பெருக்கி”[86]**

எனும் அடிகள் உறுதிப்படுத்துகின்றது.

சங்ககாலத்தில் மக்கள், தங்களுக்குத் தேவையான குடிநீர் ஆதாரத்தைத் தேவைக்கு அதிகமான போது, வறட்சி காலங்களில் நீரின் தேவைக்கருதி குளங்களில் அந்நீரினை வீணாக்காமல் தேக்கி வைத்துப் பாதுகாத்தனர் என்பதும், அந்நீரால் மக்களுக்கு எவ்வித தீங்கும் ஏற்படா வண்ணம் அணைகள் அமைத்து ஆட்களை நியமித்து பாதுகாத்தனர் என்பதும் புலப்படுகிறது.

வேளாண் தொழிலுக்கு ஆதாரமாக இருப்பது மழை நீராகும் என்பதை நன்கறிந்த சங்;ககால மக்கள் பருவமழை பெய்யும் காலங்களில், வேளாண்மை செய்தல் பொருட்டு ஆங்காங்கே குளங்கள் வெட்டி, மழைநீரைச் சேமித்து வைத்தனர். பருவ மழை பொய்த்த காலங்களில் அக்குளத்திலுள்ள நீரைக் கொண்டு தொழில் செய்து தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொண்டதற்கான பதிவாக,

**“குணகடல் கொண்டு குடகடல் முற்றி**
**நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றி”**[87]

இப்பாடலில் மேகங்கள் கீழ்த்திசைக் கடலில் நீரை முகந்து, மேற்றிசைக் கடலருகேயுள்ள மலைப்பகுதிகளில் தங்கின. இரவும், பகலும் எங்குச் செல்வது என அறியாமல் பள்ளமும் மேடுமாகிய பல நிலப்பகுதிகளில் உள்ள நீருடன் திரண்டு எழுந்தன. கவலைக் கிழங்கு தோண்டிய அழகிய குழிகளில் மழைநீர் வீழ்ந்தது. மழைநீரால் அருவிகள் பெருகி ஒலித்தன. மூங்கில் வளர்ந்த மலைப்பகுதிகளில் வாழும் யானைக் கூட்டங்கள், நடுங்குமாறு ஒலிக்கும் இடியுடன் பரந்து சிதறிப் பெருமழை பெய்தது.

ஆறுகள் மழையின் பெருவெள்ளத்தைத் தாங்க இயலாமையால், ஆற்றிடைக் குளங்களில் ஓங்கிப் பெருகிற்று. அவ்வாறு வரும் நிறத்தை உடைய மழைநீர் இடைப்பட்ட குளங்களை நிறைத்து கீழ்த்திசைக் கடலை நோக்கிப் பரந்து சென்றது. முன்பு கிழங்கு எடுத்த குழிகளை மழைநீர் நிரப்பியது. இங்கு, குளங்களை மழைநீர் நிரப்பியது என்ற பதிவின் மூலம் தொடக்க நிலையில் இயற்கையான குழிகளில் மழைநீர் தேங்கியதை

உணர்ந்த மனிதன் அதன் காரணமாகக் குளங்களை வெட்டத் தளைப்பட்டு, குளங்களின் மூலம் மழைக்காலங்களில் பெய்யும் அதிக அளவிலான மழையால் மழை நீரைச் சேமித்து வறட்சி காலங்களில் பயன்படுத்த முற்பட்டான் என்பது புலப்படுகிறது. இதன்மூலம் சங்ககால மாந்தர்களின் நீரியல் திறன் வளர்ச்சி தெளிவாகின்றது.

தொடக்ககாலத்தில் மழையின் அவசியத்தை அறிந்து வறட்சி ஏற்படும் காலத்தில் தேவையான நீரை மழைப் பெய்யும் காலத்திலேயே குழிகள் வெட்டி தேக்கினர். பல்வேறு குழிகள் ஒன்று சேர்த்தி பெரிய குளங்களை வெட்டினர் என்பதும், அக்குளங்களுக்குக் கரையமைத்தும் காவல் புரிந்தனர் என்பதற்கானச் சான்றுகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

**“வான்மடி பொழுதி னீர்நசைஇக் குழித்த**

**அகழ்சூழ் பயம்பின”**[88]

என்ற பாடலில், மழை வறண்டகாலத்தில் நீர்ப்பெறும் பொருட்டு தோண்டப்பட்ட பலப் பகுதிகள் காணப்படும் என்பதன் வாயிலாக நீரின்மையால் ஏற்படும் வறட்சியினால் பேரழிவு ஏற்படாவண்ணம் செய்த திறம் அறியப்படுகிறது.

பின்வரும் பாடலிலும் நீரியல் திறன் குறித்த செய்திகளை,

**“திரையிரும் பனிப்பௌவம் செவ்விதா வறமுகந்**

**துரவுரு முடன்றார்ப்ப ஊர்பொறை கொள்ளாது**

**கரையுடை குளமெனக் குழன்றுவான”**[89]

மேகமானது முழங்கும் அலைகளையும், கரிய நிறத்தையும், குளிர்ச்சியையும் உடைய பெரியகடல் வற்றிப்போகுமாறு அதன் நீரை முகந்து கொண்டு வந்து வலிமை மிக்க பெரிய இடி சினத்துடன் முழங்கும் படியாகச் செய்தது. தம்மேல் ஏற்பட்ட நீரின் பாரம் தாங்க முடியாமல் தன் வயிறு கிழிந்தது போலவும் கரையுடைந்த குளத்தின் நீர் குளத்தினை விட்டு வெளியேறுவதைப் போலவும் மேகம் பெருமழைப் பெய்தது என்ற பதிவின் மூலம் மழைக்காலங்களில் நீரைத்தேக்கி வறட்சி போன்ற

காலங்களில் பயன்படுத்த குளங்கள் போன்றவற்றை மக்கள் ஒன்றிணைந்து முறைசார் மேலாண்மை செய்ததை இப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

குளக்கரைகளைப் பராமரிக்க மரங்களை வளர்த்துக் கரைகளுக்கு வலுவூட்டியுள்ளனர்.

**"மெல்லிய லோயே...............**

**நாள்இடைப் படாஅ நளிநிர் நீத்தத்து**

**இடிகரைப் பெருமரம் போல**

**தீதுஇல் நிலைமை முயங்குகம் பலவே"[90]**

மருதநிலங்களின் வெள்ளம் பாயும் செறிந்த பகுதிகளில் கரைகளுக்கு அருகே மரங்கள் அமைந்துள்ளன. மரங்கள் பூமியின் வரமாகும். மரங்களுக்கு மண்ணரிப்பைத் தடுக்கும் வலிமை உண்டு .மரங்களின் வோ்களானது நிலத்தின் ஆழம் வரை ஊடுருவிச் சென்று அருகேயுள்ள மண் கட்டுமானங்களைத் தாங்கிக் கொள்ளும் தன்மைக் கொண்டவையாகும். முன்னோர்கள் குளத்தின் கரைகளில் மரங்களை நட்டு கரைகளைப் பாதுகாத்துள்ளனர்.

### 5.9.10 வெள்ளத்தடுப்பு அரண்

பருவமழை தொடர்ந்து பெய்து நீர் அதிகமாக வெளியேறி தாழ்வான பகுதிகள் நீரில் மூழ்கி மக்களைப் பாதிக்காமல் இருக்க பல்வேறு நடவடிக்களைச் செய்துள்ளனர்.இயற்கையாகக் கிடைக்கும் கரும்புக்கழி வைக்கோல் மணல்மூட்டைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

**"வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை**

**தீம்புனல் நெரிதர விந்து உக்காஅங்கு"[91]**

பெருகிவரும் வெள்ளத்தைத் தடுப்பதற்காக கரும்புகளின் கழிகளைக் கொண்டு தடுத்துள்ளனர். ஆறுகளில் கரைகளை நிறுவி அந்த கரைகளுக்கு வலுவூட்டும் வண்ணம் கரும்புகளை கரைப்பகுதிகளில் நட்டு வைத்துள்ளனர். கரும்புகளின் வோ்களானது மண்ணோடு சேர்ந்து மண்ணினால் தோன்றும் மண்அரிப்பைத் தடுத்து விடும்.அதற்காக

கரைகளை இறுக்கத்துடன் அமைப்பதற்காக கரும்புகளைப் பயன் படுத்தியுள்ளனர். நீர்ப்பெருக்கமானது அதிகரிக்கும் நேரங்களில் கரும்புகள் வெள்ளத்தினால் கொண்டுச் செல்லப்படும். வெள்ளத்தைக்கட்டுப்படுத்த தமிழர்கள் கையாண்ட தற்காலிக முறையாகும். அதனால் சிறிய அளவினையுடை சிறுசிறை என்றழைத்துள்ளனர்.

**“தேம்பாய் மருதம் முதல் படக் கொன்று**

**வெண் தலைச் செம் புனல் பரந்து வாய் மிகுக்கும்**

**பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்**

**விறை கொள் பூசலின் புகன்ற ஆயம்”**[92]

மருதமரங்கள் சூழ்ந்துள்ள ஆற்றங்கரையில் புதுவெள்ளம் பெருக்கெடுத்து எங்கும் பரந்து ஒடியதால் மருதமரங்களின் வேர்கள் வெள்ளப் பெருக்கினைத் தாங்காமல் வீழ்ந்தது. அந்நீர்ப்பெருக்கினைத் தடுப்பதற்காக வைக்கோல்புரிகளை மணல் கோட்டைகளாக அமைத்துத் தடுத்துள்ளனர்.

இப்பாடலில் பதப்பர் என்ற சொல் நீர்ப்பெருக்கத் தடுப்பதற்கான மணற் கோட்டைச் சுவரைக் குறிக்கிறது. மணலானது வெள்ளத்தில் கரையாமல் இருக்க வைக்கோல்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

கரும்புகழிகளையும் வைக்கோற்குரிகளையும் பயன்படுத்தி வெள்ளத்தடுப்பு முறைகளை மேற்கொண்ட தமிழர்களின் நுட்பக் கட்டுமானத்திறனைப் பறைசாற்றுகிறது. இன்றளவும் கடல் ஆறு மற்றும்மழையினால் பெருகி வரும் நீரைத்தடுக்க மணல் மூட்டைகளைப் பயன்படுத்தி கரையை ஏற்படுத்தும் வழக்கம் இருக்கின்றது. உழுகின்ற வயலில் மழைப்பொழியும் பொழுது அதிக நீர் வெளியேறி உடைப்புத் தோன்றும்.அப்பொழுது உடைப்பை அடைப்பதற்காக துள்ளிக் குதிக்கும் மீன்களைக் கொண்டு கரைகளை எழுப்பி அடைத்துள்ளதை

**“தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து**

**மீனின் செறக்கும் யாணர்ப்**

**பயன்திகழ் வைப்பின் பிறர் அகன்தலை நடே”**[93]

வெள்ளம் பெருகி ஓடி வருகின்ற பொழுது அதனைத் தடுக்க மண் தடுப்புகள் இல்லாமையால் மீன்களை அடைக்கும் வருவாயை பகைவர் நாடுகள் என்பதில் அக்கால மன்னர்கள் செங்கோலாட்சி செலுத்தியதால் மாதம் மும்மாரிப் பொழிந்து அதனால் நீர் மற்றும் மீன் வளங்களும் செழித்துக் காணப்படுவதை உணரலாம்.

### 5.9.11 நீர்க்கசிவினைத் தடுத்தல்

ஏரி ஆறு குளங்களுக்கு கரைகளை அமைக்கும் போது பெரு வெள்ளங்காலங்களில் கரைகளில் நீர்க்கசிவினால் உடைப்புத்தோன்றும். அப்போது அதைத் தடுப்பதற்கு அரைமண் என்ற கலவையைப் பயன் படுத்தி உள்ளனர். இது தமிழர்கள் கட்டுமானத்தில் சிறந்த நுட்பமாகும். அரைமண் என்பது நிலத்திலுள்ள மண்ணைக் குறிக்கிறது.

**“எழுவிட்டு அமைத்த திண்நிலைக் கதவின்**

**அரைமண் இஞ்சி நாட்கொடி நுடங்கும்”[94]**

அரைத்த மண்ணினால் ஆன மதில்களை கட்டி உள்ளதாக புறநானூறு குறிப்பிடுகிறது.தற்போதுள்ள சிமெண்ட் கலவையை ஒப்பு நோக்கத்தக்கது.

அரைமண்ணைக் கொண்டு கரையமைத்து சில இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்தி நீர்க்கசிவினைத் தடுத்து இருக்கலாம். ஆனால் சங்கப்பாடல்களில் குறிப்புகள் காணப்படவில்லை.

## 5.10 நீரைப்பயன்படுத்துதல்

வேளாண்தொழிலுக்கு ஆதாரமாக இருப்பது மழைநீராகும் என்பதை நன்கறிந்த சங்ககால மக்கள் பருவமழை பெய்யும் காலங்களில், வேளாண்மை செய்தல் பொருட்டு ஆங்காங்கே குளங்கள் வெட்டி, மழைநீரைச் சேமித்து வைத்தனர். பருவமழைப்பொய்த்த காலங்களில் அக்குளத்திலுள்ள நீரைக் கொண்டு தொழில் செய்து தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொண்டதற்கான பதிவாக,

“…………

**குணகடல் கொண்டு**

**குடகடல் முற்றி”**[95]

இப்பாடலில் மேகங்கள் கீழ்த்திசைக்கடலில் நீரைமுகந்து, மேற்றிசைக் கடலருகேயுள்ள மலைப்பகுதிகளில் தங்கின. இரவும், பகலும் எங்குச் செல்வது என அறியாமல் பள்ளமும் மேடுமாகிய பல நிலப்பகுதிகளில் உள்ள நீருடன் திரண்டு எழுந்தன. கவலைக் கிழங்கு தோண்டிய அழகிய குழிகளில் மழைநீர் வீழ்ந்தது. மழைநீரால் அருவிகள் பெருகி ஒலித்தன. மூங்கில் வளர்ந்த மலைப்பகுதிகளில் வாழும் யானைக் கூட்டங்கள், நடுங்குமாறு ஒலிக்கும் இடியுடன் பரந்து சிதறிப் பெருமழைப்பெய்தது.

ஆறுகள் மழையின் பெருவெள்ளத்தைத் தாங்க இயலாமையால், ஆற்றிடைக் குளங்களில் ஓங்கிப் பெருகிற்று. அவ்வாறு வரும் நிறத்தை உடைய மழைநீர் இடைப்பட்ட குளங்களை நிறைத்து கீழ்த்திசைக்கடலை நோக்கிப்பரந்து சென்றது. முன்பு கிழங்கு எடுத்தக் குழிகளை மழைநீர் நிரப்பியது.

இங்கு, குளங்களை மழைநீர் நிரப்பியது என்ற பதிவின் மூலம் தொடக்க நிலையில் இயற்கையான குழிகளில் மழைநீர் தேங்கியதை உணர்ந்த மனிதன் அதன் காரணமாகக் குளங்களை வெட்டத் தலைப்பட்டு, குளங்களின் மூலம் மழைக்காலங்களில் பெய்யும் அதிக அளவிலான மழையால் மழை நீரைச் சேமித்துப் பயன் படுத்தியத்திறனை தெளிவாக அறிய முடிகின்றது.

### 5.10.1 நீருண்துறை

**“உண்துறை என்பதற்கு உண்ணும் நீர் கொள்ளும் நீர்த்துறை என்று பொருள் வழங்குகிறது”**[96] இவ்வகை உண்துறையை இலக்கியங்கள் பரவலாகக் காட்டுகின்றன. நீரின் பயன்பாடு கருதி, இயற்கை நீர்நிலைகளான அருவி போன்றவற்றிலிருந்து நீர் பெறும் தொழில்நுட்பத்தோடு இந்நீருண்துறைகள் வடிவமைக்கப்பட்டிருந்தன. இத்துறையில் தெள்ளிய

நீரினையும், பாசிபடர்ந்த நீரினையும் அருவியில் அடித்துவரப்படும் மலைபடுபொருள்களோடும் கூடிய நீரினையும் காண முடிகிறது இத்துறையில் குடிநீர்த் தேவையானது பூர்த்திச் செய்யப்படுகிறது. மலையிடத்து பூத்தப்பூக்களைத் தலைநீர் கொண்டு வந்து ஒதுக்குதலையும் காண முடிகிறது. இதனை,

**"கொண்டி பெறுக! என் றோனே உண்துறை**

**மலைஅலர் அணியும் தலைநீர் நாடன்"**[97]

என்ற புறப்பாடலின் வழி அறிய முடிகிறது. தொழில்நுட்பங்களை கண்டுபிடிக்கவும் வளர்த்தெடுக்கவும் உதவின.

### 5.10.2 நீர் சுத்திகரிப்பு

மழை ஆறுகளில் இருக்கும் நீரானது இயற்கையாகவே நன்னீராகவும் தூய்மையுடையதாகவும் இருக்கும் ஆற்றுநீர் மணல்களுக்கு இடையே அடித்துச் செல்லும் போது அதிலுள்ள மாசுக்கள் மண்ணால் உறிஞ்சப்படும். ஆனால் அவ்வாறு ஊற்று நீராக இருந்தால் களிமண்ணோடு கலந்து கிடைக்கும் அதனைக் குடிப்பது ஏதுவாக இருக்காது.அந்நீரினை தெளியச் செய்ய தமிழ்கள் கண்டறிந்த உத்தி முறை தேற்றாங்கொட்டை.

**கலங்கிய நீரினைத் தூய்மையாக்கும் திறன் தேற்றா கொட்டைக்கு உண்டு. இதன் தாவரவியல் பெயர் Strychnos Potatorum ஆகும். ஆங்கிலத்தில் Clearing nut tree என்றழைப்பர்.கலங்கல் நீரைத் தெளியச் செய்யும் விதையாகும். வீடுகளில் கலங்கிய நீரானாலும் நிலக்கரி சுரங்களில் கரிப்பொடிகலந்த நீரானாலும் தெளிய வைக்கும் பண்புடைய கொட்டை இதுவாகும்.கொட்டையை சிறிது தேய்த்துக் கலந்தால் நீரிலுள்ள கொல்லாய்டல் பொருட்கள் என்ற மிதக்கும் பொருட்கள் படிந்துவிடும். கண்மாய்களில் தேக்கிய நீரைக்குடிநீராகப் பயன்படுத்தும் இடங்களில் தொன்று தொட்டு சட்டியில் தேற்றான்கொட்டையைத் தேய்ப்பது வழக்கம் சில நிமிடங்களில் நீர் தெளிந்து கசடு நீரில் மிதக்கும் . அதனை கண்ணுற்றஆங்கிலேயப் படையின் அதிகாரி கர்னல்ட்ருயரி கிபி இல்**

**மழைகாலத்தில் ஆங்கிலேயப் படைகள் முகாமிடும் இடங்களிலெல்லாம் தேற்றாங்கொட்டையைப் பரிந்துரைத்துள்ளான் என்பது வரலாற்று செய்தி**[98]

### 5.10.3 இல்லமரம்

தேற்றா மரம் பற்றிய குறிப்புகளும் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது.

தேற்றாமரம் என்பதை சங்கப்பாடல்கள் இல்லமரம் , மனைமாமரம் என்ற இரு சொல்லாட்சிகளில் வழங்குகின்றன.

**“முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு**
**பைங்கால் கொன்றை மென்பிணி அவிழ**
**இரும்பு திரிந்தன்ன மாஇரு மருப்பின்**
**பரல்அவல் அடைய”**[99]

**“ஆய்பொன் அவிர்இழை தூக்கி அன்ன**
**நீடுணர்க் பொன்றை கவின்பெற காடுஉடன்**
**சுடர்புரை தோன்றி புதல்வனைக் கொளாஅ”**[100]

**“முல்லை இல்லமொடு மலர”**[101]

**“குல்லை குளவி கூதளம் குவளை**
**இல்லமொடு மடைந்த ஈர்ந்தண் கண்ணியன”**[102]

இப்பாடல்களில் இல்லம் என்ற சொல்லுக்கு தேற்றாமரத்தைக் குறிப்பிடுகிறது. முல்லை நிலத்தில் வளரக்கூடிய மரமாகும். கார்காலத்தில் மழைபொழியும் போது அம்மரத்தின் மொட்டுக்கள் மலர்கின்றன . முல்லை தேற்றா மொட்டுக்கள் காடு முழுவதும் மலர்வதால் பொலிவுடன் விளங்குகின்றது. மேலும் காட்டுமல்லிகை , கூதாளி , குவளை , தேற்றா ஆகிய மலர்களால் கட்டப்பெற்ற குளிர்ச்சியான மாலையை அணிந்த தலைவன் என்கிறது.

**“எவ்வி இழந்த வறுமை யாழ்ப்பாணர்**
**பூஇல் வறுந்தலை போரப் புல்லென்று**

**இனைமதி வாழியர் நெஞ்சே மனைமரத்து**

**எல்லுறும் மௌவல் நாறும்**

**பல்அருங் கூந்தல் யாரளோ நமக்கே?”[103]**

**“வண்டு அறைஇய சண்பகநிரை தண்பதம்**

**மனைமாமரம்..............”[104]**

இல்ல மரத்தின் நசுக்கப்பட்ட விதை கலங்கிய நீரின் அழுக்குகளைக் கீழே ஈர்த்துத் தூய்மையாக்கும் என்று கூறப்பட்டுள்ளது.

முல்லை மற்றும் மருத இல்லங்களில் வளர்க்கப்பட்டதால் இப்பெயர் பெற்றது. இதனை கேரளாவில் மருத்துவத்திற்குப் பயன்படுத்துகின்றனர்

கலித்தொகைப் பாடலில்

**“நல்கிய கேள்வன் இவன் மன்ற மெல்ல**

**மணியுள் பரந்த நீர்போலத் துணிவாம்**

**கவம் சிதை இல்லத்துக் காழ்கொண்டுதேற்றக்**

**கலங்கிய நீர்போலத் தெளிந்து நலம் பெற்றாள்**

**நல எழில் மார்பசைன் சார்ந்து”[105]**

தலைவி தலைவனது மார்பினைத் தழுவியவுடன் தேற்றாங்கொட்டையால் தெளிவிக்கப்பட்ட தண்ணீரைப் போல துன்பம் நீங்கினாள் என்று குறிப்பிடுகிறது.

இன்று நாம் Aquva water Purifier மூலம் நீர்சுத்தம் செய்யும் செயற்கை இயந்திரவியல் முறையை பழங்காலத்தில் இயற்கை முறையில் தமிழர்கள் செய்துள்ளனர்.

5.10.4 **நன்னீரைப் பருகும் விழிப்புணர்வு**

குடிநீரைத் தேர்ந்தெடுத்து அருந்துவதில் மிகவும் விழிப்புணர்வுடன் செயல் பட்டுள்ளனர்.மாசுக்கலந்த நீர் உடலுக்கு பல நோய்களை உருவாக்கி உயிரிழப்பைத் தோற்றுவிக்கும் என்பதால் நன்னீரை

அருந்தியுள்ளனர்.அறிவியல் முறைப்படி உவர் நீரானது நீர்வேட்கைத் தணிக்காது என்பதையும் உணர்ந்திருந்தனர்.

**“தெண்நீர்ப் பரப்பின் இமிழ்திரைப்பெருங்கடல்**
**உண்ணார் ஆகுப.நீர்வேட்டோரே**
**ஆவும்மாவும் சென்று உண கலங்கி**
**சேற்றோடு பட்டசிறுமைத்து ஆயினும்**
**உண்ணீர் மருங்கின் அதர்பல ஆகும்”**[106]

மிகப்பரந்து பட்ட கடலின் நீரை நீர்வேட்கை உள்ளோர் குடிப்பதில்லை பசுக்களும் மற்ற விலங்குகளும் பலமுறை குடித்த நீரானது கலங்கல் உடையாத இருப்பதால் தூய்மையான நீர் கிடைக்கும் இடங்களைக் கண்டறிந்து அருந்தியுள்ளனர்.

**“அமிழ்தின் மிசைந்துகாய்பசி நீங்கி**
**நல்மரம் நளிய நறுந்தண் சாரல்**
**கல்மிசை அருவி தண்ணெப் பருகி”**[107]

மலையிலிருந்து வீழும் அருவி பல மரங்கள் மற்றும் தாவரங்களின் மூலிகைகளால் அடித்து வரும் பொழுது உடல் வலிகளைப் போக்கி புத்துணர்ச்சியைத் தரும் என்பதால் அருவி நீரைப்பருகி நீர்வேட்கையைத் தணித்துக் கொண்டதாகக் குறிப்பிடுகின்றது.குளம் குட்டைகளில் தேங்கி இருக்கும் நீரில் பல கண்ணுக்குத்தெரியாத நுண்ணுயிர்கள் இருக்கும் .அவை உடலுக்கு தீங்கு விளைவிக்கும் என்பதால் மலைநீரினை அருந்தியுள்ளனர் என்பரை அறிய முடிகின்றது

### 5.10.5 சேமச்செப்பு

பழந்தமிழர்கள் சேமசெப்பு என்ற பெயரில் வெப்பக்குடுவையைப் (பிளாஸ்க்) பயன்படுத்தியுள்ளனர். இன்று அடைந்திருக்கும் அறிவியல் வளர்ச்சியில் சங்ககால மக்கள் மேம்பட்டுள்ளனர்.

**“அற்சிர வெய்ய வெப்பத்தண்ணீர்**

**சேமசெப்பில் பெறீஇயரோ”**[108]

என்பதில் சேமச்செப்பு மூங்கிலால் செய்யப்பட்ட குழாயைத் துளை செய்து வெப்பமான நீரைப் பாதுகாக்கும் குப்பி என்கிறது.முன்பனிக்காலங்களில் நீர் குளிர்ச்சி அடைந்து குடிப்பதற்கு ஏற்ற வகையில் உருவாக்கியுள்ளனர்.

### 5.10.6 குறுநீர்க்கன்னல்

காலத்தைக் கணக்கிடுவதற்காக பழந்தமிழர்கள் கையாண்ட உத்தி முறையாகும்.அதனை நாழிகை வட்டில் நாழிகை உணர்த்தும் கருவி என்றழைக்கப்படுகிறது.கடாரம் என்ற நீர் பெய்து வைக்கும் பாத்திரத்தின் அடியில் சிறு துளையிட்டு அதில் நீர்கசியும் அளவைக்கொண்டு காலத்தைக் அறிந்துள்ளனர்.

**“பொழுதுஅளந் தறியும் பொய்யா மாக்கள்**

**தொழுகாண் கையர் தோன்ற வாழ்த்தி**

**எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்**

**குறுநீர்க்கன்னல் இனைத்தென்று இசைப்ப”**[109]

**“வேதா ளிகரோடு நாழிகை இசைப்ப”** [110]

**“குறுநீர்க்கன்னல் எண்ணுநர்”**[111]

என்பதில் காலத்தைக் கணக்கிட்டுக் கூற நாழிகை கணக்கர்கள் இருந்துள்ளனர்.அவர்கள் நீர் வட்டில் ஒழுகிய பின்பு எஞ்சிய நீர் நிற்கும் கோடுகளை எண்ணிப் பொழுதை அறிந்து கூறியதை அறிய முடிகிறது.

### 5.10.7 சேமிப்புக்கலன்கள்

தமிழர்கள் நீரைச் சேமித்து வைக்கவும் பிற தேவைகளுக்கும் நீர்க்கலன்களை பயன்படுத்தியுள்ளனர்.

தமிழர்கள் புதிய வகை கலன்களை உருவாக்கி அதில் நீரை நிரப்பி பருகியுள்ளனர்.மிடா பிழா குழிசி கடாரம் பச்சைக்குப்பி அகளம் வட்டுச்சாடி

பசுமண்கலம்பொன்கலம் போன்ற கலன்களை புழக்கத்தில் புழங்கியுள்ளனர். அதனைப் பற்றிய செய்திகள் சங்கப்பாடல்களில் அறிய முடிகின்றது.

### 5.10.8 சாடி

**"வல்வாய்ச் சாடியின் வழைச்சு அற விளைந்த**

**வெந்நீர்"[112]**

மருத நிலத்தில் வயலில் விளைந்த நெல்லினை உறுதியான வாயையுடைய பெரிய சாடியில் அதைப் போட்டு வெந்நீர் ஊற்றி வேக வைத்துள்ளனர். சாடி வெப்பத்தை ஏற்கும் திறன் பெற்றதாக உள்ளதை அறியலாம்.

### 5.10.9 அகளம்

**"அகளம் என்பது நீர் மொள்ளும்சால் ஆகும்.**

**அகளத்த அன்ன நிறைகளைப் புறவில"[113]**

என்பதில் கலன்களில் சேமித்த நீரை உபயோகப்படுத்த பயன்பட்ட சால் ஆகும்.தற்காலத்தில் இது சொம்பு என்றழைக்கப்படுகிறது.

### 5.10.10 கடாரம்

தமிழர்களின் மழைநீரைப் பெய்து வைக்க பயன்படுத்திய உலோகக்கலனாகும்.

### 5.10.11 குழிசி, தாழி, பசுமண்கலம்

பழந்தமிழர்கள் களிமண்ணால் செய்யப்பட்ட பானைகளை நீர்ப் பிடித்து வைக்கவும் சமையலுக்கும் பயன்படுத்தியுள்ளனர். மண்சட்டியை பானை கலம் குடம் தாழி குழிசி தசும்பு பசுமண்கலம் எனப் பல வடிவங்களில் அமைத்துள்ளனர்.மேலும் கோடைகாலத்தில் மண்பானையில் ஊற்றும் நீரானது குளிர்வடையும். பானைகளில் சமைக்கப்படும் சோறும் அதில் நிரப்பப்படும் நீரும் தனிச்சுவையுடன் இருக்கும்.

களிமண்ணால் செய்த மண்பானையில் நீரை ஊற்றி காலம்தாழ்த்தி வைக்கும் பொழுது நீரிலுள்ள மாசுக்களை உறிஞ்சிக் கொண்டு நீருக்கு

மண் சக்தி கிடைக்கும் எனவே உலகத்திலேயே நீரை தூய்மைச் செய்யும் கலனாக மண்பானைத் திகழ்கின்றது. அதனால் பழந்தமிழர் மண்ணா ஆனால் கலன்களைப் பெரிதும் பயன்படுத்தியுள்ளனர்.

**“மான் தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள் தயிர்**

**கொடு வந்த தசும்பும் நிறை”**[114]

காட்டில் வேட்டையாடிய வேடுவன் மான்கறியை வட்டிலே கொண்டு வந்து கொடுக்கிறான். அதற்குப் பதிலாக தயிரை பானையில் கொண்டு தருவாள் என்பதை தெரிவிக்கிறது இந்த பாடல்.

**“பெயர்நீர்க்கு ஏற்ற பசுங்கலம் போல”**[115]

மழைநீரினை சேகரிக்க சுடப்படாத மண்கலத்தைக் கொண்டு சேமித்துள்ளனர்.

**“ஓங்குநிலைத் தாழி மல்கச் சார்த்தி**

**குடைஅடை நீரின் மடையினள் எடுத்த”**[115]

வீடுகளில் வளர்க்கப்படும் வயலைச் செடிக்கு நீர் ஊற்ற தாழியைப் பயன்படுத்தியுள்ளனர்.

பனங்குடைகளில் நீரினை முகந்து கலன்களை நிரப்பி பானைகளிலும் குடங்களிலும் இல்லத்திற்கு கொண்டு வந்ததை அகநானூறு குறிப்பிடுகிறது. மண் மற்றும் உலோகத்தால் செய்யப்பட்ட கலன்களை சமையலுக்கும் நீரைச்சேமித்து வைக்கவும் செய்தனர் என்பது தெளிவாகின்றது.

## தொகுப்புரை

தமிழர்கள் நீர்த்தேக்கத்திற்காக மடை, மதகு, ஏரி, அணை போன்ற அமைப்புகளை உருவாக்கிப் பயன்படுத்திய விதமும், இல்லங்களில் நீரினை சேகரிக்கும் முறைகளும் ஆராயப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1.பரி-2 5-12

2.புறம்-2

3.புறம்-114

4.தொல்-மரபு-1

5.நாலடி: 179:1-2

6.நாலடி:115:3-4

7.புறம் : 18: 22-23

8.மேலது : 390: 23-24

9.புறம் : 142: 1-3

10.மேலது : 118: 1-3

11.புறம் : 161: 1-4

12.நெடு 95-98

13.நற்-3308-9

14.புறம்.271:1-2

15.அகம் 17-16

16.தனிநாயக அடிகள், நிலஅமைப்பும் தமிழ்க்கவிதையும் ப.52

17.நீர்மேலாண்மை-ப.52

18.பழ.கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப. 64

19.சிறுபஞ்சமூலம்

20.தமிழக பாசன வரலாறு-ப-64

21.புறம் -4

22.தமிழ் ஆய்வுக்கட்டுரைகள் -ப- 12

23.பரி-35-39

24.சிலம்பு-204

25.அகம்-237

26.புறம்-33

27.குறள் காதற்சிறப்பு உரைதல் 1121

28.அகம்-346-8

29.தொல்.புறம்:7-7

30.மது-724-726

31..புறம்.263: 8

32.பரி-43-49

33.ம.ப.க 474 - 477

34..பொரு-த.பா -1

35.பழ. கோமதிநாயகம்., தமிழக பாசன வரலாறு. ப. 64

36.ப.பா-34-36

37.முனைவர் பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப.20

38.பரி.6:82-83

39.பரி.12:83

40. முனைவர் பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப.26

41.பரி-67

42.நற்-340-3

43.பரி-6-82

44.புறம்-42-13

45.புறம் -326 - 8 -9

46.பரி-66

47.அகம்-110

48.பரி-55-56

49.பரி -22-24

50.பரி- 16-20

51.பரி- 20 12-26

52.பரி 20-104

53.மணி-அறவாணன் காதை -384-87

54.சிலம்பு

55.நற்-6-1

56.அகம்-163-10-11

52.புறம்-24-18-20

57.ம..கா-89-94

58.சிலம்பு நாடு காண் காதை-110-111

59.புறம்-371-20

60.அகம் 275

61.பரி.6:22-24

62.பரி-10-9-8

63.பதிற்.22:28

64.முனைவர் பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப.59

65.புறம்.7:11-12

66.ஆ. மணவழகன், சங்க இலக்கியத்தில் மேலாண்மை. பக். 41-42

67.அகம்.252:9-13

68.பெரு. -272-273

69.பெரு -273-274

70.நெடு -76

71.ப.ப -58-6

72.ப.பா-283-84

73.புறம்.42:19-20

74.புறம்.9:10-11

75.மலை-527-528

76.பொரு.232-239

77.புறம்.393:22-23

78.புறம்.385:8-9

79.புறம்.35:6-11

80.அ. மார்க்ஸ், ஆரியருக்கு முற்பட்ட தமிழ் பண்பாடு. பக். 25-26

81.புறம்.400:21-22

82.பெரும்-429-433

83.புறம்.71:9-10

84.பரி.11:31-34

85.பட்-284

86.புறம்.18:28

87.மதுரை-238-246

88.பெரும-107-108

89.பரி.7-1-3

90.குறு-368-5-8

91.குறு -149-3-4

92.ப.ப6-19

93புறம்-7

94.புறம்-341-5

95.மதுரை. 238-246

96.சங்க இலக்கிய பொருட்களஞ்சியம் (ப. 332)

97.மதுரை. 319-1-4

98.தமிழ் ஆய்வுக் கட்டுரைகள் ப.59

99.அகம்-4

100.ம.கா-445

101.அகம் 364

102.நற்றி 376

103.குறுந் -19

104.பரி 11-19

105.கலி60-66

106.புறம்-204

107.புறம்-150

108.குறு-77

109.முல்-55-59

110.அகம்-43-6

111.பெரு-280

112.மலை-104

113.புறம்-33

114.குறு-9

115.அகம்-275

# இயல் - 6

## ஆய்வு முடிவுகள்

**சங்க இலக்கியத்தில் நீர்வளம்** என்ற பொருண்மையில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் முடிவுகள் கீழே தரப்படுகின்றது. தமிழரின் அடையாளமாக விளங்குவது சங்க இலக்கியம் அறமும் இன்பமும் சேர்ந்த நூல் சங்க இலக்கியம், எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் சங்க இலக்கியங்கள் ஆகும். தொகையென்பது பல புலவர்கள் பாடிய பாடல்களைக் கொண்ட நூல் பாட்டு என்பது தனி ஒரு புலவர் பாடியது. நிலத்தை அடிப்படையாகக் கொண்டு தான் பருவநிலை மாற்றங்கள் தோன்றுகின்றன. நிலம், பருவ நிலை தான் மனிதனின் தேவையை நிறைவு செய்கின்றன. பழந்தமிழர் இலக்கியம் வாழ்வு அகம், புறம் என்று வகைப்படுத்தப்பட்டு இருந்தன. ஒத்த அறிவு, அன்பு, ஆற்றலுடைய தலைவனும் தலைவியும் ஊழின் வழியே கூடித்துய்த்த இன்பத்தை தாமே அகத்தில் உணர்ந்து பிறர்க்கு இன்னது என்று எடுத்துக் கூற இயலாதவாறு விளங்குவது அகப்பொருள். ஒத்த அன்பினரேயன்றிப் பிறரும் துய்த்து உணர்வதும், இவ்வாறு இறந்தது என்று பிறர்க்கு கூறுவது புறப்பொருள். ஒரு மனிதன் பல நாட்கள் உண்ணாமல் கூட உயிர் வாழ்ந்துவிட முடியும். நீர் அருந்தாமல் சில நாட்களை தாண்டுவதே கடினம். தங்களுக்குத் தேவையான குடிநீரைத் தேங்கியிருக்கும் , நீர்நிலைகளிலும் ஓடும் நீர்நிலைகளிலும் எடுத்துப் பயனப்படுத்தினர். மழைப்பெய்தாலும், பெய்யாவிட்டாலும் நெய்தல்நில மக்களுக்குக் கவலை இல்லை. எந்த நிலப்பகுதியின் நீர் வற்றினாலும் கடல் நீர் வற்றுதல் இல்லை. வறட்சி என்பது கடல் அறியாது. நல்லநிலம், நல்லவிதை, நல்லநீர், நல்ல காலச்சூழல், நல்லஇடுபொருள், நல்லகாப்பு போன்றவற்றில் பழந்தமிழர்கள் தேர்ந்தவர்களாக இருந்தனர். சங்ககாலத்தில் நீரைச்சேமிக்கக் குளம், ஆறு போன்ற ஆதாரங்களை ஏற்படுத்தினர். ஊருக்கு மிக அருகில் ஆறும், பொய்கையும் இருந்தது. குறிஞ்சிநிலத்தில் வாழும் மக்கள் சுனைநீரையும் அருவிநீரையும் தங்களது பயிர்த்தொழிலுக்கும் பயன்படுத்தினர். பண்டைத் தமிழர் நீர்நிலைகளை அமைக்கும் இடங்களை தெரிவு செய்வதில்

வல்லவர்களாக விளங்கினர். பள்ளமான பகுதிகளே அன்றி, குளம் அமைத்து வளத்தைப் பெருக்கினர். நீர்நிலைகள் இலஞ்சி, கேணி, கோட்டாம், ஏரி, மலங்கள், மடு, ஓடை, வாவி, சலந்தாம், வட்டம், தடாகம், நளினி, பொய்கை, குப்பம், கிடங்கு, சுனை, குளம், கண்மாய் என்று பல்வேறு பெயர்களால் அழைத்தனர். பரதவர்கள் சங்கக்காலத்திலேயே கடற்கரையில் பேராதிக்கம் கொண்டு வாழ்ந்தார்கள் என்பதைச் சங்கப் பாடல்கள் விளக்குகின்றன. மேலும் அவர்கள் செல்வமும், செல்வாக்கும் படைத்தவர்களாய் கடல் வாணிகத்தில் ஈடுபட்டு இருந்தனர். பல்வகை பண்டங்களை ஏற்றுமதி மற்றும் இறக்குமதி செய்கின்ற வாணிகத் தொழிலில் ஈடுபட்டனர். பண்டையத் தமிழர் வாணிபம் கடலோடு நெருங்கிய தொடர்புடையதாகும். தமிழகத்தில் கழனிகளை வளமாக்கும் காவிரி, வையை, பொருநை, பொன்னையாறு, பேரியாறு, சேயாறு, அயிரியாறு, எனப் பல்வேறு ஆறுகள் காணப்பட்டன. நீரின் வழியாக குதிரைகளும், யவன நாட்டுச் செல்வங்களும் அரேபிய நாட்டு நறுமணப்பொருள்களும் அழகிய ஆடைகளும் ஈழத்து உணவு போன்ற பல்வேறு பொருள்களும் வந்து இயங்கின. முத்து, சங்கு, மிளகு, கோதுமை போன்றவை வெளிநாட்டிற்கு அனுப்பி வைக்கப்பட்டன.

வறட்சி என்பது நீர் மற்றும் நிலவாழ் விலங்குகள், மனிதர்கள் உயிரினங்கள் பாதிக்கப்பட்டு உயிர் சூழ் நிலையில் மாற்றங்கள் உருவாகும் என்பது புலனாகின்றது. வறட்சி என்ற சொல்லுக்கு வரட்சி எனவும் அழைக்கலாம் என்றும் வறட்சி என்றாலே அது நீர்வறட்சியை மட்டுமே குறிக்கும் என்பது அறிஞர் தம் கருத்துக்களின் வழி அறியமுடிகின்றது. குறைந்த மழைப்பொழிவினால் உழவுத்தொழில் பாதிக்கப்படும் வறட்சியினால் மக்களின் வாழ்வு பாதிக்கப்படும் என்பதை அறிய முடிகின்றது. நீரின்றி அமையாது உலகு என்பவற்றிற்கேற்ப பஞ்சம் என்பது மழை பெய்து தானியங்கள் விளையாததோடு பணம் கொடுத்தாலும் உணவு கிடைக்காத நிலையாகும் என்பது புலப்படுகின்றது.

சங்ககால மக்கள் இயற்கையின் தன்மைகளாகிய தட்பவெப்ப நிலைகளை அறிந்தவர்களாகவும், அதன் இயல்புகளுக்கு ஏற்ப விளைவுகளையும், பூமி வெப்பமாதலின் காரணத்தால் மக்கள் சந்தித்த

துன்பங்களையும் சங்க இலக்கியப் பாடல்களில் காணமுடிகிறது. மழைபொழியாமல் இருந்தால் அந்த இடம் வறண்ட அல்லது வறட்சிப் பகுதி எனப்பெயர் பெறும் என்பதை அறியமுடிகின்றது. வறட்சி என்பது நீரின்மையால் ஏற்படும் தன்மையே என்பதைத் தெளிவாக உணரமுடிகிறது.

முல்லை குறிஞ்சி நிலங்கள் தம்மியல்பு நிலையிலிருந்து மாறி மக்களின் வாழ்வியலைப் பாதிப்பதைக் காணமுடிகின்றது.கோடைக்காலம் நீட்டித்து நின்ற பசுமையற்ற காலம். மழை பெய்யாது பொய்த்தமையால் நாட்டில் வறட்சி மிகுந்தது என்பதை அறிய முடிகின்றது. வறட்சியின் காரணமாக குன்றுகளைக் கண்டால் ஒத்தப் பெரிய கரைகளையுடைய குளங்களில் வெயில் காய உள்ளே நீர் இன்மையால் பறவைகள் வந்து தங்குதல் ஒழிந்தன வென்று வெப்பம் நீடித்தலால் வறட்சி ஏற்பட்டு மண்ணுயிர்கள் வருந்துகின்ற நிலையினை அறியமுடிகின்றது. இயற்கையாகிய ஞாயிறு தம் இயல்பில் இருந்து மாறுபடும் பொழுது பேரிடர்கள் ஏற்படும் அப்பேரிடரில் மக்கள் மற்றும் நீர்வளங்களையும் இழக்கும் நிலை ஏற்படும் என்பதைக் குறிப்பினால் அறியமுடிகின்றது. வறட்சியினால் மக்கள் வாழ்வதற்கு தகுதியற்ற நிலமாகவே பாலை நிலம் சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ளது.பாலை நால்நிலத்தின் முதல் கரு உரிப்பொருளின் வெளிப்பாடகவே உள்ளதை அறிய முடிகின்றது. மழைநீரின்மை மண்ணின் நீர்ப்பிடிப்புத்தன்மையின் நிலத்தடிநீரின்மை நீர்நிலைகளின்மை பயிர் உற்பத்தியின்மை போன்ற பருவநிலை மாற்றக் காரணிகளால் இயற்கைவறட்சி தோன்றுவதை அறிய முடிகின்றது. கடற்கோள் . ஊழிக்காலம் என்ற இருபெருநிலைகளும் நீரால் தோன்றக் கூடிய பேரழிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. மனிதனால் உருவான செயற்கைவறட்சியில் நீர்நிலைகள் மாசுபடுதல் நீர்நிலைகளை அழித்தல் காடுகளை அழித்தல் பெரும்பாலும் பங்கு வகிக்கின்றது. தோல்வியடைந்த மன்னனின் ஊர்களிலுள்ள நீர்நிலைகளும், இயற்கைவளங்களும் அழிவினைச் சந்தித்து வறண்டநிலைக் காணப்படும் என்பது புலப்படுகின்றது.

மனித ஆளுகையினால் இயற்கைச்சார்ந்த விலங்குகளும் அழிக்கப்பட்டு வறட்சிநிலையினை ஏற்படுத்தியுள்ளனர் என்பது

புலப்படுகின்றது. இயற்கைவறட்சி ஏற்படும் காலங்களில் தோன்றும் நீர்ப்பற்றாக்குறையை நீக்க செடி ,கொடி , மரவகைளை உருவாக்கியதையும் , இதைக் கண்டறிந்து தமிழர்கள் பயன்படுத்தியதையும் அறிய முடிகின்றது. தமிழர் நெறிகளில் பகிர்ந்துண்ணும் பண்பு , பண்டமாற்று முறை , பண்டகசாலை போன்றன வறட்சிக்காலத்தில் உதவியுள்ளது. சங்கஇலக்கியங்களில் நீர்வளம் மிகுந்து காணப்பட்டது. ஆகவே வறட்சி என்பது இருந்தாலும், அவை அதிகமான பாதிப்புகளை ஏற்படுத்தவில்லை. மக்கள் நீர்வளத்தை வறட்சி காலத்திற்கும் ஏற்றவாறு பயன்படுகின்ற அளவில் முக்கியத்துவம் கொடுத்து பாதுகாத்துள்ள தமிழர்களின் வறட்சிமேலாண்மை போற்றத்தக்கதாகும்.

கனியுண்டு காடுசுற்றி, வேட்டையாடித் தசையுண்டு, நெருப்புக்கண்டு சமைத்துண்டு, மழையின் சிறப்புணர்ந்து, விதையின் உயிர்ப்புணர்ந்து, காடு திருத்திக் கழனியாக்கி, நீர்க்கொண்டு உற்பத்தி கண்டு, நாகரிகம் பெற்று வளர்ந்த வளர்ச்சிப்படிநிலைகள் இன்றும் இனியும் தொடர்ந்து நிகழ்வது இயற்கையின் நிர்ணயம். இவ்வளர்ச்சிப் படிநிலைகளை வெற்றிக் கொள்வதற்கு உறுதுணையாக இருப்பது நம்மைச் சுற்றியுள்ள சூழல். பழந்தமிழர்கள் இச்சூழல் குறித்த இணக்கமான கண்ணோட்டம் கொண்டிலங்கினர். அவர்கள் உயிர்க்கு ஆதாரமான நீரைப் போற்றிப் பாதுகாத்தனர். உணவுற்பத்திக்கான சிந்தனை கொண்ட அக்கணமே நீர் மேலாண்மைக்கான விதையும் விதைக்கப்பட்டது. முதலில் மழைப்பொழிவை ஆதாரமாகக் கொண்ட உணவுற்பத்தியை மேற்கொண்டனர். இயற்கையாக ஏற்பட்ட பள்ளங்களில் நிறைந்துள்ள மழைநீர் மழையற்ற காலப் பயன்பாட்டை உறுதிசெய்வதனை உணர்ந்தனர். மழையற்ற காலப் பயன்பாட்டிற்கு நீர் சேமிப்பு அவசியமென்ற சிந்தனை கொண்டனர். இச்சிந்தனையே நீர் மேலாண்மையின் முதல் நிலையாகும்.

அதிகநீரைச் சேமிக்கும் பொருட்டு இயற்கையாக உள்ள பள்ளங்களை ஆழப்படுத்தவும் அகலப்படுத்தவும் செய்தனர். பின்பு ஆற்றுநீரைப் பயன்படுத்தி ஆற்றங்கரை ஓரங்களிலுள்ள நிலங்களில் உழவு செய்தனர். சிறிய ஆற்றுக்கால்களின் அருகில் குளங்களைத் தோண்டி

வெள்ளப்பெருக்குக் காலங்களில் வரும் நீரைத்தேக்கி மழையற்ற கால உணவுஉற்பத்திக்கு வழிகோலினர்.

நிலமும் நீரும் இல்லையெனில் உலகம் இல்லை. சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நிலம், நீரின் தோற்றத்தையும் விவரிக்கிறது. தொல்காப்பியமும் முதல், கரு, உரிப்பொருட்கள் வாயிலாகத் தீர்மானிக்கிறது. உணவு, உடை, உறைவிடம் இவை மூன்றும் உயிர்களின் அடிப்படைத்தேவைகளாகும். இவையனைத்தையும் தீர்மானிக்கும் மூலப்பொருள் நீராகும். அக்காலமக்கள் மழையின் முக்கியத்துவம் உணர்ந்தவர்களாகவும் மழைக்கு ஆதாரமான மரங்கள் மற்றும் அவைசெறிந்த வனங்கள் பேணிப்பாதுகாக்கப்பட வேண்டும் என்ற சிந்தனை கொண்டவர்களாகவும் விளங்கினர். மழைநீர் சேகரிப்பு நிலத்தடிநீர் சேகரிப்பு முறைகளில் வளம் பேணினர். நீரைத்தேக்கி வைக்க சிறந்த தொழில்நுட்பத்துடன் கூடிய ஏரி கற்சிறை போன்ற கட்டுமானங்களை ஏற்படுத்தினர். ஏரி மற்றும் கற்சிறை அமைப்பதிலும் தொழில்நுட்பக் கூறுகளைக் கையாளுவதில் உலகமே போற்றும் வகையில் சிறந்து விளங்கினர் தமிழர்கள். தேக்கிவைத்த நீரை வீணாக்காமல் உணவு உற்பத்திக்குப் பயன்படுத்தி நாட்டின் பஞ்சம் போக்கினர். நீர்நிலைகளைப் பாதுகாக்க காவலர்களை நியமித்திருந்தனர். குறிப்பிட்ட கால இடைவெளியில் தூர்வாரி முறையாகப் பராமரித்தனர்.

கரைகளில் மண்ணரிப்பு ஏற்பட்டுச் சேதமடையாமல் இருக்க மரங்களை வளர்த்தனர். கரைகளில் ஏதேனும் சேதம் ஏற்படின் ஊர்கூடி அதனை உடனடியாகச் சரிசெய்யும் ஒற்றுமையுணர்வு பெற்றிருந்தனர்.பெரிய பரப்பளவு கொண்ட ஆறுகளில் ஏரிகளை அமைத்தல் பொருத்தமுடையது அன்று. அதிக விசையும் கொள்ளளவும் கொண்ட நீரைத்தேக்கிவைக்க மிக்க உறுதியுடைய கட்டுமானம் தேவையென்பதை உணர்ந்து அணைகளை அமைத்தனர். சங்ககாலத்தில் கட்டப்பட்ட அணைகள் அனைத்தும் மிகச் சிறந்த தொழில்நுட்பம் கொண்டு கட்டப்பட்டுள்ளன. இவ்வணைகள் எவ்வித நீர்க்கசிவுமின்றி இன்றளவும் பயன்பட்டு வருவதே இதற்கான சான்றாகும்.

மேலும் பாசனத்திற்குத் தேவையான நீரை அளவாகத் தேவைக்கேற்பத் திறப்பதற்கு மதகு மடை புதவு சுருங்கை போன்ற நீர் வழங்கும் அமைப்புகளை அமைத்தனர். இதன்மூலம் நீர் வீணாகாமல் வருடம் முழுவதும் பயன்படுத்த ஏதுவாக அமைந்தது. மதகுகள் வழியாக வரும் நீரை வயல் வரை கொண்டு சேர்க்க வாய்க்கால்களை அமைத்தனர். பழந்தமிழர்தம் இக்கட்டுமானத் தொழில்நுட்பங்கள் அனைத்தும் நீர் சேமிப்போடு கூடிய வளமான உணவுற்பத்தியை வருடம் முழுவதும் சாத்தியப்படுத்தின. வீணாகும் மழைநீரை முடிந்த அளவு சேமிக்க முயன்றதன் விளைவே ஏரிகள். சிற்றாறுகளைக் கொறம்பிட்டுத் தடுத்து அதனருகேயுள்ள ஏரிகளில் நீரை நிரப்பினர். நில அமைவிற்கும் நீர்க்கால்களின் வரத்திற்கும் ஏற்புடைய பல ஏரி அல்லது குளங்களை ஒன்றன்பின் ஒன்றாக அமைத்தனர். நீரின்றி உலக உயிர்களில்லை, நிலமின்றி நீரின் பயனறிவதில்லை என்பது பழந்தமிழர்களின் அறிநிலை. ஓரிடத்தில் கிடைக்கின்ற நீர் வளத்திற்கும் அப்பகுதியிலுள்ள நிலத்தின் தன்மைக்கும் ஏற்புடைய வேளாண்மைச் செயல்முறைகளால் மிகச் சிறந்த உணவுற்பத்தியினை மேற்கொண்டனர். மண்ணின் தன்மைக்கு ஏற்புடைய பயிர்களைத் தேர்வுசெய்து விதைத்தனர். பழந்தமிழர்கள் நீர்நிலைகளைச் சிறப்புறக் கட்டமைத்து நீரைச் சேமித்ததுடன், அந்நீர்ந நீர்த் தேவைகளுக்காக நீரைப் பயன்படுத்த சேமிப்புக்கலன்களை உருவாக்கினர். முறையாகப் பராமரித்துப் பாதுகாத்தனர். நீர்நிலைகளைப் பாதுகாக்கக் காவலர்களை நியமித்தனர். முறையான கால இடைவெளியில் நீர்நிலைகளைத் தூர்வாரிப் பராமரித்தனர். கரைகளில் ஏற்படும் மண்ணரிப்பைத் தடுக்க கரையோரங்களில் தொகுதியாக மரங்களை வளர்த்தனர். கரைகளில் சேதம் ஏற்படின் ஊர்மக்கள் அனைவரும் ஒன்றுகூடி அதனைச் சரிசெய்தனர். அதனுடன் துய்மையான நீரே உண்ணுதற்கு ஏற்புடையது என்ற விழிப்புணர்வும் அவர்களுக்கு இருந்தது. உண்ணுநீர் பயன்பாட்டிற்கான தனி நீர்த்துறைகளை அமைத்துப் பாதுகாத்தனர். நீர்மாசுபாட்டை நீக்க தேற்றாங்கொட்டை வெந்நீரினை ஊற்ற சேமச்செப்பு நீரை சேமிக்ககலன்கள் நேரத்தைக் கணக்கிட நாழிகை வட்டில் போன்ற பல உத்திகளை கையாண்டு நலத்துடனவாழ்ந்துள்ளனர்.

இவை போன்ற சங்கஇலக்கியப் பதிவுகள் பழந்தமிழர்கள் மிகச் சிறந்த நீர்த்தேக்ககட்டுமான நுட்பங்களிலும், நீர் பங்கீட்டு முறைகளிலும் அறச்சிந்தனையுடையவர்கள் என்பதனைத் தெளிவுறுத்துகின்றன. மேலும் இன்று நாம் பெற்றிருக்கும் அறிவியலையும், தொழில்நுட்பத்தையும், அன்றையத் தமிழர்கள் அறிந்த உண்மையை எண்ணும் பொழுது வியப்பு மேலிடுகிறது.

சங்ககால நீர்ஆதாராங்களின் தொழில்நுட்பத்தை இன்றும் பல இடங்களில் புழக்கத்தில் நீர் ஆதாரங்களைக் குறித்த ஒப்பீட்டு ஆய்வாக மேற்கொள்ளலாம். சங்ககாலத் நீர் ஆதாரங்கள் பற்றிய சொல்லாய்வினை மேற்கொள்ளலாம். நெய்தல், மருதம் போன்ற திணைகளில் நீரினால் ஏற்படும் வாழ்க்கை மாற்றத்தை பிற திணைகளோடு ஒப்பிட்டு ஆராயலாம்.

சங்க இலக்கியம் தவிர்த்து பதிணென் கீழ்கணக்கு நூல்கள் சிலம்பு, மணிமேகலை போன்ற காப்பியங்களின் வழி புலப்படும் நீர் ஆதாரங்களையும், நீர் மேலாண்மைச் சிந்தனைகளையும் ஆராயலாம். நீரினை புலவர்கள் கையாண்ட விதத்தைப்பற்றி ஆராயலாம். கல்வெட்டுகளில் காணப்படும் நீர் குறித்தச் செய்திகளைத் தனி ஆய்வு மேற்கொள்ளலாம்.

# துணைநூற்பட்டியல்

**முதன்மை ஆதாரங்கள்**


1. எட்டுத்தொகை - அறிஞர் ச.வே.சுப்பிரமணியன்,
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை,
சென்னை - 18.
முதற்பதிப்பு-2010

2. பத்துப்பாட்டு - அறிஞர் ச.வே.சுப்பிரமணியன்,
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை,
சென்னை - 18.
முதற்பதிப்பு-2010


**துணைமை ஆதாரங்கள்**


1. அய்யனார்.கே. - புவியியல் அமைப்பு,
தமிழ்நாட்டுப் பாடநூல்,
சென்னை.
பதிப்பு 1978

2. இராசமாணிக்கனார்.மா.டாக்டர் - தமிழக ஆட்சி,
நிலவன் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு-2014

3. கம்பராமாயணம் - இராமாவதாரம்,
கம்பன் கழகம்,
சென்னை.

4. குமரகுருபரஅடிகள் - மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்,
தஞ்சாவூர்,
பதிப்பு -1866.

5. கொங்குவேளிர் - பெருங்கதை,
கழக வெளியீடு,
பதிப்பு-1970.

6. கோமதிநாயகம் .பழ - தமிழக பாசன வரலாறு,
பாவை பப்ளிகேஷன்ஸ் ,
சென்னை,
முதற்பதிப்பு -2010.

7. கோவிந்தன். புலவர்-கா - ஆரியருக்கு முற்பட்ட தமிழ் பண்பாடு
கழக வெளியீடு,
சென்னை -18,
பதிப்பு-1999.

8. கோவிந்தராசன் கோ.தில்லை - சரசுவதி மஹால் நூலகம் மற்றும் ஆய்வு மையம் ,
தஞ்சாவூர்.

9.சண்முகம்பிள்ளை. பேராசிரியர் - சங்கத் தமிழரின் வழிபாடுகளும், சடங்குகளும்
உலகத் தமிழாய்ச்சி நிறுவனம்
சென்னை மறுபதிப்பு 2003

10.சண்முகசுந்தரஞ்செட்டியார்.ரா . - திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி மூலமும் உரையும்,
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
சென்னை,
பதிப்பு-1955

11.சண்முகம். கொடுமுடி . ச - பழந்தமிழர் தொழில்நுட்பத் திறன்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
சென்னை,
முதல்பதிப்பு-1998

12.உ.வே.சாமிநாதஅய்யர்.டாக்டர் - புறநானூறு மூலமும் உரையும்,
நூல்நிலையம்,
சென்னை.
பதிப்பு-1971

13.சம்பத்து . பெருங்குப்பம் சா - நீர்மேலாண்மை,
இரேணுகாம்பாள் பதிப்பகம்,
வேலூர்.
முதற்பதிப்பு - 2016

14.சாரங்கபாணி . இரா - திருக்குறள் இயல்புரை,
ஓம்சக்தி புத்தகாலயம் ,
சிதம்பரம்.
முதற்பதிப்பு -1998

15.சிதம்பரநாத முதலியார் டி.கே - முத்தொள்ளாயிரம் ,
பொதிகை மலைப்பதிப்பு,
திருக்குற்றலாம்,
பதிப்பு - 1957

16.சிவஞானம்.வீ.புலவர் - சுந்தரர் தேவாரம் ,
விஜயா பதிப்பகம்.

17.சிவகாமி.ஆ - உலகாயுதம் ,
தமிழ்ப்புத்தகாலயம்,
சென்னை.

18.சுப்ரமணியன் . டாக்டர்.ச.வே - தொல்காப்பியம் தெளிவுரை,
மணிவாசகர் பதிப்பகம் ,
சென்னை.
முதற்பதிப்பு -1998

19.சுப்பிரமணியன் . அறிஞர் ச.வே. - பதினெண்கீழ்கணக்கு நூல்கள் ,
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை,
சென்னை - 18.
முதற்பதிப்பு-2010

20. சீனிவாசன்.டாக்டர்.ரா - புறநானூறு செய்யுளும் செய்திகளும்,
அணியகம் ,
சென்னை.
முதற்பதிப்பு – 1982

21. செல்வராசு.சிலம்பு. நா - தொல்தமிழர் திருமணமுறைகள் ,
காலச்சுவடு பதிப்பகம் ,
நாகர்கோவில்.
முதற்பதிப்பு -2016

22. நடராஜன். முனைவர்.ப.மு. - நீர்மேலாண்மை,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ,
சென்னை.
முதல்பதிப்பு -2014

23. பாலசுந்தரனார் .அ.கு - திராவிடநாடு முதல்பாகம்,
தனலட்சுமி பதிப்பகம்,
சென்னை.
பதிப்பு-1949

24. பாலசுப்பிரமணியன்.ச.டாக்டர் - நாச்சியார் திருமொழி,
நறுமலர் பதிப்பகம் ,
முதற்பதிப்பு-1994.
சென்னை.

25. பாரதிதாசன் .பாவேந்தர் - பாரதிதாசன் கவிதைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு -1998

26. புலியூர் கேசிகன் - மணிமேகலை,
பாரிநிலையம்,
சென்னை -18.
பதிப்பு-2012

27. பாலையன்.அ.ப. - புறநானூறு மூலமும் உரையும்,
சாரதா பதிப்பகம்,
சென்னை.
நான்காம் பதிப்பு -2012

28. பாலையன்.அ.ப. - பெரியபுராணம் மூலமும் உரையும்,
கௌரா பதிப்பகம்,
பதிப்பு-2019

29. பெருமாள்.வித்துவான் கோ.வே. - பொருநை வளம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி.

30. பூரணச்சந்திரன்.பேரா. தனிநாயக அடிகள் - நிலஅமைப்பும் தமிழ்க்கவிதையும்,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
பதிப்பு-2014

31.மணவழகன். ஆ - சங்க இலக்கியத்தில் மேலாண்மை,
காவ்யா பதிப்பகம்,
பதிப்பு-2011

32.மணிமாறன். முனைவர் - தழிழரின் நீர்மேலாண்மை,
ஏடகம்,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு-2019

33.மாட் விக்டோரியா பார்லோ - நீராதிபத்தியம் எதிர் வெளியீடு,
பொள்ளாச்சி.
முதற்பதிப்பு 2015

34.மாதவன் முனைவர்.வே.இரா - நான்மணிக்கடிகை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

35.மாதையன்.பெ. - சங்க இலக்கியத்தில் குடும்பம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை.
முதற்பதிப்பு 2014

36.மார்க்கபந்து சர்மா எஸ்.ஆர் - குறிஞ்சிக்கலி,
பதிப்பு-1951.

37.முத்து கண்ணப்பன் தி.டாக்டர். - விக்கிரமன் சோழன் உலா,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தஞ்சை.
பதிப்பு-2013.

38 .வரதராசன் .டாக்டர்.மு.வ. - குறுந்தொகை விருந்து,
பாரி நிலையம்,
சென்னை.
பதிப்பு-1956

39.ஜவகர் .க - திணைவெளி,
புதுப்புனல் பதிப்பகம்,
திருநெல்வேலி.
பதிப்பு-1977

40. க.அ.ஜோதிராணி - தமிழா் பண்பாட்டுத் தளத்தில் சடங்குகள், சென்னை தன்னனானே, முதல்பதிப்பு-2004

**அகராதி**

1. கழகப் புலவா் குழுவினா் - கழகத் தமிழ் அகராதி திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட் சென்னை முதற்பதிப்பு -1964

2. இராமகிருஷ்ணன் .எஸ் - கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பதிப்பு-1992

3. சங்கஇலக்கியப் பொருட்களஞ்சியம் - தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர்

4. சண்முகம்பிள்ளை.மு, சுந்தரமூர்த்தி - திவாகரம் சென்னைப் பல்கலைக்கழகம் பதிப்பு-1990

5.பதிப்பாசிரியா் குழு, - கலைக்களஞ்சியம், தொகுதி-10,

6.பிங்கலா் - பிங்கல நிகண்டு சென்னை பதிப்பு-1890

**ஆய்வுக்கட்டுரைகள்**

1. எஸ்.இராமசந்திரன் கட்டுரைகள் - தென்னிந்தியச் சமூக வரலாற்று ஆய்வு நிறுவனம்

2. சுலோச்சனா. முனைவா் - செவ்விலக்கியச் சாரம் உலகத் தழிழாராய்ச்சி நிறுவனம் சென்னை. முதற்பதிப்பு -2014 1982

3. மணிமாறன். முனைவர் - தமிழ் ஆய்வுக் கட்டுரைகள் தொகுதி -1
சரஸ்வதி மஹால் நூலகம்
தஞ்சாவூர்
முதல் பதிப்பு -2014

4. மணிமாறன். முனைவர் - தமிழ் ஆய்வுக்கட்டுரைகள் தொகுதி -2
சரஸ்வதி மஹால் நூலகம்
தஞ்சாவூர்
இரண்டாம் பதிப்பு -2016

5. குறுந்தொகைச் சொற்பொழிவுகள்- கழக வெளியீடு
பதிப்பு-1940

## நிழற்படங்கள்


குளம்
(Bathing tank)


வாய்க்கால்
(Small water course)


சேங்கை
(Tank with duck weed)


குட்டம்
(Large Pond)


வலயம்
(Round tank)


குட்டை
(Small Pond)


குண்டம்/குண்டு
(Small Pool/Pool)


வாளி
(Stream)


கம்மாய் (கண்மாய்)
(Irrigation Tank)


கட்டு கிணக்கிணறு
(Built in well)


பிள்ளைக் கிணறு
(Well in middle of a tank)


உறை கிணறு
(Ring Well)


நடை கேணி
(Large well with steps on one side)


ஏந்தல்
(Water storage only filled with rain wa


தொடு கிணறு
(Dig well)


தாங்கல்
(Irrigation tank)


பொங்கு கிணறு
(Well with bubbling spring)


தமிழி ஊற்று
(Artesian fountain)


கால்வாய்
(Supply channel to a tank)


கூவல்
(Hollow well)


சுனை
(Mountain Pool)


கூவம்
(Abnormal well)


ஓடை
(Brook)


ஆழிக்கிணறு (Well in Seashore)


கலிங்கு
(Weirs)


ஊற்று
(Spring)


மதகு
(Sluice with many venturis)


இலஞ்சி
(Reservoir for drinking and other purposes)


அணை
(Dam)


மடை
(Small sluice with single venturi)


தடாகம்
(Beautifully constructed bathing tank)


சிறை
(Reservoir)

தொகுதி-8 எண் 2
Vol. 8 No. 2



பங்குனி - ஆனி 2051
April - June 2020

ISSN : 2321-984X

# நவீனத் தமிழாய்வு

*(பன்னாட்டுப் பன்முகத் தமிழ் காலாண்டு ஆய்விதழ்)*

*Journal of*

# Modern Thamizh Research

*(A Quarterly International Multilateral Thamizh Journal)*

Arts a[...] Humaniti[...]), Language
Literature and L[...] Theory, Tamil
UGC C[...] Liste[...] Journal



*Published by*
**RAJA PUBLICATIONS**
**No. 10 (Upstair), Ibrahim Nagar, Khajamalai,**
**Tiruchirappalli - 620 023, Tamil Nadu, India.**
**Mobile : 9600535241**
**Website : www.rajapublications.com**

24 பகுதி-2
Part -2

தொகுதி-8 எண் 2
Vol. 8 No. 2

பங்குனி - ஆனி 2051
April - June 2020

ISSN : 2321 - 984X



Published by : **Raja Publications,** No. 10, Upstair, Ibrahim Nagar, Khajamalai, Tiruchirappalli - 620 023, Tamil Nadu, India. Mobile : 9600535241
Printed : **The Printing House,** Tiruchirappalli - 620 023, Tamil Nadu, India. Ph : +91 - 431-2420121

# சங்க இலக்கியப்பாக்களில் ஆறுகள்

இரா. அமுதலட்சுமி
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)
அரசுகலைக் கல்லூரி (தன்னாட்சி), (பெரியார் பல்கலைக்கழகத்துடன் இணைவு பெற்றது),
சேலம்-7, தமிழ்நாடு, இந்தியா.

**ஆய்வுச்சுருக்கம்**

பருவ மழை காரணமாக ஆறுகளின் பெருவெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் காட்சிகளை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

சங்க இலக்கியங்களில் பல்வேறு ஆறுகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. தமிழகத்தில் கழனிகளை எல்லாம் வளமான நாடாக்கும் காவிரி, மதுரையில் வளம் கொழிக்கும் வையை, பொருநை, பெண்ணையாறு, பேரியாறு, சேயாறு, அயிரியாறு சிலம்பாறு கங்கை சோணை பறுளி பெண்ணை பொறையாறு வாட்டாறு வாளையாறு எனப் பல ஆறுகள் தமிழகத்தை வளப்படுத்திய செய்திகள் காணப்படுகின்றன.ஆறுகள் இல்லா ஊர் பாழ் என்பதற்கேற்ப ஆறுகள் மக்களின் குடிநீர் தேவைகளை மட்டுமல்லாமல் மக்களின் வாழ்வியல் தேவைகளையும் நிறைவு செய்கின்றது. என்பதை உணர முடிகின்றது.

**முன்னுரை**

ஒரு நாடு வளமுடையது என்பதற்கு அந்நாட்டு மக்களின் வாழ்க்கைவளம் மட்டும் காரணமல்ல. இயற்கை வளம் எந்தளவிற்கு வளத்தோடும் செழிப்பானதாக இருக்கிறதோ அதுவோ அந்நாட்டின் வளமாகும். அதற்கு முக்கியமானது நீர். நீர் வரும் வழிகளும் நீர்த் தேக்கங்களும் நிரம்பி வழியும் பொழுது மக்களின் வாழ்வாதாரம் வளமுடையதாகிறது. ஒரு நாட்டின் முதுகெலும்பாக ஆறுகள் திகழ்கின்றது. அந்த ஆறுகளை சரிவரப்பாதுகாக்கும் பொழுது தன்னிறைவு அடைய முடியும். சங்க இலக்கியப் பாக்களில் ஆறுகள் பாய்ந்தோடி பழந்தமிழரின் பொருளாதார முன்னேற்றத்திற்கு வழி வகுத்துள்ளதை அறிய முடியும். இன்று ஆறுகளை அழித்து பெரிய கட்டிடங்களை உருவாக்கி நீர் ஆதாரங்களைப் பாழ்படுத்தி வருகிறோம். அதனை தவிர்த்து ஆறுகளின் பங்கினை சங்க குறிப்புகளின் உணர்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கலைச்சொற்கள்**

- வையை,
- பேரியாறு,
- சேயாறு,
- அயிரியாறு
- சிலம்பாறு
- கங்கை
- சோணை
- காவிரி

**ஆறுகள்**

ஆறு என்பது இயற்கையாகச் செல்லும் நன்னீரைக் கொண்ட ஒரு பெரிய நீரோட்டம் ஆகும். ஆறுகள் பொதுவாக மலைப்பகுதிகளில் தொடங்குகின்றன. இப்பரந்த நிலவுலகின் நலம்பேணும் செயல் நீருக்கு உண்டு, அந்நீர் நிறைந்த நல்லாறுகள் பல அன்று முதல் இன்றுவரை தமிழகத்தில் ஓடி நலம் பல சேர்க்கின்றன. இத்தகு பரவிப்பாயும் ஆறுகள் இல்லையெனில் தமிழகம் பாலை ஆகியிருக்கும்.

**காவிரியாறு**

காவிரி ஆறு உற்பத்தியாகுமிடம் குடகுமலை சங்ககாலத்தில் பொன்படு வரை என்று அழைக்கப்பட்டது. பொன்படு வரையில் தோன்றுவதால் அதனை பொன்னி என்றழைத்தனர்.

தோட்டங்களின் வழியே பாய்ந்து வரும் காவிரி என்றால் ஆற்றின் இருமருங்கும் சோலைகள் அமைந்த இடமாகும்.

**தாம்பொழில் உடுத்த தண்பதப் பெருவழிக் காவிரி**

என்ற பாடல் மூலம் அறியலாம்.தான்பாயும் பகுதிகளில் பொன் விளையும் பூமியாக மாற்றுவதால் காவிரியைப் பொன்னி என்று அழைக்கின்றோம்.

**கழை நிலை பெறாஅ காவிரி நீத்தம்**[1]

**கடும் புனல் மலிந்த காவிரி பேரியாற்று**[2]

**அம்தண் காவிரி**[3]

**கழை மாய் காவிரி கடல் மண்டு**[4]

**கடற்கரை மெலிக்கும் காவிரி**[5]

போன்ற பாடலடிகளில் துடுப்புக்காக பயன்படும் கோல் நிலைத்து நிற்க முடியாதபடி நீர்ப்பெருக்கினைக் கொண்ட விரைந்தோடும் குளிர்ச்சியான புதுவருவாயை உடைய காவிரி என பல இடங்களில் அகநானூறு, புறநானூறு போன்ற இலக்கியங்கள் காவிரியைப் புகழ்கின்றன.

**காவிரிப் பலராடு பெருந்துறை**[6]

**காவிரி மலர் நிறையன்ன நின்மார்பு**[7]

**பெருநீர்க் காவிரி**[8]

**மிகுபெருங்காவிரி**[9]

**காவிரிப் படப்பை** [10]

என்று சங்க இலக்கியங்களில் காவிரியின் பெருமை பேசப்பட்டுள்ளது. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை "ப.்றுளியாற்று மணலினும் பலகாலம் வாழ்க" (புறம். 9:12) என நெட்டிமையார் வாழ்த்துகிறார். சோழன் மாவளத்தானைப் பாடும் தாமற் பல்கண்ணனார் "நின் ஆயுள் காவிரி எக்கரிட்ட மணலினும் பலகாலம் நீடிக்கட்டும்" (புறம். 43:21-23) என வாழ்த்துவதைக் காண முடிகிறது. இவ்வாறு புலவர்கள் அரசர்களைப் பற்றி வாழ்த்தும் போதெல்லாம் அம்மன்னனின் நாட்டையும், அந்நாட்டை வளப்படுத்தும் ஆறுகளையும் போற்றியுள்ள தன்மை புலப்படுகிறது.

**வையை**

பாண்டிய நாட்டுக்கு வளத்தையும், பயனையும் தருவது வையை. பெரியகுளம் வட்டம் ஆண்டிப்பட்டி மலையில் தோன்றி மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் பாய்ந்து கடலில் கலக்கிறது. வையை வற்றாத நீர்வளமும், வளம் நிறைந்த அதன் கரைகளில் ஓங்கியுயர்ந்த மருத மரங்கள் சூழ்ந்த சோலைகளும் அழகுடன் விளங்குவன,

**"வருபுனலில் வையை வார்மணல் அகன்றுறைத் திருமரு தோங்கிய விரிமலர்க் காவின்"**[11]

கலித்தொகையில் பல இடங்களில் வையை புகழப்படுகிறது.

**"அறல் வாடும் வையை"**[12]

**"பூமலி வையை"**[13]

**"வையைப் புதுப்புனல்"** [14]

என்று வையை பாராட்டப் பெறுவதைக் காணமுடிகிறது.

எல்லா நதிகளும் மழைப்பொழிவையே ஆதாரமாகக் கொண்டவை. வையை நதி வானம் நதியாகும். பெரும்பான்மை வறட்சியை உடையதான வையை நீர்ப்பெருக்கு உடைய ஆறாக

**செலவரை காணாக் கடல்தலைக் கூடும் ......வையைப் புனலாக**[15]

பெருகி வருகிறது.

மலையில் உள்ள மயில்கள் அகவவும் தூசுகள் நீங்கவும் விரைந்து ஒலிக்கிறது.அந்த அருவி பலவாறு இணைந்து உழவு முதலிய தொழில்களுக்கு உதவும்படி வெள்ளமெனப் பெருகித் தாவிச் செல்கிறது என்பதை

**திரைஇரும் பனிப் பௌவம் செவ்விதா அற முகந்து**
**உர உரும் உடன்று ஆர்ப்பஏ ஊர் பொறை கொள்ளாது**
**பெயலான் பொலிந்து பெரும்புனல் பல நந்த**
**நலன் நந்த நாடு அணி நந்த புலன் நந்த**
**வந்தன்று வையைப்புனல்[16]**

என்ற பாடலில்விவரிக்கப்படுகிறது.

வையையில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் பான்மையைப் பரிபாடல் எடுத்துரைக்கிறது.இரண்டு மலைகள் போல இரு கரைகளிலும் நுங்கும் நுரையுமாக வையைப் பொங்கி வருவதை

**இறுவரை நிறைமதி புரையுமாறு இருகரை ஏமத்து**
**வரைபுரை உருவின் நுரை பல சுமந்து**
**பூவேய்ந்து பொழில் பரந்து[17]**

எனப் பரிபாடல் சுட்டுகின்றது.

வையைப் பற்றிய செய்திகள் பரிபாடலில் மிகுதியாகப் பேசப்படுகின்றன.

**“நெரிதரூஉம் வையைப்புனல்”[18]**

**“தாவு நீர் வையை”[19]**

**“அந்தண் புனல் வையை”[20]**

**“வளங்கெழு வையை”[21]**

**“தீம்புனல் வையை”[22]**

என்று பேசுகின்றது.

வையையாறு மிக்க புகழுடன் கூடிய பல ஊர்களைச் சூழ்ந்திருந்தது. அவற்றை வளம் கொழிக்கவும் செய்தது. அவ்வூர்களை மாவன் போன்றவர்கள் தலைமை தாங்கி காத்துவந்தனர் என்ற செய்தியினை ஓநல்லையூர் தந்த பூதப்பாண்டியன் புறநானூற்றில் தெரிவிக்கின்றான்.[23]

### பேரியாறு

மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி அரபிக்கடலில் கலக்கும் ஆறுகளுள் ஒன்று பேரியாறு இது ஏலமலையைச் சேர்ந்த சிவகிரியில் தோன்று வடமேற்காக ஓடிப் பயனின்று ‘பாரூர்’ எனும் இடத்தில் கடலில் கலக்கிறது. இவ்வாற்றின் நீளம் 140 மைல்.

**நிவந்துகரை இழிதரும் நனந்தலைப் பேரியாற்றுச்**
**சீருடை வியன்புலம் ...[24]**

பெரிய மழை பெய்யாது பொய்த்தலால் காட்டிடத்தே உள்ள மூங்கில்கள் வாடி உலாவும், குன்றங்கள் பசும்புல்லும் இன்றி போகவும், ஞாயிற்றின் வெப்பம் மிக அருவிகள் நீர்றுப் போன பெரிய வற்கடம் தோன்றிய காலத்தும் கடத்தறிய செலவினையுடைய பேரியாற்றில் நீரானது கரை உடைத்துச் செல்லும் என்பதனை கூறுகிறது.

### அயிரியாறு

அயிரி ஆறு மைசூரில் காவிரி ஆற்றில் கலக்கிறது. அயிரியாறு அரங்கியாறு என்னும் பெயரால் வழுங்கப்படுகிறது.சங்க இலக்கியத்தில் வடுகர்கள் ஆட்சி செய்த எருமை நன்னாட்டில் வடக்கே இவ்வாறு பாய்கிறது.

**வடுகர் பெருமகன் பேர்இசை எருமை**
**நல்நாட்டு உள்ளதை**
**அயிரியாறு இறந்தனர்.[25]**

**அயிர்யாற்றுஅடைகரைவயிரின்நரலும்.[26]**

நீர்வளமிக்க அயிரி ஆற்றைத்தாண்டி தமிழர்கள் பொருளீட்டச் செல்வர் என்ற செய்தி இடம் பெற்றுள்ளது.

### அரிசிலாறு

அரிசில் காவிரியாற்றின் கிளை ஆறு.தற்போது அரசலாறு எனப்படுகிறது. இவ்வாறு கிள்ளி வளவன் ஆட்சி செய்யும் அம்பர் நகரில் பாயும் ஆறாகும்.

**அரிசில் அம் தண்ணறல் அன்ன இவள்**
**விரிஒலி கூந்தல் விட்டு அமைகலனே..[27]**

வெள்ளம் குறைந்த காலத்தில் இதன் மணல் அறலாகக் காணப்படும். அந்த கருமணலை தலைவியின் கூந்தலுக்கு உவமையாக்கியுள்ளார்.

**கங்கையாற்றின் வளம்**

கங்கை தமிழர்களின் புனித நதியாகத் திகழ்கின்றது.அதன் துணையாறு யமுனையாகும்.

**கங்கை அம் பேர்யாற்றுக் கரை இறந்து இழிதரும்**
**மீன் ஆரம் பூத்த வியன் கங்கை...**
**மன்பதை எல்லாம்சென்று உண கங்கைக்**
**கரை பொரு மலிநீர் நிறைந்து தோன்றியாற்று**
**கங்கை வங்கம் போகுவர் கொல்லோ**
**எவ்வினை வெய்வர் கொல[28]**

இமயமலையின் உச்சியில் இருந்து மழை வீழ்ந்ததால் உண்டாகும் அருவியை உடையது பெரிய கங்கையாறு. அது அணையை உடைத்து செல்லும் அளவிற்கு விரைவுக் கொண்டது. கங்கையாறு செல்லும் வழியெங்கும் கொண்டுச் செல்லும் பொருட்களால் செல்வச் செழிப்புடன் தேவருலகம் போல் காணப்படுகிறது.

**சிலம்பாறு**

மதுரை அழகர் மலையில் உற்பத்தியாகும் சிலம்பாறு நூபுரகங்கை அழைக்கப்படுகிறது. மழைக்காலங்களில் மட்டுமே ஓடும் ஆறாகும். இருங்குன்றம் என்ற பகுதியில் ஆராவரித்து அழகுடன் திகழும் ஆறாக கடை சங்க காலத்தைச் சார்ந்த இளம்பெருவழுதி பாடலில் காண முடிகின்றது.

**அலங்குஅருவி ஆர்த்து இமிழ்பு இழிய**
**சிலம்பாறு அணிந்த சீர்கெழு திருவின்**
**சோலையடு தொடர்மொழி மாலிங்குன்றம்.[29]**

**சேயாறு**

சேய் ஆறு என்பது திரிந்து செய்யாறு ஆயிற்று. சேயாற்றயங்கரையைச் செங்கண்மாவைத் தலைநகராகக் கொண்ட மலை நாட்டை நன்னன் சேய் நன்னன் என்ற குறுநில மன்னன் ஆண்டு வந்தான். அவன் நாட்டில் பெருகெடுத்து ஓடும் ஆறு திரையன் நாட்டு பாலாற்றோடு கலந்து கடலில் விழும் பொழுது செய்யாறு என அழைக்கப்படுகிறது.

**காணுநர் வயா அம் கட்சின் சேயாறு[30]**

**கடுவரல் கலுழிக் கட்கின் சேயாறு[31]**

சேயாற்றின் நீர் குமிழிகளுடன் சுழன்று புதுவருவாயை கொண்ட பேரிச்சலுடனானக் காட்சி பார்ப்பவர்க்கு இனிமைத் தோன்றும்படி உள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**சோணை**

சோணையாற்றின் வேறுபெயர் நர்மதை. சோணை என்பது மகதநாட்டு பேரரசில் பாடலிபுத்திரத்துக்கு அருகில் ஓடிய ஆறு. பொன் வளத்தைக் குறிக்கும் சொர்ணமுகி என்ற பெயர்தான் சோணை என்று குறிப்பிடப்படுகிறது.

**வெண்கோட்டு யானை சோணை படியும்**
**பொன்மலி பாடலி பெறீஇயர்[32]**

வெண்மையான தந்தங்களையுடைய யானை சோணையாற்றில் நீராடுதலைப் போன்ற பாடலிபுத்திரம் என்பதின் மூலம் அறியமுடிகின்றது.

**பொறையாறு**

**கள்கமழ்பொறையாறு அன்னஎன் [33]**

**வேங்கட வைப்பின் வடபுலம் பசித்து**
**எனஈங்கு வந்து இறுத்த**
**என் இரும்பேர்ஒக்கல் தீர்க்கை**
**விடுக்கும் பண்பு.[34]**

பெரியன் என்ற வள்ளலுடைய பொறையாறு என்று கூறுவதிலிருந்து கேட்போருக்கு கேட்பதைத் தரும் ஆறாக ஒப்புமைப் படுத்தப்பட்டுள்ளது.வேங்கட மலைக்கு வடக்கிலிருந்த நல்ல வளமிக்க ஊரில் வாழ்ந்த கல்லாடனார் புலவர் தம்குடும்ப பசியை பொறையாற்றுக்கு வந்து போக்கிக் கொண்டார் என்ற வரிகள் மூலம் பொறையாற்றினால் அவ்வூர் பெற்ற வளத்தை அறிய முடிகின்றது.

**வாட்டாறு**

**வளநீர் வாட்டாற்று எழினியாதன் [35]**

சங்ககால வள்ளல்களில் எழினியாதன் ஊரில் பாயும் ஆறாகும் வாட்டாற்றில் பாயும் கீழ் நீரில்

மீன்கள் துள்ளுகின்றன. மேல் நீரில் மலர்கள் மலர்கின்றன. அந்த சலசலப்பபைக் கேட்டு பறவையினங்கள் பறக்கின்றன. ஊக்கமில்லாதவனுக்கு வலிமையளிக்கும் வள்ளல் போல வாட்டாறு விளங்குகின்றது.

## தொகுப்புரை

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே காவிரி ஆற்றின் சிறப்பைக் குறித்துப் பாடாத புலவர்களே இல்லை. நாட்டினை வளப்படுத்தும் முக்கிய நதிகளில் ஒன்றாகக் காவிரி திகழ்ந்தது. தென்னக ஆறுகளில் காவிரியும், வையையும் முதன்மை பெறுகின்றன. பொன்னி என்று பாண்டியனின் புகழையும், பொருநை, சிறுவாணி, பேரியாறு போன்றவை சேரனுடைய சிறப்பையும் கூறுகின்றன. வட்டாறு சிலம்பாறு அரசலாறு போன்ற ஆறுகள் பாய்ந்து நாட்டினை வளப்படுத்தியதையும் புலவர்களின் பாடல்களின் உவமையாகப் போற்றப்பட்டதையும் அறிய முடிகின்றது.

## முடிவுரை

இயற்கையின் கொடையாகிய மழையாலும், மலை ஊற்றுகளாலும் கிடைக்கப்பெறும் நீர் வளத்தைச் சுமந்துக் கொண்டு ஏனைய இடங்களுக்குப் பகிர்ந்தளிக்கும் பணியை ஆறுகள் செய்கின்றன. மழைவளம் எல்லா இடங்களிலும் ஒன்றிபோன நீர் ஆறுகள்,ஏரிகள், குளங்கள், ஓடைகள், கால்வாய்கள் மூலமாகப் பகிர்ந்தளிக்கப்படுகிறது. இவற்றுள் ஆறுகள் பல்வேறு இடங்களுக்கு நீரைக் கொண்டு செல்லும் இணைப்புப் பணியை செய்கின்றன. ஆறுகளைப் பாதுகாத்து எதிர்வரும் தலைமுறைக்கு பகிர்ந்தளிப்போம்

## அடிக்குறிப்புகள்

1. அகநானூறு - 6
2. அகநானூறு - 9
3. அகநானூறு - 12
4. அகநானூறு - 11
5. அகநானூறு - 5
6. குறுந்தொகை 258:2-3
7. ஐங்குறுநூறு 42: 3-4)
8. அகநானூறு. 226:10
9. புறநானூறு 178: 8
10. பதிற்றுப்பத்து 90:47
11. அகநானூறு 36: 9-10)
12. கலித்தொகை 30:16)
13. கலித்தொகை 98:10)
14. கலித்தொகை 98:31)
15. பரிபாடல் 10
16. பரிபாடல -7:1-10)
17. பரிபாடல் 7:40-42)
18. பரிபாடல் 11:15
19. பரிபாடல் 11-106
20. பரிபாடல் 12:10
21. பரிபாடல் 17:44
22. பரிபாடல் 20:97
23. புறம். 71:10-11
24. பதி-28-10)
25. அகம்-253-20
26. அகநானூறு -177-11
27. நற்றினை 141-11
28. நற்றிணை 189-5
29. பரிபாடல் -15
30. மலைபடுகடாம் -476
31. மலைபடுகடாம் 555
32. குறுந்தொகை 75-3
33. நற்றிணை 131-8
34. புறம்-391
35. புறநானூறு 396-13

தொகுதி-8 எண் 1
Vol. 8 No. 1

மார்கழி 2050 - பங்குனி 2051
January - March 2020

ISSN : 2321 - 984X



Published by : **Raja Publications**, No. 10, Upstair, Ibrahim Nagar, Khajamalai, Tiruchirappalli - 620 023, Tamil Nadu, India. Mobile : 9600535241
Printed : **The Printing House**, Tiruchirappalli - 620 023, Tamil Nadu, India. Ph : +91 - 431-2420121

# சங்க இலக்கியத்தில் நீர் வறட்சி

**இரா. அமுதலட்சுமி**
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)
அரசு கலைக் கல்லூரி, சேலம்-7, தமிழ்நாடு, இந்தியா.

**ஆய்வுச்சுருக்கம்**

மனித வாழ்வின் அடிப்படை ஆதாரமாக விளங்குவது நீர். இயற்கையானது பல்லாயிரம் ஆண்டுகளுக்கும் முன்பாக, உலகம் தோற்றம் பெற்ற காலத்திலேயே உருக்கொள்ள ஆரம்பித்தது. இயற்கையானது அன்று முதல் இன்று வரை அதன் இயல்புத் தன்மையிலிருந்து தம்மை மாற்றத்திற்குட்படுத்திக் கொண்டே இருக்கின்றது. பெரும்பான்மையும் மழை, கடல், ஆறு, ஏரி, குளம், நீர் போன்ற தன்னிகழ்வில் தோற்றம் பெற்ற அனைத்தையும் இயற்கை என்ற ஒரு கூறுபாட்டில் அடக்குகின்றனர். நீரில்லா நிலையில் தோன்றும் வறட்சியான காலத்தில் மக்கள் சந்திக்கும் இடர்பாடுகளையும் நிலமாற்றத்தினையும் ஆராய்வதாகும்.

**முன்னுரை:**

இயற்கை மனித வாழ்விற்குத் தேவையான வளங்கள் அனைத்தையும் வழங்குகின்றது இவ்வியற்கையானது சில வேளைகளில் குறிப்பிட்ட வளர்ச்சி நிலையையோ அல்லது மாற்றத்தினையோ அடைகின்றது. இம்மாற்றத்தின் காரணமாக இயற்கையின் சமச்சீர்மையும் மாற்றம் அடைய நேரிடுகின்றது. இத்தகுக் காலகட்டத்தில் உயிரினங்களின் வாழ்வும் மாற்றத்தினை அடைகின்றது. இதன்வழி நீர் வறட்சியைப் பற்றி சங்க இலக்கியப் பதிவுகளின் வழி விளங்குவதாக அமைகின்றது.

**கலைச்சொற்கள்**

1. வறட்சி
2. வறட்சிக்கான காரணங்கள்
3. வெப்ப வறட்சி
4. நிலம் தன்னியல்பு திரிதல்
5. போர்க்கால வறட்சி
6. நீர்நிலைகள் அழிப்பு
7. மரங்கள் அழிப்பு
8. மக்களின் மனநிலை மாறுபாடு
9. வறண்டநிலம்
10. இயற்கை மாறுபாட்டினால் தோன்றும் இடர்பாடுகள்

**வறட்சி – ஓர் விளக்கம்:**

வறட்சி என்ற சொல்லிலே வறண்டநிலைக் காணப்படுகின்றது. **“வறட்சி அல்லது வரட்சி என்பது ஒரு வறண்ட காலக்கட்டத்தைக் குறிக்கும். நீண்ட காலத்திற்கு மழை வீழ்ச்சி (பொழிவு) கிடைக்காமையால் ஏற்படுகின்ற சூழல் நிலமையை வறட்சி என்று எளிமையாக வரைவிலக்கணப்படுத்தலாம்”**[1] என மேற்கூறியக் கருத்து தெளிவுப்படுத்துகின்றது. இதன் வறட்சி என்பது நீரை வறண்ட நிலையில் காணப்படுவதையே குறிக்கின்றது.

மேலும் **“அந்தந்த காலநிலைக்குரிய சராசரி மழைவீழ்ச்சியின் 75% சதவீதத்திற்கும் குறைவாக மழை கிடைக்கும் போது அப்பிரதேசத்தில் வறட்சி நிலவுவதாகக் கூறப்படும். பல காலமாக மழை இல்லாத வறண்ட மற்றும் தண்ணீர் பற்றாக்குறை உள்ள நிலப்பகுதி வறட்சியில் பாதிக்கப்பட்டது எனப்படும். இங்கு வேளாண்மை மிகவும் குறைந்த அளவிலேயே நடைபெறும். வறட்சி காணப்படும் இடங்களில் வறுமையும் பெரிய அளவில் காணப்படும்”**[2] என வறட்சிப் பற்றி மேலும் விரிவுப்படுத்துகின்றது.

**இலக்கியங்களில் நீர் வறட்சி**

**"முயப்பிடிச் செவியன் அன்ன பாசடை**
**முனிவில் பரத்தையை என்துறந்து அருளாய்**
**நனிபுலம்பு அலைத்த வேலை நீங்கப்**
**புதுவறங் கூர்ந்த செறுவில் தண்ணென**
**மலிபுனல் பரத்தர் தாஅங்கு**
**இனிதே தெய்ய நின் சாணுங் காலே"**[3]

பரத்தையிடம் சென்ற தலைவர் அவளிடமே இரு. இங்கு வராதே உன்னைப் பார்த்த போதே வறண்ட நிலத்தில் பாய்ந்த புதுமழை வெள்ளம் போல என் உள்ளம் குளிர்ந்து இருக்கிறது அதுபோதும்.

இங்ஙனம் மழைபொழியாமல் இருந்தால் அந்த இடம் வறண்ட அல்லது வறட்சிப் பகுதி எனப் பெயர் பெறும் என்பதை அறியமுடிகின்றது.

**வெப்பத்தினால் ஏற்பட்டநிலை**

மண்ணுலகிற்கு வளங்களை ஏற்படுத்தும் ஞாயிறானது, தன் இயல்புத் தன்மையில் மாற்றம் கொள்ளும்போது உலக உயிர்கள் வாழ்வாதாரமின்றி வறட்சி, பசி, பட்டினியால் பேரழிவினைச் சந்திக்க நேரிடும். இத்தகு வறட்சியான சூழல் சங்ககாலத்தில் நிலவியதை அக்காலப் புலவர்களின் பாடல்கள் வழி அறியலாம். வெப்ப மிகுதியால் நிலமானது பிளக்கும் அளவிற்குக் கடும் வறட்சி ஏற்பட்டது என்பதை,

**"..............................................இருளற**
**விசும்புடன் விளங்கும் விரைசெலல் திகிரிக்**
**கடுங்கதிர் எறிந்த விடுவாய் நிறைய**
**நெடுங்கால் முருங்கை வெண்பூத் தாஅய்**
**நீரற வறந்த நிரம்பா நீளிடை"**[4]

என்ற பாடல் அடிகளில், விரைந்த செலவினையுடைய ஞாயிறு இருள் விலகுமாறு வானிடத்தே விளங்கிற்று. அதன் சுடுகின்ற கதிர்கள் காய்ந்தமையால் நிலங்கள் எங்கும் பிளந்தன. அப்புள்ளிகள் நிறையும்படி நீண்ட அடியினையுடைய முருங்கை மரத்தின் வெண்மையான பூக்கள் பரந்து கிடந்தன. செல்லத் தொலையாத யானையின் நெடிய வழி நீரில்லாது வறட்சியுடன் காணப்பட்டது.

**நிலம் தன்னிலை திரிந்து வறட்சியாதல்:**

வளமிக்க சங்ககால வாழ்நிலங்கள் வெப்ப மிகுதியால் தம் இயல்பில் திரிந்து உயிரினங்களின் வாழ்வியலைப் பாதிப்பிற்குட்படுத்தும் நிலை ஏற்பட்டிருந்தது. குறிஞ்சி நிலமானது தன் இயல்பில் திரிந்து பாலையாதல் பற்றி,

**"மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை**
**சுரண்முதன் மாரஅத்த வரிநிழல் அசைஇ"**[5]

என்ற பாடலை மூங்கில் ஆகிய தோளை உடைய நில மடந்தையில் மணிமலை ஆகிய மலையின் மேல் கிடந்து அசையும் முத்துமாலை போன்ற ஆறு. அதன் ஓடுகின்ற நீர் வற்றியதால், வருந்தி நிற்க, சேய்மைக்கண் நின்று வருதலையுடைய காட்டாற்றின் கரையில் நறுமணம் கமழும் ஒரு பூம்பொழில் விளங்குகிறது. அப்பொழிலிடத்து குயில் அலகால் குடைந்து உதிர்த்த பூவின் வாடலைச் சூடி, தன் இரு கரைகளும் கருநிற மயிரை விரித்தாற் போன்று கருநிறத்தைத் தம்மிடத்தே கொண்ட நுண்ணிய கருமணல், கரும்பொன் வெப்பம் ஏற்ற தன்மை போன்ற வெம்மையுற்று நிற்கின்றது. அம்மணற் பரப்பில் மெல்ல நடந்து மேலும் வெயிலில் வெப்பம் ஏற்பட்ட கூறிய பரற்கற்கள் கழித்து வருத்தும் இளவேனில் பருவம் நிலைபெற்று வெம்மை செய்த பருவத்தின் வழித்தாகிய முதுவேனில் நாட்கள் நிகழும் பருவம், ஞாயிற்றினது கதிர்கள் காலை நேரத்திலே மிகுந்த வெப்பத்தைத் தருவதாகிய பாலைத் தன்மை நிலைபெற்ற பாலையாகி நீண்ட காட்டு வழியிடத்தே நின்ற வேப்பமரத்தினது நிழலில் தங்கியிருந்த பாணர்கள் என்று குறித்துள்ளார். இவ்வாறு முல்லை, குறிஞ்சி நிலங்கள் தம்மியல்பு திரிந்து மக்களின் வாழ்வியலைப் பாதிப்பதைக் காணமுடிகின்றது.

**"தமிழர்கள் பாலை என்ற சொல்லால் குறித்தது, பிற நிலப்பகுதிகளைக் குறிப்பாக மலைப்பகுதிகள், மேய்ச்சல் நிலங்களைத்தான் பருவமழை தப்பியோ, இயற்கையாக நீர் வறண்டதாலோ கோடைக்காலத்தில் அவை பாலைவனம்**

**போன்ற தோற்றத்தைப் பெற்றன. நிலநடுக்கோட்டுத் தட்பவெப்பத்தில் இத்தற்காலிகப் பாலை நிலம் மலைப் பகுதிகளிலும் தோன்றலாம். மலைப் பகுதிகளில் வறட்சிக்கு ஆளாகும் போது, வெப்பமும் உலர்ந்த பசுமையற்ற இயற்கை நிலத்தோற்றமும் சமவெளிப்பகுதியை விடக் கூடுதலாகவே புலப்படும்."[6]**

என்று பாலை நிலத்தின் இயல்புத் தன்மை மாற்றம் பெற்று அதிகப்படியான கதிர்களை உமிழ்வதால் வெம்மை அதிகரிக்கும். அத்தகைய காலகட்டத்தில் நீர்நிலைகள் கெட்டு, வளம் பொருந்திய உயிரினங்கள் வாழ்வதற்கேற்ற நிலங்கள் மாற்றம் பெற்று வறட்சி மிகுந்த பாலை நிலத்தை உருவாக்கும் என்பதை உணரமுடிகிறது. இவ்வாறகவே சங்க காலத்தில் பாலை நிலத்தை உருவாக்கும் என்பதை உணரமுடிகிறது. இவ்வாறாகவே சங்க காலத்தில் பாலையெனக் குறிப்பிடப்பட்ட நிலம் உருப்பெற்றுள்ளன.

**போர் புரிதலில் வறட்சி:**

சங்க காலத்தில் போர்கள் என்பது தவிர்க்க இயலாததாய் அமைந்தன. இரு மன்னர்களுக்கு இடையே நிகழும் போர் அத்துடன் முடிவதில்லை. தோல்வியடைந்த மன்னன் தன் உறவினர்கள் தன் மறவர்கள் பலர் இறந்துக் கிடப்பதைக் கண்டு, மனம் வெதும்பி குறிப்பிட்ட கால இடைவெளியில் பகைக் கொண்டு மீண்டும், தன்னை, தன்னைச் சார்ந்தவர்களை வென்ற மன்னரிடம் போரிட்டு வெற்றி பெறுவேன் என்று சூளுரைக்கின்ற நிலையினைச் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. இவ்வாறு போரானது ஒருமுறை மட்டுமே நிகழாமல் தொடரும் அலுவலாக இருந்துள்ளது. இதனால் அங்குள்ள நீர் நிலைகளையும் வளங்களையும் அழிக்கப்பட்டு வறண்ட நிலமாகக் காணப்படுகிறது. இதனை விளக்கும் வகையில்,

**"____________ தானே பாங்கற்**
**கமழ்பூந் தும்பை நுதலசைத் தோனே"[7]**

எனும் பாடலில் போரில் தன் தோழன் ஆரல் கால்களால் சூழப்பட்ட வண்டி உருளையின் குடம் போல மார்பிலே வேல் பாய்ந்து தங்க, அவன் உயிர் உடலை விட்டு நீங்காத நிலையில் சினம் கொண்டு திண்ணையில் விளையாடும் பாவை செறிந்த மணலில் குவித்து வைத்து விளையாடும் மென்மையான தோள்களைக் கொண்ட பெண்கள் நன்கு பாதுகாக்க பசிய இலைகளை கொண்ட மணமிக்கக தும்பைக் கண்ணியைத் தன் நெற்றியிலே கட்டினான் போரில் தன் நண்பன் இறந்துவிட்டதால் அவனது இறப்பிற்குக் காரணமானப் பகைவரைக் கொல்வதாகத் தும்பைச் சூடிப் போர் புரிய தயாரகிறான் ஒருவன் என்று பதிவுசெய்துள்ளார்.

**மனிதத் தேவை மரங்கள் அழிப்பு வறட்சி:**

மனிதர்கள் மற்றும் பிற விலங்குகள் உயிரினங்கள் அனைத்தும் உயிர் வாழ்வதற்குத் தேவையான உயிர்வளியைக் கொடுப்பது மரங்கள். மரங்கள் அழிக்கப்படுவதினால் மழையும் குன்றி வறட்சி ஏற்படுகின்றது. பண்டைய காலத்தில் அரசுலாக்கம் ஏற்பட்ட பின்பு அங்குள்ள காடுகளையெல்லாம் அழித்து நாடாக மாற்றியதை,

**"காடு கொன்று நாடாக்கி"[8]**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதனால் காட்டிலுள்ள மரங்கள் விலங்குகள் என்று பல்வேறு விதமான உயிரினங்கள் பேரழிவிற்கு ஆட்பட்டிருக்கும் என்பது தெளிவாகின்றது. வெட்டி எரிக்கப்பட்டக் கொல்லை நிலத்தில் குறைவினால் துண்டுகள் ஆக்கப்பட்டு மரங்கள் என்று மனிதன் தன் தேவைக்கு மரங்களை அழித்ததை,

**"எறிபுனக் குறவன் குறைய லன்ன**
**கரிபுற விறகி"[9]**

என்ற பாடல் அடிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. மரத்தை வெட்டும் தச்சர் பெற்ற சிறுவர்கள் தம் மழுவோடு காட்டிற்குச் சென்றால் அங்குள்ள மரங்கள் அவர்களின் விருப்பத்திற்கு ஏற்றவாறு பயன்படும் என்று அமைந்துள்ளது. இதன் மூலம் சங்ககாலத்திலும் மக்கள் தங்களது அடிப்படைத் தேவைகளை நிறைவேற்ற மரங்களை வெட்டி வீழ்த்தினர் என்பதை,

**"மரங்கொ.:.றச்சன் கைவல் சிறாஅர்**
**மழுவுடைக் காட்டகத் தற்றே"[10]**

எனும் பாடலடிகளில் புலப்படுத்துகிறது.

**நீர் - நிலங்களை அழித்தல்**

சங்ககாலத்தில் போரில் பகைநாட்டின் இயற்கை வளங்களாகிய நீர்நிலைகளையும் வயல் வெளிகளையும் அழித்துப் பொருளாதார நிலையில் பேரழிவுகளை ஏற்படுத்தினர். பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் போர்த் திறமையைப் பாடும் நெட்டிமையார் அவரால் அழிக்கப்படும் பகைவரது நகரின் அழிவை,

**"கடுந் தேர்குழிந்த ஞெள்ள லாங்கண்**
**வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்**
**காப்புடைய கயம்பாடினை"[11]**

இப்பாடலடிகளில் பாண்டியன் பகையரசனின் அகன்ற இடமுடைய மதில்களைத் தேர் விரைந்து செல்லத் தெருக்களில் வெண்மையான வாயுடைய கழுதையைப் பூட்டப்பட்டுப் பாழ் செய்தான். பகைவர் நாட்டில் பறவைகள் ஆரவாரிக்கும் புகழ் நிறைந்த விளைவயல் அங்கு செருக்குடைய குதிரைகளின் கவிந்த குளம்புகள் தாவுமாறு தேரைச் செலுத்தினான் பரத்த கழுத்தையும், பரந்த அடியையும் சினங்கொண்ட பார்வையையும், ஒளிப்பொருந்திய தந்தங்களையும் உடைய ஆண் யானைகள் பலவற்றைப் பகைவர் தம் காவல் நிறைந்த நீர்நிலைகளில் படியச் செய்து கலக்கினான் என்று பாடியுள்ளார். நாட்டிற்கு முதன்மை ஆதாரமாக விளங்கும் நிலம், நீர் இவையனைத்தையும் அழிப்பது என்பது மக்கள் வாழ்வதற்கான வாழ்வாதாரங்களை அழிவிற்கு உட்படுத்திப் பேரழிவினை ஏற்படுத்துவதாகும்.

**முடிவுரை.**

சங்ககால மக்கள் இயற்கையின் தன்மைகளாகிய தட்பவெப்ப நிலைகளை அறிந்தவர்களாகவும், அதன் இயல்புகளுக்கு ஏற்ப விளைவுகளையும், பூமி வெப்பமாதலின் காரணத்தால் மக்கள் சந்தித்த துன்பங்களையும் சங்க இலக்கியப் பாடல்களில் காணமுடிகிறது.

மழைப்பொழியாமல் இருந்தால் அந்த இடம் வறண்ட அல்லது வறட்சிப் பகுதி எனப்பெயர் பெறும் என்பதை அறியமுடிகின்றது.

கோடைக்காலம் நீட்டித்து நின்ற பசுமையற்ற காலம். மழை பெய்யாது பொய்த்தமையால் நாட்டில் வறுமை மிகுந்தது என்பதை அறிய முடிகின்றது.

வறட்சியின் காரணமாக குன்றுகளைக் கண்டால் ஒத்தப் பெரிய கரைகளையுடைய குளங்களில் வெயில் காய உள்ளே நீர் இன்மையால் பறவைகள் வந்து தங்குதல் ஒழிந்தன வென்று வெப்பம் நீடித்தலால் வறட்சி ஏற்பட்டு மண்ணுயிர்கள் வருந்துகின்ற நிலையினை அறியமுடிகின்றது.

**தொகுப்புரை:**

வறட்சி என்பது நீர் மற்றும் நிலவாழ் விலங்குகள், மனிதர்கள் உயிரினங்கள் பாதிக்கப்பட்டு உயிர் சூழ் நிலையில் மாற்றங்கள் உருவாகும் என்பது புலனாகின்றது.

குறைந்த மழைப்பொழிவினால் நீர்மின் உற்பத்தி பாதிக்கப்படும் வறட்சியினால் தொழில் உற்பத்தி பாதிக்கப்படும் என்பதை அறிய முடிகின்றன.

வறட்சியின் காரணமாக வெப்பநிலை அதிகரித்து உயிரினங்களுக்கும் வெப்பத்தினால் நோய்கள் உண்டாகும் என்பது தெளிவாகிறது.

வறட்சி என்ற சொல்லுக்கு வரட்சி எனவும் அழைக்கலாம் என்றும் வறட்சி என்றாலே அது நீர் வறட்சியை மட்டுமே குறிக்கும் என்பது அறிஞர்களின் கருத்துக்களின் வழி அறியமுடிகின்றது.

நீரின்றி அமையாது உலகு என்பவற்றிற்கேற்ப பஞ்சம் என்பது மழை பெய்து தானியங்கள் விளையாததோடு பணம் கொடுத்தாலும் உணவு கிடைக்காத நிலையாகும் என்பது புலப்படுகின்றது.

இயற்கையாகிய ஞாயிறு தம் இயல்பில் இருந்து மாறுபடும் பொழுது பேரிடர்கள் ஏற்படும் அப்பேரிடரில் மக்கள் மற்றும் வளங்களையும் இழக்கும் நிலை ஏற்படும் என்பதை குறிப்பினால் அறியமுடிகின்றது.

முல்லை குறிஞ்சி நிலங்கள் தம்மியல்பு நிலையிலிருந்து மாறி மக்களின் வாழ்வியலைப் பாதிப்பதைக் காணமுடிகின்றது.

வறட்சியினால் மக்கள் வாழ்வதற்கு தகுதியற்ற நிலமாகவே பாலை நிலம் சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ளது. இதிலிருந்து வெப்பத்தினால் சங்க காலத்தில் உயிரினங்கள் சந்தித்ததை வறட்சிகளை தெளிவாக உணரமுடிகின்றது.

தோல்வியடைந்த மன்னனின் ஊர்களிலுள்ள நீர் நிலைகளும், இயற்கை வளங்களும் அழிவினைச் சந்தித்து வறண்ட நிலைக்காணப்படும் என்பது புலப்படுகின்றது.

மனித ஆளுகையினால் இயற்கைச் சார்ந்த விலங்குகளும் அழிக்கப்பட்டு வறட்சி நிலையினை ஏற்படுத்தியுள்ளனர் என்பது புலப்படுகின்றது.

**அடிக்குறிப்பகள்**

1. கே.அய்யனார், புவியியல் அமைப்பு, ப.303
2. மேலது, ப.301
3. நற், பா.எண், 230
4. அகம், பா.எண், 53: 1-5
5. சிறுபாண்,1-2
6. கோ.கேசவன், மண்ணும் மனித உறவுகளும், ப.269
7. புறம், பா.எண், 283: 9-15
8. பட், 283
9. புறம், பா.எண் 231: 1-2
10. மேலது, பா.எண.206: 11-12
11. புறம், பா.எண். 15: 1-3

௸

# சங்க இலக்கியத்தில் நீர்வளம்

முனைவர் பட்டத்திற்காகப் பெரியார் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**இரா.அமுதலட்சுமி,**
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம் - 636007.

நெறியாளர்

**முனைவர் அரங்க.சீனிவாசன்,**
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம் - 636007.




**தமிழ்த்துறை,**
**அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),**
**சேலம் - 636007.**

**பிப்ரவரி - 2024**

# இயல்-5

## நீர்த்தேக்கமும், பங்கீட்டு முறைகளும்

### முன்னுரை

நீரே உலகிலுள்ள அனைத்து உயிர்களின் ஆதாரமாகும். உயிரினங்கள் உண்பதற்கு உணவு இல்லாமல் குறுகிய நாட்கள் வரை உயிர் வாழ முடியும் ஆனால் நீரின்றிச் சில மணித்துளிகள் வாழ்தல் என்பது அரிதான செயலாகும். நிலம், நீர், காற்று இவை மூன்றும் உயிர் வாழ்க்கையின் அடிப்படையான காரணிகளாகும். நீர் இல்லாமல் மண்ணுலகில் உயிர்த்தோற்றம் என்பது நிகழாது, நிலம் இல்லாமல் நீரின் பயனை அறிய இயலாது. நிலம் நீர் இரண்டோடும் காற்றும் சேர்ந்தால் தான் மண்ணில் உயிர்களின் வாழ்வென்பது பரிணமிக்கிறது. பணடையத்தமிழர்கள் இவ்வுண்மையினைத் தெளிவாக உணர்ந்திருந்தனர். அதனால் தான் இயற்கை அன்னையின் அசைவுகளையும் இயக்கங்களையும் கூறுபாடுகளையும் வணங்கி அவற்றின் நிலைத்த தன்மையினைப் போற்றிப் பாதுகாத்தலையே தங்களின் வாழ்நாள் கடமையென எண்ணி வாழ்ந்தனர். இப்பூமியானது ஒன்றுக்கு மேற்பட்ட மூலக்கூறுகளை தன்னகத்தே கொண்டுள்ளது எனினும் திட திரவ வாயு என்ற மூன்று நிலைகளில் வளிமண்டலத்தில் கண்ணால் காணக்கூடிய சிறப்பினைப் பெற்றிருப்பது நீர் ஒன்றாகும். உலக உயிரினங்களின் வாழ்வின் இயக்கத்திற்கு உணவுஉற்பத்தி அவசியமானது. அவ்வுணவினை உற்பத்தி செய்வதற்கு நீரின் உதவி தேவை. உயிரினங்கள் தாகத்தைத தணித்துக் கொள்வதற்கும், பசியினைப் போக்கவும், உடல் தூய்மைக்கும் என்ற வகையில் நீரின் பயன்பாடு அளப்பரியது. வளமிகுந்த நிலமும் பரந்து விரிந்த ஆகாயமும், வான் தரும் மழையும், ஆர்ப்பரிக்கும் அருவிகளும், கவின்மிகு பொழில்களும், கடலுள் நீர் முகக்கும் மேகங்களும், மேகம் மோதும் காற்றும், சுட்டெரிக்கும் ஞாயிறும் இவையாவும் இயற்கையின் அற்புத கொடைகள். இவைகள் இணைந்த ஆற்றல் மூலமே உலகம். இயற்கை வளக்கூறுகள் அனைத்தும் மனிதனின் செயல்பாடுகளால் மாசடைந்து அழிந்து வருகின்றன. பேராசைக் கொண்ட மனிதனின்

மனப்பான்மையும், தன்னலத்தோடு கூடிய நுகர்ச்சியும், வருங்காலப் பயன்பாடு குறித்த அக்கறை இன்மையும், சுற்றுச்சூழல் குறித்த விழிப்புணர்வு இன்மையும் இத்தகு காரணங்களால் இயற்கை தன்னிலையில் மாறிவருகிறது. தன்னைச் சுற்றியுள்ள இயற்கைச்சூழல் குறித்த இன்றைய மனித மனப்பான்மைகள் முரண்பட்டுக் காணப்படுவது பேராபத்தை விளைவிக்க வல்லவை.எனவே தான் நீரின் முக்கியத்துவத்தை உணர்ந்த தமிழர்கள் நீரை முறையாகக் கையாள பல உத்திகளையும் தொழில்நுட்பங்களையும் கையாண்டுள்ளனர். பழந்தமிழரின் நீர்த்தேக்க கட்டுமான நுட்பங்களையும் நீர் பங்கீட்டு முறைகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### 5.1 நிலமும் நீரும்

**"செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு**
**தன்பெயல் தலைஇய ஊழியும்"**[1]

காற்றிலிருந்து தீயும் ஊழியும் தீயிலிருந்து பனியும் மழையும் பெய்த ஊழிகளும் தோன்றின இறுதியில் நீரில் நான்கு வகையான பூதங்களும் ஒன்றாக இணைந்து நிலத்தின் ஊழி தோன்றியது என்று நிலம் உருவான விதத்தை பரிபாடல் சுட்டுகிறது. இங்கு நிலம் தோன்றுவதற்கு நீரே முக்கியப் பணியாற்றுகிறது.

புறநானூறும்

**"மண்டிணிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்புதைவரு வளியும்**
**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீரும்**
**என்றாங்கு ஐம்பூதத்தியற்கை"**[2]

மண் செறிந்தது நிலம் அதன்மேல் உயர்ந்து நிற்பது வானம் அவ்வானத்தைத் தழுவி வரும் காற்று அக்காற்றால் எழுந்தது தீ. தீக்கு

முரணாக இருக்கின்ற நீா் என்று நீரின் தோற்றத்தையும் குறிப்பிடுகிறது. இங்ஙனம் உருவான நீரும் நிலமும் ஒன்றை ஒன்று சோ்ந்தே செயல்படுகிறது.

**"உலகின் பரப்பில் மூன்றில் இரண்டு பாகம் ஆழ்கடல் அந்த கடலிலுள்ள நீரின் அளவோ இவ்வுலகில் பனிக்கட்டிகளாக உறைந்து ஓடும் நதிகளிலும் தேக்கங்களிலும் நிலத்தடியில் ஓடி ஒளிந்தும் என்றும் இடம்பெயா்ந்து கொண்டுள்ள திரவமாகவும் காற்றின் ஈரப்பதமாகவும் உலவி பல வடிவங்களில் காணப்படுகிறது என்று முனைவா் ஆ.மோகனகிருஷ்ணன் குறிப்பிட்டுள்ளாா்"**[3]

தமிழா்களின் தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியத்திலும் நிலமும் நீரும் இணைந்து இந்த உலகத்தில் உயிா்கள் தோன்றுவதற்கு அச்சாணியாக உள்ளதை

**"முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணா்ந் தோரே தொல்-அகம்-4**
**நிலம் தீ நீா்வளி விசும்போ டைந்தும்**
**கலந்த மயக்கம் உலகம்**[4]

என்று நீரும் நிலமும் இல்லாமல் உலகில் உயிா்களின் உருவாக்கத்திற்கு காரணம் என்பதை பண்டைத் தமிழா்களின் சிந்தனையாகும்.

தொல்காப்பியா் வகுத்த குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என நான்கு வகையான நிலப்பகுதிகள் ஒவ்வொன்றிலும் நீரே முதன்மையாகத் திகழ்கின்றது. அவ்வகையில் பாலை நிலமானது நீரின்போக்கினைக் கொண்டு உருவாகியுள்ளதை அறிய முடிகின்றது. நீரின் தன்மைக்கேற்ப நிலமானது மாறும் பொழுது அப்பகுதியில் வாழும் மக்களின் வாழ்க்கைமுறை தொழில்கள் தாவரங்கள் மரங்களின் தகவமைப்பு சுற்றுசூழல் போன்றவை அனைத்தும் மாறுபடுவதை சங்கப்பாடல்கள் எடுத்து இயம்புகின்றது.

தொல்காப்பியரும் தன் நூற்பாவில் முதல் , கரு , உரிப்பொருட்களின் வாயிலாக குறிப்பிட்டுள்ளார்.

உழவர்கள் கடினமாக உழைத்தாலும் நிலவளமும் , நீர்வளமும் இன்றிப்பயிர் வளம் சிறக்காது நிலத்திற்கு ஏற்பவே விளைவு சிறக்கும் என்பதை உழவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.

**“நிலநலத்தால் நந்திய நெல்லேபோல் தத்தம்**

**குலநலத்தால் ஆகுவர் சான்றோர்”[5]**

என்பது தமிழறிஞர்கள் கருத்தாகும். நல்ல நிலத்திலும் நன்றாக உழுது பயிரிட வேண்டும். குறைந்த ஈரத்தில் உழுது பயிரிட்டால் உழுத பயனைக் காண முடியாது. கற்றறிந்தவர்களாயினும் அவர்கள் வறுமை நிலையில் இருப்பார்களாயினும் அவர்கள் சொல்கின்ற கருத்துகள் சமுதாயத்தில் சிறப்பு பெறுவதில்லை. அதனால் பயனும் விளைவதில்லை. ஈரமில்லாமல் செய்யும் உழவும் அதுபோல தான் என்பதை,

**“புல்ஈரப் போழ்தின் உழவேபோல் மீதாடிச்**

**சொல்லாவாம் நல்கூர்ந்தோர் சொல”[6]**

எனக் குறிப்பிடுகிறது நாலடியார்.

### 5.2 நீரின் அவசியம்

இவ்வுலகம் தன்நிலை திரியாமல் இருக்க நீர்ப்பதத்தோடு கூடிய மண் இன்றியமையாதென்பதைப் பழந்தமிழர் உணர்ந்திருந்தனர். உயிர்கள் வாழ உணவு எவ்வளவு இன்றியமையாத தேவையோ அதைப்போல இந்நிலம் வளமாக இருக்க நீர் இன்றியமையாத மூலமாகும் என்பதை உணர்ந்தினர். இதனை,

**“நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே**

**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**

**உணவெனப் படுவது நிலத்தோடு நீரே”[7]**

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. மேலும் இவ்வகையான சிறப்பு வாய்ந்த நீரினையும், நிலத்தையும் ஆங்காங்கே நீர்நிலைகளை ஏற்படுத்துவதன் மூலம் ஒன்றாகக் கலக்கச் செய்பவரே இவ்வுலகத்தில் உடலையும், உயிரையும் படைத்தவர் என்ற பெருமையைப் பெறுவர் என்பதனை,

**“நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**

**உடம்பும் உயிரும் படைத்திசி னோரே”**[8]

என்ற அடிகள் சுட்டுகின்றன.

### 5.3 மழை

வேளாண்மைக்கு அடிப்படை நீர் நீரின்று அமையாது உலகு என்பார் வள்ளுவர். பண்டையத் தமிழ் மக்கள் நீரின் மீது வைத்திருந்த மதிப்பீடுகளும், நம்பிக்கைகளும் மிக அதிகமாகும். மாமழை போற்றதும், மாமழை போற்றுதும் என்பார் இளங்கோவடிகள். மழை பொழிவு பற்றிய அறிவியல் உண்மைகளை பண்டைத் தமிழர் முன்பே அறிந்திருக்கின்றனர் என்பது புலனாகிறது. கடலில் இருந்து நீரை முகந்து மேகமானது மழையைக் கொண்டு வந்து நிலத்திற்கு தருகின்றது என்ற அறிவியல் கோட்பாடானது பட்டினப்பாலையில் இடம்பெற்றுள்ளது. வான்முகந்த நீர் மழைப்பொழியவும் மழைப்பொழிந்த நீர் கடற்பரப்பவும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது இதே போன்று,

**“மறந்து கடல் முகந்த கமஞ் சூல் மாமழை**

**பொறுத்தல் சொல்லாது இறுத்த வண் பெயல்”**[9]

என்ற பாடல்வரி நீர் பொழியும் அறிவியலை உணர்த்துகிறது. இரவுப்பெயல் பொழிந்த உதவியோயே என்ற வரி மக்கள் மழையை பார்த்த பார்வையை எடுத்துரைக்கிறது. வேறுபாடுகள் இல்லாமல் எல்லோரையும் சமமாக பாவிக்க வேண்டியது மன்னனின் தலையாயப் பண்பாகும். சாதிக்கு ஒரு நீதி என்பது அதன் அடிப்படை இதனை விளக்க வந்த புலவர் மழையை எடுத்துகாட்டாக விளக்கியுள்ளார்.

**“அறுகுளத்து உகுத்தும் அகல்வயல் பொழிந்தும்**

**உறுமிடத்து உதாவது உவர்நிலம் ஊட்டியும்**

**வரையா மரபின் மாரி போலக”**[10]

வற்றி போய்விட்ட குளத்தை நிரப்பியும் அதேபோல் வேறுபாடு இல்லாமல் அகன்ற வயல்களின் மீது பொழிந்தும் விளைச்சலே தராத உவர்நிலப் பகுதிகளிலும் நீரைச் சொரிந்தும் பாகுபாடின்றி கொடுக்கும் மழை என்பது அதன் பொருளாகும். மழைநீரைச் சேர்த்து வைத்து வேளாண்மை செய்ய வேண்டும் என்ற நிலை குறிஞ்சிநிலத்தில் இல்லை ஏனெனில் அவர்களுக்கு அருவிநீரும் , சுனைநீரும் எப்போதும் குறைவின்றிக் கிடைத்து வந்துள்ளது. அது மட்டுமல்லாது அவர்களது வேளாண் முறையானது மழைப் பாசனத்தை அடிப்படையாகக் கொண்டதாகும்.

மண்ணின் நீர் நிலைகளிலிருக்கும் நீர் ஆவியாகி மேகமெனத் திரண்டு குளிர்ந்து மேகம் இருண்டு மழையாகப் பொழிகிறது என்பதை அறிந்து ஆங்காங்கே நீர்நிலைகளை உருவாக்கினர் என்பதை,

**“நீண்டு ஒலிஅழுவம் குறைபட முகந்து கொண்டு**

**ஈண்டு செலல்கொண்மூ வேண்டுவயின் குழீஇப்**

**பெருமலை அன்ன தோன்றல் சூல்முதிர்பு**

**உரும்உரறு கருவியொடு பெயல்”**[11]

என்பதில் கடல்நீரிலிருந்து ஆவியான மேகம் மலையெனக் குவிந்து இருண்டு மழையாகப் பொழிந்தமைச் சுட்டப்படுகிறது. இவ்வகை நீர் மேலாண்மை நீர்நிலை நிர்வாகம் எனப்படுகிறது. நீர்நிலை நிர்வாகமானது ஒவ்வொரு வயலுக்கும் பாசனநீர் கிடைத்தல் பசிப்பிணிப் போக்குதல் வறுமையை அகற்றுதல் இயற்கைச் சமநிலையை மீட்டெடுத்தல் ஆகிய முக்கிய நோக்கங்களைக் கொண்டதாகும்.

**5.3.1 மழைவளம் பெருக்கும் வழிமுறைகள்:**

மழைவளத்தைப் பெருக்க உதவும் வழிகளுள் முதன்மையானது இயற்கை வளங்களாகிய மலைவளத்தையும் , வனங்களையும் காத்தலாகும்.

அதோடு மட்டுமல்லாது இயற்கைவளங்களை சீரமைத்து நீர்ச்சுழற்சி முறைக்கு வழி வகுத்தலாகும். மேலும் செயற்கைவளங்களைப் பயன்படுத்தியும் மழைவளத்தைப் பெருக்க இயலும் என்பதையும் பழந்தமிழர்கள் அறிந்திருந்தனர் என்பதை இலக்கியச் சான்றுகளும் எடுத்தியம்புகின்றன.

### 5.3.2 மழைநீரை சேகரித்தல்

குறிப்பிட்ட காலங்களில் மட்டும் பெய்யும் மழைநீரின் அவசியத்தை உணர்ந்து நேரடியாக சேகரிப்பதும் நிலத்துக்குள் செலுத்துவதுமே ஆகும்.மழை நீர் சேகரிப்பில் இரு வழிமுறைகள் உள்ளன.

1. நேரடியாக நீர்ச் சேமிப்புக் கலன்களில் நிரப்பி தேவைக்கேற்ப பயன்படுத்துதல்

2. மழைநீரை நிலத்தில் செலுத்தி நீர்மட்டத்தை உயர்த்துதல்

உலகிலேயே அதிகமாக மழைபொழியும் வரிசையில் பிரேசிலுக்கு அடுத்து இந்தியா இரண்டாம் இடத்தில் உள்ளது சுமார் 4000 கன கி.மீ பெய்யும் இந்நீரில் 690 கன கி.மீ அளவிற்கு நாம் பயன்படுத்துகிறோம். மீதமுள்ள நீர் முறையான சேமிப்பின்றி வீணாக கடலில் கலக்கின்றது. வீணாகும் நீரினைத் தடுத்து நிறுத்தி முறையாகப் பயன்படுத்தினால் நீரின் தேவையும் அதனால் உணவும் மற்ற பிற தேவைகளும் நிறைவேறும் மேலும் தொழில்களும் சிறந்து விளங்கும் என்பது குறிப்பிடத்தக்கதாகும். பழந்தமிழர் இவ்வகை நீரின் தன்மையை உணர்ந்திருந்ததால் அந்நீரினை பலவகையில் சேமித்து அதனைப் பலவகைத் தேவைகளுக்கும் பயன்படுத்தினர்.

நெடுநல்வாடையில் நிலாமுற்றத்தில் இருந்து மழைநீர் வெளியேற மீன்வடிவ தூம்பு அமைக்கப்பட்டுள்ளது. தூம்புக்கு அம்பணம் என்ற சொல் வழங்கப்பட்டுள்ளது.

**“நிலவுப் பயன்கொள்ளும் நெடுவெண் முற்றத்து**
**கிம்புரிப்பகுவாய் அம்பணம் நிறைய**
**கவிழ்ந்து வீழ் அருவிப் பாடுவிறந்துஅயல’’**[12]

என்ற நெடுநல்பாடல் வரிகளின் வழி அறியலாம். இதன்வழி மாடங்களில் பொழியும் மழைநீரைச் சிதறி சென்று வீணாகாமல் இருக்க ஓரிடத்தில் விழக்கூடிய அளவிற்கு மழைநீர்க்குழாய்கள் உள்ளதை உணர முடிகின்றது.

தமிழர்களின் கட்டுமானத்தில் நிலாமுற்றமும் ஒன்றாகும்.அரசன் நிலவுப் பயன் கொள்ளுவதற்காக உருவாக்கப்பட்ட மகர வாய் போன்று அமைக்கப்பட்டிருந்த அம்பணம் என்ற குழாயிலிருந்து அருவி போன்ற ஓசை வீழ்ந்து கொண்டிருந்தது என்ற கருத்தில் மழைநீரை வீணாக்காமல் மழைநீரைச் சேமிப்பதற்காக குழாய்களை ஏற்படுத்தி நீர் விரயம் ஆகாமல் அதனை நிலத்திற்குச் செலுத்தி நிலத்தடிநீரை உயர்த்தியுள்ளனர். அதன் மூலம் குடிநீர் மற்றும் இதரத் தேவைகளையும் பூர்த்தி செய்துள்ளதை அறிய முடிகிறது.

நற்றிணையிலும்

**“ஈர்மண் செய்கை நீர்படு பசுங்கலம்**

**பெருமழைப்அபயற்குஏற் றாங்குளம்”**[13]

வீட்டு முற்றங்களில் மழைநீரை சேகரிப்பதற்கு புதியதாக வனையப்பட்ட மண்பாண்டங்களைப் பயன்படுத்தி சேகரித்துள்ளனர்.

இன்று நாம் பயன்படுத்தி வருகின்ற மழைநீர்ச்சேகரிப்பு உத்திக்கு தமிழர்கள் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளனர்.

## 5.4 நிலத்தடி நீரை உயர்த்துதல்

மழைநீரை நிலத்தடியில் சேமித்து மழைப்பெய்யாத காலங்களில் அதனை முறையாகப் பயன்படுத்தும் நிலையினையும் அக்கால மக்கள் அறிந்திருந்தனர் என்பதற்கான பதிவினை,

**“நீரற வறியா நிலமுதற் கலந்த**

**கருங்குர னொச்சிக்”** [14]

**“..................................பிறங்கல்**

**பெருங்களிறு உரிஞ்சிய மண்அரையாத்து”**[15]

என்ற பாடலில், நீர் நீங்குத்தன்மையில்லாத நிலப்பகுதியில் மலர்ந்திருந்த கருமையான நிறமுடைய சிறியகொத்தான பூக்களைக் கொண்டது நொச்சி மரமாகும். 'நீரறவறிய' என்ற சொல்லின் மூலம் நிலத்தடிநீரைத் தேடிச்சென்று உட்நோக்கியவேர்ப்பகுதியினை ஊன்றி வளர்ந்துள்ள நொச்சிமரம் என்ற குறிப்பில் நொச்சி நிலத்தடிநீரினை கிரகித்து வளரும் தன்மையுடைய மரம் என்பதும் நிலத்தடிநீர் நிறைந்துள்ள இடங்களை அறிவதற்கு மூலமாக இருந்துள்ளதையும்˙ சங்கப்புலவர் குறிப்பிட்டுள்ளார்.

"பழஞ்செவ்வியல் நூல்களில் தமிழர்கள் கடினமாக உழைப்பவர்களாகவும் சுறுசுறுப்பானவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். இப்போதிருப்பதைவிட, சங்க காலத்தில் நிலவளம் மிகுதி. ஆனால் இப்போது தேவைப்படும் உழைப்பைவிட மிகக் குறைவான ஆற்றலும் உழைப்பும் தேவைப்படும் அளவுக்கு அவ்வளவு வளமிக்கதாக இல்லை. பஞ்சம், வறட்சி, வறுமை யாவும் அறிய வராதவை அல்ல" என்ற கூற்றின் மூலம் சங்ககால மக்கள் தங்கள் வாழ்வின் இயல்பை நிலைநிறுத்த பல்வேறு நிலைகளில் வாழ்ந்துள்ளனர் என்பதை இவ்விளக்கம் உறுதிப்படுத்துகின்றது.

ஆற்றுநீர், மழைநீர் என்பதைப் போன்று சங்க காலத்தில் நிலத்தடி நீரினைப் பற்றிய புலமைப் பெற்றிருந்தனர். மழைப்பெய்யும் காலங்களில் பெறப்படும் மழைநீர், உழவுக்காக நிலங்களில் பாய்ச்சப்படும் நீர், ஏரி, குளம், கற்சிறை போன்ற நீர்த்தேக்கங்களிலுள்ள நீர் மண்ணிற்குள் ஊடுருவி நிலத்தடி நீராக உள்ளது என்ற உண்மையை அறிந்தும் அந்நீரினைப் பயன்படுத்தியும் நீரியல் திறன்மிக்கவர்களாக பழந்தமிழர்கள் செயல்பட்டனர் என்பதும் புலப்படுகின்றது.

## 5.5 நீர்த்தேக்கங்கள்

நீருக்கு அடிப்படையானது மழைநீர்.அம்மழையானது பெய்யும் காலங்களில் ஆறுகளில் ஓடிவரும் நீரினைத் தேக்கி வைக்க நீர்த்தேக்க அமைப்புகளை உருவாக்கும் வழக்கம் சங்கத்தமிழர்களிடம் மிகுந்துள்ளது. அத்தகைய நீர்த்தேக்கங்கள் உருவாக்குவதிலும் பழந்தமிழரின் கட்டுமான தொழில்நுட்பத்தினைக் காண முடிகிறது. நீர்த்தேக்கங்கள் ஏற்படுத்துதல் நீரினைப் பாசனத்திற்கு முறையாகப் பயன்படுத்துதல் பாதுகாத்தல் நீரினைப்

பங்கிட்டு கொள்ளுதல் போன்றவற்றில் அவர்களின் தொழில்நுட்பத்திறன் வெளிப்படுகிறது. நீர்த்தேக்கங்களிலிருந்து நிரம்பி நீர் போக மீதமுள்ள நீர் கடலில் கலக்கும்படி ஏற்படுத்தப்பட்டுள்ளது.

மழைக்காலங்களில் தேவைக்குமேல் பெருகும் நீரை நதியின் குறுக்காக அணைக்கட்டி உருவாக்கப்படும் சேமிப்பை நீர்த்தேக்கம் என்பர்.குறைந்த பரப்பளவில் மிகுந்த ஆழமும், கன அளவும் நீர்த்தேங்கக் கூடிய கொள்ளளவும் உள்ள இடத்தைத் தேர்வு செய்ய வேண்டும் .மழைமிகுதியும் விழக்கூடிய இடமாகவும் கூடுதலான நீரைச் சேமித்துத் தரும் நிலப்பகுதி உள்ள இடமாகவும் இது அமைய வேண்டும் நீர்த்தேக்கத்திலிருந்து பயன்பாட்டுக்குச் செல்லும் நீர் தானாகவே சரிவாகச் செல்லுமாறு இடத்தைத் தேர்வு செய்ய வேண்டும்.நீர்த்தேக்கம் நீர் பயன்பட வேண்டிய இடத்திற்கு அருகில் அமைவது நல்லது. நீர்த்தேக்கம் அமைக்கக் கூடிய இடத்தில் நிலப்பாங்கு அருகில் நீர் கசிந்து வெளிச்செல்ல முடியாதவாறு இருத்தல் வேண்டும் என்று அறிவியல் களஞ்சியம் வரையறை செய்கின்றது.

### 5.5.1 நீர்த்தேக்கக் கட்டுமான அமைப்புகள்

மழைநீரினை நம்பி உழவுத்தொழிலினை மேற்கொண்ட மக்கள் மழையில்லாத போது நீரினைச் சேமிக்கும் கட்டாயச்சூழல் ஏற்பட்டது. அதற்காக பல சிறிய பெரிய வகையிலான கட்டுமான நுட்பத்துடன் கூடிய நீர்த்தேக்கக்கட்டுமான அமைப்புகளை உருவாக்கினர். சங்கத் தமிழர்களிடையே இயற்கையாகப் பெய்யும் மழைநீரினை ஏரி, அணை குளம் , கண்மாய் போன்ற அமைப்புகளை உருவாக்கி சேமிக்கும் வழக்கம் மிகுந்துள்ளது. தேக்கி நீரினை உரிய முறையில் பங்கீட்டுப் பாதுகாத்த புலமையையும் சங்கப்பாடல்கள் வாயிலாக அறிய முடிகின்றது.

### 5.5.2 ஏரிகள்

ஆறுகளில் உருண்டு ஓடி வரும் அந்நீரினை முறையாகத் தேக்கி பாசனத்தேவைக்காக உருவாக்கப்பட்ட அமைப்பு ஏரி.

**“மழைநீரினைச் சேர்த்து வைத்து மண் உழவைக் கையாள மனிதர்கள் உருவாக்கிக் கொண்ட மண்பாத்திரங்கள் ஏரிகள் என்று பெருங்குப்பம் சம்பத்து குறிப்பிடுகிறார்”**[16]

சங்ககால மக்கள் அமைத்த அணைகளின் உறுதி பற்றி, **“ஏரிகள் அமைக்கும் போது இடத்தேர்வு, வடிவம், நீர்வளம் போன்றவை கவனத்துடன் தீர்மானிக்கப்பட்டதுடன், காரை, மடை, கலிங்கு போன்ற கட்டுமானங்கள் தொழில்நுட்ப அடிப்படையில் உலகத்தரம் வாய்ந்தவையாக இருக்கின்றன”**[17] என்பதன் மூலம் சங்ககால மக்கள் அணைகளை மிகவும் உறுதிப்பட அமைத்துள்ளனர் என்பது புலப்படும். இதனால் சங்கமக்களின் நீர் சார்ந்த மேலாண்மைப் பாங்கு தெளிவாகிறது.

ஏரிகள் செயற்கையான முறையில் மனிதர்களால் வெட்டுவதோடு அல்லாமல் இயற்கையாகவும் ஏரிகள் காணப்படுகிறது.

அவை

1.பூமிதட்டுகளின் அசைவு காரணமாகக் தோன்றுபவை்

2.எரிமலை வெடிப்பினால் தோன்றுபவை

3.தொடர் காற்று வீசுவதால் தோன்றுபவை

4.தொடர் நீர்ப்பாய்வதால் தோன்றுபவை

5.பனிப்பாறை சரிவுகளால் தோன்றுபவை

6. கடலோர இயக்கங்களால் தோன்றுபவை

போன்றவை இயற்கையின் ஆற்றலால் உருவாவதாக புவியியலாளர் கருதுகின்றனர். சங்கப்பாடல்களில் மனிதனால் உருவான ஏரிகள் பற்றியச் செய்திகளைக் காணமுடிகின்றது.

### 5.5.3 ஏரியின் அமைப்பு

**“பூமியின் மேற்பரப்பில் பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு காரணங்களால் சிறிதும் பெரிதுமான பள்ளங்கள் ஏற்பட்டு அதில் மழைநீரோ பனிநீரோ ஆற்றுநீரோ நீரோடையோ கலப்பதனால் வற்றும் அல்லது வற்றாத**

**நீர்நிலைகளாக அவைகள் அமைந்து விடுகின்றன.இவைகளே ஏரிகள் என்றழைக்கப்படுகின்றன என்பது புவியியில் வல்லுநர்களின் கருத்தாகும்”**[18]

சிறந்த ஆற்றலையுடைய தமிழர்கள் ஆறுகள் குளங்கள் இல்லாத பகுதிகளைத் தேர்ந்தெடுத்து ஏரிகளை நிறுவி இதன் நீரினை பாசனத்திற்கும் இதர தேவைகளுக்கும் பயன்படுத்தியுள்ளனர்.

ஆறுகள் குளங்கள் இருக்கும் பகுதிகளில் ஏரிகளை அமைத்தால் நீரானது மண்ணால் உறிஞ்சப்பட்டு நிலத்தடிநீராக மாறும் என்பதால் அவை அல்லாதப் பகுதிகளில் அமைத்துள்ள நுட்பம் வியக்கத்தக்கது

ஏரியின் உறுப்புகள் மூன்று

நீர்ப்பிடிப்புப் பகுதி - மழைநீர் ஏரிக்குள் விழும் பகுதி

நீர் சேமிக்கும் பகுதி - நீர் தேங்கும்பகுதி

நீர் பயன்படும் பகுதி - ஆயக்கட்டுப் பகுதி

இக்கருத்தையே சிறுபஞ்சமூலத்தில் ஏரியின் ஐந்து பகுதிகளைப் பற்றி

**“குளந்தொட்டுக் கோடுபதித்து வழிசீத்து**
**குளந்தொட்டு உழுவயலாக்கி வளந்தொட்டுப்**
**பாடுபடும் கிணற் றோடென்றிவ்வைம் பாற்படுத்தான்**
**ஏகுஞ் சுவர்க்கத் தினிது”**[19.]

குளம்(குளம் தொட்டு)

கலிங்கு (கோடு பதித்து)

மதகு (வழி சீத்து)

ஆயக்கட்டு ( உழுவயலாக்கி)

பொதுகிணறு அமைத்தல் (கிணறு)

ஏரியின் அங்கங்களை அமைப்பவன் சொர்க்கத்துக்குப் போவான் என்று சிறுபஞ்சமூலம் குறிப்பிடுகிறது.

### 5.5.4 ஏரியின் கரைகள்

பழந்தமிழர்கள் ஏரிகள் பெரு நீரைத்தேக்கி வைக்கும் சிறுகுளம் என்பதால் அதன் கரைகளை வலுவுடன் ஏற்படுத்தியுள்ளனர்.

**"ஏரிகளை ஈரமான களிமண் கலவையில் அமைப்பது அவசியம் என்ற ஆங்கிலேய பொறியாளர்களின் கருத்துக்கு மாறாகப் பண்டைய தமிழர்கள் எல்லாவிதமான விளைநிலங்களின் மண் எடுத்து பல்லாயிரக்கணக்கான ஏரிகளை மண் கரை கொண்டு கட்டியுள்ளார்கள்"**[20] என்ற கூற்றின் மூலம் மண்ணால் கட்டப்பட்ட அணைகளின் திடத்தையும் சங்கத் தமிழர்களின் ' புலமையையும் அறியமுடிகின்றது.

ஏரியின் கரையமைப்பினை கபிலர்

**"அறையும் பொறையு மணந்த தலைய**
**எண்ணாள் திங்கள் அனைய கொடுங்கரை**
**தெளிநீர்ச் சிறுகுளம்"** [21]

பாறைகளும் சிறுமலைகளும் பகுதிகளில் எட்டாம்நாள் பிறை நிலவைப் போல் வளைந்த கரையைக் கொண்ட தெளிந்த நீரை உடைய சிறிய குளம் என்று பாரியின் பறம்பு நாட்டிலுள்ள ஏரியைப் பற்றி இப்பாடல் கூறுகிறது.

ஏரிகள் வளைந்துள்ளதால் அதன் நீர் தாங்கும் திறன் அதிகமாகவும் நீளம் குறைவாகவும் இருக்கும் என்பதால் அதிகளவில் நீரினைத் தேக்கி வறண்ட காலங்களிலும் நீரைப்பயன்படுத்திய தமிழர்களின் கட்டுமானம் போற்றத்தக்கது.

**"இத்தகு ஏரி சிக்கனமான மற்றும் சிக்கலான வடிவமைப்பாகும். இன்றும் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள கவிநாட்டுப் பேரேரியில் காணப்படுவதாக மணி.மாறன் குறிப்பிடுகிறார்"**[22]

### 5.5.5 இணைஏரிகள்

**“மதி சேர்ந்த மக.......**

**அரு காமத்து இணை ஏரிப”[23]**

என்ற பாடலில் ஒன்றுக்கு ஒன்று அடுக்காகப் பல ஊர்கள் நிறைந்து சோழ நாடு பகைவர்களால் உண்டாகும் அச்சமே அவ்வூர்களில் இல்லை.அந்த நாட்டில் கடற்கரையில் விளங்குவது காவிரிப்பூம்பட்டினம். உமணர்கள் படகிலே உப்பைக் கொண்டு விற்று அந்தப் படகிலே நெல்லை பரப்பிக் கொள்கிறார்கள். நகரத்துப் புறம்பே தோப்புகளும் பூஞ்சோலைகளும் செறிந்திருக்கின்றன. வலிமையைப் பெற்ற கரைகளையுடைய இரண்டு மிகப்பெரிய நீர்நிலைகள் உண்டு அவற்றை இரு காமத்திணை ஏரி என்று சொல்லுவார்கள்.அவை பார்ப்பதற்கு ஓவியம் போல் காட்சியளிப்பதாக இப்பாடல் சுட்டுகிறது.

**“சோம குண்டம் சூரிய குண்டம் இத்துறைகளில் முழுகி எழுந்து காமனை வழிபட்டால் கணவனை அடைந்து இன்புறுவர் என்று காமத்திணை ஏரி பற்றி சிலம்பு பகர்கின்றது”[24]**

**“வைஎர் வால்எயிறு ஊறிய நீரே”[25]**

**“குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்**

**முகந்தனர் கொடுப்ப”[26]**

இப்பாடல்களில் வால் என்ற சொல் தூய்மை அல்லது வெண்மையைக் குறிக்கும் சொல்லாகும்.நன்னீரையுடைய ஏரிகளில் நீர் நிரம்பி வழிவதால் உறையூர் நீர்வளம் மிகுந்து செல்வமுடையதாக இருப்பதாக அறிய முடிகின்றது. இந்தச் சொல்லாட்சியை

**பாலொடு தேன்கலந்தற்றே பணிமொழி**

**வாலெயிறு ஊறிய நீர்[27]**

என்ற குறளிலும் அறியலாம்.ஏரியையும் குளக்கரையும் அங்கு விளைந்த நெல்லையும் வளத்தையும் குறிப்பிடுவதால் சங்ககாலத்தில் ஏரிப்பாசனம் நிகழ்ந்துள்ளதை அறிய முடிகின்றது.

இன்று கண்டுபிடித்த தொல்லியல் மற்றும் கீழடி அகலாய்வுகளில் நூற்றுக்கணக்கான ஏரிகள் சங்க காலத்தில் உருவானவை என்று நிருபிக்கப்பட்டுள்ளது. அத்தகு ஏரிகள் இன்றும் பயன்பாட்டில் இருந்து வருவது நம் முன்னோர்களின் பொறுப்புணர்வையும் ஏரித் தொழில்நுட்பத்திறனையும் அறிய முடிகின்றது.

- மழைநீர் சேகரிப்புக் கலன்கள் நீர்ப்பெருக்கத்தைத் தடுக்க
- நிலத்தடி நீர்மட்டம் பல்லுயிர்கள் பெருக்க
- உழவு மற்றும் மீன்பிடித்தொழில் குடிநீர் பயன்பாடு

போன்ற பல்வேறு நிலைகளில் சங்ககாலத்தில் நிர்வகிக்கப்பட்ட ஏரிகள் இன்றும் உபயோகிக்கப்படுகிறது.

### 5.5.6 கற்சிறை

ஏரி குளங்களை அமைத்துப் பயன்படுத்துதல் என்பது சிறிய பரப்பளவு கொண்ட ஆற்றுக்கால் பகுதிகளில் வரும் வேகம்குறைந்த வெள்ளத்திற்குப் பொருத்தமுடையதாக இருந்தது. எனினும் பெருக்கெடுத்து வரும் அதிக பரப்பளவு கொண்ட ஆற்றுநீரைத் தடுத்து நிறுத்தும் வல்லமையை இவை பெற்றிருக்கவில்லை. சில நேரங்களில் அதிக நீர்வரத்தால் ஏரியின் கரைச்சுவர் உடைந்துவிடுவதும் உண்டு.

அதிகக் கொள்ளளவு நீரைத்தேக்க பூமியின் கடினத்தன்மை கொண்ட பாறைவரையிலான கட்டுமானம் அமைப்பதுவே சரியான முறையாக அமையும் என்று உணர்ந்து, பூமியின் கடினத் தன்மை கொண்ட பாறைகள் வரை களிமண் பூசப் பெற்ற பெரிய பெரிய பாறைகளை அடுக்கி மிகப் பிரமாண்டமான கட்டுமானங்களை அமைத்தனர். இத்தகு முயற்சிகளின் வெளிப்பாடே பெரிய ஆற்றின் குறுக்கே அணைகளை எழுப்பி நீரைத் தேக்கி ஆளுவது.

அணைகளைக் கட்டுவதற்கு மிகவும் பொருத்தப்பாட்டுடன் கூடிய தொழில்நுட்பங்களைப் பழந்தமிழர்கள் சிந்தித்துச் செயல்படுத்தினர். குறிப்பாக அணைக்கட்டின் வலிமைக்கு முக்கியத்துவம் கொடுத்தனர்

(அதன் கொள்ளளவைக் காட்டிலும், இச்சிந்தனையை மிகச் சரியாகச் செயல்படுத்தி அமைத்த அணைகள் இன்றளவிலும் பயன்பாட்டில் இருப்பது நடைமுறைச் சான்றாகும்.

மழைபொழியும் காலங்களில் ஆறுகளில் மிகுதியாக வரும் வெள்ள நீரைத் தடுத்து வாய்க்காலில் செலுத்துவதற்காக ஆற்றின் குறுக்கே கட்டப்படும் அமைப்பாகும். பாறைகளிலிருந்து வெட்டியெடுக்கப்பட்ட கருங்கற்களைக் கொண்டு கட்டியதால் தமிழர்கள் கற்சிறை என்று அழைத்துள்ளனர்.

பல ஆண்டுகளுக்கு முன்பே விளைநிலங்களுக்கு நீர்பாய்ச்சவும் வாழ்நாள் தேவைகளுக்கும் தேவையான நீரைச்சேமிக்கும் தொழில்நுட்பம் தமிழர்களிடையே இருந்துள்ளது.

கற்சிறை பெரும்பாலும் பாறைகள் உள்ள ஆற்றுப்படுகைகளில் மழையில்லாத காலத்தில் அமைக்கப்பட்டுள்ளது. வெள்ளத்தினால் பாய்ந்து வரும் நீரைத்தடுக்க தமிழர்கள் கற்களையும் இயற்கைப் பொருட்களையும் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.5.7 கற்சிறை அமைப்பு

**"வருந்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை**
**மீதுஅழி கொண்ட கடுநீர்நோக்கி"**[28]

மழைக்காலத்தில் உழவர்கள் காஞ்சி மரத்தின் குறுகிய துண்டுகளை குறுக்கே வைத்து அடைத்து நெற்பயிரை உடைய வயலாகிய பள்ளங்களில் நீரைத்தேக்குவர். அவர்கள் வருந்தி முயன்று அமைந்த வளைவான அணையின் மேல் இருந்து நீரைப்பார்த்தபடி கொக்குகள் இருக்கும் என்ற பாடலடிகளில் சங்ககாலத்தில் அணை வளைவான அமைப்புக் கொண்டதாக உள்ளதை அறிய முடிகின்றது.

வாத்து போல் வளைவாக அமைவது சிறந்தது என்று இன்றைய நீரியல் நிபுணர்களின் கருத்து.அப்பொழுது தான் அணையின் செயல்திறன்

சிறப்பாக இருக்கும் என்றும் கூறகின்றனர். இதனை ஆங்கிலத்தில் DUCKBILL WEIR என்று அழைக்கின்றனர்.

இன்றைய வல்லுநர்களின் நுட்பத்தினை தமிழர்கள் இனங்கண்டு செயல்படுத்தியுள்ளத் திறத்தை அறிய முடிகிறது.

தொல்காப்பியர் தன் நூற்பாவில்

**“வருபுனல் கற்சிறை கடுப்ப இடைஅறுத்து**
**ஒன்னார் ஏட்டில் செருப்புகல் மறவா”**[29]

பெருகி வரும் வெள்ளத்தை கற்சிறை தடுப்பது போல பாய்ந்து வரும் படையை அவன் ஒருவனே தாங்கி நிற்கிறான் என்று குறிப்பிடுகிறார்.

மதுரைக்காஞ்சியும்

**“வருசிறைப் புனலைக் கற்சிறை போல**
**ஒருவன் தாங்கிய பெருமையானும்”**[30]

வருகின்ற வெள்ளத்தைக் கற்சிறை கட்டித்தடுத்து நிறுத்தினாற் போல பகைவரைத் தடுத்து நிறுத்தி அவரைப் புறமுதுகிட்டு ஓடச் செய்ததாக மாங்குடிமருதனார் உவமைப்படுத்துகிறார்.

**“கொல்புனற் சிறையின் விலங்கியோன்”**[31]

எனும் அடிகளிலும், கரையை உடைத்துச் செல்லும் பெருவெள்ளத்தைத் தாங்கி நிற்கும் அணையைப் போன்று வீரன் செயல்பட்டான் என்று வீரத்தின் அடையாளத்தைக் குறிப்பதாயினும் ஆற்றின் இடையே அணைகட்டிய நிலையைப் புலப்படுத்துகின்றன.

**“…மல்லற் புனல்வையை மாமலை விட்டிருத்தல்**
**இல்லத்து நீதனிச் சேறல் இளிவரல் எனவாங்கு,**
**கடையழிய நீண்டகன்ற கண்ணாளைக் காளை**
**படையொடுங் கொண்டு பெயர்வானைச் சுற்றம்**

**இடைநெறித் தாக்குற்ற தேய்ப்ப அடல் மதுரை**

**ஆடற்கு நீர் அமைந்தது யாறு"[32]**

மிக்க புனலையுடைய வைகைப் பெண்ணானவள் பிறந்தவீடாகிய பெருமலையை விட்டு நீங்கி, நீ நிலையாகத் தங்கியிருத்தற்குரிய இடமாகிய கடலை நோக்கிச் செல்லும் வழியில், காளையானவன் தனது காதலியைக் கைப்பற்றி உடன்போக்கு அழைத்துச் செல்லும் வழியில் தலைவியின் சுற்றத்தார் இடைமறித்து அவர்களின் போக்கைத் தடுத்து நிறுத்தியதைப்போல வெற்றியாளராகிய மதுரை மக்கள் வைகைப் பெண்ணை அணையிட்டுத் தடுத்து நிறுத்தினர் ஆதலால் அவர்கள் நீராடி மகிழ்வதற்கு வைகை பொருந்தியதாக அமைந்தது என்று வைகையின் நீரை வீணாக்காமல் அணையிட்டுத் தடுத்து நிறுத்தி மேலாண்மை செய்து பயன்பெற்ற மக்களைப் பற்றி இப்பாடலின்கண் கூறுகிறார் நல்லந்துவனார் எனும் சங்கப்புலவர்.

சேயாற்றில் இருந்து மதகுகள் அமைத்து அப்பகுதி விளைநிலங்களுக்கு நீர்வழங்கப்பட்டதை,

**"வனைகலத் திகிரியின் குமிழி சுழலும்**

**துனைசெலற் றலைவாய் ஓவிறந்து வரிக்கும்**

**காணுநர் வயாஅங் கட்கின் சேயாற்றின்**

**யாணர் ஒருகரைக் கொண்டனிர் கழிமின்"[33]**

எனும் மலைபடுகடாம் பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வாற்றில் அமைக்கப்பட்ட மதகுகள் குயவன் வனையும் மட்கலத்தின் சக்கரம் போல் இருந்ததாகவும் இப்பாடல் கூறுகிறது.

### 5.5.8 கரிகாற்சோழன்

சங்ககால மன்னர்களுள் ஒருவரான கரிகாற் சோழனால் கட்டப்பட்ட கல்லணை இன்றளவும் உலகிலேயே அனைத்து வல்லுநர்களாலும் சிறந்த தொழில்நுட்பமாகவும் பாராட்டுக்குரியதாகவும் திகழ்கின்றது. ஆற்றுநீரை அணையிட்டு ஆண்ட சங்ககால மக்கள்தம் சிந்தனை வளத்திற்கு

எண்ணற்ற சான்றுகள் இருப்பினும் இன்று கண்கண்ட சான்றாக நிலைத்துச் சிறப்பது கி.பி. முதலாம் நூற்றாண்டில் கரிகாலன் கட்டிய கல்லணை ஆகும்.

காவிரி நாட்டினை ஆட்சிபுரிந்த கரிகாலன் மழைநீரினால் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு மக்கள் இன்னலுறுவதைக் கண்டு அந்நீரின் போக்கினைத் தடுக்க காவிரிக் கரையில் கல்லணை எழுப்பியுள்ளான்.

### 5.5.9 கல்லணையின் தொழில்நுட்பம்

காவிரி ஆற்றின் மீது பெரிய அளவிலான பாறைகளைக் கொண்டு வந்துள்ளனா் அப்பாறைகள் நீரினால் அரிப்பு ஏற்பட்டு அதன் காரணமாக பாறைகள் யாவும் மண்ணுக்குள் சென்றது.பின்பு அதன்மேல் வேறொரு பாறைகளை அடுக்கி வைத்து இடையே நீரில் கரையாத களிமண்ணைப் பூசி இரண்டு பாறைகளும் ஒட்டிக்கொள்ளும்படி அமைக்கப்பட்டது. அறிவியல் தொழில்நுட்பம் வளர்ச்சியுறாத அக்காலக்கட்டத்தில் கரிகாலன் ஏற்படுத்திய கல்லணை தமிழர்களின் நுண்மான் நுழைப்புலத்தை இக்கால அறிஞர்களும் பாராட்டும் விதமாக உள்ளதை அறியமுடிகின்றது.

**....அரிகாலின்கீழ் அந்நெல்லே சாலும்**

**கரிகாலன் காவிரி சூழ் நாடு”**[34]

என்ற வரிகள் காவிரி சூழ்ந்த சோழநாட்டனை ஆட்சிச் செய்தவன் என்று குறிப்பிடுகிறது.

சங்ககால மக்கள் அமைத்த அணைகளின் உறுதி பற்றி, **“ஏரிகள் அமைக்கும் போது இடத்தேர்வு, வடிவம், நீர்வளம் போன்றவை கவனத்துடன் தீர்மானிக்கப்பட்டதுடன், காரை, மடை, கலிங்கு போன்ற கட்டுமானங்கள் தொழில்நுட்ப அடிப்படையில் உலகத்தரம் வாய்ந்தவையாக இருக்கின்றன”**[35] என்பதன் மூலம் சங்ககால மக்கள் அணைகளை மிகவும் உறுதிப்பட அமைத்துள்ளனா் என்பது புலப்படும். இதனால் சங்க மக்களின் நீா் சாா்ந்த மேலாண்மைப் பாங்கு தெளிவாகிறது.

இயற்கைச் சீற்றமான பெருவெள்ளத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள அணைகள் பயன்பட்டுள்ளதை,

**“மழைநீங்கிய மாவிசும்பின்**

**மதிசேர்ந்த மகவெண்மீ**

**னுருகெழுதிற லுயர் காட்டது”[36]**

எனும் பாடலடியில் மழை மாசு நீங்கிய பெரிய ஆகாயத்தில் திங்களைச் சேர்ந்து விளங்கும், மகம் என்னும் வெண்ணிற நாள் மீனின் வடிவத்தைப் போன்ற வடிவத்தைக் கொண்டதாக வலிமையுடன் அமைக்கப்பட்ட உயர்ந்த கரைகளைப் பெற்ற நல்ல பொய்கை என்று நீர் மிகுதியால் அருகில் உள்ள நிலங்கள் பாழ்படாமல் இருக்க வெண்ணிற நாள் மீனின் தோற்றம் போன்று கரைகளை அமைத்துள்ளனர்.

**“மழை வேளாண்மை தொடக்கம் நீரியல் வேளாண்மை வரை தமிழகத்தின் பாசன வளர்ச்சி தமிழர்களின் அறிவியல் திறனை எடுத்துக் காட்டுகிறது. மழை தொடர்பான வானியல் அறிவு, நீரியல் கோட்பாடுகள், ஏரிகள் அமைப்பதில் தேர்ந்த தொழில்நுட்பம், மணற்பாங்கான ஆறுகளிலும் அணை கட்டும் வடிவமைப்பும் நீரியல் வடிவமைப்புகளும் தமிழர்தம் பொறியியல் வல்லமையைக் காட்டுகின்றன”[37]** என்ற பழ. கோமதிநாயகத்தின் விளக்கத்தின் மூலம் தமிழர்கள் நீரியல் மேலாண்மை செய்துள்ளது தெளிவாகின்றது.

வையை ஆற்றில் உடைப்பெடுத்து கரையை அடைத்து ஒழுகுவதை, பின்னும் மீண்டும் ஊற்றுநீர்

**“வையை உடைந்த மடையடைத்தக் கண்ணும்**

**பின்னு மலிரும் பிசிர்போல”[38]**

என்ற பதிவின் மூலம், வையை அணைக்குக் கரையமைத்து நீரைச் சேமித்ததை உணர்த்துகின்றது. பாறைக் கல்லிணையுடைய நிலம் போன்று அசையாத பரந்த கல்லணையால் தடுக்கப்பட்டுத் தேக்கி வைத்த நீர்

என்று நீரினைத் தேக்குவதற்குத் திடமான பாறை போன்ற கல்லினைக் கொண்டு அணைக்கட்டி நீரைத்தேக்கினார் என்பதை,

**“பாறைப் பரப்பின் பரந்த சிறைநின்று”[39]**

இப்பாடலடிகளால் அறியலாம். கரிகாலனால் கட்டப்பட்டதாகக் குறிப்பிடப்படும் கல்லணையின் கட்டமைப்பைப் பற்றி, **“ஆற்று மணல்படுகையில் மிகப்பெரிய பாறை போடப்பட்டது. பாறைக்கு அடியில் உள்ள மணல் ஆற்றுநீரில் அரித்து இழுத்துச் செல்லப்பட்டதால், பாறை மெதுவாக மணலுக்குள் புதைந்தது. அதன் மேல் களிமண்ணைப் பரப்பிவிட்டு மற்றொரு பெரிய பாறை வைக்கப்பட்டது. இப்போது அடியில் உள்ள பாறை மேலும் ஆழத்திற்குள் புதையும். இப்படி ஒன்றன் மேல் ஒன்றாகப் பெரிய பாறைகளை அடுக்கிப் புதைத்திருந்தனர்.மணல் பகுதி முடிந்து கடினப்பகுதி வந்ததும் கீழ்மட்டத்தில் உள்ள பாறை இறங்காது. இப்படித்தான் கல்லணை கட்டப்பட்டிருந்தது”[40] என்று பழ.கோமதிநாயகம் குறிப்பிடுகின்றனர்**.

இவ்விளக்கத்தின் வாயிலாக சங்கத்தமிழர்கள் அணைகள் கட்டி நீரினைத் தேக்கி, நீரியல் மேலாண்மைச் செய்த திறத்தை உணரலாம்.

### 5.6 நீர் பங்கீட்டு முறைகள்

நீர்த்தேக்கங்களால் சேமிக்கப்பட்ட நீரினை உரிய முறையில் வழங்குதல் என்பது முக்கியப் பணியாகும்.மழைக்காலங்களில் நீரினை சேமித்தல் வறட்சிக் காலங்களில் நீரினை முறையாகப் பயன்படுத்துதல் நீரினை வழங்குதல் போன்ற அனைத்து நிலைகளிலும் தமிழர்கள் சிக்கன முறைகளில் கைதேர்ந்தவர்களாகவும் இருந்ததைக் காண முடிகின்றது. நீரின் இன்றியமையாமையை உணர்ந்த மக்கள் பல்வேறு வழிகளை உருவாக்கி

தங்களுக்குத் தேவையான நீர்த்தேவையைப் பூர்த்தி செய்து கொண்டனர்.மீதமுள்ள நீரினை நிர்வகித்து வந்ததால் காலம் முழுவதும் நீர்ப்பற்றாக்குறையின்றி வளமான வாழ்வு வாழ்ந்துள்ளனர்.

தமிழர்கள் நீரினை பங்கீடு செய்யும் முறைகளை மூன்று வகையாகப் பிரித்து அறியலாம்.

1.நீரினை வழங்கும் அமைப்புகள்

2.நீரை பயன்படுத்துதல்

2.நீரைப் பராமரித்தல்

### 5.6.1 நீரினை வழங்கும் அமைப்புகள்

நீர் வழங்குதல் என்பது நீர் கிடைக்கும் இடத்திலிருந்து இதைத் தனித்தனியே நிலங்களுக்கு எடுத்துச் செல்லுதலாகும்.தமிழர்கள் நீர்த்தேக்கி வைக்கும் தொழில் நுட்பத்தை மட்டுமின்றி நீரை வழங்கும் அமைப்புகள் பற்றிய தொழிநுட்ப அறிவையும் பெற்றுள்ளனர்.இவ்வமைப்புகள் மிகத் துல்லியமாக கட்டப்பட்டுள்ளதை அறியலாம்.

இப்பணிக்காக பழந்தமிழர்கள் மதகு மடை குமிழ் தூம்பு சுருங்கை கால்வாய் போன்ற அமைப்புகளை தொழில்நுட்பத்துடன் ஏற்படுத்தியுள்ளனர். அதனை நீர் வெளியேறும் தன்மையினைக் கொண்டு இரண்டு வகையாகப் பிரிக்கலாம் .

1. மிகு நீர் வழங்கும் அமைப்புகள்
2. குறு நீர் வழங்கும் அமைப்புகள்

### 5.6.2 மிகு நீர் வழங்கும் அமைப்புகள்

பெருகி வரும் வெள்ளத்தைக் கட்டுப்படுத்த இயலாத நிலையில் மிகுதியான நீரினை மக்களின் தேவைகளுக்காக வழங்கும் அமைப்பாகும். இதில் மடை குறிப்பிடத்தக்கது.

### 5.6.3 திண்மடை

மடைதிறந்தாற் போல என்ற பழமொழிக்கேற்ப மடையில் திறந்து விடப்படும் நீரானது பெருவெள்ளமாகப் பாய்ந்தோடும் உரிய காலங்களில் வேளாண்மையை மேற்கொள்ளும் பொருட்டு மடைகளை தமிழர்கள் ஏற்படுத்தியுள்ளனர்.

மடை என்பது தண்ணீரை வெளியேற்றுவதற்காக அமைக்கப்படுவது .அந்த மடையில் ஒரு கதவு இருக்கும் இக்கதவினைத் திறந்தால் மடைதிறந்த வெள்ளம் போல் தண்ணீா் வெளியேறும்.இந்த அமைப்பில் வெளியேறும் தண்ணீரின் அளவைக் கூட்டவோ குறைக்கவோ முடியாது என்று கோமதிநாயகம் குறிப்பிடுகின்றார்.

சங்கப்பாடல்களில்

**"மடைமாண்**

**நுண்இழை**

**செறிமடை**

**திண்மடை**

**இருமடை**

**கலி மடை"**[41]

போன்ற பாடல்களில் மடை என்கிற சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டுள்ளது. மடை என்பது மூட்டுவாய் பொருந்துவாய் என்ற பொருளில் வழங்கப்படுகிறது. நீரினை வழங்குவதற்காக ஏற்படுத்தப்பட்ட வாய்ப்பகுதி என்பது புலப்படுகின்றது.

### 5.6.4 மடை இயங்கும் விதம்

மடையில் திறந்து விடப்படும் நீர் கால்வாய் வழியே ஓடி வயலைச் சென்றடைகிறது.இதனை

**"படைமாண் பெருங்குள மடைநீர் விட்டென**

**கால்அணைந்த எதிரிய கணைக்கோட்டு வாளை"**[42]

என்பதில் செழியனால் உருவாக்கப்பட்ட குளத்தில் அடைக்கப்பட்டிருந்த நீர் மடை திறந்துவிட்டதால் வெளியேறிக் கால்வாயை எதிர்த்து வரும் கொம்பை உடைய வாளை மீன் கால்வாயில் இருந்து சேறுடைய வயலின் உள்ளே ஓடுமாறு செல்லும் .அங்கு உழுத எருதின் காலில் பட்ட சேறு புள்ளினங்களுடன் வெண்மையான நிறத்தில் மேற்புரத்தில் விளங்கும்

இத்தகைய வாளை சிறுகுடி என்பதில் மடையிலிருந்து வரும் நீரானது கால்வாய் வழியாக வயலில் சென்று உழவுத்தொழிலை மேம்படுத்துகிறது.

**“வையை உடைத்த மடை அணைந்தக் கண்ணும்”**[43]

இங்கு வையை ஆற்றில் அதிக நீர்ப்பெருக்கு தோன்றுவதையும் வையயில் மடையை அடைத்தப் பின்பும் நீர்க்கசிவு தோன்றுவது கூறப்படுகிறது.

### 5.6.5 மடைநீர் செல்லும் பிரிவுகள்

மடை நீரானது திறந்து விடப்பட்டவுடன் கால்வாய் வழியாகச் செல்லும் போது மூன்று நிலைகளை அடைகிறது.அதனால் வயல்களுக்கும் தண்ணீர் சீராக கிடைக்கிறது.

- முகப்பு மடை (தலைமடை) - நீர்ப்பாசனம் தொடங்கும் இடம்
- நடு மடை (இடை மடை) நீர்ப்பாசனம் தொடரும் இடம்
- *கீழ் மடை (கடை* மடை) நீர்ப்பாசனம் முடியும் இடம்

என வகைப்படுத்தப்படுகிறது

ஏரி அணையிலிருந்து மடை வழியே வரும் நீரானது தலை இடை கடை பகுதிகளில் வழியே பாசனத்திற்கு சென்றடையும் இடமாகும். தலைமடை மற்றும் நடுமடை பகுதியில் நீரைச் சிக்கனமாக பயன்படுத்துவதால் கடைமடை பகுதிக்கு அதிகமான நீர் கிடைக்கிறது.. நீர்வரத்தினைப் பொறுத்து அதன் அளவு நீட்டிக்கப்படுகிறது..

சங்கப்பாடல் ஒன்றில் கீழ்மடை வழியே நீர் சென்று வயலை வளப்படுத்தியதாகச் செய்தி உள்ளது

**“ஆனா ஆகை அடுபோர்.......**

**.....அரிநர்**

**கீழ்மடைக் கொண்ட வாளையும்”**[44]

சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவன் செங்கோலாட்சி செய்பவன் .அவனது நாடு மிகச்சிறந்த புதுவருவாய் உடையதாக

விளங்குகிறது. அவனது நாட்டில் உழவர்கள் நெல்லை அரிபவர் கடைமடையில் பிடித்து வைத்த வாளை மீனும் உழுவோர் கலப்பையால் தட்டுப்பட்ட ஆமையும் கரும்பு அறுப்பர் கரும்பில் எடுத்த தேனும் நீர்த்துறையில் மகளிர் பறித்துக் கொண்டு வந்த குவளைப் பூவும் என்னும் இவற்றை மலை காடு ஆகிய வலிமையான நிலங்களில் இருந்து வரும் உறவினர்க்கு விருந்தாகத் தரும் மருத வளநாட்டினர்.

தலை இடை கடை பயனை அறிந்த தமிழர்கள் சங்ககாலம் தொட்டு பயன்படுத்திய இம்முறையானது இன்று வரை கடைப்பிடிக்கப்படுகிறது.

**“வேட்டச்சிறா அர் சேட்பலம் படராது**

**படுமடைக் கொண் குறுந்தா ளுடும்பின்”**[45]

வேடர் குலத்தைச் சேர்ந்த மனைவியும் இளைய சிறுவர்களும் நெடுந்தொலைவு செல்லாமல் மடைப்பகுதியில் குட்டையான கால்களையுடைய உடும்பினைப் பிடித்துச் சமைத்தனர் எனக் கூறுவதில் மடைநீரானது அப்பகுதியில் மக்களின் நீர்த் தேவைக்கு பயன்பட்டதை அறிய முடிகின்றது.

## 5.7 குறு நீர் வழங்கும் அமைப்புகள்

நீர்த்தேவையைப் பொறுத்து நீரினை சிறியளவில் வழங்கும் அமைப்பாகும். அதில் மதகு, புதவு, தூம்பு, சுருங்கை போன்ற அமைப்புகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.7.1 மதகு

மதகு என்பது மடை போன்றே அமைக்கப்படுவது .ஆனால் அதன் கதவைச் சிறுகக் சிறுக திறக்கலாம்.வெளியேறும் தண்ணீரின் அளவைக் கூட்டவோ குறைக்கவோ முடியும். அது தற்காலத் திருகு மதகு அடைப்பான் என்பதற்கு ஒப்பாகும் என்று மதகின் வடிவமப்பைப் பற்றி பழ.கோமதிநாயகம் குறிப்பிடுகின்றார்.

கணக்கதிகாரம் என்ற நூலில் நீர்வழிச் சூத்திரத்தில் மதகுகளில் அளவு நீர் வெளியேறும் அளவு காலஅளவும் பாசனங்களின் அளவு குளத்தின் நீரியற் திறன் பற்றி குறிப்பிடுகின்றது.

மதகு என்பதற்கு குளம் முதலியவற்றில் நீர் பாயும் மடைவகை என்று பொருள்படும். நீரின் போக்கைக் கட்டுப்படுத்த கட்டப்பட்ட அமைப்பாகும்.மதகுகளில் நீர்த்தேவை ஏற்படாத பொழுது மூடி வைக்கும் வசதியும் உண்டு

**"நுரையுடன் மதகுதொரு இழிதரு புனல"**[46]

காடுகளிலும் மலைகளிலும் நீரானது வேகமாக ஓடி வரும்பொழுது நுரையுடன் காணப்படும்.நுரையுடன் கட்டுமானங்களில் சேர்ந்து மதகின் வழியே வழிந்தோடுவதை இப்பரிபாடல் பகர்கிறது.

### 5.7.2 புதவு

புதவு என்பதற்கு கதவு என்று பொருள்.அணைகள் குளங்கள் போன்ற நீர்நிலைகளில் தேக்கி வைத்த நீர் புதவின் வழியே திறக்கப்பட்டு, கட்டப்பட்ட கால்வாய்களின் வழியாக வேளாண்மைக்குப் பயன்படுத்தப்பட்டது. சங்க இலக்கியங்களில் அரண்மனைகள் வீடுகள் போன்ற அனைத்து இடங்களிலும் புதவு என்ற தொழில்நுட்பத்தை பயன்படுத்தியுள்ளனர். மேலும் ஏரி குளம் அணை போனற் நீர்த்தேக்க கட்டுமானங்களில் நீரினை வெளியேற்றுவதற்கு மதகு மடையின் வாய்ப்பகுதியில் அமைக்கப்பட்டுள்ளது.

**அமைப்பு**

**"கூடுடைப் புதவு**
**கொழுநுகம் தழிஇய புதவு பெரும்பகடு**
**புதவில் பூட்டி உயர்ந்து ஓங்கிய நிரைப்புதவு**
**புகுமனைப் பலிப்புதவு**
**புல்லரைக் காஞ்சிப்புனல் பொரு புதவு"**[47]

இப்பாடல்களில் புதவு என்பது திரட்சியான வலிமைமிக்க கணைய மரங்களைக் கொண்டு பலகைகளால் ஆக்கப்பட்டு அதனை இரும்பு கம்பிகளால் இணைத்துக் கட்டி பூட்டும் வகையில் நீண்டதாக உருவாக்கப்பட்டுள்ளன என்ற செய்தி இடம் பெற்றுள்ளது.

**"புனல் மலிபுதவு**

**புனல்அம் புதவு**

**இழுமென ஒலிக்கும் புனல்அம்புதவு**

**ஓம்பா ஈகை மாவேள் எவ்வி**

**புனலம் புதவின் மிழலையொடுக் கழி"**[48]

என்ற பாடல்களில் நீர்ஒழுகும் ஓசையுடன் கலிங்கில்கள் பலவற்றை உடையதாகவும் நீரானது மோதும்பொழுது புதவில் இழும் ஓசையும் கேட்பதாகவும் சுட்டப்பெறுகின்றது.

### 5.7.3 குமிழி

குமிழி என்பது நீர்த்தேக்க குளங்களிலிருந்து நீரை வழங்கும் அமைப்பாகும்.

குமிழி என்பது குளங்களிலிருந்து நீர் வெளியேற கல்லால் ஆன பெட்டி ஒன்று அமைத்து அதில் துளையிட்டு அத்துளை வழியே நீர் வெளியேறச் செய்யும் அமைப்பாகும்.குமிழியின் வழியே நீர் வெளியேறும் போது சுழல் உண்டாகும் என்று மணி.மாறன் குறிப்பிடுகிறார்.

**"குமிழி சுழலும் கண்டுகய முடுக்கர்**

**வனைகலத் திகிரியின் குமிழி சுழலும்**

**தெண்நீர்க்குமிழி"**[49]

குமிழியின் சுழல் குயவன் வனைகின்ற மட்கலத்தின் உருளை சுழலுவது போல் இருக்கும் என்று குறிப்பிடுகிறது.

### 5.7.4 சுருங்கை

கோட்டையின் கள்ளவழி நுழைவாயில் மாளிகையின் சாளரம் போன்ற வழிகளில் நிலத்துக் கற்களால் அமைக்கப்படும் என்று அகராதி குறிப்பிடுகிறது.

சுருங்கை என்பது நிலத்துக்கு அடியில் செல்லுகின்ற பெரிய குழாய் போன்ற அமைப்பு இது ஏரிகளின் வழியே தேக்கப்படும் நீர் மக்களின் வாழ்வாதரங்களுக்கு குளங்களுக்கு நீரை கொண்டு செல்வதற்கான குழாய் போன்ற கட்டுமான அமைப்பு என்று மணி.மாறன் குறிப்பிடுகின்றார்.

**“சுருங்கையின் ஆயத்தார் சுற்றும் எறிந்து**

**அருவி செரிந்த திரையின் துரத்து**

**.................................... உயர்மதிலில்**

**நீர்ஊர் அரவத்தால் துயில் உணர்பு எழீஇ”**[50]

உயர்ந்த மதிலில் சுருங்கை வழியே நீர் சென்ற ஒலியால் மக்கள் துயில் எழுந்து வையை ஆற்றுக்குத் தேரில் புறப்பட்டனர் என்ற பாக்களில் சுருங்கை பற்றியக் குறிப்புகள் உள்ளன.

பரிபாடல் சுருங்கையினை நீர்ச் செல்லும் பாதையாகவும் குறிப்பிடுகின்றது.

**“நெடுமால் சுருங்கை நடுவழிப்போந்து**

**கடுமா களிறணைத்துக் கைவிடு நீர்போலும்**

**நெடுநீர் மலிபுனல் நீண்மாடக் கூடல்**

**கடிமதில் பெய்யும் பொழுது”**[51]

நகரத்தில் இருந்து சுருங்கை வழியாக வரும் நீரானது இல்லந்தோறும் சென்று சேர்வதாகவும் நீண்ட சுருங்கையில் வரும் நீரானது கோட்டையின் அரணாகிய அகழியில் விழுந்ததாகவும் சுட்டுகின்றது.

சுருங்கை வழியே செல்லும் நீரானது மேலிருந்து கீழே விழுதல் அலையால் அடித்துக் கொண்டு நீண்ட பெரிய குழியில் நடுவழியாக வந்த மிகுதியான நீர் மதிலில் சொரியும் பொழுது யானை தன் தும்பிக்கையில் நீரைச் சொரிவது போல் தோன்றுவதாக காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

சுருங்கை மூங்கிலால் செய்யப்பட்டதாகவும் நிலத்தின் அடியில் நீண்ட யானையின் துதிக்கை போல் உள்ள குழாய்கள் அமைக்கப்பட்டு இருந்ததாகவும் அவற்றில் வழியே நீர் வெளியேறியதாக பரிபாடல் குறிப்பிடுகிறது.

மணிகேலையில்

**“பெருங்குள மருங்கில் சுருங்கைச்சிறுவழி**

**அரும்பெரு நீத்தம் புகுவது போல”**[52]

**“பெருங்கை யானை நிரை இனம் பெயரும்**

**சுருங்கை வீதி மருங்கிற் போகிக்**

**கடிமதில் லாயில் காவலின் சிறந்த”**[53]

தழிழ்களின் கட்டுமானத்தில் தனித்தன்மைக் கொண்டஅமைப்பு முறை சுருங்கையாகும்.சுருங்கை நிலத்துக்கடியில் இருக்கும் பாதையாகும். அந்தச் சுருங்கை வழியே யானை முதலிய படைகள் நுழைந்து மதிலின் வாயிலை சென்றடையும் என்று சிலம்பு பகர்கின்றது.

நீரை வெளியேற்ற உருவாக்கப்பட்ட அமைப்பு பின்னாளில் சுரங்கப் பாதையாகவும் மாறியிருப்பதை அறிய முடிகின்றது. சுருங்கைகள் தெருக்களின் நடுப்பகுதியில் கட்டப்பட்டிருப்பதால் கழிவு நீரினை வெளியேற்றுவதற்கு உருவாக்கப்பட்டதாகவும் உய்த்துணர முடிகின்றது.

சுருங்கை என்பது பகைவர் கோட்டைக்குள் செல்வதற்கு பயன்பட்ட கள்ளப்பாலம் என்றும் இல்லங்கள் தோறும் வெளியேறும் கழிவு நீர் அகழியில் வந்து சேரும் கழிவு நீர்ப்பாதையாகவும் வீடுகளுக்கு நீர்ப்பாலமாவும பல வேறு நிலைகளில் இருப்பதை அறிய முடிகின்றது.

இன்று நிலத்துக்கடியில் குழாய்கள் பதித்து நீர் வழங்கும் முறையினையும் புதை சாக்கடை முறையினையும் அன்றே தமிழர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.7.5 தூம்பு

பெரிய ஏரிகளில் இருக்கும் நீரினை குளங்களுக்குக் கொண்டு செல்வதற்காக தமிழர்களால் ஏற்படுத்தப்பட்ட கட்டுமான அமைப்பு தூம்பாகும்.தேவைக்கு ஏற்றபடி நீரினை வழங்கும் அமைப்பாகும்.

குமிழி அமைப்பில் இரண்டு கற்தூண்களுக்கு கீழ்ப்பகுதியில் இருபலகைகளால் செய்யப்பட்ட பெட்டி போன்ற ஒரு அமைப்பு இருக்கும். இதற்கு கல் பெட்டி என்று பெயர்.கல்பெட்டியின் மேற்பகுதியில் ஒரு துளை பக்கவாட்டுபகுதிகளில் இரண்டு துளைகள் இருக்கும் .அதில் ஒரு திறப்பான் இருக்கும்.அந்த துளைக்குப் பெயர் தூம்பாகும்.

கற்தூண்களுக்கு இடையில் இரண்டு பலகைகள் பொருத்தப்பட்டு துளைகள் கம்பிகள் மூலம் இணைக்கப்பட்டு அடைப்புக்கல்லினை அமைத்திருப்பர்.அக்கல்லினை மேலே தூக்கினால் நீரானது வெளியேறும் என்பது தற்கால நீரியல் வல்லுநர்களின் கருத்தாகும்.

**“நீர்வளர் ஆம்பல் தூம்படைத் திரள்கால”**[54]

நீரில் வளர்கின்ற அல்லித்தண்டின் உட்துளை என்று குறிப்பிடுகிறது.

குமிழி தூம்பு சுருங்கை என்ற மூன்று அமைப்புகளும் மக்களின் பயன்பாட்டிற்கு தேவையான நீரை ஏரிகள் மற்றும் கற்சிறைகள் மூலம் அமைப்புகளாகும் இவை ஒன்றோடு ஒன்று தொடர்புடைய கட்டுமானங்களாகும்.

### 5.7.6 கால்

மதகு மடைகளில் திறக்கப்படும் நீரானது கால் வழியாகச் சென்று பாசனத்திற்கு பயன்படுத்தப்பட்டுள்ளது.

இதனை கால்வாய் வாய்க்கால் என்று அழைப்பர்.அதாவது நீரோடும் வழியாகும்

**“...புனற்கால்**

**அயிர்இரு குப்பையின் நெஞ்சு நெகிழ்ந்து அவிழக”[55]**

கால்வாயில் ஓடிய நீர் மணற்குவியலை அடுத்து வரும் நீர் கரைக்கும் செய்தி காணப்படுகிறது. அணைகள் ஏரிகளின் மூலம் தேக்கப்படும் நீரானது கால்வாய் வழியாக உழவுத் தொழிலுக்குப் பயன்பட்டதை

**“ஓம்பா வீகை மாவே ளெவ்வி**

**புனலம் புதவின் மிழலையொடு கழனிக்**

**கயலார் நாரை போர்விற் சேக்கும்”[56]**

என்பதில் அறியலாம்.

## 5.8 நீர் இறைக்கும் கருவிகள்

ஏரிகள் கிணறுகள் ஆறுகளில் வழிந்தோடும் நீரானது தாழ்வான பகுதிகளுக்குத் தானே சென்று விடும். ஆனால் நிலத்திலிருந்து உயரமான இடங்களுக்கு நீரைப் பாய்ச்சுவதற்கு சில கருவிகள் தேவைப்பட்டது. அதனால் சங்ககால மக்கள் உழவுத்தொழிலில் பாசனத்திற்காகவும் பிறத் தேவைகளுக்காகவும நீரை இறைப்பதற்கு பல கருவிகளைப் கண்டறிந்து அதனைப் பயன்படுத்தி உழவினை மேற்கொண்டுள்ளனர்.

நீரை இறைப்பதற்கு உபயோகித்த கருவிகள் அனைத்துமே பெரும்பாலும் வலிமைமிக்க மரத்தால் அல்லது இரும்பாலானவையாகவே இருந்தன. இங்கே மனித உழைப்பின் ஆற்றலே அதிகம். கருவிகள் மனித உழைப்பிற்கு துணையானதொரு ஆற்றல் மட்டுமே. ஆகவே கருவிகளினால் சுற்றுச்சூழலுக்கு எவ்வித ஊறும் தோன்றவில்லை.சங்கப்பாடல்களில் நீரை இறைக்க ஏற்றம் ஆம்பி பன்றிப்பத்தர் போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.8.1 ஏற்றம் ஆம்பி கிழார்

ஏற்றம் என்ற சொல்லுக்கு உயரம் என்று பொருள்.ஏற்றமான இடங்களில் நீரை நிரப்ப தமிழர்களால் பயன்படுத்தப்பட்ட சொல்லாட்சியாகும்.

புதியவகைத் தொழிநுட்பங்கள் கருவிகளும் இயந்திரமாக்கலும் அதிகரித்த பொழுதும் மனிதனின் கைகளைப் பயன்படுத்தி ஏற்றத்தினால் நீர் இறைத்து வயல்களுக்குப் பாய்ச்சும் முறை இன்று வரை சங்ககாலந்தொட்டு இன்றளவும் மரபாகத் தொடர்கிறது.

உழுது விதைவிதைத்தபின் செய்யப்படும் முக்கியச் செயல் நீர்பாய்ச்சுதல் இதற்கு நீரை முகந்து இறைக்கும் கடகத்தால் (காண்டா), நீர் இறைக்கும் ஏற்றம், குளத்து நீரை இறைக்கும் மெல்லிய கயிறு கட்டப்பட்டிருக்கும் நீர் இறைக்கும் கருவி போன்றவற்றைப் பயன்படுத்தினர்.

**“நீர் தெவ்வு நிரைத் தொழுவர்**

**பாடுசிலம்பு மிசை யேற்றத்**

**தோடுவழங்கும் அகலாம் பயிற்**

**குயன கைய வயனிறைக்கு**

**மென்றொடை வன்கிழா அர்”**[57]

ஆம்பி என்பது பன்றிபத்தர் என்று பொருள்படும். இது ஏற்றத்துடன் நீரை இறைக்கும் கருவியாகும்

### 5.8.2 கிழார்

தோட்டங்களுக்கு நீரைப் பாய்ச்ச மென்மையான கட்டுகளையுடைய வன்மையான பூட்டைப்பொறியாகப் பயன்படுத்தியுள்ளனர்.

**“தாம்பியும் கிழாரும் வீங்கிசை யேத்தமும்**

**ஓங்குநீர் பிழாவு மொலித்தல் செல்லாக”**[58]

என்று சிலம்பு பகர்கின்றது.

### 5.8.3 முகவை

முகவை என்பது இறவைவாளி நீரை முகக்கும் கருவி என்று அகராதி குறிப்பிடுகிறது.

**“சிரறு சில ஊறிய நீர் வாய்ப்பத்தற் கயிறு**

**கயிறு குறு முகவை**

**புகர் முக முகவைக்கு வந்திசின்பெரும”**[59]

போன்ற பாடல்களில் முகவை குறிப்புகள் காணப்படுகின்றன.

## 5.9 நீரைப் பராமரித்தல்

வேளாண்மை தவிர்த்த அன்றாடத் தேவைகளுக்கான நீர்த்தேக்கங்களை பழந்தமிழர் அமைத்தனர். நீர்த்தேக்கங்களிலிருந்து பெறப்படும் நீரினைத் தூய்மைப் படுத்திப் பயன்படுத்தினர். நீர்ச்சேகரிப்பு அனைவருக்கும் கட்டாயமாக்கப்பட வேண்டும் நீர் ஆதாரங்களை மேம்படுத்தும் வகையில் தடுப்பணைகள் கட்டப்படுவதும் நீர்ப்பிடிப்பு அமைப்புகளை மேம்படுத்துவது குளங்களையும், ஆறுகளையும் புதுப்பிப்பதும் அவசியமாகும். மேலும் வெள்ளப்பெருக்கு கரையுடைப்பு ஏற்படும் காலங்களில் அவற்றைப் பராமரித்தலும் காவலாளர்கள் பாதுகாத்தலும் முக்கியமான பணியாகும்.இவற்றைப் பற்றிய குறிப்புகள் சங்கப்பாடல்களில் காணக்கிடக்கின்றன.

### 5.9.1 நீர்ச்சமூகத்தினர்

நீர்நிலைகளை பராமரிக்கவும் செப்பனிடவும் நீர் வழங்கவும் தமிழர்கள் மடையர்கள் , நீராணிகாரர்கள் , நீர்வெட்டியர் , ஏரி காப்பாளர்கள் கரைகாப்பாளர்கள் போன்ற பல்வேறு நிலைக்காவலர்களை நியமித்துள்ளனர்.

- ஏரிகளை காக்க ஏரி காப்பாளர்கள்
- குமிழிஅமைப்பு மூலம் ஏரி குளங்களுக்கு வரும் வண்டல் மண்ணை அதன் வாயிலிருந்து தடுத்து ஏரியை சுத்தம் செய்ய குளத்துப்பள்ளர்கள்

- பாசனக்கால்வாய் நிர்வகிப்பவரை நீர்வெட்டியார்
- வெள்ளக்காலங்களில் ஏரியைத் திறக்க மடையர்கள்

என நீர்ச்சமூகத்தைச் சார்ந்த பிரிவினர் இருந்துள்ளனர் என்பது தற்கால வல்லுநர்களின் கருத்தாகும். சங்க இலக்கியங்களில் இவர்களைப் பற்றிய குறிப்புகள் மிகுதியாக காணப்படவில்லை.ஆனாலும் குளம் ஏரி அணை போன்ற நீர்த்தேக்கங்களைப் பராமரிக்க காவலாளர்கள் இருந்த செய்திகளை அறிய முடிகின்றது.இவர்கள் இரவு பகல் மழை கோடை என்று பாராமல் திறம்பட நிர்வகித்துள்ளனர்.மடையர்கள் என்ற ஒரு பிரிவினர் சங்ககாலத்தில் இருந்தனர்.

**மடையர் புகையர் பூஏந்தி**

**குடைஅடை நீரின் மடையினள் எடுத்த**[60]

இப்பாடல்களில் மடையர் , மடையினள் என்ற இரு சொல்லாட்சி நிலவுகிறது.அரசியருடன் ஆனேற்றோடு மாறுபட்டு அதனை வெல்வார் போல் வீறுடன் நிமிர்ந்து நடக்கும் ஆடவர் என்றும் வயலைக் கொடிக்கு நீர்ப்பாய்ச்சும் மடையினள் என்றும் கூறுவதில் இருந்து இவர்களே மடையைத் திறந்திருக்கலாம் என்று அறியலாம்.

### 5.9.2 கரைக்காப்பாளர்கள்

ஆற்றுநீரை அணைகள் கட்டித் தேக்கிய நிலையில் அளவிற்கு அதிகமான வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு தடுப்புகள் உடைந்தது. அவ்வுடைப்பினால் பேரழிவு ஏற்படாமல் உயிர்களைக் காக்கும் பொருட்டு ‘பறை’ முதலிய கருவிகள் கொண்டு அணைக் காவலன் மக்கள் பாதுகாப்பான இடங்களுக்குச் செல்ல வெள்ள எச்சரிக்கை விடுத்ததை,

**“வரைச்சிறை யுடைத்ததை வையை வையைத்**

**திரைச்சிறை யுடைத்தன்று கரைச்சிறை அறைகெனும்”**[61]

**“உரைச்சிறைப் பறையெழ வூரொலித் தன்று**

**.... பறை அறையப்**

**போந்து வையைப் புனல்”**[62]

மேற்கண்ட பாடல்களில் வையையில் ஏற்பட்ட வெள்ளத்தினால் சிறகுகளாகிய அலைகள் காவலையுடைய மலை போன்ற அணைகளை உடைத்தன. உடைந்தகரைகளை அடைப்பதற்கு ஆள் எழுந்து வருக என்று கூறும் கரை காப்பாளரின் சொல்லாகிய ஒலியொடு பறையின்; ஒலியும் எழுந்திட அவ்வொலிகளுடன் கிளர்ந்து எழும் ஊர் மக்களின் ஆரவாரமும் சேர்ந்து ஒலித்தன. பறைஅறிவித்தல் என்ற வழக்கம் சங்ககாலந்தொட்டு இருந்ததையும் அறிய முடிகின்றது.

இப்பாடலில் சங்ககாலத்தில், மழை பெய்யும் காலத்தே மிகுதியான நீரினை அணைகள் கட்டி தேக்கி வைத்ததோடு அணைகளுக்குக் காவலாக ஆட்களை நியமித்து பாதுகாத்தனர் என்பதும் புலப்படுகிறது. அணை உடைந்ததை மக்களுக்கு அறிவித்து, மக்கள் அனைவரும், ஒன்று கூடி கரையை அடைக்க முற்பட்டனார் என்பதன் மூலம் சங்ககால மக்கள் ஒன்றிணைந்து அணைகளை உருவாக்கியிருக்கலாம் என்பதை அறிய முடிகிறது.

மேலும், அதில் ஏற்படும் குறைபாடுகளை ஒனறு கூடி களைய முற்பட்டதன் மூலம் சங்க மக்கள் முறைசார் மேலாண்மை என்ற அமைப்பில் நீரியல் மேலாண்மை செய்துள்ளனர் என்பது தெளிவாகின்றது. மற்றொரு பதிற்றுப்பத்துப் பாடலில், தோலினால் போர்த்து முழக்கப்பட்ட பறை ஓசையால் உழவர்களை, ஊர் மக்களை அழைத்து புது வெள்ளத்தினால் மடைகள் உடைத்துக் கொண்டு செல்லாதபடி அவ்வெள்ளத்தை அடைப்பர் என்பதை,

**“போர்த்தெறிந்த பறையாற் புனலசெறுக் குநரும்”**[63]

என்ற அடிகளால் உணரலாம். இதனை ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, **“புதுப்புனல் மிக்க கரையையுடைத்துப் பெருகி வருங்கால் உடைமையைக் கட்டுவதற்குப் பறையறைந்து கடையரைத் தருவித்துத் தொடுத்தல் பண்டையோர் மரபாதலால் போர்த்தெறிந்த பறையால் புனல் செறுக்குநரும் என்றார். புனலடைக்கும் குறிப்பைத் தன்னோசையால் தெரிவித்ததற்குப் பறையே யேற்றதாதலால் அதனை விதந்தோதினார்”**[64] என்று சங்கத்

தமிழர்களின் புனல் சார்ந்த நிர்வாகத்திறத்தை தம் உரையில் குறிப்பிட்டுள்ளார்.

குளிர்ந்த நீர் பரந்த ஓசையையுடைய உடைப்புகள் மண்ணால் அடைக்கப் பெறாமல் மீனால் அடைக்கின்ற வளத்தை,

**"தண்புனல் பரந்த பூசல் மணம் றுத்து**

**மீனிற் செறுக்கும்"[65]**

என்ற பாடலில், நீரினைத் தேக்கி வைக்கும் வழக்கமும் அதற்கு மண்ணால் அணைகட்டும் திறத்தையும் அறியமுடிகிறது. இப்பாடலில் நீர் பெருக்கத்தால் பேரிழப்பு ஏற்படுவதைத் தடுக்க மண்ணால் அவ்வுடைப்பைச் சரி செய்யும் வல்லமைப் பெற்றுச் சங்கச் சான்றோர் திகழ்ந்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

### 5.9.3 குளத்துக்காப்பாளர்கள்

**"ஒரு நாட்டின் நீர்நிலைகள் என்பவை அந்நாட்டின் உயிர் நாடிகளாக அமைகின்றன. அவ்வகை நீர்நிலைகளை உருவாக்கினால் மட்டும் போதாது. அவற்றை இயற்கைச் சீற்றங்களிலிருந்தும், எதிரிகளிடமிருந்தும், விலங்குகளிடமிருந்தும், பாதுகாத்தல் வேண்டும். நீர்நிலைகளை உருவாக்குதலும், அவற்றைக் காத்தலும் நாட்டின் வளர்ச்சிக்கு ஏற்ற செயல்களாக அமைகின்றன. அவ்வகையில், இயற்கைச் சீற்றங்களிலிருந்து, எதிரிகள் மற்றும் விலங்குகளிடமிருந்து நீர்நிலைகளைக் காக்க, காவலர் அமர்த்தப்பட்டனர்."[66]**

குளங்களில் உடைப்பு ஏற்படாமல் பாதுகாக்கவும் கோடையில் குளங்களில் நீரின்மையால் வழுக்கும் தன்மை உடையதாக இருக்கும் அந்நேரங்களில் மக்கள் விழாமல் இருக்கவும் காவலர்களை அமர்த்தியது தமிழர்களின் நீர் பராமரிப்புத் திறத்தைப் புலப்படுத்துவதாகும்.

குளங்களில் கட்டிய அணைகள் உடைந்துவிடாது ஆட்களை வைத்துப் பாதுகாத்தனர் என்பதனை,

**"... ஈங்கைத்**

**துய் யவிழ் பனிமலர் உதிர வீசித்**

**தொழின்மழை பொழிந்த பானாட் கங்குல்,**

**எறிதிரைத் திவலை தூஉஞ் சிறுகோட்டுப்**

**பெருங்குளங் காவலன"[67]**

இப்பாடல், ஈங்கையின் குளிர்ந்த மலர்கள் உதிருமாறு மேகம் பெருமழை பெய்த நள்ளிரவில், அலைகள் மோத அதன் துளிகள் பரத்தலால் சிறிய கரையினையுடைய பெரிய குளமானது உடைப்பு ஏற்பட்டு பேரழிவுகள் ஏற்படாவண்ணம் காவல் செய்யும் பொருட்டு காவலாட்களை அமர்த்தியுள்ளனர்.

கோடைகாலத்தினால் வறட்சி ஏற்படா வண்ணம் அமைத்த குளங்கள் ஆழம் நிறைந்ததாக இருந்தது. அக்குளங்களை காவல்புரிய காவலாளிகளைப் பணிக்கு நியமித்தனர் என்பதை,

**"கோடை நீடினும் குறைபட லரியாத்**

**தோடாழ் குளத்த கோடுகாத் திருக்கும்"[68]**

இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. மண்ணால் தூர்ந்த குளங்களைத் தோண்டி நாட்டின் செல்வ வளத்தைப் பெருக்கியதோடு, ஒரு நாட்டிற்கு நீர் மிகவும் இன்றியமையாதது என்பதை உணர்ந்து, அந்நாட்டில் உள்ள குளங்களையெல்லாம் தூர் வாரி, செப்பம் செய்து அதனுள் நீரினைத் தேக்கி வைத்து மக்களின் நீராதாரத்தைப் பெருக்கி வளமாக வாழ்ந்துள்ளனர்.

### 5.9.4 வலைஞர்கள்

மீன்பிடித்தொழிலை மேற்கொண்டவர்கள் வலைஞர்கள் என்றழைக்கப்பட்டனர். கடற்கரை இருகே தன் குடிலை அமைத்து குளங்களை காக்கும் காவல்பணியை செய்துள்ளனர்.

**“கோடை நீடினும் குறைபடல் அறியாத்**

**தோள்தாழ் குளத்த கோடு காத்திருக்கும்**

**கொடு முடி வரைஞர் குடிவயிற் சேப்பின்”[69]**

கோடைகாலத்திலும் கடற்கரையை அடுத்த பாலைநிலத்தில் உள்ள குளத்தில் ஓர் ஆள் கையைத் தூக்கிடினும் தோள் உயரத்திற்கு மேல் உள்ள ஆழத்துடன் நீர் இருக்கும்.இந்தக் குளத்தை வளைந்த முடியுடைய வலைஞர் காப்பர் என்கிறது. இதில் தமிழர்களின் பொறுப்புணர்வு வெளிப்படுகிறது.

### 5.9.5 அரைமண்கலவை

ஏரிகள் அணைகளில் நீர்ப்பெருக்கத்தின் போது உடைப்புத் தோன்றும் அதனை தடுப்பதற்காக அரைமண் கலவையை பயன்படுத்தி கட்டுமானங்களையும் கரைகளையும் உருவாக்கியுள்ளனர். அரைம ணிஞ்சிநாட் கொடி நுடங்கும்[70]

மண்ணை அரைத்து அதனுடன் இயற்கைப் பொருட்களையும் கலந்து கட்டுமானங்களையும் கரைகளையும் அமைத்துள்ளனர்.மண்ணை அரைத்து பயன்படுத்த எந்திரங்கள் புழக்கத்தில் இருந்துள்ளன.

**“மண்புனை யிஞ்சி மதில்கடமந் தல்லது”[70]**

மண்அரவை மூரம் கட்டப்பட்ட மதில் என்று குறிப்பிடுகின்றது.

### 5.9.6 தூர்வாரல்

**“காடுகொன்று நாடாக்கிக்**

**குளந்தொட்டு வளம்பெருக்கிப”[71]**

சோழ நாட்டினை ஆட்சி செய்த திருமாவளவன் பகைவர்களால் அழிக்கப்பட்டு பாழ்பட்டிருந்த காடுகளையெல்லாம் மக்கள் வாழ்வதற்கு ஏற்ற இடமாக மாற்றினான்.அங்கு சருகுகளும் தூசுகளும் நிறைந்த குளங்களெல்லாம் தூர் வாரி நீர் வளத்தை உருவாக்கியுள்ளான்.

### 5.9.7 ஆறுகளைப் பராமரித்தல்

நீரின் அவசியத்தை நன்குணர்ந்து மழை பெறும் காலங்களில் பிற்காலத்தின் நீரின் தேவையைப் போக்கும் விதமாகச் சங்ககால மக்கள் நீர்ப் பராமரிப்பு செய்தனர்.

மலையில் பிறந்த ஆறுகள் மலையை விட்டு அகன்று நில எல்லையை அடைந்து அங்குள்ள நிலங்களை வளம் பெறச் செய்து பின்பு கடலில் சென்று கலந்த செய்தியை,

**“மலையி னிழிந்து மாக்கட னோக்கி**

**நிலவரை யிழிதரும் பல்யாறு”**[72]

எனும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இச்சிறப்பான செய்கையினைக் கொண்ட ஆறுகளை வெட்டுவித்து வறட்சியைப் போக்கி மக்களை வளம் கொள்ளச்செய்யும் நீர்ப் பராமரிப்பு மாண்பு சங்க மன்னர்களுக்கு அமைந்திருந்தது. பாண்டியன் நெடியோன் ப.்.றுளி ஆற்றை உருவாக்கியதை,

**“முந்நீர் விழவி னெடியோன்**

**நன்னீர்ப் ப.்.றுளி மணலினும் பலவே”**[73]

இப்பாடல் அடியில் நெட்டிமையார் எனும் புலவர் முதுகுடுமிப் பெருவழுதியைப் புகழ்ந்து பாடும் பொழுது அவனது முன்னோரைப் புகழ்ந்துள்ளார்.

இன்றையக் காலகட்டத்தில் நதிநீர் இணைப்புத் திட்டம் என்ற ஒன்றை முன்வைத்திருப்பதன் காரணம் ஒரு பகுதியில் வளங்கள் அதிகம் பெற்று மறு பகுதியில் நீரின்மையால் ஏற்படும் வறட்சியைப் போக்குவதற்கேயாகும்.

சங்கச்சான்றோர்கள் இத்தகு வறட்சியால் ஏற்படும் பேரிடரைப் போக்கும் வகையில் ஆறுகளை அமைத்து தங்கள் நாட்டில் வறட்சியைப்

போக்கும் வகையில் மேலாண்மையுடன் ஆட்சிச் செய்துள்ளனர் என்பது புலப்படுகின்றது.

குடகு மலையில் பிறந்த குளிர்ந்த காவிரி ஆறு, மிக்க ஆழத்தையுடைய புகார் கடலிலே சென்று கலக்கும் முன்பு தான் வரும் இடைப்பட்ட பகுதிகளில் வளங்களை அளித்து மக்களுக்கு வறட்சி மற்றும் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்து பேரழிவிலிருந்து பாதுகாவலை மேற்கொள்கின்றது. இதை,

**"குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி**
**கடன்மண் டழுவத்துக் கயவாய் கடுப்ப"**[74]

எனும் அடிகள் உணர்த்துகின்றது. வறட்சியிலிருந்து மக்களை மீட்டு வளம் கொடுக்கும் பணியைக் காவிரியாறு செய்கின்றது என்பதை,

**"... பன்மாண்**
**எல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்**
**குல்லை கரியவுங் கோடெரி நைப்பவும்**
**அருவி மாமலை நிகழ்த்தவு மற்றக்**
**கருவி வானங் கடற்கோள் மறப்பவும்**
**பெருவற னாகிய பண்பில் காலையும்**
**நறையு நரந்தமு மகிலு மாரமும்**
**துறைதுறை தோறும் பொறையுயிரத் தொழுகி"**[75]

பல உயிர்களும் மாட்சிமைப்படுவதற்குக் காரணமாகிய கதிரவன் மிகுதியாகக் கதிர்களைப் பரப்புதலால், கஞ்சங்குல்லை தீய்ந்து போகவும், மரங்களின் கொம்புகளைத் தீ உண்ணவும், மலைகளில் அருவிகள் இல்லாது போகவும், முகில்கள் கடல்நீரை முகத்தலை மறந்தழியவும் என்ற இச்செயல்பாடுகளால் பெரிய வறட்சி, பஞ்சம் உண்டாகும். அத்தகைய காலத்தும் நாறைக்கொடியும் நரந்தம் புல்லும் அகிலும் சந்தனமாகிய சுமைகளைச் சுமந்து இளைப்பாறிப் பின் மேலும் நடந்து செல்லும் இயல்புடையது காவிரி என்று காவிரியின் தன்மை கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு பல்வேறு புகழுடைய காவிரியானது மேற்கு திசையின் கண் பொன்படுகின்ற நெடிய குடகு மலையில், முகிலின் இடியேறு முழங்கின் பூப்பரந்த புது நீரையுடைய காவிரி உலகத்தைப் பாதுகாக்கும் என்று காவிரியாற்றின் பிறப்பும், அதன் சிறப்பும் உணர்த்தப்பட்டுள்ளது.

கோடைகாலத்தின் காரணமாக நிலம் வறட்சி, வளங்குன்றும் நிலை ஏற்படினும் அக்காலங்களில் காவிரியின் மூலம் நீரைப் பெற்று வளங்களைக் காத்து வாழ்ந்துள்ளனர். வறட்சி காரணமாகப் பேரழிவுகள் ஏற்படா வண்ணம் காவிரியாற்றின் நீர் பெற்று செய்தனர் என்பதனை,

**“கோடை யாயினுங் கோடே வொழுக்கத்துக்**

**காவிரி புரக்கும்”**[76]

இப்பாடல் பதிவின் மூலம் அறியமுடிகிறது. மேலும் தோட்டங்களையும் நெல்விளையும் கழனிகளையும் கொண்ட அம்பர் எனும் ஊர் காவியாற்றினால் செழிப்பாக இருந்ததை,

**“காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை**

**நெல்விளை கழனி யம்பர்”**[77]

என்ற பாடலடிகள் விளக்கிச் செல்கின்றன. அறிவியல் தொழில்நுட்பம் என்ற ஒன்றை அறிந்திராத சங்கச்சான்றோர்கள் காலத்தைச் செலவு செய்து தாங்கள் பெற்ற அனுபவங்களைக் கொண்டு பல அளப்பரிய அறிவியல் உண்மைகளை,

**“அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்**

**இலங்குகதிர் வெள;ளி தென்புலம் படரினும்**

**அந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்**

**தோடுகொள் வேலின் றோற்றம் போல**

**ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்**

**நாடெனப் படுவது நினதே யத்தை”**[78]

என்ற பாடலடிகளில், சுடர் விளங்குகின்ற கதிர்களை உடைய ஞாயிறு நான்கு திசைகளிலும் தோன்றினாலும், ஒளியை உடைய கதிர்கள் வெள்ளி

மீன் தென் திசைக்குச் சென்றாலும் அழகிய குளிர்ந்த காவிரி பல கால்வாய்களாய் பிரிந்து வளமூட்டிவிடும் அதனால் வேலின் தொகுதி போல கணுக்களையுடைய கரும்பு அசையும் போது கரும்பின் வெண்மையான பூவும் அசையும். இத்தகைய நின் நாடே நாடு என்று கிள்ளிவளவனின் நாட்டு வளத்தைக் குறித்து வெள்ளைக்குட்டி நாகனார் பாடியுள்ளார்.

இப்பாடலடிகளில் கதிரவன் நான்கு திசைகளிலும் தோன்றுதல், வெளியானது வடதிசையில் இருந்து தென் திசையில் இயங்குதல் ஆகியன மழை பொழியாது வறண்டு போகச் செய்தது என்பதைச் சங்கச் சான்றோர் அறிந்திருந்தனர். ஆதலால் இவ்வாறு ஏற்படும் வறட்சிக் காலத்தில் குளிர்ந்த காவிரிநீரைப் பல கால்வாய்களாகப் பிரித்து பயிர் விளைவித்தலுக்குத் தேவையான நீரைப் பெற்றனர். இதனால் கரும்பானது செழிப்புடன் வளர்ச்சி பெற்றுள்ளது என்று கூறுகிறார்.

இதனை, **“மண்ணின் விளைவாற்றல், அம்மண்ணுக்குரியவனாம் உழவனுக்கு நிலத்தை உழுத பின்னர், நெல் முதலாம் உணவுப்பொருட்களை விளைவிக்கும் முறையினைக் கற்றுத்தந்தது. ஆறுகளின் இரு பக்கங்களிலும் படிப்படியாகத் தாழ்ந்து செல்லும் நில அமைப்பு, தங்கள் விளை நிலங்களுக்கு உயிர் ஊட்டும் நீரைக் கொண்டு செல்லும் முறையினை, வெள்ளத்தை அது விரும்புமாறு ஓடவிடாது, தாம் விரும்புமாறு கொண்டு சென்று, வெள்ளநீரை ஆட்சி கொள்ளவல்லராகிய வெள்ளாளர்க்குக் கற்றுத் தந்தது”**[80] என்று தொடக்க காலங்களில் ஆற்றின் போக்கினை கால்வாய்களை வெட்டி வறட்சி ஏற்படும் முன்பு வயல் வெளிகளுக்குத் தேவையான நீரினை அளித்து நீரியல் மேலாண்மை செய்துள்ளதை அ.மார்க்ஸின் கூற்றுவழி உறுதியாகிறது. மேலும்,

**“தேறுநீர்ப் பரப்பின் யாறுசீத் துய்த்துத்**
**துறைதொறும் பிணிக்கும் நல்லூர்”**[81]

என்ற பாடலின் மூலம், ஆரவாரத்துடன் ஓடங்களை நீர் பரந்த கடந்துச் செல்லும் வழியாகிய ஆற்றைச் செம்மை செய்து செலுத்தினர் என்பதன் மூலம் ஆற்றினை செம்மை செய்து எல்லா இடங்களிலும் பாய்ந்து வளம்

பெருகச் செய்துள்ளனர். பெருகி வரும் காவிரி நீரை வீண் செய்யாது கால்வாய் அமைத்து வறட்சி போன்றவற்றின் மூலம் நீரின்மையால் ஏற்படும் பேரிடரை மேலாண்மை செய்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

நீர் வளத்தைப் பெருக்க வேண்டுமானால் இயற்கை வளங்களான மலைகளையும், காடுகளையும் காத்தல் அவசியம். மலையிலிருந்து வரும் மழை நீரானது தான் செல்லும் அனைத்துப் பகுதிகளையும் வளப்படுத்திவிட்டு இறுதியில் கடலில் சென்று கலப்பதை,

**“இமையவ ருறையுஞ் சிமையச் செவ்வரை**
**வெண்டிரை கிழித்த விளங்குசுடர் நெடுகோட்டுப்**
**பொண்கொழித் திழிதரும் போக்கருங் கங்கைப்**
**பெருநீர் போகும் இரியல் மாக்கள்**
**ஒருமரப் பாணி”**[82]

இப்பாடலடியில் நெடிய சிகரத்தினின்றும் பொன்னைக் கொழித்துக் கொண்டு குதிப்பதும், மக்கள் கடத்தற்கு அரிதாகவும் உள்ள கங்கையாற்றைக் கடந்து செல்ல விரும்பும் மக்கள் தோணியைப் பயன்படுத்தினர். கங்கையின் செழிப்பையும் வெள;ளம் வரும் காலங்களில் அதனைக் கடக்க மக்கள் தோணியைப் பயன்படுத்தி, அதிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொண்டதையும் உணரமுடிகிறது.

ஒரு நாட்டின் வளம் என்பது அந்நாட்டில் இயற்கை அன்னையால் உருக்கொண்ட ஆற்றின் வளத்தை முதன்மையாகக் கொண்டே அமைகிறது என்பதை,

**“………………. மலி புகழ்**
**வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்”**[83]

எனும் வையை ஆற்றின் வளத்தைக் காட்டுவதிலிருந்து அறியலாம். இயற்கையின் அரிய படைப்புகளில் ஒன்றான ஆறு மனிதவாழ்விற்கு அடிப்படை ஆதாரமாக இருந்து வருகின்றது என்பது மேற்கண்ட பாடலடிகள்

புலப்படுத்துகின்றன. மேலும் வையை ஆற்றினால் உலகம் வளம் பெற்றது எனும் செய்தியை,

**“ஆநா ணிறைமதி அலாத் ரு பகக் ம்போல்**

**நாளி னாளி னளிவரைச் சிலம்புதொட்டு**

**நிலவுப்பரந் தாங்கு நீர்நிலம் பரப்பி**

**உலகுபயம் பகர ஓம்பு பெரும்பக்கம”[84]**

எனும் அடிகளில் நல்லந்துவனார் பதிவு செய்துள்ளார். பிறைநிலவு தோன்றிய நாள் தொடங்கி நாளுக்கு நாள் வளர்கின்ற வளர்பிறையைப் போல் நாளுக்கு நாள் வளர்ந்து அதன் நிலவொளி உலகம் எங்கும் பரவுவதைப் போல, செறிந்த மலைச்சாரல் முதலாக நிலப்பரப்பு எங்கும் நீரைப்பரப்பி உலகத்திற்குப் பயனை விளைவித்துக் கொடுத்து பாதுகாத்து வரும் இயல்புடையது வையை ஆறு என்று வையை ஆற்றின் சிறப்பு கூறப்பட்டுள்ளது. மேற்கூறிய பாடல்களின் மூலம் சங்க காலத்தில் மழைவளம் குறைந்த காலக்கட்டத்தில் காவிரி, கங்கை, பொருநை, வையை போன்றவை நீரியல் மூலங்களாக இருந்தன. அவ்வாறுகளின் நீரினைக் கால்வாய் அமைத்தும் செப்பனிட்டும் நீர்மேலாண்மை செய்துள்ளனர். இதனால் வறட்சி போன்றவற்றால் ஏற்படும் பேரிடர் நீங்கியதை அறியலாம். மேலும் இயற்கை வளங்களை முறையாக மேலாண்மை செய்யும் திறமும் சங்கமக்கள் பெற்றிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### 5.9.8 குளங்களைப் பராமரித்தல்

சங்கால மக்கள் ஆற்றுநீர் மட்டுமல்லாது மழைக் காலங்களில் பெய்த மழை நீரினைக், குளங்கள் அமைத்துத் தேவைப்படும் காலங்களில் பயன்படுத்தி நீர் மூலம் பேரழிவுகள் ஏற்படாவண்ணம் செய்துள்ளனர்.

சங்கச்சான்றோர்கள் என்பதனை,

**“குளந்தொட்டு வளம் பெருக்கிப்”[85]**

**“நிலனெளி மருங்கிற் நீர்நிலைப் பெருக்கி”[86]**

எனும் அடிகள் உறுதிப்படுத்துகின்றது.

சங்ககாலத்தில் மக்கள், தங்களுக்குத் தேவையான குடிநீா் ஆதாரத்தைத் தேவைக்கு அதிகமான போது, வறட்சி காலங்களில் நீரின் தேவைக்கருதி குளங்களில் அந்நீரினை வீணாக்காமல் தேக்கி வைத்துப் பாதுகாத்தனா் என்பதும், அந்நீரால் மக்களுக்கு எவ்வித தீங்கும் ஏற்படா வண்ணம் அணைகள் அமைத்து ஆட்களை நியமித்து பாதுகாத்தனா் என்பதும் புலப்படுகிறது.

வேளாண் தொழிலுக்கு ஆதாரமாக இருப்பது மழை நீராகும் என்பதை நன்கறிந்த சங்;ககால மக்கள் பருவமழை பெய்யும் காலங்களில், வேளாண்மை செய்தல் பொருட்டு ஆங்காங்கே குளங்கள் வெட்டி, மழைநீரைச் சேமித்து வைத்தனா். பருவ மழை பொய்த்த காலங்களில் அக்குளத்திலுள்ள நீரைக் கொண்டு தொழில் செய்து தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொண்டதற்கான பதிவாக,

**“குணகடல் கொண்டு குடகடல் முற்றி**
**நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றி”**[87]

இப்பாடலில் மேகங்கள் கீழ்த்திசைக் கடலில் நீரை முகந்து, மேற்றிசைக் கடலருகேயுள்ள மலைப்பகுதிகளில் தங்கின. இரவும், பகலும் எங்குச் செல்வது என அறியாமல் பள்ளமும் மேடுமாகிய பல நிலப்பகுதிகளில் உள்ள நீருடன் திரண்டு எழுந்தன. கவலைக் கிழங்கு தோண்டிய அழகிய குழிகளில் மழைநீா் வீழ்ந்தது. மழைநீரால் அருவிகள் பெருகி ஒலித்தன. மூங்கில் வளா்ந்த மலைப்பகுதிகளில் வாழும் யானைக் கூட்டங்கள், நடுங்குமாறு ஒலிக்கும் இடியுடன் பரந்து சிதறிப் பெருமழை பெய்தது.

ஆறுகள் மழையின் பெருவெள்ளத்தைத் தாங்க இயலாமையால், ஆற்றிடைக் குளங்களில் ஓங்கிப் பெருகிற்று. அவ்வாறு வரும் நிறத்தை உடைய மழைநீா் இடைப்பட்ட குளங்களை நிறைத்து கீழ்த்திசைக் கடலை நோக்கிப் பரந்து சென்றது. முன்பு கிழங்கு எடுத்த குழிகளை மழைநீா் நிரப்பியது. இங்கு, குளங்களை மழைநீா் நிரப்பியது என்ற பதிவின் மூலம் தொடக்க நிலையில் இயற்கையான குழிகளில் மழைநீா் தேங்கியதை

உணர்ந்த மனிதன் அதன் காரணமாகக் குளங்களை வெட்டத் தளைப்பட்டு, குளங்களின் மூலம் மழைக்காலங்களில் பெய்யும் அதிக அளவிலான மழையால் மழை நீரைச் சேமித்து வறட்சி காலங்களில் பயன்படுத்த முற்பட்டான் என்பது புலப்படுகிறது. இதன்மூலம் சங்ககால மாந்தர்களின் நீரியல் திறன் வளர்ச்சி தெளிவாகின்றது.

தொடக்ககாலத்தில் மழையின் அவசியத்தை அறிந்து வறட்சி ஏற்படும் காலத்தில் தேவையான நீரை மழைப் பெய்யும் காலத்திலேயே குழிகள் வெட்டி தேக்கினர். பல்வேறு குழிகள் ஒன்று சேர்த்தி பெரிய குளங்களை வெட்டினர் என்பதும், அக்குளங்களுக்குக் கரையமைத்தும் காவல் புரிந்தனர் என்பதற்கானச் சான்றுகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

**“வான்மடி பொழுதி னீர்நசைஇக் குழித்த**

**அகழ்சூழ் பயம்பின”**[88]

என்ற பாடலில், மழை வறண்டகாலத்தில் நீர்ப்பெறும் பொருட்டு தோண்டப்பட்ட பலப் பகுதிகள் காணப்படும் என்பதன் வாயிலாக நீரின்மையால் ஏற்படும் வறட்சியினால் பேரழிவு ஏற்படாவண்ணம் செய்த திறம் அறியப்படுகிறது.

பின்வரும் பாடலிலும் நீரியல் திறன் குறித்த செய்திகளை,

**“திரையிரும் பனிப்பௌவம் செவ்விதா வறமுகந்**

**துரவுரு முடன்றார்ப்ப ஊர்பொறை கொள்ளாது**

**கரையுடை குளமெனக் குழன்றுவான”**[89]

மேகமானது முழங்கும் அலைகளையும், கரிய நிறத்தையும், குளிர்ச்சியையும் உடைய பெரியகடல் வற்றிப்போகுமாறு அதன் நீரை முகந்து கொண்டு வந்து வலிமை மிக்க பெரிய இடி சினத்துடன் முழங்கும் படியாகச் செய்தது. தம்மேல் ஏற்பட்ட நீரின் பாரம் தாங்க முடியாமல் தன் வயிறு கிழிந்தது போலவும் கரையுடைந்த குளத்தின் நீர் குளத்தினை விட்டு வெளியேறுவதைப் போலவும் மேகம் பெருமழைப் பெய்தது என்ற பதிவின் மூலம் மழைக்காலங்களில் நீரைத்தேக்கி வறட்சி போன்ற

காலங்களில் பயன்படுத்த குளங்கள் போன்றவற்றை மக்கள் ஒன்றிணைந்து முறைசார் மேலாண்மை செய்ததை இப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

குளக்கரைகளைப் பராமரிக்க மரங்களை வளர்த்துக் கரைகளுக்கு வலுவூட்டியுள்ளனர்.

**"மெல்லிய லோயே...............**

**நாள்இடைப் படாஅ நளிநிர் நீத்தத்து**

**இடிகரைப் பெருமரம் போல**

**தீதுஇல் நிலைமை முயங்குகம் பலவே"[90]**

மருதநிலங்களின் வெள்ளம் பாயும் செறிந்த பகுதிகளில் கரைகளுக்கு அருகே மரங்கள் அமைந்துள்ளன. மரங்கள் பூமியின் வரமாகும். மரங்களுக்கு மண்ணரிப்பைத் தடுக்கும் வலிமை உண்டு .மரங்களின் வேர்களானது நிலத்தின் ஆழம் வரை ஊடுருவிச் சென்று அருகேயுள்ள மண் கட்டுமானங்களைத் தாங்கிக் கொள்ளும் தன்மைக் கொண்டவையாகும். முன்னோர்கள் குளத்தின் கரைகளில் மரங்களை நட்டு கரைகளைப் பாதுகாத்துள்ளனர்.

### 5.9.10 வெள்ளத்தடுப்பு அரண்

பருவமழை தொடர்ந்து பெய்து நீர் அதிகமாக வெளியேறி தாழ்வான பகுதிகள் நீரில் மூழ்கி மக்களைப் பாதிக்காமல் இருக்க பல்வேறு நடவடிக்களைச் செய்துள்ளனர்.இயற்கையாகக் கிடைக்கும் கரும்புக்கழி வைக்கோல் மணல்மூட்டைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

**"வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை**

**தீம்புனல் நெரிதர விந்து உக்காஅங்கு"[91]**

பெருகிவரும் வெள்ளத்தைத் தடுப்பதற்காக கரும்புகளின் கழிகளைக் கொண்டு தடுத்துள்ளனர். ஆறுகளில் கரைகளை நிறுவி அந்த கரைகளுக்கு வலுவூட்டும் வண்ணம் கரும்புகளை கரைப்பகுதிகளில் நட்டு வைத்துள்ளனர். கரும்புகளின் வேர்களானது மண்ணோடு சேர்ந்து மண்ணினால் தோன்றும் மண்அரிப்பைத் தடுத்து விடும்.அதற்காக

கரைகளை இறுக்கத்துடன் அமைப்பதற்காக கரும்புகளைப் பயன் படுத்தியுள்ளனர். நீர்ப்பெருக்கமானது அதிகரிக்கும் நேரங்களில் கரும்புகள் வெள்ளத்தினால் கொண்டுச் செல்லப்படும். வெள்ளத்தைக்கட்டுப்படுத்த தமிழர்கள் கையாண்ட தற்காலிக முறையாகும். அதனால் சிறிய அளவினையுடை சிறுசிறை என்றழைத்துள்ளனர்.

**“தேம்பாய் மருதம் முதல் படக் கொன்று**
**வெண் தலைச் செம் புனல் பரந்து வாய் மிகுக்கும்**
**பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்**
**விறை கொள் பூசலின் புகன்ற ஆயம்”**[92]

மருதமரங்கள் சூழ்ந்துள்ள ஆற்றங்கரையில் புதுவெள்ளம் பெருக்கெடுத்து எங்கும் பரந்து ஒடியதால் மருதமரங்களின் வேர்கள் வெள்ளப் பெருக்கினைத் தாங்காமல் வீழ்ந்தது. அந்நீர்ப்பெருக்கினைத் தடுப்பதற்காக வைக்கோல்புரிகளை மணல் கோட்டைகளாக அமைத்துத் தடுத்துள்ளனர்.

இப்பாடலில் பதப்பர் என்ற சொல் நீர்ப்பெருக்கத் தடுப்பதற்கான மணற் கோட்டைச் சுவரைக் குறிக்கிறது. மணலானது வெள்ளத்தில் கரையாமல் இருக்க வைக்கோல்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

கரும்புகழிகளையும் வைக்கோற்குரிகளையும் பயன்படுத்தி வெள்ளத்தடுப்பு முறைகளை மேற்கொண்ட தமிழர்களின் நுட்பக் கட்டுமானத்திறனைப் பறைசாற்றுகிறது. இன்றளவும் கடல் ஆறு மற்றும்மழையினால் பெருகி வரும் நீரைத்தடுக்க மணல் மூட்டைகளைப் பயன்படுத்தி கரையை ஏற்படுத்தும் வழக்கம் இருக்கின்றது. உழுகின்ற வயலில் மழைப்பொழியும் பொழுது அதிக நீர் வெளியேறி உடைப்புத் தோன்றும்.அப்பொழுது உடைப்பை அடைப்பதற்காக துள்ளிக் குதிக்கும் மீன்களைக் கொண்டு கரைகளை எழுப்பி அடைத்துள்ளதை

**“தண்புனல் பரந்த பூசல் மண்மறுத்து**
**மீனின் செறக்கும் யாணர்ப்**
**பயன்திகழ் வைப்பின் பிறர் அகன்தலை நடே”**[93]

வெள்ளம் பெருகி ஓடி வருகின்ற பொழுது அதனைத் தடுக்க மண் தடுப்புகள் இல்லாமையால் மீன்களை அடைக்கும் வருவாயை பகைவா் நாடுகள் என்பதில் அக்கால மன்னா்கள் செங்கோலாட்சி செலுத்தியதால் மாதம் மும்மாரிப் பொழிந்து அதனால் நீா் மற்றும் மீன் வளங்களும் செழித்துக் காணப்படுவதை உணரலாம்.

### 5.9.11 நீா்க்கசிவினைத் தடுத்தல்

ஏரி ஆறு குளங்களுக்கு கரைகளை அமைக்கும் போது பெரு வெள்ளங்காலங்களில் கரைகளில் நீா்க்கசிவினால் உடைப்புத்தோன்றும். அப்போது அதைத் தடுப்பதற்கு அரைமண் என்ற கலவையைப் பயன் படுத்தி உள்ளனா். இது தமிழா்கள் கட்டுமானத்தில் சிறந்த நுட்பமாகும். அரைமண் என்பது நிலத்திலுள்ள மண்ணைக் குறிக்கிறது.

**“எழுவிட்டு அமைத்த திண்நிலைக் கதவின்**
**அரைமண் இஞ்சி நாட்கொடி நுடங்கும்”**[94]

அரைத்த மண்ணினால் ஆன மதில்களை கட்டி உள்ளதாக புறநானூறு குறிப்பிடுகிறது.தற்போதுள்ள சிமெண்ட் கலவையை ஒப்பு நோக்கத்தக்கது.

அரைமண்ணைக் கொண்டு கரையமைத்து சில இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்தி நீா்க்கசிவினைத் தடுத்து இருக்கலாம். ஆனால் சங்கப்பாடல்களில் குறிப்புகள் காணப்படவில்லை.

### 5.10 நீரைப்பயன்படுத்துதல்

வேளாண்தொழிலுக்கு ஆதாரமாக இருப்பது மழைநீராகும் என்பதை நன்கறிந்த சங்ககால மக்கள் பருவமழை பெய்யும் காலங்களில், வேளாண்மை செய்தல் பொருட்டு ஆங்காங்கே குளங்கள் வெட்டி, மழைநீரைச் சேமித்து வைத்தனா். பருவமழைப்பொய்த்த காலங்களில் அக்குளத்திலுள்ள நீரைக் கொண்டு தொழில் செய்து தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொண்டதற்கான பதிவாக,

"…………

**குணகடல் கொண்டு**

**குடகடல் முற்றி"**[95]

இப்பாடலில் மேகங்கள் கீழ்த்திசைக்கடலில் நீரைமுகந்து, மேற்றிசைக் கடலருகேயுள்ள மலைப்பகுதிகளில் தங்கின. இரவும், பகலும் எங்குச் செல்வது என அறியாமல் பள்ளமும் மேடுமாகிய பல நிலப்பகுதிகளில் உள்ள நீருடன் திரண்டு எழுந்தன. கவலைக் கிழங்கு தோண்டிய அழகிய குழிகளில் மழைநீர் வீழ்ந்தது. மழைநீரால் அருவிகள் பெருகி ஒலித்தன. மூங்கில் வளர்ந்த மலைப்பகுதிகளில் வாழும் யானைக் கூட்டங்கள், நடுங்குமாறு ஒலிக்கும் இடியுடன் பரந்து சிதறிப் பெருமழைப்பெய்தது.

ஆறுகள் மழையின் பெருவெள்ளத்தைத் தாங்க இயலாமையால், ஆற்றிடைக் குளங்களில் ஓங்கிப் பெருகிற்று. அவ்வாறு வரும் நிறத்தை உடைய மழைநீர் இடைப்பட்ட குளங்களை நிறைத்து கீழ்த்திசைக்கடலை நோக்கிப்பரந்து சென்றது. முன்பு கிழங்கு எடுத்தக் குழிகளை மழைநீர் நிரப்பியது.

இங்கு, குளங்களை மழைநீர் நிரப்பியது என்ற பதிவின் மூலம் தொடக்க நிலையில் இயற்கையான குழிகளில் மழைநீர் தேங்கியதை உணர்ந்த மனிதன் அதன் காரணமாகக் குளங்களை வெட்டத் தலைப்பட்டு, குளங்களின் மூலம் மழைக்காலங்களில் பெய்யும் அதிக அளவிலான மழையால் மழை நீரைச் சேமித்துப் பயன் படுத்தியத்திறனை தெளிவாக அறிய முடிகின்றது.

### 5.10.1 நீருண்துறை

**"உண்துறை என்பதற்கு உண்ணும் நீர் கொள்ளும் நீர்த்துறை என்று பொருள் வழங்குகிறது"**[96] இவ்வகை உண்துறையை இலக்கியங்கள் பரவலாகக் காட்டுகின்றன. நீரின் பயன்பாடு கருதி, இயற்கை நீர்நிலைகளான அருவி போன்றவற்றிலிருந்து நீர் பெறும் தொழில்நுட்பத்தோடு இந்நீருண்துறைகள் வடிவமைக்கப்பட்டிருந்தன. இத்துறையில் தெள்ளிய

நீரினையும், பாசிபடர்ந்த நீரினையும் அருவியில் அடித்துவரப்படும் மலைபடுபொருள்களோடும் கூடிய நீரினையும் காண முடிகிறது இத்துறையில் குடிநீர்த் தேவையானது பூர்த்திச் செய்யப்படுகிறது. மலையிடத்து பூத்தப்பூக்களைத் தலைநீர் கொண்டு வந்து ஒதுக்குதலையும் காண முடிகிறது. இதனை,

**“கொண்டி பெறுக! என் றோனே உண்துறை**

**மலைஅலர் அணியும் தலைநீர் நாடன்”**[97]

என்ற புறப்பாடலின் வழி அறிய முடிகிறது. தொழில்நுட்பங்களை கண்டுபிடிக்கவும் வளர்த்தெடுக்கவும் உதவின.

### 5.10.2 நீர் சுத்திகரிப்பு

மழை ஆறுகளில் இருக்கும் நீரானது இயற்கையாகவே நன்னீராகவும் தூய்மையுடையதாகவும் இருக்கும் ஆற்றுநீர் மணல்களுக்கு இடையே அடித்துச் செல்லும் போது அதிலுள்ள மாசுக்கள் மண்ணால் உறிஞ்சப்படும். ஆனால் அவ்வாறு ஊற்று நீராக இருந்தால் களிமண்ணோடு கலந்து கிடைக்கும் அதனைக் குடிப்பது ஏதுவாக இருக்காது.அந்நீரினை தெளியச் செய்ய தமிழ்கள் கண்டறிந்த உத்தி முறை தேற்றாங்கொட்டை.

**கலங்கிய நீரினைத் தூய்மையாக்கும் திறன் தேற்றா கொட்டைக்கு உண்டு. இதன் தாவரவியல் பெயர் Strychnos Potatorum ஆகும். ஆங்கிலத்தில் Clearing nut tree என்றழைப்பர்.கலங்கல் நீரைத் தெளியச் செய்யும் விதையாகும். வீடுகளில் கலங்கிய நீரானாலும் நிலக்கரி சுரங்களில் கரிப்பொடிகலந்த நீரானாலும் தெளிய வைக்கும் பண்புடைய கொட்டை இதுவாகும்.கொட்டையை சிறிது தேய்த்துக் கலந்தால் நீரிலுள்ள கொல்லாய்டல் பொருட்கள் என்ற மிதக்கும் பொருட்கள் படிந்துவிடும். கண்மாய்களில் தேக்கிய நீரைக்குடிநீராகப் பயன்படுத்தும் இடங்களில் தொன்று தொட்டு சட்டியில் தேற்றான்கொட்டையைத் தேய்ப்பது வழக்கம் சில நிமிடங்களில் நீர் தெளிந்து கசடு நீரில் மிதக்கும் . அதனை கண்ணுற்றஆங்கிலேயப் படையின் அதிகாரி கர்னல்ட்ருயரி கிபி இல்**

**மழைகாலத்தில் ஆங்கிலேயப் படைகள் முகாமிடும் இடங்களிலெல்லாம் தேற்றாங்கொட்டையைப் பரிந்துரைத்துள்ளான் என்பது வரலாற்று செய்தி**[98]

### 5.10.3 இல்லமரம்

தேற்றா மரம் பற்றிய குறிப்புகளும் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது.

தேற்றாமரம் என்பதை சங்கப்பாடல்கள் இல்லமரம் , மனைமாமரம் என்ற இரு சொல்லாட்சிகளில் வழங்குகின்றன.

**"முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு**
**பைங்கால் கொன்றை மென்பிணி அவிழ**
**இரும்பு திரிந்தன்ன மாஇரு மருப்பின்**
**பரல்அவல் அடைய"**[99]

**"ஆய்பொன் அவிர்இழை தூக்கி அன்ன**
**நீடுணர்க் பொன்றை கவின்பெற காடுஉடன்**
**சுடர்புரை தோன்றி புதல்வனைக் கொளாஅ"**[100]

**"முல்லை இல்லமொடு மலர"**[101]

**"குல்லை குளவி கூதளம் குவளை**
**இல்லமொடு மடைந்த ஈர்ந்தண் கண்ணியன"**[102]

இப்பாடல்களில் இல்லம் என்ற சொல்லுக்கு தேற்றாமரத்தைக் குறிப்பிடுகிறது. முல்லை நிலத்தில் வளரக்கூடிய மரமாகும். கார்காலத்தில் மழைபொழியும் போது அம்மரத்தின் மொட்டுக்கள் மலர்கின்றன . முல்லை தேற்றா மொட்டுக்கள் காடு முழுவதும் மலர்வதால் பொலிவுடன் விளங்குகின்றது. மேலும் காட்டுமல்லிகை , கூதாளி , குவளை , தேற்றா ஆகிய மலர்களால் கட்டப்பெற்ற குளிர்ச்சியான மாலையை அணிந்த தலைவன் என்கிறது.

**"எவ்வி இழந்த வறுமை யாழ்ப்பாணர்**
**பூஇல் வறுந்தலை போரப் புல்லென்று**

**இனைமதி வாழியர் நெஞ்சே மனைமரத்து**

**எல்லுறும் மௌவல் நாறும்**

**பல்அருங் கூந்தல் யாரளோ நமக்கே?"**[103]

**"வண்டு அறைஇய சண்பகநிரை தண்பதம்**

**மனைமாமரம்.............."**[104]

இல்ல மரத்தின் நசுக்கப்பட்ட விதை கலங்கிய நீரின் அழுக்குகளைக் கீழே ஈர்த்துத் தூய்மையாக்கும் என்று கூறப்பட்டுள்ளது.

முல்லை மற்றும் மருத இல்லங்களில் வளர்க்கப்பட்டதால் இப்பெயர் பெற்றது. இதனை கேரளாவில் மருத்துவத்திற்குப் பயன்படுத்துகின்றனர்

கலித்தொகைப் பாடலில்

**"நல்கிய கேள்வன் இவன் மன்ற மெல்ல**

**மணியுள் பரந்த நீர்போலத் துணிவாம்**

**கவம் சிதை இல்லத்துக் காழ்கொண்டுதேற்றக்**

**கலங்கிய நீர்போலத் தெளிந்து நலம் பெற்றாள்**

**நல எழில் மார்பசைன் சார்ந்து"**[105]

தலைவி தலைவனது மார்பினைத் தழுவியவுடன் தேற்றாங்கொட்டையால் தெளிவிக்கப்பட்ட தண்ணீரைப் போல துன்பம் நீங்கினாள் என்று குறிப்பிடுகிறது.

இன்று நாம் Aquva water Purifier மூலம் நீர்சுத்தம் செய்யும் செயற்கை இயந்திரவியல் முறையை பழங்காலத்தில் இயற்கை முறையில் தமிழர்கள் செய்துள்ளனர்.

### 5.10.4 **நன்னீரைப் பருகும் விழிப்புணர்வு**

குடிநீரைத் தேர்ந்தெடுத்து அருந்துவதில் மிகவும் விழிப்புணர்வுடன் செயல் பட்டுள்ளனர்.மாசுக்கலந்த நீர் உடலுக்கு பல நோய்களை உருவாக்கி உயிரிழப்பைத் தோற்றுவிக்கும் என்பதால் நன்னீரை

அருந்தியுள்ளனா்.அறிவியல் முறைப்படி உவா் நீரானது நீா்வேட்கைத் தணிக்காது என்பதையும் உணா்ந்திருந்தனா்.

**“தெண்நீா்ப் பரப்பின் இமிழ்திரைப்பெருங்கடல்**

**உண்ணாா் ஆகுப.நீா்வேட்டோரே**

**ஆவும்மாவும் சென்று உண கலங்கி**

**சேற்றோடு பட்டசிறுமைத்து ஆயினும்**

**உண்ணீா் மருங்கின் அதா்பல ஆகும்”**[106]

மிகப்பரந்து பட்ட கடலின் நீரை நீா்வேட்கை உள்ளோா் குடிப்பதில்லை பசுக்களும் மற்ற விலங்குகளும் பலமுறை குடித்த நீரானது கலங்கல் உடையாத இருப்பதால் தூய்மையான நீா் கிடைக்கும் இடங்களைக் கண்டறிந்து அருந்தியுள்ளனா்.

**“அமிழ்தின் மிசைந்துகாய்பசி நீங்கி**

**நல்மரம் நளிய நறுந்தண் சாரல்**

**கல்மிசை அருவி தண்ணெப் பருகி”**[107]

மலையிலிருந்து வீழும் அருவி பல மரங்கள் மற்றும் தாவரங்களின் மூலிகைகளால் அடித்து வரும் பொழுது உடல் வலிகளைப் போக்கி புத்துணா்ச்சியைத் தரும் என்பதால் அருவி நீரைப்பருகி நீா்வேட்கையைத் தணித்துக் கொண்டதாகக் குறிப்பிடுகின்றது.குளம் குட்டைகளில் தேங்கி இருக்கும் நீரில் பல கண்ணுக்குத்தெரியாத நுண்ணுயிா்கள் இருக்கும் .அவை உடலுக்கு தீங்கு விளைவிக்கும் என்பதால் மலைநீரினை அருந்தியுள்ளனா் என்பரை அறிய முடிகின்றது

### 5.10.5 சேமச்செப்பு

பழந்தமிழா்கள் சேமசெப்பு என்ற பெயரில் வெப்பக்குடுவையைப் (பிளாஸ்க்) பயன்படுத்தியுள்ளனா். இன்று அடைந்திருக்கும் அறிவியல் வளா்ச்சியில் சங்ககால மக்கள் மேம்பட்டுள்ளனா்.

**“அற்சிர வெய்ய வெப்பத்தண்ணீர்**

**சேமசெப்பில் பெறீஇயரோ”**[108]

என்பதில் சேமச்செப்பு மூங்கிலால் செய்யப்பட்ட குழாயைத் துளை செய்து வெப்பமான நீரைப் பாதுகாக்கும் குப்பி என்கிறது.முன்பனிக்காலங்களில் நீர் குளிர்ச்சி அடைந்து குடிப்பதற்கு ஏற்ற வகையில் உருவாக்கியுள்ளனர்.

### 5.10.6 குறுநீர்க்கன்னல்

காலத்தைக் கணக்கிடுவதற்காக பழந்தமிழர்கள் கையாண்ட உத்தி முறையாகும்.அதனை நாழிகை வட்டில் நாழிகை உணர்த்தும் கருவி என்றழைக்கப்படுகிறது.கடாரம் என்ற நீர் பெய்து வைக்கும் பாத்திரத்தின் அடியில் சிறு துளையிட்டு அதில் நீர்கசியும் அளவைக்கொண்டு காலத்தைக் அறிந்துள்ளனர்.

**“பொழுதுஅளந் தறியும் பொய்யா மாக்கள்**

**தொழுகாண் கையர் தோன்ற வாழ்த்தி**

**எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்**

**குறுநீர்க்கன்னல் இனைத்தென்று இசைப்ப”**[109]

**“வேதா ளிகரோடு நாழிகை இசைப்ப”** [110]

**“குறுநீர்க்கன்னல் எண்ணுநர்”**[111]

என்பதில் காலத்தைக் கணக்கிட்டுக் கூற நாழிகை கணக்கர்கள் இருந்துள்ளனர்.அவர்கள் நீர் வட்டில் ஒழுகிய பின்பு எஞ்சிய நீர் நிற்கும் கோடுகளை எண்ணிப் பொழுதை அறிந்து கூறியதை அறிய முடிகிறது.

### 5.10.7 சேமிப்புக்கலன்கள்

தமிழர்கள் நீரைச் சேமித்து வைக்கவும் பிற தேவைகளுக்கும் நீர்க்கலன்களை பயன்படுத்தியுள்ளனர்.

தமிழர்கள் புதிய வகை கலன்களை உருவாக்கி அதில் நீரை நிரப்பி பருகியுள்ளனர்.மிடா பிழா குழிசி கடாரம் பச்சைக்குப்பி அகளம் வட்டுச்சாடி

பசுமண்கலம்பொன்கலம் போன்ற கலன்களை புழக்கத்தில் புழங்கியுள்ளனர். அதனைப் பற்றிய செய்திகள் சங்கப்பாடல்களில் அறிய முடிகின்றது.

### 5.10.8 சாடி

**“வல்வாய்ச் சாடியின் வழைச்சு அற விளைந்த**

**வெந்நீர்”**[112]

மருத நிலத்தில் வயலில் விளைந்த நெல்லினை உறுதியான வாயையுடைய பெரிய சாடியில் அதைப் போட்டு வெந்நீர் ஊற்றி வேக வைத்துள்ளனர். சாடி வெப்பத்தை ஏற்கும் திறன் பெற்றதாக உள்ளதை அறியலாம்.

### 5.10.9 அகளம்

**“அகளம் என்பது நீர் மொள்ளும்சால் ஆகும்.**

**அகளத்த அன்ன நிறைகளைப் புறவில”**[113]

என்பதில் கலன்களில் சேமித்த நீரை உபயோகப்படுத்த பயன்பட்ட சால் ஆகும்.தற்காலத்தில் இது சொம்பு என்றழைக்கப்படுகிறது.

### 5.10.10 கடாரம்

தமிழர்களின் மழைநீரைப் பெய்து வைக்க பயன்படுத்திய உலோகக்கலனாகும்.

### 5.10.11 குழிசி, தாழி, பசுமண்கலம்

பழந்தமிழர்கள் களிமண்ணால் செய்யப்பட்ட பானைகளை நீர்ப் பிடித்து வைக்கவும் சமையலுக்கும் பயன்படுத்தியுள்ளனர். மண்சட்டியை பானை கலம் குடம் தாழி குழிசி தசும்பு பசுமண்கலம் எனப் பல வடிவங்களில் அமைத்துள்ளனர்.மேலும் கோடைகாலத்தில் மண்பானையில் ஊற்றும் நீரானது குளிர்வடையும். பானைகளில் சமைக்கப்படும் சோறும் அதில் நிரப்பப்படும் நீரும் தனிச்சுவையுடன் இருக்கும்.

களிமண்ணால் செய்த மண்பானையில் நீரை ஊற்றி காலம்தாழ்த்தி வைக்கும் பொழுது நீரிலுள்ள மாசுக்களை உறிஞ்சிக் கொண்டு நீருக்கு

மண் சக்தி கிடைக்கும் எனவே உலகத்திலேயே நீரை தூய்மைச் செய்யும் கலனாக மண்பானைத் திகழ்கின்றது. அதனால் பழந்தமிழா் மண்ணா ஆனால் கலன்களைப் பெரிதும் பயன்படுத்தியுள்ளனா்.

**“மான் தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள் தயிா்**

**கொடு வந்த தசும்பும் நிறை”**[114]

காட்டில் வேட்டையாடிய வேடுவன் மான்கறியை வட்டிலே கொண்டு வந்து கொடுக்கிறான். அதற்குப் பதிலாக தயிரை பானையில் கொண்டு தருவாள் என்பதை தெரிவிக்கிறது இந்த பாடல்.

**“பெயா்நீா்க்கு ஏற்ற பசுங்கலம் போல”**[115]

மழைநீரினை சேகரிக்க சுடப்படாத மண்கலத்தைக் கொண்டு சேமித்துள்ளனா்.

**“ஓங்குநிலைத் தாழி மல்கச் சாா்த்தி**

**குடைஅடை நீரின் மடையினள் எடுத்த”**[115]

வீடுகளில் வளா்க்கப்படும் வயலைச் செடிக்கு நீா் ஊற்ற தாழியைப் பயன்படுத்தியுள்ளனா்.

பனங்குடைகளில் நீரினை முகந்து கலன்களை நிரப்பி பானைகளிலும் குடங்களிலும் இல்லத்திற்கு கொண்டு வந்ததை அகநானூறு குறிப்பிடுகிறது. மண் மற்றும் உலோகத்தால் செய்யப்பட்ட கலன்களை சமையலுக்கும் நீரைச்சேமித்து வைக்கவும் செய்தனா் என்பது தெளிவாகின்றது.

**தொகுப்புரை**

தமிழா்கள் நீா்த்தேக்கத்திற்காக மடை, மதகு, ஏரி, அணை போன்ற அமைப்புகளை உருவாக்கிப் பயன்படுத்திய விதமும், இல்லங்களில் நீரினை சேகரிக்கும் முறைகளும் ஆராயப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1.பரி-2 5-12

2.புறம்-2

3.புறம்-114

4.தொல்-மரபு-1

5.நாலடி: 179:1-2

6.நாலடி:115:3-4

7.புறம் : 18: 22-23

8.மேலது : 390: 23-24

9.புறம் : 142: 1-3

10.மேலது : 118: 1-3

11.புறம் : 161: 1-4

12.நெடு 95-98

13.நற்-3308-9

14.புறம்.271:1-2

15.அகம் 17-16

16.தனிநாயக அடிகள், நிலஅமைப்பும் தமிழ்க்கவிதையும் ப.52

17.நீர்மேலாண்மை-ப.52

18.பழ.கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப. 64

19.சிறுபஞ்சமூலம்

20.தமிழக பாசன வரலாறு-ப-64

21.புறம் -4

22.தமிழ் ஆய்வுக்கட்டுரைகள் -ப- 12

23.பரி-35-39

24.சிலம்பு-204

25.அகம்-237

26.புறம்-33

27.குறள் காதற்சிறப்பு உரைதல் 1121

28.அகம்-346-8

29.தொல்.புறம்:7-7

30.மது-724-726

31..புறம்.263: 8

32.பரி-43-49

33.ம.ப.க 474 - 477

34..பொரு-த.பா -1

35.பழ. கோமதிநாயகம்., தமிழக பாசன வரலாறு. ப. 64

36.ப.பா-34-36

37.முனைவர் பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப.20

38.பரி.6:82-83

39.பரி.12:83

40. முனைவர் பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப.26

41.பரி-67

42.நற்-340-3

43.பரி-6-82

44.புறம்-42-13

45.புறம் -326 - 8 -9

46.பரி-66

47.அகம்-110

48.பரி-55-56

49.பரி -22-24

50.பரி- 16-20

51.பரி- 20 12-26

52.பரி 20-104

53.மணி-அறவாணன் காதை -384-87

54.சிலம்பு

55.நற்-6-1

56.அகம்-163-10-11

52.புறம்-24-18-20

57.ம..கா-89-94

58.சிலம்பு நாடு காண் காதை-110-111

59.புறம்-371-20

60.அகம் 275

61.பரி.6:22-24

62.பரி-10-9-8

63.பதிற்.22:28

64.முனைவர் பழ. கோமதிநாயகம், தமிழக பாசன வரலாறு. ப.59

65.புறம்.7:11-12

66.ஆ. மணவழகன், சங்க இலக்கியத்தில் மேலாண்மை. பக். 41-42

67.அகம்.252:9-13

68.பெரு. -272-273

69.பெரு -273-274

70.நெடு -76

71.ப.ப -58-6

72.ப.பா-283-84

73.புறம்.42:19-20

74.புறம்.9:10-11

75.மலை-527-528

76.பொரு.232-239

77.புறம்.393:22-23

78.புறம்.385:8-9

79.புறம்.35:6-11

80.அ. மார்க்ஸ், ஆரியருக்கு முற்பட்ட தமிழ் பண்பாடு. பக். 25-26

81.புறம்.400:21-22

82.பெரும்-429-433

83.புறம்.71:9-10

84.பரி.11:31-34

85.பட்-284

86.புறம்.18:28

87.மதுரை-238-246

88.பெரும-107-108

89.பரி.7-1-3

90.குறு-368-5-8

91.குறு -149-3-4

92.ப.ப6-19

93புறம்-7

94.புறம்-341-5

95.மதுரை. 238-246

96.சங்க இலக்கிய பொருட்களஞ்சியம் (ப. 332)

97.மதுரை. 319-1-4

98.தமிழ் ஆய்வுக் கட்டுரைகள் ப.59

99.அகம்-4

100.ம.கா-445

101.அகம் 364

102.நற்றி 376

103.குறுந் -19

104.பரி 11-19

105.கலி60-66

106.புறம்-204

107.புறம்-150

108.குறு-77

109.முல்-55-59

110.அகம்-43-6

111.பெரு-280

112.மலை-104

113.புறம்-33

114.குறு-9

115.அகம்-275

# இயல் - 6

## ஆய்வு முடிவுகள்

**சங்க இலக்கியத்தில் நீர்வளம்** என்ற பொருண்மையில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் முடிவுகள் கீழே தரப்படுகின்றது. தமிழரின் அடையாளமாக விளங்குவது சங்க இலக்கியம் அறமும் இன்பமும் சேர்ந்த நூல் சங்க இலக்கியம், எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் சங்க இலக்கியங்கள் ஆகும். தொகையென்பது பல புலவர்கள் பாடிய பாடல்களைக் கொண்ட நூல் பாட்டு என்பது தனி ஒரு புலவர் பாடியது. நிலத்தை அடிப்படையாகக் கொண்டு தான் பருவநிலை மாற்றங்கள் தோன்றுகின்றன. நிலம், பருவ நிலை தான் மனிதனின் தேவையை நிறைவு செய்கின்றன. பழந்தமிழர் இலக்கியம் வாழ்வு அகம், புறம் என்று வகைப்படுத்தப்பட்டு இருந்தன. ஒத்த அறிவு, அன்பு, ஆற்றலுடைய தலைவனும் தலைவியும் ஊழின் வழியே கூடித்துய்த்த இன்பத்தை தாமே அகத்தில் உணர்ந்து பிறர்க்கு இன்னது என்று எடுத்துக் கூற இயலாதவாறு விளங்குவது அகப்பொருள். ஒத்த அன்பினரேயன்றிப் பிறரும் துய்த்து உணர்வதும், இவ்வாறு இறந்தது என்று பிறர்க்கு கூறுவது புறப்பொருள். ஒரு மனிதன் பல நாட்கள் உண்ணாமல் கூட உயிர் வாழ்ந்துவிட முடியும். நீர் அருந்தாமல் சில நாட்களை தாண்டுவதே கடினம். தங்களுக்குத் தேவையான குடிநீரைத் தேங்கியிருக்கும் , நீர்நிலைகளிலும் ஓடும் நீர்நிலைகளிலும் எடுத்துப் பயனப்படுத்தினர். மழைப்பெய்தாலும், பெய்யாவிட்டாலும் நெய்தல்நில மக்களுக்குக் கவலை இல்லை. எந்த நிலப்பகுதியின் நீர் வற்றினாலும் கடல் நீர் வற்றுதல் இல்லை. வறட்சி என்பது கடல் அறியாது. நல்லநிலம், நல்லவிதை, நல்லநீர், நல்ல காலச்சூழல், நல்லஇடுபொருள், நல்லகாப்பு போன்றவற்றில் பழந்தமிழர்கள் தேர்ந்தவர்களாக இருந்தனர். சங்ககாலத்தில் நீரைச்சேமிக்கக் குளம், ஆறு போன்ற ஆதாரங்களை ஏற்படுத்தினர். ஊருக்கு மிக அருகில் ஆறும், பொய்கையும் இருந்தது. குறிஞ்சிநிலத்தில் வாழும் மக்கள் சுனைநீரையும் அருவிநீரையும் தங்களது பயிர்த்தொழிலுக்கும் பயன்படுத்தினர். பண்டைத் தமிழர் நீர்நிலைகளை அமைக்கும் இடங்களை தெரிவு செய்வதில்

வல்லவர்களாக விளங்கினர். பள்ளமான பகுதிகளே அன்றி, குளம் அமைத்து வளத்தைப் பெருக்கினர். நீர்நிலைகள் இலஞ்சி, கேணி, கோட்டாம், ஏரி, மலங்கள், மடு, ஓடை, வாவி, சலந்தாம், வட்டம், தடாகம், நளினி, பொய்கை, குப்பம், கிடங்கு, சுனை, குளம், கண்மாய் என்று பல்வேறு பெயர்களால் அழைத்தனர். பரதவர்கள் சங்கக்காலத்திலேயே கடற்கரையில் பேராதிக்கம் கொண்டு வாழ்ந்தார்கள் என்பதைச் சங்கப் பாடல்கள் விளக்குகின்றன. மேலும் அவர்கள் செல்வமும், செல்வாக்கும் படைத்தவர்களாய் கடல் வாணிகத்தில் ஈடுபட்டு இருந்தனர். பல்வகை பண்டங்களை ஏற்றுமதி மற்றும் இறக்குமதி செய்கின்ற வாணிகத் தொழிலில் ஈடுபட்டனர். பண்டையத் தமிழர் வாணிபம் கடலோடு நெருங்கிய தொடர்புடையதாகும். தமிழகத்தில் கழனிகளை வளமாக்கும் காவிரி, வையை, பொருநை, பொன்னையாறு, பேரியாறு, சேயாறு, அயிரியாறு, எனப் பல்வேறு ஆறுகள் காணப்பட்டன. நீரின் வழியாக குதிரைகளும், யவன நாட்டுச் செல்வங்களும் அரேபிய நாட்டு நறுமணப்பொருள்களும் அழகிய ஆடைகளும் ஈழத்து உணவு போன்ற பல்வேறு பொருள்களும் வந்து இயங்கின. முத்து, சங்கு, மிளகு, கோதுமை போன்றவை வெளிநாட்டிற்கு அனுப்பி வைக்கப்பட்டன.

வறட்சி என்பது நீர் மற்றும் நிலவாழ் விலங்குகள், மனிதர்கள் உயிரினங்கள் பாதிக்கப்பட்டு உயிர் சூழ் நிலையில் மாற்றங்கள் உருவாகும் என்பது புலனாகின்றது. வறட்சி என்ற சொல்லுக்கு வரட்சி எனவும் அழைக்கலாம் என்றும் வறட்சி என்றாலே அது நீர்வறட்சியை மட்டுமே குறிக்கும் என்பது அறிஞர் தம் கருத்துக்களின் வழி அறியமுடிகின்றது. குறைந்த மழைப்பொழிவினால் உழவுத்தொழில் பாதிக்கப்படும் வறட்சியினால் மக்களின் வாழ்வு பாதிக்கப்படும் என்பதை அறிய முடிகின்றது. நீரின்றி அமையாது உலகு என்பவற்றிற்கேற்ப பஞ்சம் என்பது மழை பெய்து தானியங்கள் விளையாததோடு பணம் கொடுத்தாலும் உணவு கிடைக்காத நிலையாகும் என்பது புலப்படுகின்றது.

சங்ககால மக்கள் இயற்கையின் தன்மைகளாகிய தட்பவெப்ப நிலைகளை அறிந்தவர்களாகவும், அதன் இயல்புகளுக்கு ஏற்ப விளைவுகளையும், பூமி வெப்பமாதலின் காரணத்தால் மக்கள் சந்தித்த

துன்பங்களையும் சங்க இலக்கியப் பாடல்களில் காணமுடிகிறது. மழைபொழியாமல் இருந்தால் அந்த இடம் வறண்ட அல்லது வறட்சிப் பகுதி எனப்பெயர் பெறும் என்பதை அறியமுடிகின்றது. வறட்சி என்பது நீரின்மையால் ஏற்படும் தன்மையே என்பதைத் தெளிவாக உணரமுடிகிறது.

முல்லை குறிஞ்சி நிலங்கள் தம்மியல்பு நிலையிலிருந்து மாறி மக்களின் வாழ்வியலைப் பாதிப்பதைக் காணமுடிகின்றது.கோடைக்காலம் நீட்டித்து நின்ற பசுமையற்ற காலம். மழை பெய்யாது பொய்த்தமையால் நாட்டில் வறட்சி மிகுந்தது என்பதை அறிய முடிகின்றது. வறட்சியின் காரணமாக குன்றுகளைக் கண்டால் ஒத்தப் பெரிய கரைகளையுடைய குளங்களில் வெயில் காய உள்ளே நீா் இன்மையால் பறவைகள் வந்து தங்குதல் ஒழிந்தன வென்று வெப்பம் நீடித்தலால் வறட்சி ஏற்பட்டு மண்ணுயிர்கள் வருந்துகின்ற நிலையினை அறியமுடிகின்றது. இயற்கையாகிய ஞாயிறு தம் இயல்பில் இருந்து மாறுபடும் பொழுது பேரிடர்கள் ஏற்படும் அப்பேரிடரில் மக்கள் மற்றும் நீர்வளங்களையும் இழக்கும் நிலை ஏற்படும் என்பதைக் குறிப்பினால் அறியமுடிகின்றது. வறட்சியினால் மக்கள் வாழ்வதற்கு தகுதியற்ற நிலமாகவே பாலை நிலம் சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ளது.பாலை நால்நிலத்தின் முதல் கரு உரிப்பொருளின் வெளிப்பாடகவே உள்ளதை அறிய முடிகின்றது. மழைநீரின்மை மண்ணின் நீரப்பிடிப்புத்தன்மையின் நிலத்தடிநீரின்மை நீர்நிலைகளின்மை பயிர் உற்பத்தியின்மை போன்ற பருவநிலை மாற்றக் காரணிகளால் இயற்கைவறட்சி தோன்றுவதை அறிய முடிகின்றது. கடற்கோள் . ஊழிக்காலம் என்ற இருபெருநிலைகளும் நீரால் தோன்றக் கூடிய பேரழிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. மனிதனால் உருவான செயற்கைவறட்சியில் நீர்நிலைகள் மாசுபடுதல் நீர்நிலைகளை அழித்தல் காடுகளை அழித்தல் பெரும்பாலும் பங்கு வகிக்கின்றது. தோல்வியடைந்த மன்னனின் ஊர்களிலுள்ள நீர்நிலைகளும், இயற்கைவளங்களும் அழிவினைச் சந்தித்து வறண்டநிலைக் காணப்படும் என்பது புலப்படுகின்றது.

மனித ஆளுகையினால் இயற்கைச்சார்ந்த விலங்குகளும் அழிக்கப்பட்டு வறட்சிநிலையினை ஏற்படுத்தியுள்ளனா் என்பது

புலப்படுகின்றது. இயற்கைவறட்சி ஏற்படும் காலங்களில் தோன்றும் நீர்ப்பற்றாக்குறையை நீக்க செடி ,கொடி , மரவகைகளை உருவாக்கியதையும் , இதைக் கண்டறிந்து தமிழர்கள் பயன்படுத்தியதையும் அறிய முடிகின்றது. தமிழர் நெறிகளில் பகிர்ந்துண்ணும் பண்பு , பண்டமாற்று முறை , பண்டகசாலை போன்றன வறட்சிக்காலத்தில் உதவியுள்ளது. சங்கஇலக்கியங்களில் நீர்வளம் மிகுந்து காணப்பட்டது. ஆகவே வறட்சி என்பது இருந்தாலும், அவை அதிகமான பாதிப்புகளை ஏற்படுத்தவில்லை. மக்கள் நீர்வளத்தை வறட்சி காலத்திற்கும் ஏற்றவாறு பயன்படுகின்ற அளவில் முக்கியத்துவம் கொடுத்து பாதுகாத்துள்ள தமிழர்களின் வறட்சிமேலாண்மை போற்றத்தக்கதாகும்.

கனியுண்டு காடுசுற்றி, வேட்டையாடித் தசையுண்டு, நெருப்புக்கண்டு சமைத்துண்டு, மழையின் சிறப்புணர்ந்து, விதையின் உயிர்ப்புணர்ந்து, காடு திருத்திக் கழனியாக்கி, நீர்க்கொண்டு உற்பத்தி கண்டு, நாகரிகம் பெற்று வளர்ந்த வளர்ச்சிப்படிநிலைகள் இன்றும் இனியும் தொடர்ந்து நிகழ்வது இயற்கையின் நிர்ணயம். இவ்வளர்ச்சிப் படிநிலைகளை வெற்றிக் கொள்வதற்கு உறுதுணையாக இருப்பது நம்மைச் சுற்றியுள்ள சூழல். பழந்தமிழர்கள் இச்சூழல் குறித்த இணக்கமான கண்ணோட்டம் கொண்டிலங்கினர். அவர்கள் உயிர்க்கு ஆதாரமான நீரைப் போற்றிப் பாதுகாத்தனர். உணவுற்பத்திக்கான சிந்தனை கொண்ட அக்கணமே நீர் மேலாண்மைக்கான விதையும் விதைக்கப்பட்டது. முதலில் மழைப்பொழிவை ஆதாரமாகக் கொண்ட உணவுற்பத்தியை மேற்கொண்டனர். இயற்கையாக ஏற்பட்ட பள்ளங்களில் நிறைந்துள்ள மழைநீர் மழையற்ற காலப் பயன்பாட்டை உறுதிசெய்வதனை உணர்ந்தனர். மழையற்ற காலப் பயன்பாட்டிற்கு நீர் சேமிப்பு அவசியமென்ற சிந்தனை கொண்டனர். இச்சிந்தனையே நீர் மேலாண்மையின் முதல் நிலையாகும்.

அதிகநீரைச் சேமிக்கும் பொருட்டு இயற்கையாக உள்ள பள்ளங்களை ஆழப்படுத்தவும் அகலப்படுத்தவும் செய்தனர். பின்பு ஆற்றுநீரைப் பயன்படுத்தி ஆற்றங்கரை ஓரங்களிலுள்ள நிலங்களில் உழவு செய்தனர். சிறிய ஆற்றுக்கால்களின் அருகில் குளங்களைத் தோண்டி

வெள்ளப்பெருக்குக் காலங்களில் வரும் நீரைத்தேக்கி மழையற்ற கால உணவுற்பத்திக்கு வழிகோலினர்.

நிலமும் நீரும் இல்லையெனில் உலகம் இல்லை. சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நிலம், நீரின் தோற்றத்தையும் விவரிக்கிறது. தொல்காப்பியமும் முதல், கரு, உரிப்பொருட்கள் வாயிலாகத் தீர்மானிக்கிறது. உணவு, உடை, உறைவிடம் இவை மூன்றும் உயிர்களின் அடிப்படைத்தேவைகளாகும். இவையனைத்தையும் தீர்மானிக்கும் மூலப்பொருள் நீராகும். அக்காலமக்கள் மழையின் முக்கியத்துவம் உணர்ந்தவர்களாகவும் மழைக்கு ஆதாரமான மரங்கள் மற்றும் அவைசெறிந்த வனங்கள் பேணிப்பாதுகாக்கப்பட வேண்டும் என்ற சிந்தனை கொண்டவர்களாகவும் விளங்கினர். மழைநீர் சேகரிப்பு நிலத்தடிநீர் சேகரிப்பு முறைகளில் வளம் பேணினர். நீரைத்தேக்கி வைக்க சிறந்த தொழில்நுட்பத்துடன் கூடிய ஏரி கற்சிறை போன்ற கட்டுமானங்களை ஏற்படுத்தினர். ஏரி மற்றும் கற்சிறை அமைப்பதிலும் தொழில்நுட்பக் கூறுகளைக் கையாளுவதில் உலகமே போற்றும் வகையில் சிறந்து விளங்கினர் தமிழர்கள். தேக்கிவைத்த நீரை வீணாக்காமல் உணவு உற்பத்திக்குப் பயன்படுத்தி நாட்டின் பஞ்சம் போக்கினர். நீர்நிலைகளைப் பாதுகாக்க காவலர்களை நியமித்திருந்தனர். குறிப்பிட்ட கால இடைவெளியில் தூர்வாரி முறையாகப் பராமரித்தனர்.

கரைகளில் மண்ணரிப்பு ஏற்பட்டுச் சேதமடையாமல் இருக்க மரங்களை வளர்த்தனர். கரைகளில் ஏதேனும் சேதம் ஏற்படின் ஊர்கூடி அதனை உடனடியாகச் சரிசெய்யும் ஒற்றுமையுணர்வு பெற்றிருந்தனர்.பெரிய பரப்பளவு கொண்ட ஆறுகளில் ஏரிகளை அமைத்தல் பொருத்தமுடையது அன்று. அதிக விசையும் கொள்ளளவும் கொண்ட நீரைத்தேக்கிவைக்க மிக்க உறுதியுடைய கட்டுமானம் தேவையென்பதை உணர்ந்து அணைகளை அமைத்தனர். சங்ககாலத்தில் கட்டப்பட்ட அணைகள் அனைத்தும் மிகச் சிறந்த தொழில்நுட்பம் கொண்டு கட்டப்பட்டுள்ளன. இவ்வணைகள் எவ்வித நீர்க்கசிவுமின்றி இன்றளவும் பயன்பட்டு வருவதே இதற்கான சான்றாகும்.

மேலும் பாசனத்திற்குத் தேவையான நீரை அளவாகத் தேவைக்கேற்பத் திறப்பதற்கு மதகு மடை புதவு சுருங்கை போன்ற நீர் வழங்கும் அமைப்புகளை அமைத்தனர். இதன்மூலம் நீர் வீணாகாமல் வருடம் முழுவதும் பயன்படுத்த ஏதுவாக அமைந்தது. மதகுகள் வழியாக வரும் நீரை வயல் வரை கொண்டு சேர்க்க வாய்க்கால்களை அமைத்தனர். பழந்தமிழர்தம் இக்கட்டுமானத் தொழில்நுட்பங்கள் அனைத்தும் நீர் சேமிப்போடு கூடிய வளமான உணவுற்பத்தியை வருடம் முழுவதும் சாத்தியப்படுத்தின. வீணாகும் மழைநீரை முடிந்த அளவு சேமிக்க முயன்றதன் விளைவே ஏரிகள். சிற்றாறுகளைக் கொறம்பிட்டுத் தடுத்து அதனருகேயுள்ள ஏரிகளில் நீரை நிரப்பினர். நில அமைவிற்கும் நீர்க்கால்களின் வரத்திற்கும் ஏற்புடைய பல ஏரி அல்லது குளங்களை ஒன்றன்பின் ஒன்றாக அமைத்தனர். நீரின்றி உலக உயிர்களில்லை, நிலமின்றி நீரின் பயனறிவதில்லை என்பது பழந்தமிழர்களின் அறிநிலை. ஓரிடத்தில் கிடைக்கின்ற நீர் வளத்திற்கும் அப்பகுதியிலுள்ள நிலத்தின் தன்மைக்கும் ஏற்புடைய வேளாண்மைச் செயல்முறைகளால் மிகச் சிறந்த உணவுற்பத்தியினை மேற்கொண்டனர். மண்ணின் தன்மைக்கு ஏற்புடைய பயிர்களைத் தேர்வுசெய்து விதைத்தனர். பழந்தமிழர்கள் நீர்நிலைகளைச் சிறப்புறக் கட்டமைத்து நீரைச் சேமித்ததுடன், அந்நீர்ந நீர்த் தேவைகளுக்காக நீரைப் பயன்படுத்த சேமிப்புக்கலன்களை உருவாக்கினர். முறையாகப் பராமரித்துப் பாதுகாத்தனர். நீர்நிலைகளைப் பாதுகாக்கக் காவலர்களை நியமித்தனர். முறையான கால இடைவெளியில் நீர்நிலைகளைத் தூர்வாரிப் பராமரித்தனர். கரைகளில் ஏற்படும் மண்ணரிப்பைத் தடுக்க கரையோரங்களில் தொகுதியாக மரங்களை வளர்த்தனர். கரைகளில் சேதம் ஏற்படின் ஊர்மக்கள் அனைவரும் ஒன்றுகூடி அதனைச் சரிசெய்தனர். அதனுடன் துய்மையான நீரே உண்ணுதற்கு ஏற்புடையது என்ற விழிப்புணர்வும் அவர்களுக்கு இருந்தது. உண்ணுநீர் பயன்பாட்டிற்கான தனி நீர்த்துறைகளை அமைத்துப் பாதுகாத்தனர். நீர்மாசுபாட்டை நீக்க தேற்றாங்கொட்டை வெந்நீரினை ஊற்ற சேமச்செப்பு நீரை சேமிக்ககலன்கள் நேரத்தைக் கணக்கிட நாழிகை வட்டில் போன்ற பல உத்திகளை கையாண்டு நலத்துடனவாழ்ந்துள்ளனர்.

இவை போன்ற சங்கஇலக்கியப் பதிவுகள் பழந்தமிழர்கள் மிகச் சிறந்த நீர்த்தேக்ககட்டுமான நுட்பங்களிலும், நீர் பங்கீட்டு முறைகளிலும் அறச்சிந்தனையுடையவர்கள் என்பதனைத் தெளிவுறுத்துகின்றன. மேலும் இன்று நாம் பெற்றிருக்கும் அறிவியலையும், தொழில்நுட்பத்தையும், அன்றையத் தமிழர்கள் அறிந்த உண்மையை எண்ணும் பொழுது வியப்பு மேலிடுகிறது.

சங்ககால நீர்ஆதாராங்களின் தொழில்நுட்பத்தை இன்றும் பல இடங்களில் புழக்கத்தில் நீர் ஆதாரங்களைக் குறித்த ஒப்பீட்டு ஆய்வாக மேற்கொள்ளலாம். சங்ககாலத் நீர் ஆதாரங்கள் பற்றிய சொல்லாய்வினை மேற்கொள்ளலாம். நெய்தல், மருதம் போன்ற திணைகளில் நீரினால் ஏற்படும் வாழ்க்கை மாற்றத்தை பிற திணைகளோடு ஒப்பிட்டு ஆராயலாம்.

சங்க இலக்கியம் தவிர்த்து பதினென் கீழ்கணக்கு நூல்கள் சிலம்பு, மணிமேகலை போன்ற காப்பியங்களின் வழி புலப்படும் நீர் ஆதாரங்களையும், நீர் மேலாண்மைச் சிந்தனைகளையும் ஆராயலாம். நீரினை புலவர்கள் கையாண்ட விதத்தைப்பற்றி ஆராயலாம். கல்வெட்டுகளில் காணப்படும் நீர் குறித்தச் செய்திகளைத் தனி ஆய்வு மேற்கொள்ளலாம்.